# புங்குடுதீவு வாழ்வும் வளமும்

# Live and Resources of Pungudutivu

# புங்குடுதீவு வாழ்வும் வளமும்

தம்பிஜயா தேவதாஸ்
(B.A. (Cey), B.Ed. (Cey)
M.A. Journalism and Mass Communication

வெளியீடு
கொழும்பு – புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கம்
கொழும்பு

| | | |
|---|---|---|
| Name of the Book | : | **PUNGUDUTIVU - VAALVUM VALAMUM**<br>**(Live and resources of Pungudutivu)** |
| Author | : | **THAMBIAYAH THEVATHAS**<br>90/9, New Chetty Street, Colombo -13. |
| Language | : | **TAMIL** |
| Date of Publication | : | **AUGUST - 2007** |
| Edition | : | **FIRST EDITION** |
| Number of Pages | : | **XVIII + 296 = 314** |
| Colour Photos | : | **71** |
| Cover Designing & Printing: | | **SUN PRINTEK**<br>44A, Sri Kathiresan Street, Colombo -13. |
| Copy Right | : | **SINNATHURAI KARUNAMOORTHY**<br>Bümpliz - Str -12<br>3027 Bern, Switzerland. |
| ISBN No | : | **955 -96785 - 2 -3** |
| Price | : | **600/=** |

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | புங்குடுதீவு – வாழ்வும் வளமும் |
| ஆசிரியர் | : | தம்பிஐயா தேவதாஸ் |
| வெளியீட்டுத் தினம் | : | ஆகஸ்ட் 2007 |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பக்கங்கள் | : | **XVIII + 296 = 314** |
| வர்ணப் படங்கள் | : | **71** |
| அட்டைப்பட அமைப்பும்<br>அச்சுப் பதிப்பும் | : | சண் பதிப்பகம்<br>44A, ஸ்ரீ கதிரேசன் வீதி, கொழும்பு -13 |
| பதிப்புரிமை | : | சின்னத்துரை கருணாமூர்த்தி<br>(சுவிற்சர்லாந்து) |
| ISBN இலக்கம் | : | **955 -96785 - 2 -3** |
| விலை | : | **600/=** |

# சமர்ப்பணம்



## அமரர் நாகேசு தர்மலிங்கம்

(தபாலதிபர் - புறக்கோட்டை)

தோற்றம் : 14.04.1950 - புங்குடுதீவு -11

மறைவு : 29.04.1996 - கொழும்பு -13

அன்பனாய் நண்பனாய்
ஆசிரியனாய் ஆலோசகனாய்
அனைத்துத் துறைகளிலும்
வழிகாட்டிவிட்டு மறைந்து போனாயே
எனது இந்நூல்
உனக்கே சமர்ப்பணம்.

- தம்பிஐயா தேவதாஸ்-

# ஆசிரியரின் பிற நூல்கள்

| நூலின் பெயர் | ஆண்டு | துறை | வெளியீடு |
|---|---|---|---|
| 1. இலங்கைத் திரையுலக முன்னோடிகள் | 2001 | சினிமா | காந்தளகம் (சென்னை) |
| 2. இலங்கைத் தமிழ்ச் சினிமாவின் கதை | 1994<br>2000 | சினிமா<br>(மறுபதிப்பு) | காந்தளகம் (சென்னை) |
| 3. பொன்விழாக் கண்ட சிங்களச் சினிமா (வடக்கு கிழக்கு மாகாண சாகித்திய மண்டலப் பரிசு பெற்றது) | 1999 | சினிமா | வித்தியாதீபம் (கொழும்பு) |
| 4. நெஞ்சில் ஓர் இரகசியம் | 1975 | நாவல் (மொழி பெயர்ப்பு) | வீரகேசரி (கொழும்பு) |
| 5. இறைவன் வகுத்த வழி | 1976 | நாவல் (மொழி பெயர்ப்பு) | வீரகேசரி (கொழும்பு) |
| 6. மூன்று பாத்திரங்கள் | 1977 | நாவல் (மொழி பெயர்ப்பு) | என்.சி.பி.எச் (சென்னை) |
| 7. தேர்ந்த சிறுகதைகளும் நாகம்மாள் நாவலும் | 1998 | விமர்சனம் க.பொ.த. (உ/த) | வித்தியாதீபம் (கொழும்பு) |
| 8 . சிங்களப் பழமொழிகள் | 2004 | பழமொழிகள் | வித்தியாதீபம் (கொழும்பு) |

# முன்னுரை

***'கிராமத்தைப் படைத்தான் இறைவன்***
***நகரத்தைப் படைத்தான் மனிதன்'***

*- வில்லியம் கூப்பர்*

ஒரு மனிதன் தன் தாயைப்பற்றி அறிந்திருப்பதுபோல தன் தாய்நாட்டைப் பற்றியும் தனது கிராமத்தைப் பற்றியும் அறிந்திருக்க வேண்டும். எமது தீவகத்திலிருந்து பெருந்தொகையான மக்கள் புலம்பெயர்ந்துள்ளார்கள். 1950 ஆம் ஆண்டில் இலங்கை அரசினால் கொண்டுவரப்பட்ட குடியேற்றத்திட்டங்களில் நூற்றுக்கணக்கான குடும்பங்கள் புங்குடுதீவிலிருந்து வேறு மாவட்டங்களுக்கு இடம்பெயர்ந்தன. 1983ஆம் ஆண்டுக்குப் பின்னர் இலங்கையில் ஏற்பட்ட உள்நாட்டு யுத்தங்கள் காரணமாக மேலும் பல குடும்பங்கள் இந்தியா, கனடா, அவுஸ்திரேலியா மற்றும் ஐரோப்பிய நாடுகளுக்கு இடம் பெயர்ந்தன. இந்நிலையில் எம் தீவகமக்களின் சந்ததியினரே தம் மூதாதையர் பிறந்த தாயகத்தைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்களாகி விடுகின்றனர் புங்குடுதீவில் வசிக்கின்ற பிள்ளைகளுக்கே எம் தாயகத்தின் பெருமைகள் தெரியாமல் போய்விடலாம்.

இந்நூலின் மூலம் எம் தீவகத்தின் வளங்கள் பற்றி தெரியாதவர்களும் தெரிந்து கொள்வதோடு அவற்றை எவ்வாறு அபிவிருத்தி செய்யலாம் என அங்கு வாழும் இளம் சந்ததியினர் சிந்திக்கவும் புலம் பெயர்ந்த நாடுகளில் வாழும் எம் தீவகமக்கள் எம் தீவின் மூலவளங்களை அபிவிருத்தி செய்வதற்கு எம்மக்களுக்கு எவ்வாறு உதவலாம் எனச்சிந்திகக் வைப்பதற்காகவும் இந்நூலை எழுத எண்ணினேன்.

எனக்கு முன் எங்கள் தீவகம்பற்றி பலர் எழுதிய நூல்களை நான் வாசித்துப் பார்த்தேன். பேராசிரியர் வீ. சிவசாமி, பேராசிரியர் கா. குகபாலன், திரு. சதாசிவம் சேவியர் போன்றோர் எழுதிய நூல்கள் என்னை ஊக்கப்படுத்தின. அவர்களைப் போன்று நானும் எனது ஊரைப்பற்றி எழுதவேண்டும் என்று எடுத்த முயற்சி தான் இந்நூல். நான் பிறந்த நல்ல கிராமம் புங்குடுதீவு. அங்கு பிறந்து வாழ்ந்த காலத்தை என்னால் மறக்க முடியாது. அந்தக்காலத்தில் எங்கள் கிராமம் எத்தனையோ அழகுடன் விளங்கியது.

பரந்த நெல்வயல்கள், பசுமையான தோட்டந்துரவுகள், இதமான கடற்கரைகள், பக்திமணம் கமழும் கோயில்கள், அறிவொளியூட்டும் பாடசாலைகள், வீடுகள், மக்கள் என்று எல்லாமே அழகுடன் ஜொலித்தன. அந்தப் பழைய கிராமத்தை எங்களால் இப்பொழுது காணமுடியுமா? அந்தப் பழைய கிராமத்தின் அழகை எமது எதிர்காலச் சந்ததியும் அறியவேண்டாமா? அந்தப் பழையகிராமத்தை எமது எதிர்காலச் சந்ததிகளுக்கு எடுத்துக் கூறவே இந்நூலை எழுத எண்ணினேன். அந்தக் காலத்தில் நாம் எமது கிராமத்தில் அனுபவித்த இன்ப உணர்வுகளை அவர்களுக்கு உணர்த்தவே இந்நூலை எழுத முயன்றேன்.

'வாழுகின்ற மனிதர்கள் வாழ்வில் எல்லாம், வரலாறு என்று ஒன்று இருக்கும்' என கூறினார் வில்லியம் சேக்ஷ்பியர். அதனால் தான் என் கிராமத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த சிலரைப்பற்றியும் இந்நூலில் எழுதியிருக்கிறேன்.

என் கிராமத்தைப்பற்றிய வரலாற்றை புத்தகமாக எழுத வேண்டும் என்பது எனது நீண்ட நாள் ஆசை. அது இப்பொழுது நிறைவேறுகின்றது. கடந்த 25 வருடங்களாக நான் சேர்த்த தகவல்களை இப்புத்தகத்தில் சேர்த்துள்ளேன். இந்த புத்தகத்தில் இடம் பெற்ற பெரும்பாலான புகைப்படங்களை நானே எடுத்தேன். சில புகைப்படங்களை எனது மைத்துனரான சின்னத்துரை கருணாமூர்த்தி எடுத்தார். என் கிராமத்தின் சில பகுதிகளை படம் பிடிக்க அந்நியரின் அனுமதியைப் பெறவேண்டியிருந்தது. அந்த அளவுக்கு நிலைமை மாறிவிட்டது. எங்கள் ஊரில் பிறந்த அறிஞர்களில் பலர் உலகம் முழுவதும் உயர்ந்த நிலைகளில் வாழ்கின்றார்கள். அவர்களை யார், எவர் என்று கண்டுபிடிப்பது மிக கஷ்டமான காரியமாகும். ஆனாலும் அந்த அறிஞர்கள் யார், எவர் என்ற விபரங்களை விரைவில் கண்டுபிடித்து அடுத்த பதிப்பில் சேர்த்துக் கொள்வேன்.

கம்பனுக்கு இராமாயணத்தை எழுத சடையப்ப வள்ளல் உதவி செய்தார். அதே போல் 'புங்குடுதீவு வாழ்வும் வளமும்' என்ற இந்நூலை அச்சுருவாக்கம் செய்ய எனக்கு ஒரு அன்பர் உதவினார். அது வேறு யாருமல்ல. என் மைத்துனர் சின்னத்துரை கருணாமூர்த்தி தான் அவர். புங்குடுதீவில் பிறந்து சுவிற்சர்லாந்தில் வாழும் அவர் புங்குடுதீவு மண் மீதும், மக்கள் மீதும் அபிமானம் கொண்டவர் . அந்த அபிமானம் காரணமாக இந்த புத்தகத்தின் உருவாக்கத்தின் முழுச் செலவையும் அவரே பொறுப்பேற்றிருக்கிறார். அவரின் உதவி காரணமாகவே இந்நூலை நாம் புத்தக உருவில் காணுகிறோம். அவ்வாறான உதவி செய்த மைத்துனர் சின்னத்துரை கருணாமூர்த்தி அவர்களுக்கு என் முதற்கண் நன்றிகள். எனது எழுத்துகளையிட்டு முதலில் மகிழ்ச்சியடைந்தவர் என் மனைவி தே. விஜயலக்ஷ்மி தான். மற்ற புத்தகங்களைவிட இந்நூலுக்கு அவர் காட்டிய ஆர்வம் அதிகமாகும். அதனால் அவருக்கு எனது நன்றிகள்

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியவர் புங்குடுதீவின் புகழ்பூத்த சட்ட அறிஞர் வீ.ரி. தமிழ்மாறன் அவர்கள். அருமையான அணிந்துரை வழங்கிய அவருக்கும் எனது நன்றிகள். ஆசியுரை வழங்கிய புங்குடுதீவின் புகழ்பெற்ற எழுத்தாளர் மு. பொன்னம்பலம் அவர்களுக்கும் எனது நன்றி உரித்தாகட்டும். இந்த நூலை அழகான முறையில் அச்சடித்துத்தந்த சண் பதிப்பகத்தாருக்கும் அழகற்ற எனது எழுத்தையெல்லாம் அழகாக எழுத்தாக்கித் தந்த சகோதரி பி. மஞ்சுளா அவர்களுக்கும் அச்சகத்தின் அனைத்துப்பகுதியினருக்கும் இந்நூல் சிறப்பாக அமைய எழுத்து, இலக்கண, கருத்து வழுக்களைச் சீர் செய்த 'தினக்குரல்' ஆசிரியபீட ஒப்புநோக்காளரும் கொழும்பு பல்கலைக்கழகத்தில் எனது மாணவனுமான சோ. குணசீலனுக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

என் அறியாமை காரணமாக இந்நூலில் சில தவறுகளை விட்டிருக்கலாம். சில விபரங்களை தவற விட்டிருக்கலாம். அவற்றையெல்லாம் நீங்கள் எனக்குச் சுட்டிக்காட்டினால் அவற்றை அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்வேன். இம்முயற்சிக்கு சகலரும் ஒத்துழைப்பு வழங்கி ஊக்கமளிக்க வேண்டுமென அன்புடன் வேண்டுகிறேன்.

இல: 90/9, புதுச்செட்டித் தெரு, கொழும்பு -13.
தொ.பேசி : 2448743
24.08.2006

அன்புடன்
**தம்பிஐயா தேவதாஸ்**

**வி. செ. குகநாதன் பி.காம்**
(கதாசிரியர், இயக்குனர், தயாரிப்பாளர்)

## பிரபல திரைப்பட இயக்குநர் வி.செ. குகநாதனின் வாழ்த்துரை

**தலைவர்**
V.C.K. அறக்கட்டளை
பாலவித்யா கல்வி நிலையம்

**செயலாளர்**
தமிழர் ஐக்கிய முன்னேற்றக் கழகம்

**துணைத் தலைவர்**
தென்னிந்திய திரைப்பட எழுத்தாளர் சங்கம்

**துணைத் தலைவர்**
தென்னிந்திய திரைப்பட தயாரிப்பாளர் கில்ட்

**துணைத் தலைவர்**
தென்னிந்திய சினி - டெக்னீ சியன்ஸ் அசோசியேஷன்

**மாநில அமைப்பாளர்**
தமிழக எம்.ஜி.ஆர் மனிதநேய மன்றம்.

**செயற்குழு உறுப்பினர்**
தமிழ் திரைப்பட தயாரிப்பாளர் சங்கம்
தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை

**பொதுக்குழு உறுப்பினர்**
தென்னிந்திய திரைப்பட தொழிலாளர் சம்மேளனம்

**முன்னாள் தலைவர்**
தென்னிந்திய திரைப்பட மற்றும் தொலைக் காட்சி இயக்குனர்கள் சங்கம்



### ஏங்க வைத்த புத்தகம்
### புங்குடுதீவு வாழ்வும் வளமும்

எங்கள் அப்பா அடிக்கடி, "நாங்க தனிநாயக முதலி பரம்பரை", என்று சொல்லுவார். அதற்கு அர்த்தம் அப்போது எனக்குப் புரியவில்லை. தம்பிஜயா தேவதாஸ் எழுதிய "புங்குடுதீவு வாழ்வும் வளமும்" என்ற நூலைப் படித்த பின்னர்தான் அது எங்கள் பூர்வீகம் என்பதை புரிந்து கொண்டேன். இந்த விழுதுக்கு ஆணிவேரை அறிமுகப்படுத்திய நூலாசிரியர் தம்பிஜயா தேவதாஸ் அவர்களுக்கு முதற்கண் என் நன்றிகள்.

புத்தகத்திலிருந்த புகைப்படங்கள் என் இளமைக்கால நினைவுகளை நெஞ்சிலே மீண்டும் நிழலாட வைத்தன. புங்குடுதீவு நுழைவாயிலின் படம், வேலணையைத் தொடும் வாணர்பாலம், கண்ணகையம்மன் கோவில், கணேச வித்தியாசாலை.... நான் எட்டு வயதுச் சிறுவனாக பார்த்து பழகி சுவாசித்து, ரசித்து, மகிழ்ந்த மறக்க முடியாத இடங்கள்.

அந்த வெட்டுக்குளம், நான் என் சித்தப்பாவுடன் முதலில் நீச்சல் கற்றுக் கொண்ட இடம். பெருங்காட்டில் என் சித்தியின் வீடு. அங்கு நான் விரும்பிப் பழகிய மகாலிங்கசிவம் மாமா, நொத்தாரிஸ் முத்துலிங்கம் மாமா, காலப்போக்கில், கலை உலக மாயப்பயணத்தில், நினைக்க நேரமில்லாத காரணத்தால், நான் மறந்துவிட்ட அந்த ஊரின் உன்னதமான உளமார்ந்த, நல்ல உறவுகள், காட்சிகள், தம்பிஜயா தேவதாஸின் புத்தகத்தைப் புரட்டியதும் மறுபடியும் நான் எட்டு வயதுக்கே போய்விட்டேன். புங்குடுதீவு வாழ்வும் வளமும் புத்தகத்தை புரட்டியதும் அதன் வாயிலாக நான் புங்குடுதீவின் மண்வாசனையை மறுபடியும் நுகர்ந்தேன். பக்கத்துவீட்டு மாலைகட்டி மாமா, எப்போதும் தூயதமிழில் பேசும் எமது பாசத்துக்குரிய வித்துவான் ஆறுமுகம் மாமா, திருப்பூங்குடி ஆறுமுகம் மாமா என் மாமி கற்பகம், எப்போதும் எனக்கு ஏதாவது வாங்கிக் கொடுக்கும் மாமியின் கணவர் செல்லத்துரை அங்கிள் ........................ அப்பப்பா.................................அப்பாவின் புங்குடுதீவு உறவுகள் எத்தனை? அந்த உறவுகளுக்கெல்லாம் அன்று நான் செல்லப்பிள்ளை. லட்சங்கள், கோடிகள், பட்டங்கள், பதவிகள், கின்னஸ்சாதனைப் பயணம், வேண்டாத அளவுக்கு விளம்பரங்கள்...... எல்லாம் வந்தன... நிலைத்தன.

எண் 15, எவிஎம். பிலிம் ஸ்டுடியோ, வடபழனி, சென்னை - 600 026

**வி. செ. குகநாதன் பி.காம்**
(கதாசிரியர், இயக்குனர், தயாரிப்பாளர்)

தொ.பே.எண்: 2827 2853
3251 2168

**தலைவர்**
V.C.K. அறக்கட்டளை
பாலவித்யா கல்வி நிலையம்

**செயலாளர்**
தமிழர் ஐக்கிய முன்னேற்றக் கழகம்

**துணைத் தலைவர்**
தென்னிந்திய திரைப்பட எழுத்தாளர் சங்கம்

**துணைத் தலைவர்**
தென்னிந்திய திரைப்பட தயாரிப்பாளர் கில்ட்

**துணைத் தலைவர்**
தென்னிந்திய சினி - டெக்னீசியன்ஸ் அசோசியேஷன்

**மாநில அமைப்பாளர்**
தமிழக எம்.ஜி.ஆர் மனிதநேய மன்றம்.

**செயற்குழு உறுப்பினர்**
தமிழ் திரைப்பட தயாரிப்பாளர் சங்கம்
தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை

**பொதுக்குழு உறுப்பினர்**
தென்னிந்திய திரைப்பட தொழிலாளர் சம்மேளனம்

**முன்னாள் தலைவர்**
தென்னிந்திய திரைப்பட மற்றும் தொலைக் காட்சி இயக்குனர்கள் சங்கம்

ஆனால் பஸ் வசதியே இல்லாத, மின்சார வசதியே இல்லாத, நல்லகுடி தண்ணீர் கூட இல்லாத, வெள்ளை மண்ணும், சுருட்டைப்பாம்பும், புகையிலை வாசனையும், திரும்பிய பக்கமெல்லாம் குளங்களும், கடல்நீரும் சூழ்ந்த புங்குடுதீவை மறுபடியும் என்னால் பார்க்கமுடியுமா?

தமிழக ஆட்சியாளர்கள் என்னை "கலைமாமணி" ஆக்கினார்கள். தென்னிந்திய நடிகர் சங்கம் என்னை "கலைச்செல்வம்" ஆக்கியது. தமிழர் தேசிய உணர்வாளர்கள் "எழுச்சி இயக்குனர்" என்றார்கள். திராவிடக் கழகமோ "இளமான இயக்குனர்" என்ற பட்டத்தை தந்து கௌரவித்தது. "தமிழ்நாடு நல்வழி நிலையம் "குணக்கலைக்குன்று" எனப்பட்டம் வழங்கியது. எத்தனை பட்டங்கள் வந்தாலும், பல கோடி ரூபாயில் கட்டிய மாடிவீட்டில் வாழ்ந்தாலும் அந்த 12ஆம் வட்டாரத்தையும், தல்லமியையும் எனக்கு வெள்ளிச் செம்பில் நிரம்பி வழிய கற்கண்டு போட்டு காய்ச்சிய ஆட்டுப்பால் தினமும் தந்த அப்பாவழி ஆச்சியையும் என்னால் இன்றும் மறக்கமுடியவில்லையே!

1954ஆம் ஆண்டு புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில்முன் நடந்த சிலப்பதிகார விழா. அதில் பேசிய ம.பொ.சி, கி.வா. ஜகநாதன், பேராசிரியர் அ. ஞானசம்பந்தன் ஆகியோரின் பேச்சைக் கேட்டு... அவர்களைப் போல் நானும் பேசவேண்டும், கடல்தாண்டிப்போய், தமிழகத்தில் நமது தாயகத்தில் புகழ்பெறவேண்டும் என புங்குடுதீவு மண்ணில் கங்கணம் கட்டிக் கொண்டேனே.... அவையெல்லாம் நிறைவேறிவிட்டன. என் பேச்சுக்கு கைதட்ட இங்கே ஒரு பெருங்கூட்டமே இருக்கிறது. ஆனால் எந்த மண்ணில் எனக்கு அந்த ஆசை ஏற்பட்டதோ அந்த மண்ணில்... என் சொந்த மண்ணில் நான் பேசவேண்டாமா? அந்த நாள் வருமா, ஏங்குகிறேன்.

என் ரத்த சொந்தங்களே, நாம் மீண்டும் ஒரு முறை புங்குடுதீவில் கூடிடுவோம். அந்த மண்ணை முத்தமிட்டு வணங்கி மகிழ்ந்திடுவோம். நம்மை உயர்த்திவிட்ட அந்த மண்மாதா புகழ் விண் எட்ட... நாம் என்ன செய்ய வேண்டுமோ... அவையனைத்தும் செய்திடுவோம். "புங்குடுதீவு வாழ்வும் வளமும்" என்ற இந்த நூலின் ஆசிரியர் தம்பிஜயா தேவதாஸ் அவர்களே என் ஆசைகள் நிறைவேற ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுகொள்கிறேன்.

என்றும் தமிழுணர்வுடன்
**வி.செ. குகநாதன்**

எண் 15, எவிஎம். பிலிம் ஸ்டுடியோ, வடபழனி, சென்னை - 600 026

# அணிந்துரை

## பட்டை தீட்டும் பழவப் பதிவுகள்

*'A useless life only earthly death'*
- J.W. Goethe (1749-1832) -

ஏறக்குறைய 300 பக்கங்கள் கொண்ட இந்த நூலின் வரைவை என்னிடம் தந்து அதற்கான முன்னுரையை எழுதித் தருமாறு நண்பர் தம்பிஜயா தேவதாஸ் கேட்டுக்கொண்டபோது அந்தக் கோரிக்கையை ஏற்காதிருப்பதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்கள் என்னிடம் இருந்தன.

முதலில், அந்த 300 பக்கங்களையும் படிப்பதற்கான கால அவகாசம் எனக்குக் கிடைக்குமா என்பது சந்தேகமாகவே இருந்தது. மிகமோசமான கால. வேலை நெருக்கடிக்கு உட்பட்டிருக்கின்றேன் என்பதை நண்பர் என்னை அணுகிய நேரத்தில் நேரடியாகவே கூறிவிட்டேன். சரி, வாசிக்க ஆரம்பிப்பதாயின் அதற்கு முன்பாகவே, சில வினாக்களுக்கு விடைகாண வேண்டியுமிருந்தது.

ஆக்க இலக்கியம். விமர்சனம். திரைப்படத்துறை என்பவற்றில் நன்கு பரிச்சயமான நண்பர் தம்பிஜயா தேவதாஸ் இந்த முயற்சியில் இறங்குவதற்கான சிறப்புக் காரணங்கள் எவையேனும் உள்ளனவா? ஒருவர் தன்னுடைய ஊரினைப் பற்றி எழுதாவிட்டால் அப்படி என்னதான் கெட்டுவிடப் போகின்றது? இன்னும் 'பச்சையாகச்' சொல்வதானால், இதெல்லாம் ஒருவித குறுகிய மனப்பாங்கினைச் சமூகத்தில் வளர்த்துவிட உதவுவதாகாதா? இவை நூலாசிரியரை எட்டாத, ஆனால் எனக்கான கேள்விகள்!

இந்த நூலின் வரைவெல்லை அல்லது வீச்செல்லை என்ன? இது எழுதப்படுவதன் நோக்கம் என்ன? இது யாரைப் போய்ச் சேரவேண்டும்? ஏன் அவர்களை இது சென்றடைய வேண்டும்? அதன் விளைவுகள் என்னவாக இருக்கும்? என்னுள் எழும் இந்த வினாக்கள் கட்டாயமாக நூலாசிரியரின் மனதிலும் எழுந்திருக்குமா? அங்ஙனம் எழவேண்டுமென நான் எதிர்பார்ப்பது எந்தளக்கு நியாயமானது? என்பது இன்னொரு கேள்வி! இவை அவரைக் கட்டாயமாக எட்ட வேண்டிய கேள்விகள்! ஆக, நண்பரின் முயற்சியின் நியாயப் போக்கினை என்னுடைய பார்வையில் எடை போடுவதற்கான விடைகளைத் தேட வேண்டியிருந்தது.

மறுபுறத்தில், நூலின் உள்ளடக்கம் நிச்சயமாக எங்களை, எங்கள் குடும்பத்தினரை, எங்களது நெருங்கிய உறவினர்களை, நண்பர்களைச் சுற்றிவரக்கூடிய எல்லாவித சாத்தியங்களையும் உள்ளடக்கியே இருக்கும் என்பதையும் என்னால் சர்வசாதாரணமாக ஊகிக்க முடியவில்லை என்று கூறமுடியாத நிலை. இந்நிலையில் நானே இந்த நூலுக்கு முன்னுரை எழுதுவதன் மூலம் சில 'ஒப்புதல்களை அல்லது மறுப்புகளை' முன்வைக்கின்றேனா? என்றொரு பாரிய கேள்வியும் என் முன்னே உருவெடுத்தது. ஆக, இதில் "ஊன்றிய நலனொன்று" உள்ளோடுவதாக நான் உணரவில்லை என்று பொய்யுரைக்க முடியாத நிலை.

நான்காவதாக, இத்தகைய நூலொன்றின் கருத்துநிலை, நிகழ்வுச்சரிநிலை பற்றி சற்றேனும் ஆழமாகப் பார்க்கக் கூடிய அறிவும் அனுபவமும் எனக்குப் போதியளவில் உண்டா? கருத்து நிலை பற்றி என்றால்கூடப் பரவாயில்லை. என்னுடைய மாற்றுக் கருத்து என்று எதையாவது கூறித் 'தப்பித்துக்' கொள்ளலாம். ஆனால் நிகழ்வுகளின் சரியாந்தன்மை பற்றி நான் எதுவும் கூற முடியாத நிலை. அங்ஙனம் கூறுவதாயின் சரியான தகவல்களை என்னால் நண்பரிடம் வழங்கக் கூடியதாக இருக்க வேண்டும். இன்றைய நிலையில் அத்தகைய ஒரு தேடல் முயற்சிக்குப் பல தடைகள். ஆக, எதை ஏற்பது? எதை மறுப்பது? என்றொரு சிக்கல்நிலை.

இன்னொன்றையும் கூறவேண்டும். நூலாசிரியர் கூறுகின்ற தகவல்கள் ஒருபுறமிருக்க, அவருடைய பார்வை, கணிப்பீடு எந்தளவுக்கு என்னால் ஒருப்படக்கூடியது? உதாரணமாக, ஒருவரை அறிஞர் என்று நண்பர் மதிப்பிடுகையில், அந்த மதிப்பீட்டுக்கான பின்புலம் என்ன? அதனோடு என்னால் ஒருப்பட முடியுமா? அளவுகோல்களும் உரைகற்களும் எந்தத் தராதரத்தின் அடிப்படையில் அமைந்தவை? இவை எல்லோருக்குமான பொதுவான கேள்விகள்!

இந்த வினா வேலிகள் யாவற்றையுந் தாண்டி, இதன் வழிப்பட்ட ஒரு போராட்டத்தின் பின்னர், நூலாசிரியருடனான என்னுடைய கலந்துரையாடலின் முடிவின் பயனாக எட்டப்பட்ட "தீர்வு" தான் இந்த முன்னுரை என்பதை வாசகர்கள் மனதிருத்தல் வேண்டும்.

எப்படி இந்த நூல் ஓர் ஆய்வு நூலல்லவோ அங்ஙனமே எனது முன்னுரையும் எவ்வித 'ஆய்வுக் கோணத்தில்' அமைந்ததுமல்ல. உண்மையில் இதுவொரு தேடல் நூல். பலராலும் சாதிக்க முடியாததைத் தன்னால் முடியுமென்று சாதித்துக்காட்ட முனைந்தவரின் முயற்சியின் சான்றிது. இதனுடைய சிறப்பு என்னவென்றால் இத்தகையதொரு நூலை எழுதுவதற்கு எங்களால் "நிச்சயமாக முடியாதப்பா" என்று சோம்பலின் உச்சத்தில் நின்று எம்மில் பலரும் சங்கையின்றிச் சத்தமிட்டுக் கூறிவிட முடியும் என்பதுதான்.

சிலருக்கு அவர்களது சொந்த ஊரே முகவரியைத் தேடித்தருகின்றது. வேறு சிலர் தமது ஊருக்கு முகவரியைத் தேடிக் கொடுக்கின்றார்கள். இதில் ஒரு 'பாரம்பரியப் பிழைப்பு' தொடர்கின்றது. முன்வந்தவர்கள் முகவரியைக் கொடுத்திருப்பதனால் பின்வந்தவர்கள் அந்தப் பாக்கியத்தை ஈட்ட முடியாதவர்களாகி விடுகின்றனர். ஆனால், புங்குடுதீவைப் பொறுத்தளவில் தொடர்ச்சியாகவே முகவரியைக் கொடுக்கவும் பெற்றுக்கொள்ளவும் தகவு கொண்டதாக அது அமைந்திருப்பது எவ்வழி சாத்தியமாயிற்று, என்பது வியப்புக்குரிய வினாவாகவே தொடர்கின்றது. உதாரணமாக, ஒரு காலத்தில் வர்த்தகத்தில் நம்மவர்கள் கொடிகட்டிப் பறந்தபோது எமக்கிருந்த முகவரி இன்று புலம்பெயர்ந்தும் தொடர்கின்றது என்றால் அது வர்த்தகத் திறமையினால் மட்டுமே வாய்த்த புகழ் என்று வாதிட முடியுமா?

,என்னுடைய கருத்தில் புங்குடுதீவின் பன்முகச் சிறப்புக்கு வேறு எவையேனும் அடிப்படைக் காரணங்கள் இருக்க வேண்டும். உழைப்பு, துணிவு, நேர்மை, அதிர்ஷ்டம், திறமை, தெய்வீக அருட்கொடை என்று ஒரு புறத்திலும் சமயோசித புத்தி, தந்திரம், தொழிற்பக்தி என்று இன்னொரு புறத்திலும் கூறப்பட்டாலும், இவற்றை அறிவார்ந்த நிலையில் நின்று எடைபோடுதல் சாத்தியமில்லை. மேலும் பொதுமைப்படுத்தல்கள் இத்தகைய விடயங்களில் ஆபத்தான அனுமானங்களுக்கே இட்டுச் செல்லும் என்பதையும் கவனத்திற் கொள்ளல் வேண்டும்.

பிரெஞ்சு அரசியலறிஞரான Montesquien (1689-1755) என்பவர் சட்டம் என்பது சமூக உறவுகளின் அடிப்படையிலானதே என்ற கருத்தை வலியுறுத்தியவர். 'இயற்கையினால் தேவைப்படுத்தப்பட்டவாறு மனிதன் நடக்காதபோது அவன் சட்டத்தை மீறுகின்றவனாவான்' என்று தனது 'Spirit of the Laws' எனும் நூலில் கூறும் அவர், அத்தகைய மீறலுக்கான காரணத்தையும் முன் வைக்கின்றார். 'மனிதனுடைய நியாய உணர்வானது வெவ்வேறு புவியியற் பின்னணியில் நிச்சயம் மாறுபட்டதாகவே இருக்கும். சுவாத்தியம், மண், செய்தொழில், வர்த்தகம், சமயம் வழக்காறுகள் என்பவை யாவும் குறிப்பட்ட ஒரு விடயத்தில் எது நியாயமானது (அல்லது சட்டமாகிறது) என்பதைத் தீர்மானிப்பதில் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய விடயங்கள் என்பதுடன் உடல், மன மற்றும் நிறுவன ரீதியிலான இந்த உறவு நிலைகளே சட்டத்தின் 'ஆன்மா'வாகும் என்றும் Montesquien அழுத்தியுரைத்துள்ளார்.

இந்த அடிப்படையில் புங்குடுதீவினை உரைத்துப் பார்க்க வேண்டும் என்றதோர் ஆர்வம் எனக்குள் உண்டு. மண்பற்று என்பது தேசப்பற்றின் அத்திவாரம். "ஊரை வளர்த்தால் தான் உலகை வளர்க்கலாம்" என்பது நடைமுறைப் பயன்பாட்டுவழிச் சூத்திரமாக அனுபவத்தால் உணரப்பட்ட பாடமாகும். எந்தக் கருத்தையும் ஊர் ஊராகப் போய்த்தான் பரப்ப முடியும், வளர்க்க முடியும் என்றால் முதலில் ஊர் இருக்க வேண்டும், அதுவும் உரிய நிலையில் இருக்க வேண்டும் என்பது ஊகித்துணரத் தக்கதாகும்.

ஊற்றிலிருந்து ஓடை பிறக்கின்றது. ஓடையானது சிற்றாறாகின்றது. அதுவே பின்னர் எங்கோ ஓரிடத்தில் பெருநதியாகிப் பிரவாகிக்கின்றது. ஊற்றினை உதாசீனப்படுத்தினால் இந்தப் பிரவாகம் ஒருபோதும் சாத்தியமாகாது என்பது அனுபவப் பாடந்தானே. இத்தகைய பல்வேறு ஊற்றுக் கண்கள் அடைபடாமல் இருக்கும் வரைதான் நதியும் வளத்தோடும் வலம்வர முடியும். எனவே தான் ஊற்றினைப் பேணுவோம். ஊரினைப் போற்றுவோம்! இங்கே சுயநலம் அல்லது குறுநலம் என்பதன்றிப் பெருநலம் பேணும் வழிமுறையொன்று வலுப்பெறுகின்றது என்றவாறாக எமது அணுகுமுறை இருக்க வேண்டும். ஆக்க எழுத்தாளன் ஒருவனுக்கு இருக்கக் கூடிய எல்லாவிதத்திலுமான சுதந்திரமும் தன்னம்பிக்கையும் இத்தகையதொரு தொகுப்பு நூலை எழுதுவோனுக்கு நிச்சயமாக இருக்க முடியாது என்பது இதனை வாசிக்கையில் தெளிவாகப் புலப்படுகின்றது. எதை எழுதுவது? எதனைத் தவிர்ப்பது? யாரைச் சேர்ப்பது? யாரை ஒதுக்குவது? என்ற வினாக்களுக்கான விடையை, உரைகற்களுக்கு அப்பாற்பட்ட வகையில் அகவயப்பட்ட நிலையில் நின்று மட்டும் தேடிப்பார்த்தால் இது வெறும் குறுகிய குறிப்பேடாகிவிடும். ஆனால் ஏதோவொரு விதத்தில் நண்பர் தேவதாஸ் இயன்றளவுக்கு புறவய (Objective) நோக்கில் தெரிவுகளை மேற்கொண்டிருக்கின்றார் என்பதற்காக அவரைப் பாராட்டலாம்.

மேலும், புவியியல், தொல்பொருளியல், வரலாறு, சமூகவியல், அரசியல், கலாசாரம், கல்வியியல் எனப் பல துறைகளிலும் தேர்ந்தோர் தனித்தனித் துறையாகப் பிரித்தெடுத்து ஆராய்ச்சி செய்திருக்க வேண்டிய விடயங்களை, தனிமனிதனொருவர் அதுவும் தனது தனிப்பட்டஅக்கறை காரணமாகத் தேடியலைந்து தேட்டமாக்கித் தருகின்றார் என்றால் எல்லாவற்றுக்கும் மேலாக அவரது துணிச்சலும் விடாமுயற்சியும் ஏனையோருக்கும் முன்மாதிரியாக அமைவதையிட்டுப் பெருமைப்பட நியாயமுண்டு. நண்பரின் இந்த முயற்சியானது. இதுபோன்ற நோக்கில் இன்னும் பலராலும் தத்தமது 'சொந்த ஊர்கள்' பற்றி நிச்சயம் எழுதப்படுவதற்கான முன்னோடி என்ற முத்திரையையும் பெறுவதாக அமைகின்றது எனலாம்.

புலம்பெயர் நாடுகளில் கீர்த்தியுடன் வாழும் நம்மவர்கள் பலரின் விபரங்கள் இங்கு உள்ளடக்கப்படாததற்கான ஏற்கத்தக்க காரணத்தை நூலாசிரியர் சொன்னாலும் அந்த உறவுகளுடனான தொப்புள் கொடி ஏதோவொருவிதத்தில் தொடர்புறுத்தப்பட வேண்டும் என்ற ஆதங்கம் புத்தகத்தை வாசிக்கும்போது இடையிடையே எழுவதும் தவிர்க்க முடியாததாகின்றது. குறிப்பாக, பிரிட்டிஷ், அமெரிக்க, கனேடிய பல்கலைககழகங்களில் பேராசிரியர் தரத்துக்கு உயர்ந்துள்ளவர்களில் சிலரும் அங்குள்ள விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகங்களில் பெரும் பொறுப்புகளை வகிக்கின்றவர்களில் சிலரும் புங்குடுதீவு மண்வாசனை சுமந்தவர்கள் என்பது பெரிதும் வெளியில் பேசப்படுவதில்லை. ஆசிரியர் இவர்களையும் அடையாளங்காட்டியிருத்தல் அவசியம் என நினைக்கின்றேன. இவை அடுத்த சந்ததியின் நலன் கருதியேனும் பதிவு செய்யப்பட வேண்டியவையாகும்.

நூலின் முற்பகுதியில் வரலாற்றுத் தேடலின் வெளிப்பாடுகளாக வரும் சில விடயங்கள் திரும்பத் திரும்பக் கூறப்படுவது சாதாரண வாசகனது வாசிப்பு அக்கறையை மழுங்கடித்துவிடக்கூடும். அத்தியாயங்களை அமைக்கும் போது கூடுதல் கவனம் எடுத்திருப்பின் அந்த 'கூறியது கூறல்' என்ற குற்றச் சாட்டுக்கு இடமில்லாமல் போயிருக்கும். இன்னொரு பெரிய இடைவெளியாகத் தெரிவது ஒவ்வொரு துறையிலும் தேர்ந்தவர்களைப் பற்றி அத்தியாயங்களை அமைத்த பின்னர் அவர்களது உறவுமுறைகள் பற்றித் தனியானதோர் அத்தியாயத்தில் ஆராயப்பட்டிருப்பின் அது மற்றொரு கோணத்திலான பார்வையையும் வழங்கியிருக்கும். எமது சமூகம் இன்றிருக்கும் நிலையில் தத்தமது உறவுச் சங்கிலியின் விழுதுகளை அடையாளங் காண்பதில் நாளைக்கு இது, நமது அடுத்த சந்ததிக்கு சங்கடத்தை ஏற்படுத்தி விடக்கூடாதல்லவா. இது விடயத்தில், பெற்றோர்கள் பிள்ளைகளுக்கான 'கடனை' ஆற்றுவதில் அத்தகைய அத்தியாயமொன்று சிறப்பாக உதவியிருக்க முடியும்.

முடிவாக, இந்த நூல் குறிப்பாக இரண்டு தேவைகளைப் பூர்த்தி செய்கின்றது என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை என்பேன். ஒன்று எங்கள் கடந்த காலத்தைக் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்தி ஒரு கணம் கண்களைப் பனிக்க வைப்பதன் மூலம் எம்மை எமக்கே இன்றும் அடையாளங் காட்டுகின்றது. அங்ஙனம் செய்கையில் எமது முன்னோருக்கான எமது மதிப்பளிப்பையுந் தவறாமல் பெற்றுக்கொள்ளவே செய்கின்றது. ஆனாலும் இவர்களில் எத்தனை பேரை நாம் "வாழும் போதே வாழ்த்தினோம்" என்ற குற்ற உணர்வு எமது நெஞ்சினை நெருடுவதனையும் மறைக்கக் கூடாது. இரண்டாவதாக, எதை நாங்கள் செய்ய வேண்டும் என்பதையும் இந்நூல் கோடிட்டுக் காட்டுகின்றது. உண்மையில் இதுவே புங்குடுதீவின் மைந்தர்களுக்கான பாரிய சவாலாகும்.

இந்தப் பதிவுகளை மேலும், மேலும் பட்டை தீட்ட வேண்டிய ஆற்றல் பெற்றோர் நம்மிடையே நிறையவே உள்ளனர் என்பதையே இந்த 'முதல்நூல்' மூலம் நண்பர் நமக்கு அடையாளங் காட்டுகின்றார். அந்த முதன்மைக்கான பெருமை நண்பர் தம்பிஐயா தேவதாஸுக்கு கச்சிதமாகவே பொருந்துகின்றது.

அவருக்கு எனது பாராட்டுகளும் வாழ்த்துகளும்!

**வி.ரி. தமிழ்மாறன்**

சட்ட பீடம்
கொழும்பு பல்கலைக்கழகம்
ஜூலை 2006

# இலங்கையின் வடபகுதி



# ஆசியுரை

புங்குடுதீவில் வாழ்ந்த. வாழுகின்ற மக்களையும் அவர்களை 'வாழ்வாங்கு வாழவைத்த அப்பண்டைப் பெருநிலத்தைப் பற்றியும் ஒருவகை மேலோட்ட வரலாற்றுணர்வோடு ஆவணப் படுத்த எழுத்தாளர் தம்பிஐயா தேவதாஸ் முன் வந்ததன் விளைவே 'புங்குடுதீவு - வாழ்வும் வளமும்' என்ற இந்நூல் எனலாம். இதன் ஆழ அகலங்களைப்பற்றிப் பேசுவது எதிர்காலச் சந்ததியினர்க்குரியது. அவர்கள் மேல் இந்நூல் செலுத்தப்போகும் சாதக பாதகமான விளைவுகளின் பாற்பட்டதாக அது அமையலாம். ஆயினும் அதற்காக இச்சிறு ஆசியுரை வழங்கும் நாம், அது பற்றி எதுவும் பேசாது இருக்க வேண்டும் என்பதுமல்ல. ஏற்கனவே தீவகம் பற்றி பல நூல்கள் வெளிவந்திருக்கின்றன. பேராசிரியர் வீ.சிவசாமி தீவகம் பற்றி பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். அவர் 'புங்குடுதீவு ஒரு வரலாற்றுக் கண்ணோட்டம்' என்ற சிறிய ஆய்வு நூலையும் தந்துள்ளார். பேராசிரியர் கா. குகபாலன் தீவகம் பற்றி பல நூல்களை எழுதியுள்ளார். 'புங்குடுதீவு - அன்றும் இன்றும்' என்ற நூலையும் அவர் தந்துள்ளார். சதாசிவம் சேவியர் தொகுத்துள்ள 'சப்ததீவு' என்ற நூலில் புங்குடுதீவு பற்றி சிலாகித்து எழுதியுள்ளார். இவற்றின் பின்புலத்தில் தான் தம்பிஐயா தேவதாஸ் எழுதியுள்ள 'புங்குடுதீவு - வாழ்வும் வளமும்' என்ற இந்நூல் தனது தனித்தன்மையைத் தக்கவைக்க வேண்டியுள்ளதாய் உள்ளது. அத்தகைய தனித்தன்மைக்கான கீற்றுகளை இந்நூல் கொண்டுள்ளதா? இது ஒரு முக்கியமான கேள்வி. இதற்குப் பதில் காண்பதற்கு முன் இன்னுமொரு கேள்வி துரித்துக்கொண்டு முன்னெழுகிறது. இந்நூலை இவர் எழுதுவதற்கான காரணம் என்ன? ஏற்கனவே புங்குடுதீவு பற்றிய நூல்கள் பல்கலைக் கழக மட்டத்தவர் சிலரிடமிருந்து வந்ததன் பின்னரும் தேவதாஸ் அவர்களை இந்நூலை எழுத உந்தித்தள்ளியது எது? இராமாயண காவியத்தை பல கவிஞர் பெருமக்கள் எழுதிய பின்னரும், குறிப்பாக வால்மீகி போன்ற மேதையொருவரின் படைப்பாக்கத்திற்குப் பின்னரும் கம்பனை 'இராம அவதார' காவியத்தை எழுதத்தூண்டியது எது?

அதற்குப் பதிலாக கம்பனே, 'ஆசை பற்றி அறையலுற்றேன்' என்று பதில் சொல்கிறான். அந்த ஆசை, அதுதான் முக்கியம். அதுதான் கம்பனை எழுதத்தூண்டியது. தனக்கு முன்னர் பலர் எழுதியதைப் படித்த அருட்டுணர்வில் (Inspiration) தானும் ஒன்றை எழுதிப்பார்க்க வேண்டும் என்றும், அவர்கள் எழுதத் தவறியவற்றையெல்லாம் தன் பார்வையில் சீர் செய்து எழுதவேண்டும் என்றும் உள் முகிழ்க்கும் ஆசைதான் இப்படைப்பின் மூலகாரணம் எனலாம். இந்த ஆசை முனைப்புறுவது அவரவர் நிற்கும் எழுத்தாற்றல் தளங்களைச் சார்ந்ததாகும். இங்கே தம்பிஐயா தேவதாஸ் அவர்களின் 'புங்குடுதீவு - வாழ்வு வளமும்' என்னும் இந்நூலின் மூலகாரணத்தையும் இதன் பின்னணியில் வைத்துப்பார்ப்பதே பொருத்தமானது. தனக்கு முன்னர் தான் பிறந்த ஊர்பற்றி சிலர் எழுதியதைப் படித்துப்பார்த்த தேவதாஸ், தனது முன்னவர்களின் நூலில் விடுபட்டுப்போனவற்றை நிவர்த்தி செய்வதோடு தன்பார்வையில் தன் ஊரையும் தன் மக்களையும் சிறிது வித்தியாசமாக பார்க்கவேண்டும் என்ற ஓர் உந்துதல் ஏற்பட, அதற்கு உருவம் கொடுத்ததே இந்நூலெனில் அது பிழையாகாது என நான் நம்புகிறேன். 'புங்குடுதீவு' வாழ்வும் வளமும்' என்ற இந்நூலின் உட்காரணம் இதுவெனில், அதன் விளைவாய் உருப்பெற்றுள்ள இந்நூல் முன்னையவற்றைவிட எந்தவகையில் தன்னைத் தக்க வைக்கும் தனித்தன்மையைப் பெற்றுள்ளது என்பது அடுத்த முக்கியமான நான் ஆரம்பத்தில் எழுப்பிய கேள்வியாகும்.

23 அத்தியாயங்களோடும் 60க்கு மேற்பட்ட படங்களோடும் 300 பக்கங்களாக விரியும் இந்நூல், புங்குடுதீவில் வாழ்வாங்கு வாழ்ந்த அமரர்களாகி விட்டவர்களதும் இன்னும் வாழ்ந்து கொண்டிருப்பவர்களதும் அவர்களை அவ்வாறு வாழ வைத்த தெய்வத்தலங்களதும் கல்வித்தலங்களதும் அரிதான ஞாபகச் சின்னங்களதும் புகைப்படங்களோடு வெளிவந்திருப்பது முக்கியமானதாகும் புகைப்படங்களை சேர்த்துக் கொள்வதால் ஒரு நூல் முக்கியத்துவம் பெறுவதில்லை என்பதை நாம் அறிவோம். ஆனால் எங்கே அதன் முக்கியத்துவத்தின் வீச்சு எழுகிறதெனில், புங்குடுதீவின் வரலாற்றுப் பின்னணியில் இந்நூலைப் படிக்கும் போதும் பார்க்கும் போதும் மனங்களை இது பின்னோக்கி ஓட வைத்து ஒவ்வொருவரிடத்தும் அவரது வாசிப்பு, கல்வி, சிந்தனை போன்றவற்றுக்கேற்ப வரலாற்றுக்கிளைகளை ஊற்றெடுக்க இந்நூல் அருட்டுணர்வு ஊட்டுகிறது என்பதாலேயே. அதுவே இந்நூலின் தனித்தன்மையும் எனலாம். அடுத்தது நூலின் பக்கங்கள் கூடுதலாய் இருப்பதால் ஒரு நூல் தரமானதாக இருப்பதாகக் கொள்ளுதல் பிழையான எடுகோள் என்று ஒருவர் கூறினால் அதற்கு நானும் உடன்படுவேன். ஆனால் இந்தக்கருத்து ஆக்க இலக்கியம் சார்ந்தவைக்கே அதிகமாகப் பொருந்தலாம். அதிக பக்கங்களைக் கொண்ட ஒரு நாவலைவிட மிகக்குறைந்த அளவு பக்கங்களைக் கொண்ட ஒரு குறுநாவல், காத்திரமானதாக அமையலாம். ஆனால் வரலாறு சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கூறிச் செல்லும் ஒரு நூல் அதிக பக்கங்களைக் கொண்டதாக அமையுமெனில், அது அதிக தகவல் விபரங்களை (FACTS) தந்திருக்கிறது என்பதே அதன் அர்த்தம்.

இதை உறுதிப்படுத்துவது போலவே தேவதாஸ் எழுதியுள்ள இந்நூல் நிற்கிற தெனில் மிகையாகாது. இவருக்கு முன்னர் எழுதப்பட்ட புங்குடுதீவு பற்றிய நூல்களில் இல்லாத பல விஷயங்கள் இந்நூலில் அடங்கியுள்ளன. அந்த வகையிலும் இது தனக்குரிய தனித்தன்மையைப் பேணிக் கொள்கிறது. உதாரணமாக புங்குடுதீவைச் சேர்ந்த எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், கவிஞர்கள், கலைஞர்கள், பல்துறை அறிஞர்கள் பற்றிய விபரங்களைத் தந்தமை, இன்னும் புங்குடுதீவின் திருத்தலங்கள் பற்றிய தகவல்கள் அதாவது 12ஆம் வட்டாரத்தில் உள்ள பெத்தப்பா கோயில் முதல் பாணாவிடை ஐயனார், பேய்ச்சியம்மன் என்று விரிந்து சிறுசிறு விபரங்களையும் தொகுத்தளித்திருக்கும் முறையானது பாராட்டப்படவேண்டிய உழைப்பே. அடுத்ததாக 'புங்குடுதீவுப் பேச்சுவழக்கும் வாழ்க்கை வட்டச்சடங்குகளும்' என்ற தலைப்பில் தந்திருக்கும் விஷயம் ஆக்க இலக்கியத்துக்குரிய இலக்கிய நயத்தோடு எழுதப்பட்டுள்ளமுறை நகைச்சுவை மேலெழ படிப்போர் மனதைக் கவர்வதாய் உள்ளது.இன்னும் புங்குடுதீவு மக்களின் வாழ்க்கையில் அழியாச் சுவடொன்றை விட்டுச்சென்ற, புங்குடுதீவு மக்களின் இடப்பெயர்வு பற்றி குறிப்பும் மிகவும் நேர்த்தியாகத் தரப்பட்டுள்ளது எனலாம். இந்நூலில் சிறு சிறு விடுபடல்கள் கவனயீனங்கள் இருப்பினும் இந்நூல் தன்னைத் தக்கவைத்துக் கொள்ளும் தனித்தன்மையோடு திகழ்வதால் எதிர்காலச் சந்ததியினரின் பல்வகைத் தேவைகளை பூர்த்தி செய்வதற்கான உசாத்துணை நூலாகத்திகழும் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.இந்நூலை எழுதி, புங்குடுதீவு மண்ணுக்கும் மக்களுக்கும் வளஞ்சேர்த்த நண்பர் தம்பிஐயா தேவதாஸ் அவர்களுக்கு எனது வாழ்த்துகள். இந்நூல் மூலம் அவர் எங்கும் பேசப்படுவதற்கான உரமான அத்திவாரத்தைப் போட்டுள்ளார். எங்கள் ஆசி அவருக்கு உரித்தாகட்டும்.

கொழும்பு
ஆகஸ்ட் -2006

அன்புடன்
**மு. பொன்னம்பலம்**

# வெளியீட்டுரை

**'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்**
**நற்றவவானிலும் நனிசிறந்தனவே'**

-பாரதியார்

நான் புங்குடுதீவு என்ற புண்ணிய பூமியில் பிறந்ததையிட்டுப் பெருமைப்படுகிறேன். நான் பிறந்த கிராமத்தின் பெருமைகளை உலகம் எங்கும் தெரியப்படுத்தவேண்டும் என்பது என் நீண்டநாள் ஆசை. எமது இனத்தைப்பற்றியும் ஊர்களைப்பற்றியும் ஆரம்பத்தில் திடமாக எழுதி வைக்காததனாலேயே இலங்கைத்தமிழருக்கு வரலாறு இல்லை என்று சிலர் கூற முயலுகிறார்கள்.

இவ்வாறானவற்றுக்குத் தீர்வு என்ன? எனது கிராமத்தின் வாழ்வையும் வளத்தையும் புத்தகமொன்றின் மூலம் வெளிப்படுத்துவோமா? ஆம் அதுதான் நல்ல வழி என்று தீர்மானத்துக்கு வந்தேன். புங்குடுதீவின் வரலாற்றையும் பெருமைகளையும் உள்ளடக்கிய ஒரு சிறிய புத்தகத்தை வெளியிடலாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

புங்குடுதீவு என்பது ஒரு பெரிய கிராமம் ஆகும். அப்படியான பெரிய கிராமம் ஒன்றைப்பற்றி எவரும் தனித்துப் புத்தகம் எழுதுவது கஷ்டமான காரியமாகும். ஒவ்வொரு எழுத்தாளரும் தமக்குக் கைவந்த துறையில் தனக்கு விருப்பமான தலையங்கத்தில் எழுதினால் அது ஒரு பூரணமான புத்தகமாக அமையலாம். ஆனால் இந்த அவசரமான காலத்தில் அப்படியான முயற்சி சாத்தியப்படுமா? கால அவகாசம் இடம்தருமா?

முதல் முயற்சியாக ஒரு சிறிய புத்தகத்தை வெளியிட்டுப் பார்ப்போம் என்று எண்ணினோம். அவ்வாறான நம்பிக்கையில் தான் இந்தப் புத்தகம் ஆரம்பிக்கப்பட்டது. இப்படியான புத்தகத்தை யாரைக்கொண்டு எழுதலாம் என்று யோசித்தேன். புத்தகம் எழுதுவதில் ஆர்வமும் ஆற்றலும் உள்ள ஒருவர் எங்கள் குடும்பத்துக்குள்ளேயே இருந்தார். அவர் வேறு யாருமல்ல என் அக்காவின் கணவர் தம்பிஐயா தேவதாஸ் தான் அவர்.

என்னைப் போலவே அவருக்கும் புங்குடுதீவு மீது அபிமானம் இருந்தது. அடிக்கடி அவர் புங்குடுதீவு பற்றி பலகட்டுரைகளை எழுதி பத்திரிகைகளில் வெளியிட்டு வந்தார். சினிமா சம்பந்தமான புத்தகங்களையும் மொழிபெயர்ப்பு நூல்களையும் எழுதி வெளியிட்ட அவரை, புங்குடுதீவின் பெருமைகள் மீது திசைதிருப்பினேன். புங்குடுதீவு பற்றி ஒரு புத்தகம் எழுதித்தரும்படி கேட்டுக் கொண்டேன். அவர் எழுதித் தர முன்வந்தார். அப்படி உருவான புத்தகம் தான் இது. சிறிய புத்தகமாக வெளியிடவேண்டும் என்று எண்ணிய எனக்கு 300 பக்கங்களைக் கொண்ட பெரிய புத்தகமாகவே உருவாகிவிட்டது.

புங்குடுதீவில் அழகான இயற்கைக் காட்சிகள் இருக்கின்றன. கடற்கரைகள். வயல்வெளிகள், பனந்தோப்புகள் என்று பல இருக்கின்றன. அவை அனைத்தையும் புகைப்படங்கள் மூலம் காட்டவேண்டும் என்பது என் ஆசை. அவற்றையும் வர்ணப்படங்களாகவே அமைக்கவேண்டும் என்பது என் எண்ணம். கோயில்கள், பாடசாலைகள், கட்டிடங்கள், இயற்கைக்காட்சிகள் என்று சுமார் 60 புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன. இவற்றுள் சிலவற்றை நானே படம்பிடித்தேன் என்பதையிட்டு பெருமைப்படுகிறேன். இவற்றைவிட மேலும் படங்களை சேர்க்க வேண்டும் என்று எண்ணியிருந்தேன். நாட்டின் நிலைமை அவ்வாறு அதிகமான படங்களை பிடிக்க முடியவில்லை.

இந்த நூல் மூலம் பணம் சம்பாதிக்க வேண்டும் என்பது என் நோக்கமல்ல. இந்நூல் புங்குடுதீவு மக்களின் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டும் என்பது என் ஆசை. புங்குடுதீவின் புதிய சந்ததியினர் இந்நூலை வாசித்துப்பாாக்க வேண்டும். அதன் மூலம் அவர்கள் எம் கிராமத்தின் சரித்திரத்தை அறியவேண்டும். அந்தக்கிராமத்தின் வளர்ச்சிக்கு உதவவேண்டும் அவ்வாறான ஒரு வாய்ப்பு எமது சந்ததியினருக்கு கிடைத்தாலே போதும் நான் பெரு மகிழ்ச்சியடைவேன்.

தமிழ் மொழியை வாசித்துப் புரிந்து கொள்ள முடியாத புங்குடுதீவின் இளைய சந்ததியினர் வெளிநாடுகளில் வாழுகிறார்கள். அவர்களால் இந்த புத்தகத்தை வாசிக்க முடியாது. ஆனால் படங்களையாவது பார்த்து ஓராளவு புரிந்து கொள்ள முடியும். ஆனாலும் அவர்களுக்காக நூலை ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து வெளியிட ஆவன செய்வேன்.

இலங்கையிலிருந்து வெகுதூரத்தில் சுவிற்சர்லாந்தில் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நான் சுவிற்சர்லாந்தில் வாழ்ந்தாலும் என் உணர்வுகள் எல்லாம் புங்குடுதீவைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்கும். நான் நினைத்தபடியே புத்தகம் அழகாக அமைந்திருக்கிறது கொழும்பு சண் பதிப்பக உரிமையாளருக்கும் நான் கற்பனையில் கண்டபடியே அட்டைப்படத்தை அமைத்தவருக்கும், அச்சு வேலைகளில் ஈடுபட்ட அனைவருக்கும் எனது நன்றிகள்

நாங்கள் வெளியிடும் இந்தப்புத்தகத்தின் விமர்சனங்களை வாசகர்கள் தான் தெரிவிக்கவேண்டும். எங்கள் முயற்சிக்கு எங்கள் மக்கள் ஆதரவு தருவார்களானால் இது போன்ற மேலும் பல நூல்களை வெளியிடுவோம்.

**அன்புடன்**
**சின்னத்துரை கருணாமூர்த்தி**
பேர்ன்
சுவிற்சர்லாந்து.

S. Karunamoorthy
Bümpliz - Str - 12
3027 - Bern
Switzerland
Tel: 031-9911968
24.08.2006

## பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | தீவகம் எங்கள் தாயகம் | 1 |
| 2. | புங்குடுதீவின் கதை | 11 |
| 3. | புங்குடுதீவு என்ற பெயர் எப்படி வந்தது? | 15 |
| 4. | புங்குடுதீவின் பகுதிகள் | 19 |
| 5. | புங்குடுதீவில் தனிநாயகமுதலி பரம்பரை | 25 |
| 6. | புங்குடுதீவு போக்குவரத்தும் வாணர்தாம்போதியும் | 31 |
| 7. | புங்குடுதீவின் நிர்வாகம் | 37 |
| 8. | புங்குடுதீவின் தொழில்கள் | 49 |
| 9. | புங்குடுதீவின் பேச்சு வழக்கும் வாழ்க்கை வட்டச்சடங்குகளும் | 61 |
| 10. | மு. தளையசிங்கமும் பூரண சர்வோதய இயக்கமும் | 69 |
| 11. | க. திருநாவுக்கரசுவும் வட இலங்கை சர்வோதய இயக்கமும் | 75 |
| 12. | புங்குடுதீவுக் கோவில்கள் | 79 |
| 13. | புங்குடுதீவின் சமயப் பெரியார்கள் | 127 |
| 14. | புங்குடுதீவுப் பாடசாலைகள் | 141 |
| 15. | புங்குடுதீவின் கல்வியாளர்கள் | 171 |
| 16. | புங்குடுதீவின் சமூக சேவையாளர்கள் | 201 |
| 17. | புங்குடுதீவில் வைத்திய சேவை | 221 |
| 18. | புங்குடுதீவின் தொலைத்தொடர்புகள் | 231 |
| 19. | புங்குடுதீவின் கலைஞர்கள் | 235 |
| 20. | புங்குடுதீவின் எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும் | 241 |
| 21. | புங்குடுதீவு வர்த்தகப் பெருமக்கள் | 255 |
| 22. | புங்குடுதீவு வளர்ச்சிக்கு உதவிபுரியும் நலன்புரிச் சங்கங்கள் | 275 |
| 23. | தற்பொழுது புங்குடுதீவு | 281 |
| 24. | உசாத்துணை நூல்கள் | 283 |

# 1
# தீவகம் எங்கள் தாயகம்

இரத்தின துவீபமாம் இலங்கையின் வடமாகாணத்திலே யாழ்ப்பாணக் குடாநாட்டின் கடற்பரப்பில் பலதீவுகள் பரந்து கிடக்கின்றன. சப்ததீவுகள் உட்பட பதினொரு பெரிய தீவுகளும் குடியிருப்புகள் இல்லாத சில சிறியதீவுகளும் அங்கே காணப்படுகின்றன. அனலைதீவு, எழுவைதீவு, காரைதீவு (காரைநகர்), நயினாதீவு, புங்குடுதீவு, மண்டைதீவு, வேலணைத்தீவு ஆகிய ஏழு தீவுகளும் ஒரே தொடராக யாழ்ப்பாணக் குடாநாட்டின் தெற்கே அமைந்துள்ளன. சற்று தொலைவில் நெடுந்தீவு அமைந்துள்ளது. இவற்றைவிடக் கச்சைதீவு, பாலைதீவு, கேரதீவு போன்ற சிறிய தீவுகளும் அங்கே காணப்படுகின்றன. இவற்றிலே வேலணைத்தீவு மிகப்பெரியது. அது 64 ச.கி. மீற்றர் பரப்பளவுடையது. எழுவைதீவு மிகச்சிறியது அது 1.6 ச.கி. மீற்றர் பரப்பளவு கொண்டது. 1920 ஆம் ஆண்டளவில் "பசெற்" என்னும் ஆங்கிலேயர் எழுதிய "Romantic Ceylon" என்னும் நூலில் தீவுகள் பற்றிய ஒரு சிறு அத்தியாயம் இடம்பெறுகிறது. தீவகம் பற்றி அறியப்பட்டுள்ள சில முக்கியமான தகவல்கள் இவ்வத்தியாயத்தில் காணப்படுகின்றன.

யாழ்ப்பாணக் குடாநாடு போலவே ஏறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றுப்பாரம்பரியம் கொண்டவை இவை. இத்தீவுகள் ஒரு புறத்திலே யாழ்ப்பாணக் குடாநாட்டிற்கும் வன்னிப்பிரதேசத்தின் வடபகுதியாகிய பூநகரிப் பகுதிக்கும் அண்மையில் அமைந்துள்ளன. அதே வேளையில் மேற்குப்புறமாக தென்னிந்திய மாநிலங்களான தமிழ்நாடு, கேரளக் கரையோரங்களுக்கும் ஓரளவு அண்மையில் உள்ளன. இதனால் இவ்விடங்களுக்கும் தீவகத்துக்குமிடையே காலந்தோறும் அரசியல், பொருளாதாரம், குடியேற்றம் போன்றவற்றில் பல்வேறு தொடர்புகள் ஏற்பட்டுள்ளன.

பயணவிரும்பியான "தொலமி" என்பவன் இலங்கைக்கும் வந்திருக்கிறான். அவன் இத்தீவுகள் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறான். இவற்றை அவன் "மணி ஆலத் தீவுகள்" (Manialague Islands) என்று குறிப்பிட்டிருக்கிறான். ஒல்லாந்தர் தமது ஆட்சிக் காலத்தில் இத்தீவுகள் அனைத்தையும் தம்வசம் வைத்திருந்தனர். இத்தீவுகள் சிலவற்றில் அவர்களின் கோட்டைகளின் சிதைவுகள் இன்றும் காணப்படுகின்றன. இத்தீவுகள் சிலவற்றுக்கு ஒல்லாந்திலே உள்ள தீவுகளின் பெயர்கள் சூட்டப்பட்டன. யாழ்ப்பாணக் குடாநாட்டின் வரலாற்றை அறிவதற்கான மூலங்களில் போத்துக்கேய, டச்சு ஆசிரியர்களின் குறிப்புகளும் நூல்களும் முக்கியமானவை. இவ்வாறான ஆசிரியர்கள் வரிசையில் ஒல்லாந்து தேசத்தவரான போல் டேயஸ் சுவாமிகளும் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறார்.

இவர் எழுதிய "ஈழப் பெருந்தீவு பற்றிய உண்மையான சரிநுட்பமான வருணனை" (A True and Exact Description of the Great Island of Ceylon) என்ற நூலில் யாழ்ப்பாணத் தீவுப்பகுதிகள் பற்றியும் எழுதியிருக்கிறார். இவர் புங்குடுதீவு பற்றியும் எழுதியிருக்கிறார். அவர் இவ்வாறு எழுதுகிறார் "பொங்காதிவ" ஒரு பெரியதீவாகும். மக்களை மிகவும் கவரக்கூடிய அளவிற்கு சிறப்பான அம்சங்கள் அங்கில்லை. கற்பூமியுள்ளது.

அங்கு மான், முயல், மீன், பெரிய மட்டிகள் என்பன பெருவாரியாகக்கிடைப்பன. பின்னையவற்றை அவித்துச் சாப்பிடுவது தான் நன்று. இந்தியாவின் பிற பகுதிகளிலும்பார்க்க இங்குள்ள ஆண்கள் மிகவும் உயரமானவர்கள்" என்று அந்த அறிஞர் எழுதியுள்ளார்.

இலங்கையில் மற்ற மாவட்டங்களுக்கு இல்லாத சிறப்பு யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு உண்டு. குடாநாட்டின் கடற்பரப்பில் பரவிக்கிடக்கும் அழகிய தீவுகள்தான் அந்த சிறப்பம்சம் ஆகும். யாழ். குடாநாட்டைப் போலவே அதனை அண்மித்துள்ள தீவுகளும் நீண்ட வரலாறு கொண்டவை. வரலாறு புவியியலைப்பொறுத்தவரை இத்தீவுகள் யாழ். குடாநாட்டின் மிக அருகே இருந்தபோதும் இவற்றுக்கென தனியான சிறப்புகளும் உண்டு. முதலியார் செ. இராசநாயகம், சுவாமி ஞானப்பிரகாசர், முதலியார் குல சபாநாதன் போன்ற அறிஞர்கள் செய்த ஆய்வுகள் மூலம் இத்தீவுகளின் சில வரலாற்று உண்மைகளை அறிய முடிகிறது.

பிற்காலத்தில் பேராசிரியர் ஜோன்கார்ல்வெல் அல்லைப்பிட்டி போன்ற இடங்களில் நடத்திய ஆய்வுகள். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தினர் நடத்திய கள ஆய்வுகள், மேலாய்வுகள் மூலம் இத்தீவுகள் அமைந்திருக்கும் நிலையம், இங்கு குடியேறிய மக்கள் பற்றி எல்லாம் ஓரளவு அறியமுடிகிறது. இந்தத்தீவுகள் யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு அண்மையில் அமைந்துள்ளன. அதே வேளை தமிழ் நாட்டுக்கு சற்றுத் தொலைவில் உள்ளன. இங்கு குடியேறியவர்கள் பற்றி பல கருத்துகள் நிலவுகின்றன. இந்திய மாநிலங்களிலிருந்து நாளாவட்டத்தில் மக்களில் சிலர் வர்த்தகம், மீன்பிடி, சமயம் ஆகிய தேவைகளுக்காகவே இங்கு வந்து குடியேறியிருக்கிறார்கள் என சிலர் கருதுகின்றார்கள். தமிழ்நாட்டு மன்னர்களின் ஆதிக்கத்தினால் இவ்விடங்களில் மக்கள் வந்து குடியேறியிருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். தமிழ் நாட்டிலிருந்து இங்கு ஏற்பட்ட குடியேற்றங்கள் பற்றி கைலாய மாலை, யாழ்ப்பாண வைபவமாலை போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன.

புங்குடுதீவு சப்த தீவுகளில் ஒன்றாகும். புங்குடுதீவைப்பற்றி எழுதும்பொழுது அயலிலுள்ள மற்றைய தீவுகள் பற்றியும் குறிப்பிட வேண்டியிருக்கின்றது. புங்குடுதீவுக்கும் இத்தீவுகளுக்குமிடையில் பல தொடர்புகள் காணப்படுகின்றன. சமயம், கலாசாரம், தொழில், திருமண முறை போன்ற பல அம்சங்களில் இத்தீவுகளுக்கிடையே நெருங்கிய தொடர்புகள் காணப்படுகின்றன. நெடுந்தீவிலிருந்து பெரும்பாலான மக்கள் மற்றைய தீவுகளுக்கு பரம்பினர் என்ற கருத்தும் நிலவுகின்றது. அதனால் இத்தீவுகளின் தனித்தன்மைகள் பற்றியும் குறிப்பிட வேண்டியிருக்கின்றது.

## நயினாதீவு

புங்குடுதீவுக்கு மிக அண்மையில் மேற்குத்திசையில் உள்ள தீவு நயினாதீவாகும். இத்தீவுக்கு நாகதீவு, நயினாதீவு, நாகநயினாதீவு, மணிபல்லவத்தீவு, மணித்தீவு, நாகேஸ்வரம், மணிபல்லவம், நாகதீபம் எனப்பல பெயர்கள் உண்டு. போர்த்துக்கீசர் இத்தீவுக்கு 'நாயடடிவ' என்று பெயர் வைத்தனர். ஒல்லாந்தர் 'ஹர்லெம்' என்று பெயர் சூட்டினர். இச்சிறுதீவு சரித்திரப் பிரசித்தி பெற்றது. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற நூல்களில் மணிபல்லவம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு ஈழத்தில் பிரசித்தி பெற்ற நாகபூஷணி அம்பாள் ஆலயம் அமைந்துள்ளது. அதன் உற்சவகாலங்களில் இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் புங்குடுதீவின் இறங்குதுறையான குறிகாட்டுவான் ஊடாக மக்கள் சென்று அம்பாளைத் தரிசிப்பர்.

இங்கு பழம் பெருமை வாய்ந்த பௌத்த விகாரையும் அமைந்துள்ளது. தென்னிலங்கையிலிருந்து வட பகுதிக்கு வரும் சிங்கள யாத்திரிகர்கள் நிச்சயமாக இங்குள்ள புத்தவிகாரையை தரிசிக்காமல் செல்வதில்லை. கத்தோலிக்க தேவாலயம் ஒன்றும் புரட்டஸ்தாந்து தேவாலயம் ஒன்றும் இஸ்லாமிய பள்ளிவாசல் ஒன்றும் இங்கு உள்ளன. இங்கு அமுதசுரபி என்ற பெயரில் ஒரு அன்னதான சபை அத்தீவு மக்களால் நடத்தப்பட்டு வருகின்றது. இச்சபையானது நாகபூசணி அம்மன் ஆலய திருவிழாக்காலங்களிலும் சாதாரண தினங்களிலும் இங்கு செல்லும் மக்களின் பசிப்பிணியை தீர்த்து வருகின்றது. புகழ்பெற்ற அறிஞர்களும் வர்த்தகர்களும் இந்த ஊரில் பிறந்திருக்கின்றார்கள். பல கல்வியாளர்களைத் தந்த ஊர் நயினாதீவாகும்.

## அனலைதீவு

புங்குடுதீவுக்கு அண்மையில் வடமேற்குத்திசையில் உள்ள இன்னுமொரு அழகான தீவு அனலைதீவாகும். இத்தீவினைச் சூழ நான்குபுறமும் கடல் அலைகளால் தாக்கப்படாது கற்பாறைகள் அணைபோல் அமைந்திருப்பதால் அனலைதீவு எனப் பெயர் வந்ததெனக் கூறுவர். ஒல்லாந்தர் இத்தீவுக்கு 'ஹொட்டர்பம்' என்று பெயர் வைத்தனர். இங்குள்ள மக்கள் அனைவரும் சைவர்களே. இங்குள்ள மக்களுக்கும் புங்குடுதீவு மக்களுக்கும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே தொடர்புகள் இருந்து வருகின்றன. இத்தீவானது சிறந்த மண்வளமும் நீர்வளமும் கொண்டது. இங்குள்ள மக்களில் பெரும் பாலோர் விவசாயத்தில் ஈடுபடுகின்றனர். அனலைதீவு ஐயனார் கோவில் மிகவும் புகழ் பெற்றது. இவ்வாலயத்தின் விழாக்காலங்களில் பல இடங்களிலுமிருந்தும் மக்கள் வந்து ஐயனாரைத் தரிசித்துச் செல்வர். இத்தீவகத்தின் மக்களில் பலர் உத்தியோகங்களிலும் உயரிய வர்த்தகத்துறையிலும் சிறந்து விளங்குகிறார்கள். இத்தீவிலிருந்தும் பெருந்தொகையான மக்கள் இலங்கையின் அரசாங்க குடியேற்றத் திட்டங்களிலும் உள்நாட்டு யுத்தம் காரணமாக புலம்பெயர்ந்து ஐரோப்பிய நாடுகளிலும், கனடா போன்ற நாடுகளிலும் வாழுகின்றனர். அனலைதீவில் பிறந்த கல்விமான்களும் சமூகசேவையாளர்களும் இத்தீவின் வளர்ச்சிக்காக அரும்பணியாற்றினர்.

## எழுவைதீவு

புங்குடுதீவுக்கு வடமேற்குத்திசையிலும் யாழ்ப்பாண நகரின் தென்மேற்குத் திசையிலும் எழுவைதீவு அமைந்துள்ளது. அனலைதீவுக்கு மிக அண்மையிலும் ஊர்காவற்றுறையிலிருந்து மூன்றுமைல் தொலைவிலும் அமைந்துள்ளது. இத்தீவில் எழுச்செடிகள் அதிகமாக காணப்பட்டதால் எழுவைதீவு என்று பெயர் வந்ததாகக் கூறுவர். இந்தியாவிலிருந்து ஊர்காவற்றுறை நோக்கி வருபவர்களுக்கு கிழக்குத்திசையில் முதலில் எழுந்து தெரிவதால் இதற்கு எழுவைதீவென்ற பெயர் வந்ததாக இன்னும் சிலர் கூறுவர். எழுவைதீவுத்துறைமுகத்திலிருந்து கால் மைல் தூரத்தில் முத்தன்காடு என்ற இடத்தில் ஒரு முருகன் ஆலயம் இருக்கின்றது. இவ்வாலயம் ஈழத்துத் திருச்செந்தூர் என அழைக்கப்படுகின்றது. இத்தீவின் தென்பகுதி இறங்குதுறையில் ஒரு தொம்மையப்பர் தேவாலயம் இருக்கின்றது. தீவின் தென் பகுதியில் உள்ள மக்கள் மீன்பிடித் தொழிலையும் வடக்கேயுள்ள மக்கள் பனங்கைத்தொழிலையும் முற்காலத்தில் பிரதான தொழிலாகக் கொண்டிருந்தனர். இத்தீவிலிருந்தும் பல குடும்பங்கள் குடியேற்றத் திட்டங்களுக்கும் உள்ளூர் யுத்தம் காரணமாக வெளிநாடுகளுக்கும் இடம்பெயர்ந்துள்ளன. தனிநாயக முதலி காலத்தில் நெடுந்தீவிலிருந்து அனலைதீவில் குடியேறிய மக்கள் பரம்பரையில் வந்த சிலரே எழுவைதீவின் ஆரம்பக் குடிகள் என்று கூறப்படுகின்றது.

## நெடுந்தீவு

புங்குடுதீவுக்கு வடக்கே ஆழ் கடலில் இத்தீவு அமைந்திருக்கிறது. யாழ். குடா நாட்டிலிருந்து நெடுந்தொலைவில் சமுத்திரத்தில் இருக்கும் தீவு என்பதால் இது நெடுந்தீவு என்று அழைக்கப்படுகின்றது. பசுத்தீவு, அபிஷேகதீவு, மருத்துவவனம், புட்கரம், டெல்வ்ற் என்ற பல பெயர்களாலும் இது அழைக்கப்படுகின்றது. போர்த்துக்கீசர் இத்தீவுக்கு "நெறுங்டிவா" என்று பெயர்வைத்தனர். ஒல்லாந்தர் 'டெல்வ்ற்' என்று பெயர் சூட்டினர். புங்குடுதீவின் பிரதான துறைமுகமான குறிகாட்டுவானிலிருந்து 7 கி. மீட்டர் தூரத்தில் இருக்கிறது. இத்தீவிலிருந்து பால், தயிர், இளநீர் போன்ற அபிஷேகத் திரவியங்கள் தென்னிந்தியாவிலுள்ள இராமேஸ்வரம் ஆலயத்துக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கின்றன. இங்கு நோய்கள் தீர்க்கும் அரிய மூலிகைகள் காணப்படுகின்றன. வைத்தியத் தொழிலில் புகழ்பெற்ற இராஜசிங்கன் என்னும் பட்டப்பெயரைப் பெற்றவனான செகராசசேகரன் என்னும் யாழ்ப்பாண மன்னன் இத்தீவை மருத்துவவனம் எனக்குறிப்பிட்டதாக யாழ்ப்பாண வைபவமாலை என்னும் நூல் குறிப்பிடுகின்றது. இந்த மருத்துவ மூலிகைகளைப் பாவித்ததால் இங்குள்ள மக்களிற் சிலர் நான்கு ஐந்து தலைமுறைகள் உயிருடன் வாழ்ந்ததாகக் கூறப்படுகின்றது.

தீவின் மேற்குப்பகுதியிலும் கிழக்கின் சில பகுதிகளிலும் மத்தியில் சில குறிப்பிட்ட இடங்களிலும் நன்னீர் காணப்படுகின்றது. இங்குள்ள இயற்கைத்தாவரங்களில் முக்கியமானதான பூவரசு தென்கிழக்குப்பகுதியில் அடர்த்தியாக காணப்படுகின்றது. நெடுந்தீவை வெடியரசன் ஆண்ட காலத்தில் அவன் தம்பி வீரநாராயணன் புங்குடுதீவை ஆண்டான் என்று கூறப்படுகிறது. நெடுந்தீவு மக்களின் பிரதான துறைமுகம் மாவிலி என அழைக்கப்படுகின்றது. குதிரைகள் ஏற்றப்பட்ட துறைமுகம் ஆகையால் அதற்கு மாவிலி என்ற பெயர் உண்டாயிற்று என்று கூறுவர். நெடுந்தீவு மக்கள் ஆதிகாலந் தொட்டு சைவ சமயத்தவர்களாகவே இருந்திருக்கின்றனர். போர்த்துக்கீசரின் வருகையின் பின்பே அங்கு கத்தோலிக்க மதம் பரவியது. நெடுந்தீவில் இப்பொழுது வெடியரசன் கோட்டையும் போர்த்துக்கீசர் கோட்டையும் ஒல்லாந்தர் கோட்டையும் சிதைவுகளாக காணப்படுகின்றன. இத்தீவுக்கு ஒல்லாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட குதிரைகளின் வாரிசுகள். இப்பொழுது காட்டுக் குதிரைகளாக மாறி சுதந்திரமாகத் திரிகின்றன. நெடுந்தீவின் விஷேடங்களில் ஒன்று தீவை அழகுபடுத்தும் கற்களால் கட்டப்பட்டு அரண்செய்த "பகிர்" என அழைக்கப்படும் கல்வேலிகளாகும். இந்தக்கல்வேலியை இலங்கையில் வேறெங்கும் காண முடியாது. உல்லாசப்பயணத்துக்கு பொருத்தமான தீவு இது. ஆனால் தமிழ்ப்பகுதி என்பதால் அரசினரின் பார்வையில் தென்படுவதாக இல்லை. வெளிநாட்டில் வாழும் தீவுப்பகுதி மக்களாவது இவ்வூரை இலங்கையின் சிறந்த சுற்றுலாத்தலமாக மாற்ற ஆவன செய்ய வேண்டும்.

## மண்டைதீவு

இது புங்குடுதீவுக்கு வடதிசையில் இருக்கிறது. யாழ்ப்பாண நகருக்கு மிக அண்மையில் உள்ள தீவு மண்டைதீவாகும். இது சப்த தீவுகளுக்கெல்லாம் தலை போன்ற தீவாக அமைந்திருப்பதால் இதற்கு 'மண்டைதீவு' என்ற பெயர் வந்ததெனக் கூறுவர். பண்ணைப்பாலம் திறப்பதற்கு முன் பிரயாண வசதிகள் குறைந்த தீவாக இது இருந்தது. 1960 ஆம் ஆண்டு பண்ணைப்பாலம் திறந்த பின் இவ்வூர்மக்கள் யாழ்நகர், லைடன்தீவு , புங்குடுதீவு ஆகியவற்றுடன் தரை வழிப்பாதைத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டனர்.

இதனால் இத்தீவின் கல்வி, விவசாயம், தொழில் என்பவற்றில் வளர்ச்சி ஏற்பட்டது. இங்கு பிரசித்தி பெற்ற இந்து ஆலயங்கள் நான்கும் கத்தோலிக்க ஆலயம் ஒன்றும் புரட்டஸ்தாந்து ஆலயமொன்றும் இருக்கின்றன. தீவின் நடுப்பகுதியில் உள்ள மக்கள் விவசாயத் தொழிலிலும் கரையோரங்களில் உள்ள மக்கள் மீன்பிடித் தொழிலிலும் ஈடுபட்டனர். மண்டைதீவு மக்களுக்கும் புங்குடுதீவு மக்களுக்கும் முற்காலந்தொட்டே வர்த்தகத் தொடர்புகள், திருமணத் தொடர்புகள் போன்றன இருந்தன. தோட்டத்துக்குத் தேவையான மாட்டெரு, இலைகுழைகளை புங்குடுதீவிலிருந்து ஏற்றிச் சென்றனர். அதே போல் புங்குடுதீவு விவசாயிகள் இங்கு வந்து மிளகாய் புகையிலை நாற்றுகள் போன்றவற்றை வாங்கி வந்தனர். விவசாய நாற்றுகளை உற்பத்தியாக்குவதில் மண்டைதீவு விவசாயிகள் வல்லவர்களாக விளங்கினர். இப்பகுதியில் உற்பத்தியாகும் நாற்றுக்கன்றுகள் தீவுப் பகுதியின் எந்தப் பகுதியிலும் செழித்து வளரும் தன்மை வாய்ந்தன. இங்குள்ள மக்களிற் பலர் குடியேற்றத் திட்டங்களுக்கும் யுத்தம் காரணமாக வெளிநாடுகளுக்கும் புலம்பெயர்ந்து சென்றுள்ளனர். இங்கு பிறந்த மக்களிற் பலர் கல்வி, வர்த்தகம், அரச உத்தியோகம் போன்றவற்றில் சிறந்து விளங்குகின்றனர். மண்டைதீவு, பிரசித்தி பெற்ற யோகியான கடையிற் சுவாமியாரால் ஆசீர்வதிக்கப்பட்ட தீவாகும்.

## காரைதீவு (காரைநகர்)

இது புங்குடுதீவுக்கு வடமேற்கு கடற்பரப்பில் அமைந்திருக்கின்றது. யாழ்ப்பாணக் குடாநாட்டுடன் பொன்னாலைத் தரைவழிப்பாதையால் இணைக்கப்பட்ட தீவாகும். நல்ல போக்குவரத்து, நல்ல கல்வி வசதிகள் போன்றவற்றில் மேம்பட்டதால் 'காரைநகர்' என்று பெயர் மாற்றம் பெற்றது. போர்த்துக்கீசர் இவ்வூருக்கு 'கார்டிவா' என்று பெயர் சூட்டினர். ஒல்லாந்தர் 'அம்ஸ்ரடாம்' என்று பெயரிட்டனர். யாழ்நகரோடு ஆரம்பகாலத்திலிருந்தே நெருங்கிய தொடர்புகள் இருந்ததால் வெளிநாடுகளிலும் வேலைவாய்ப்பைப் பெற்றனர். சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளின் அரசாங்கங்களிடமிருந்து ஓய்வூதியம் பெறும் இளைப்பாறிய உத்தியோகத்தர்கள் பலர் இங்கிருந்தனர். இவ்வூர் மக்கள் இலங்கை எங்கும் வர்த்தகத்திலும் சிறந்து விளங்குகின்றனர். ஈழத்துச் சிதம்பரம் எனப் போற்றப்படும் பிரசித்தி பெற்ற சிவன்கோவில் இங்கு இருக்கின்றது. திருவிழாக்காலங்களில் இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் சைவர்கள் வந்து கலந்து கொள்வர். வடபகுதிக்கான இலங்கை அரசின் கடற்படைத்தளமும் இங்குதான் அமைந்துள்ளது. கோவளம் என்னும் இடத்தில் கடற்கரையில் ஒரு வெளிச்சவீட்டுக் கோபுரம் உள்ளது. இங்குள்ள 'கசூரினா' கடற்கரை உல்லாசப் பிரயாணிகளிடையே மிகவும் பிரசித்தி பெற்றது. பிரபல ஒலி பரப்பாளர்களான எஸ். தியாகராஜா, கந்தையா சிவசோதி (இளையபாரதி), இளையதம்பி தயானந்தா ஆகியோர் காரைநகரைச் சேர்ந்தவர்களே.

## லைடன் தீவு

இது புங்குடுதீவுக்கு வடக்கே அமைந்துள்ள நீண்ட தீவு. வேலணை, சரவணை, நாரந்தனை, புளியங்கூடல், சுருவில், பருத்தியடைப்பு, கரம்பொன், ஊர்காவற்றுறை ஆகிய பகுதிகள் லைடன் தீவுக்குள் அடங்கும். லைடன் என்ற அதிகாரிக்குக் கீழ் இருந்தமையால் இப்பகுதிக்கு 'லைடன் தீவு' என்ற பெயர் வந்ததென்பர்.

## வேலணை

முருகப் பெருமானின் வேல் வந்தடைந்த இடமாகையால் வேலணை என்ற பெயர் வந்ததென்று சிலரும், வேலன் என்ற பிரதானியின் கீழிருந்தபடியால் வேலணை என்ற பெயர் வந்ததென்று இன்னும் சிலரும் கூறுவர். போர்த்துக்கீசர் இவ்வூருக்கு 'தனதிவா' என்று பெயரிட்டனர். ஒல்லாந்தர் 'லைய்டன்' என்று அழைத்தனர். ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் அவர்கள் தமது ஆட்சியைப் பலப்படுத்தும் நோக்கத்துடன் வங்களாவடிக்கு அண்மையில் ஒரு கோபுரத்தைக் கட்டி, கடல் வழியாக வரும் அந்நியரை கண்காணித்து வந்தனர். இந்தக் கோபுரம் இப்பொழுது சிதைந்த நிலையில் காணப்படுகின்றது. இங்குள்ள வேலணை அம்மன்கோவில் பிரசித்தி பெற்றது. இங்கு விவசாயம் பெரிய அளவில் செய்யப்பட்டு வந்த போதும் தற்பொழுது மக்கள், தோட்டப்பயிர்ச் செய்கையிலேயே அதிகம் ஈடுபடுகின்றனர். வேலணை மக்களுக்கும் புங்குடுதீவு மக்களுக்கும் இடையில் அதிக தொடர்புகள் இருக்கின்றன. புங்குடுதீவின் போக்குவரத்து வேலணையூடாகவே அதிகம் நடைபெறுகின்றது. புங்குடுதீவுக்கும் வேலணைக்கும் இடையில் அதிக திருமணத் தொடர்புகள் இருக்கின்றன. இங்குள்ளவர்கள் கல்வியிலும் உத்தியோகங்களிலும் வியாபாரத்துறையிலும் சிறந்து விளங்குகின்றனர். முன்னாள் பாரளுமன்ற உறுப்பினர்களான வி. ஏ. கந்தையா, கா. பொ. இரத்தினம் ஆகியோர் வேலணையைச் சேர்ந்தவர்களே.

## ஊர்காவற்றுறை

லைடன் தீவின் வடகரையில் உள்ள பழம்பெரும் துறைமுகமே ஊர்காவற்றுறையாகும். இந்தியாவிருந்து பெரிய படகுகள் மூலம் கள்ளிக்கோட்டை ஓடுகள், வடக்கன் மாடுகள், பிறபொருட்கள் என்பன சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இத்துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்டன. இவ்வூர் மக்கள் இந்தியா, மலேசியா, பர்மா போன்ற நாடுகளுக்கெல்லாம் பாய்மரக்கப்பல்களில் சென்று வணிகம் செய்திருக்கிறார்கள். இங்கு தீவுப்பகுதி மக்களுக்கான நீதி மன்றம், பெரிய வைத்தியசாலை, பாராளுமன்ற உறுப்பினர்களின் காரியாலயம் என்பன இருந்தன. இதனால் தீவுப்பகுதி மக்கள் தினமும் பெருந்தொகையாக இங்கு வந்து செல்வர். இங்குள்ள புனித அந்தோனியார் கல்லூரி என்னும் கல்விக் கூடத்தின் மூலம் பல அறிஞர்கள் உருவானார்கள். ஊர்காவற்றுறைக்கும் காரைநகருக்கும் இடையிலுள்ள கடற்பரப்பில் ஹமன் கில் என்ற கடற்கோட்டையொன்று இருக்கின்றது. உல்லாசப்பயணிகளைக் கவரக்கூடிய இக்கோட்டையை எமது தீவக மக்கள்தான் வெளிச்சத்துக்கு கொண்டுவரவேண்டும். தீவகத்தின் தலைமகனும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினருமான அல்பிறட் ஏ. தம்பிஐயாவும் நீதியரசர் சர்வானந்தாவும் ஊர்காவற்றுறையைச் சேர்ந்தவர்களே.

## சரவணை

லைடன் தீவின் ஒருபகுதி சரவணையாகும். சுருவில்த்துறையிலிருந்து புளியங்கூடல் நாற்சந்திக்கூடாக வடக்கு நோக்கி சென்று பண்ணை - ஊர்காவற்றுறை பிரதான வீதியைச் சந்திக்கும் தெருவிற்கு மேற்குப்பக்கமாகவும் கிழக்குப் பக்கமாகவும் இருபகுதிகளாக இருக்கின்றது சரவணைக் கிராமம். கிழக்குச் சரவணையின் மத்தியில் தெங்கக்குளம் இருக்கின்றது. இக்குளத்தின் மேற்கு எல்லையில் நாச்சியார் கோயில் என்னும் புராதன காலத்து அம்மன் கோவில் இருக்கிறது. பள்ளம்புலம் என்ற இடத்தில் முருக மூர்த்தி கோயில் இருக்கின்றது.

கிழக்குச் சரவணையின் தெருவுக்கு கிழக்குப்பக்கமாக பெருந்தொகையான தோட்டநிலங்களும் சிறந்த வயல்நிலங்களும் காணப்படுகின்றன. இங்கு செய்கை பண்ணப்படும் புகையிலைக்கு தென்னிலங்கையில் பெரிய மதிப்புண்டு. இக்கிராமத்திலேயே தீவுப்பகுதியின் பிரதான நொத்தாரிசான கா. வினாசித்தம்பி வாழ்ந்தார்.

### நாரந்தனை

லைடன் தீவின் வடக்கும் தெற்கும் கடலையும், கிழக்கு சரவணையையும், மேற்கு கரம்பொனையும் எல்லைகளாக கொண்டது நாரந்தனைக்கிராமம். நாராயணன் என்ற பிரதானியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தமையால் "நாரந்தனை" என்ற பெயர் வந்ததென்பர். முல்லை நிலத் தெய்வமான திருமால் வந்து சேர்ந்த இடமாகையால் 'நாராயணன் அடைந்த இடம்' நாரந்தனை என்று வழங்கலாயிற்று என்றும் சிலர் கூறுவர். பாதிரிமார் பெரியகல்லூரி ஒன்றை அமைக்க இங்கு அத்திவாரம் போட்டனர். ஆனால் அது கைகூடாமல் போகவே, அவர்கள் வட்டுக்கோட்டையில் அதே கல்லூரியை யாழ்ப்பாணக்கல்லூரி என்ற பெயரில் அமைத்தனர். நாரந்தனைக்கிராமம் இரண்டுமைல் நீளமும் ஒன்றரைமைல் அகலமும் கொண்டது. ஐநூற்று எழுபது குடியிருப்புகள் இருந்தன. நீண்டகாலம் இயங்கிவந்த அரசினர் கால்நடை மருத்துவநிலையம் இங்கிருந்து வேலணைக்கு இடம்பெயர்ந்தது. இக்கிராமத்தில் பிறந்த மக்கள் சிலர் வெளிநாடுகளில் சிறப்புடன் வாழுகின்றனர்.

### சுருவில்

புளியங்கூடற் கிராமத்தின் தெற்கு மேற்கு எல்லையாக வளைந்த கிராமம், சுரி+வில்=சுருவில் என வந்தது என்பர். இராம இராவண யுத்தம் நடைபெற்ற போது வில்லை ஊன்றி நிலத்தில் பதித்து நாணேற்றிய இடங்கள் தாழ்ந்து குழிகளாகி நீர் சுரந்து அரைவட்டக் குளங்கள் தோன்றின, இக்குளங்கள் "வில்" என்ற பெயரைப் பெற்றன. யாழ்ப்பாணத்திலுள்ள இணுவில், நந்தாவில், கொக்குவில், கோண்டாவில் போன்ற பெயர்களைப் போலவே "சுருவில்" என்ற பெயரும் வந்திருக்கலாம் என்பது ஐதீகம். இச்சிறு கிராமத்தில் நெல்வயல்களும் தென்னந் தோப்புகளும் நிறைந்திருக்கின்றன. இங்கு பிறந்த மக்களிற் பலர் தென்னிலங்கையில் சிறந்த வர்த்தகர்களாக விளங்குகின்றனர். சுருவில் கிராமத்தில் மூன்று சைவ ஆலயங்களும் ஒரு கிறிஸ்தவ ஆலயமும் இருக்கின்றன. இவற்றிலே ஹரிகர புத்திர ஐயனார் கோயில் பழமை வாய்ந்த ஆலயமாகும். சுருவிற் கடற்கரையை அடுத்து நாகபூசணி அம்மன் கோவிலும் வைரவர் கோவிலும் இருக்கின்றன. மட்டக்களப்பின் முன்னைநாள் அரசாங்க அதிபர் அந்தோனி முத்து, வித்துவான் வைத்தியலிங்கம் ஆசிரியர் ஆகியோர் இக்கிராமத்தைச் சேர்ந்தவர்களே.

### கரம்பொன்

லைடன்தீவின் வடக்கு, தெற்கு, மேற்கு திசைகளில் கடலையும், வடமேற்கில் பருத்தியடைப்பையும் கிழக்கில் நாரந்தனையையும் எல்லைகளாக கொண்டது கரம்பொன் கிராமமாகும். கதிரன் என்ற பிரதானியின் கீழ் இருந்ததால் கரம்பொன் என்ற பெயர்வந்ததாகக் கூறுவர். முருகப் பெருமானின் பெயர் களில் ஒன்றான "கடம்பன்" என்ற பெயரைத் தம் கிராமத்துக்குச் சிலர்சூட்டினர். காலப்போக்கில் "கடம்பன்", "கரம்பொன்" என்று மாறியதாக சிலர் கூறுவர்.

ஆரம்பகாலங்களில் அனலைதீவு, நயினாதீவு, எழுவைதீவு, நெடுந்தீவு ஆகிய தீவுகளிலிருந்து வருபவர்கள் கரம்பொன் மேற்கில் இருக்கும் கண்ணகை அம்மன் ஆலயத்துக்கருகில் அமைந்துள்ள துறையில் வந்து இறங்கி யாழ்ப்பாணத்துக்கு போக்குவரத்துச் செய்தனர். ஊர்காவற்றுறையினூடாக இந்தியாவுக்கு யாத்திரை செய்வோர் தங்கிச் செல்வதற்கென மங்களமடம் என்ற பெயரில் மடம் அமைக்கப்பட்டது. இதைப்போன்ற மடங்கள் யாத்திரிகர்களுக்கு உணவும் உறையுளும் வழங்கின. இக்கிராமம் இரண்டரை மைல் நீளமும் இரண்டுமைல் அகலமும் கொண்டது. இக்கிராம மக்களின் பிரதான தொழில் விவசாயமாகும். பணப்பயிர்களான மிளகாய், வெங்காயம், புகையிலை போன்றவையே விரும்பி உற்பத்தி செய்யப்பட்டன. கரம்பொன் சிறிய புஷ்ப மகாவித்தியாலயம் என்னும் பெண்களுக்கான உயர் பாடசாலை புகழ்பெற்றது. இந்தக் கிராமத்தில் பிறந்த பலர் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் புகழ் பெற்று வாழ்கின்றனர்.

## பருத்தியடைப்பு

லைடன் தீவின் மேற்கு எல்லையில் கரம்பொன் மேற்கிற்கும் ஊர்காவற்றுறைக்கும் இடையில், ஊர்காவற்றுறை பட்டினசபையுடன் இணைந்த கிராமமாயிருக்கும் பகுதியே பருத்தியடைப்பு என அழைக்கப்படுகின்றது. இச்சிறுகிராமம் கடற்கரையோரமாக இருப்பதால் பெரும்பாலானோர் கடற்றொழிலை செய்து வருகின்றனர். இங்கு கதிரேசன் கோயில் என்னும் புராதன காலத்து முருகன் கோயில் ஒன்று உள்ளது. இக்கிராமத்தில் வாழ்ந்த அம்பலவாணரும் அவர் மகன் வல்லிபுரம் என்பவரும் முறிவுச்சிகிச்சை (கட்டுவைத்தியம்) செய்வதில் சிறந்த வைத்தியர்களாக விளங்கினர். நாடகக்கலையில் சிறப்புமிக்க கலைஞர்கள் பலர் இங்கிருந்தனர். மேற்குத் திசையில் உள்ள ஊருணி என்னும் பகுதியில் சிறந்த தோட்ட நிலங்களும், நன்னீர்க் கிணறுகளும் இருக்கின்றன. இங்கு சங்குமால், மாட்டுக்காலை என்பனவும் இருந்தன. இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட வடக்கன் மாடுகளை இங்குள்ள மாட்டுக்காலையில் கட்டிவைப்பர். தீவுப்பகுதி மக்கள் இங்கு வந்து தங்களுக்குத் தேவையான மாடுகளை வாங்கிச் செல்வர். இங்குள்ள மக்களுக்கும் வேலணை செட்டிபுலம் மக்களுக்கும் நாரந்தனை தம்பாட்டியிலுள்ள மக்களுக்கும் தொடர்புண்டு.

## மண்கும்பான்

மணல் நிறைந்தும் மண்மேடுகள் செறிந்தும் காணப்பட்ட இடமாகையால் "மண்கும்பான்" என்ற பெயரைப் பெற்றது. இக்கிராமத்தின் கிழக்கு எல்லையாக அல்லைப்பிட்டியும் வடக்கு எல்லையாக யாழ்ப்பாணக் கடலேரியும் மேற்கெல்லையாக வேலணையும் தெற்கெல்லையாக ஆழமான கடலும் அமைந்திருக்கின்றன. மண்கும்பான் இரண்டு பிரிவாக பிரிக்கப்பட்டு கிழக்குப் பிரிவு அல்லைப்பிட்டி கிராமசபையுடனும் மேற்கு பிரிவு வேலணை கிராமசபையுடனும் சேர்க்கப்பட்டுள்ளது. வீதியின் தெற்குப்பக்கமாக உள்ள உவர் நிலத்துக்கும் தெற்கே உள்ள கடலுக்கும் இடைப்பட்ட ஏறக்குறைய ஒன்றரைமைல் அகலமுடைய பிரதேசம் மணல் செறிந்ததாகவும் மண்மேடுகள் கொண்டதாகவும் இருக்கின்றது.

ஊர்காவற்றுறைப் பாராளுமன்ற உறுப்பினராக கா. பொ. இரத்தினம் இருந்த காலத்தில் யாழ்ப்பாணத்திலிருந்து புங்குடுதீவுக்குச் செல்லும் இ.போ.ச. பஸ் ஒன்று குறிப்பிட்ட நேரத்தில் மண்கும்பான், வேலணையூடாகப் பிரயாணம் செய்யும் வசதி ஏற்படுத்தப்பட்டது. மணல் செறிந்த நிலமாக இருப்பதால் பெரும்பாலும் இங்குள்ள மக்கள் தாங்கள் செய்யும் பயிர்களுக்கு மணற்கேணிகளிலிருந்து சிரமத்துடன் தண்ணீரை பனையோலையால் செய்யப்பட்ட பட்டைகளினால் எடுத்து ஊற்றி வளர்க்கின்றனர். கோடை காலங்களில் இங்குள்ள வெள்ளைக் கடற்கரைக்கு உல்லாசப்பிரயாணிகள் அதிகமானோர் வந்து மகிழ்வர். இக்கடற்கரையை அடுத்து முஸ்லிம் பள்ளிவாசல் ஒன்று உள்ளது. நாகூரில் இருந்து வந்த முஸ்லிம் பெரியவருடைய சமாதி ஒன்றும் இப்பள்ளிவாசலில் இருக்கின்றது. தீவுப்பகுதியில் மிகவும் திறமான குடிநீர் இப்பகுதியில்தான் உண்டு. அவ்வாறு நல்ல குடிநீர் இருக்கும் பகுதியை "சாட்டி" என்று அழைப்பர்.

## அல்லைப்பிட்டி

வடபகுதி பண்ணைக்கடலும், தெற்கே ஆழ்கடலும், கிழக்கே மண்டைதீவின் பரவைக்கடலும், மேற்கே மண்கும்பானும் எல்லைகளாக அமைந்ததே அல்லைப்பிட்டிக் கிராமம். இச்சிறிய கிராமத்தில் 1400 மக்களே வாழ்ந்தனர். கடல் அலைகள் கரையோரமாகவுள்ள மணற்பிட்டிகள் மீது மோதுவதால் "அல்லைப்பிட்டி" எனப் பெயர் வந்தது எனக் கூறுவர். அல்லிக் கொடி படர்ந்து பரவியிருந்தமையால் அல்லிப்பிட்டி என்ற பெயர் பெற்றதாகவும் பின்பு அது மருவி "அல்லைப்பிட்டி" என்று வந்ததாகவும் இன்னும் சிலர் கூறுவர். இக்கிராமத்தில் மூன்றில் இரண்டு பகுதியினர் சைவர்களாகவும், மூன்றில் ஒரு பகுதியினர் கத்தோலிக்கர்களாகவும் இருந்தனர். பொதுவாக சைவர்கள் விவசாயத்திலும் கத்தோலிக்கர்கள் மீன்பிடித்தொழிலிலும் ஈடுபட்டனர்.அல்லைப்பிட்டி வரலாற்றுப் பெருமைமிக்க ஓர் இடமாக கருதப்படுகின்றது. பண்டைய கலைச் செல்வங்களான பல புதைபொருள்கள் இங்கு கண்டெடுக்கப்பட்டன. வடபகுதி அகழ்வு ஆராய்ச்சியாளர்கள் செய்த ஆய்வுகளின்படி, சீன மட்பாண்டங்கள் சோழர்கால பஞ்சமணி, ஒல்லாந்தர் கால மாதா கோயில் போன்றவற்றின் சிதைவுகள் கண்டுபிடிக்கப்பட்டன. கடலின் ஆழமான பகுதி 'ஆறு' என்று அழைக்கப்படுவதால் ஒல்லாந்தர் காலத்தில் இப்பகுதி பிரபலமான துறைமுகமாக இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகின்றது. இக்கிராமத்தில் இருக்கும் கப்பலடி, பறங்கிவயல், முக்கிராம்பிட்டி என்னும் இடப்பெயர்கள் இவற்றை வலியுறுத்துகின்றன. நாட்டுக்கூத்து நொண்டிநாடகம், பூதத்தம்பி நாடகம் முதலியவற்றில் பங்குபற்றிய பலகலைஞர்கள் இங்கிருந்தனர். பிரபல கவிஞர் ப. சத்தியசீலன் இவ்வூரில் பிறந்த கவிஞரே.

## கச்சைதீவு

தென்னிந்தியாவின் இராமேஸ்வரத்துக்கும் இலங்கையின் நெடுந்தீவுக்கும் இடையே காணப்படும் சிறிய தீவுதான் கச்சைதீவு. இங்குள்ள நீர் கச்சல் (உவர்ப்பு) என்பதால் இத்தீவுக்கு கச்சைதீவு என்ற பெயர் வந்தது என்பர். முன்பு இத்தீவு பச்சைதீவு என்று அழைக்கப்பட்டது. பின்பு அது கச்சைதீவு என்று மாறியது என்றும் சிலர் கூறுவர். நான்கு மைல் சுற்றளவுள்ள இத்தீவின் கடற்கரைகளில் மணல்நிலமும் கற்பாறைகளுமே காணப்படுகின்றன. இதன் நடுப்பகுதியில் பற்றைகளும் சிறுமரஞ்செடி கொடிகளும் வளர்ந்து நிற்கின்றன.

இங்கு புகழ்பெற்ற அந்தோனியார் ஆலயம் ஒன்றுண்டு. அதை நெடுந்தீவு மக்கள் அமைத்தனர். இத்தீவின் அந்தோனியார் திருவிழாவின் போது இலங்கையிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் இத்தீவுக்கு பிரயாணிகள் வருவர். இந்தியப் பொருட்களும் இலங்கைப் பொருட்களும் இங்கு சந்தைபோல் நிறைந்திருக்கும். பணத்துக்கு மாத்திரமல்லாது அங்கு பண்டமாற்று முறையிலும் வியாபாரம் நடைபெறும். இலங்கை மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் இத்தீவு ஒரு வழிபாட்டுத்தலமாகவும் வியாபாரத் தளமாகவும் விளங்குகின்றது. சுமார் 1.5 கிலோ மீட்டர் தூரமும் 350 மீட்டர் அகலமும் கொண்ட கச்சதீவின் பரப்பளவு 285.2 ஏக்கராகும். இராமநாதபுரம் சேது மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த இந்தத்தீவு 1949 ஆம் ஆண்டில் இராமேஸ்வரம் பிரதேசத்தின் ஒரு பகுதியாகக் கொண்டுவரப்பட்டது. கச்சைதீவைச் சுற்றி முத்துக்கள், சங்குகள் பெருமளவில் கிடைத்ததால் பழங்காலந்தொட்டு முத்துக்குளிக்கும் தொழில் சிறப்பாக நடந்துள்ளது. முத்துக்கள். சங்குகள், வண்ணமீன்கள், சுண்ணாம்புப்பாறைகள் போன்றவற்றைத் தந்து அமுத சுரபியாய் விளங்கும் கச்சைதீவு பறவைகளின் குரலொலி, கடல் அலையின் ஓசை ஆகியவற்றைத்தவிர எப்போதும் அமைதியாக காட்சிதரும். ஆனால் அந்தோனியார் திருவிழா ஆரம்பமாகியதும் கலகலக்கத் தொடங்கிவிடும். இத்தீவு இலங்கைக்கு சொந்தமா, இந்தியாவுக்கு சொந்தமா என்று நீண்ட நாட்களாக பிரச்சினையில் இருந்தது. ஆனால் இந்தியப் பிரதமர் இந்திராகாந்தி இதனை இலங்கைக்கு சொந்தம் என்று எழுதிக் கொடுத்தார். இந்து சமுத்திரத்தில் இலங்கை மக்களும் இந்திய மக்களும் விசா இன்றிச் செல்லக்கூடிய ஒரே இடம் கச்சைதீவாகும்.



ஊர்காவற்றுறை கடற்பரப்பில் உள்ள
ஹமன் கில் கோட்டை

## 2

# புங்குடுதீவின் கதை

இலங்கையின் பிற இடங்களைப் போலவே தீவகத்திலும் வரலாற்றுத் தெளிவு பெருங்கற் பண்பாட்டுடன் தொடங்குகிறது. பெருங்கற் பண்பாடு தீபகற்ப இந்தியாவில் கி. மு. 1500 முதல் கி.பி. 500 வரை நிலவுகிறது. இப்பண்பாடு இலங்கையிலும் நிலவியிருக்கிறது. 1981 ஆம் ஆண்டு யாழ்ப்பாண பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த கலாநிதி பொ. ரகுபதி, காரைநகரிலுள்ள களபூமியில் பெருங்கற்பண்பாட்டு சின்னங்கள் சிலவற்றைக் கண்டுபிடித்தார். இத்தகைய சின்னங்கள் புங்குடுதீவின் வடபகுதியில் உள்ள ஊரைதீவிலும் காணப்படுகின்றன. இங்கு வட்டக்கற்களாலான சிறு கிணறுகள் தென்பட்டதாகக் கூறப்படுகின்றது. ஊரைதீவிலுள்ள ஐயனார் ஆலயம் பழமை வாய்ந்தது. இது இப்பொழுது சிவாலயமாக மாறிவிட்டது. இவ்வாலயத்திலுள்ள கருங்கற்தூண், லிங்கம் என்பன வளர்வதாக கூறப்படுகிறது. இவ்வாலயத்துக்கு வடக்கே உள்ள கடற்கரையில் வட்டக்கற்களினாலான இரண்டு கிணறுகள் இருக்கின்றன.

“சேர சோழ பாண்டிய மண்டலங்களோடு ஈழமண்டலமும் ஒன்றாகும். சேர சோழ பாண்டிய மண்டலங்களிலிருந்தும் சனங்கள் ஈழமண்டலத்தில் குடியேறினர், என்று யாழ்ப்பாணச் சரித்திரம் என்னும் நூலில் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை எழுதியுள்ளார்.”

காலத்துக்குக் காலம் தென்னிந்தியாவில் ஏற்பட்டுள்ள மாற்றங்களால் மக்கள் தீவுப்பகுதிகளில் குடியேறினர். தென்னிந்திய மக்களின் வழித்தோன்றல்கள் பற்றி காலத்துக்கு காலம் பதிவுகள் செய்யப்பட்டிருக்கின்றன. தனி நாயக முதலி பரம்பரையினரை உதாரணமாகக் கொள்ளலாம். புங்குடுதீவு உட்பட ஏனைய தீவுகள் சர்வதேச வர்த்தக மையமாக இருந்தமைக்கு பல சான்றுகள் உள்ளன. நெடுந்தீவில் பெருக்கு மரங்கள் காணப்படுகின்றன. புங்குடுதீவின் பழைய துறைமுகமான புளியடித்துறைக்கு அருகிலும் பெருக்கு மரங்கள் காணப்பட்டன. இம்மரங்கள் அரேபியரால் அறிமுகப்படுத்தப்பட்டன. எனவே அரேபியர் இத்தீவுகளுக்கு வந்து வர்த்தகத்தில் ஈடுபட்டனர் எனலாம். தென்னிந்தியாவுடன் நெருங்கிய தொடர்பு காணப்படுவதால் புங்குடுதீவில் சோழகனோடை, சோழன் புலம், பல்லதீவு போன்ற இடப்பெயர்கள் அவர்களால் இடப்பட்டிருக்கலாம் எனக் கொள்ள இடமுண்டு.

கி.பி. 3ஆம் நூற்றாண்டில் பௌத்தம் இலங்கையில் பரவியது. பௌத்தம் தீவகத்திலும் அறிமுகம் செய்யப்பட்டது. தனிப்பட்ட காடுகளைப் போல் அமைதியான சூழல்களைக் கொண்ட தனிமையான தீவுகளும் பௌத்த துறவிகளின் தியானத்திற்கு ஏற்றவகையாகக் கருதப்பட்டன. அதனால் இத்தீவுகளிலே துறவிகள் சிலரும் வாழ்ந்தனர். மகாவம்சம் போன்ற நூல்களின் படியும் சில கல்வெட்டுகளின் படியும் புங்குடுதீவு முற்காலத்திலே புகழ்பெற்ற ஒரு பௌத்த மையமாக இருந்ததெனக் கூறப்படுகிறது. இங்கு 12000 பௌத்த துறவிகள் இருந்தனர் என மகாவம்சம் கூறுகிறது.

இவர்களில் ஒரு சாரார் மிக உயர்ந்த பௌத்த ஞான நிலையிலுள்ள "அர்ஹந்தஸ்களாக" இருந்தனர் எனவும் அவர்களில் எட்டுப்பேர், எல்லாளனுக்கு எதிராக துட்டகைமுனு நடத்திய போரில் பெருந்தொகையினர் கொல்லப்பட்டமை குறித்து துட்டகைமுனு மிகவும் கவலைப்பட்டபோது அவனுக்கு அமைதி கிடைப்பதற்கு அவனிடம் வந்து ஆறுதல் கூறி அவனைத் தேற்றினர் எனவும் இந்நூல் கூறுகின்றது.

வல்லிபுரத்தில் சென்ற நூற்றாண்டிலே கிடைத்த கி.பி. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வசபனின் பொற் சாசனத்திலே நாகதீபத்தினை (யாழ்ப்பாணக் குடா நாட்டினை) வசப மன்னனின் மந்திரியான "இசிகிரிய" என்பவன் ஆட்சிநடத்தினான். அப்பொழுது "பியகுதிச" என்பவன் ஒரு விகாரையைக் கட்டினான் எனக் கூறப்பட்டுள்ளது. இதிலே வரும் "பியகுதிச" என்பவனை பியங்குதீபத்தைச் சேர்ந்த "திச" எனவும் ஒரு சாரார் குறிப்பிடுவர். எனவே கிறிஸ்துவுக்கு முன்பும் பின்பும் இருநூற்றாண்டுகளில் இத்தீவிலே பௌத்தம் நன்கு நிலவியிருக்கலாம் என்று தெரிகிறது. கி.பி. 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இலங்கையிலுள்ள பௌத்த புனித இடங்களை குறிப்பிடுகின்றதுமான "நம்பொத்த" என்ற நூலிலே, யாழ்ப்பாணத்திலுள்ள பௌத்த தலங்களிலே ஒன்றாகப் புங்குடுதீவும் கூறப்படுகிறது. எனவே இங்கே ஒரு நீண்டகால பௌத்த பாரம்பரியம் நிலவியிருக்கலாம் என நம்ப இடமுண்டு.

புங்குடுதீவிலுள்ள வரதீவு (வரதீப), மண்டைதீவு (மண்டதீப) ஆகிய இடப்பெயர்கள் தீபவம்சத்திலே (கி.பி. 4 ஆம் நூற்றாண்டு) குறிப்பிடப்பட்டுள்ளன. புங்குடுதீவில் வாழ்ந்த பௌத்தர்களில் தமிழ்ப் பௌத்தர்கள் இருந்திருப்பர். இங்கு திகழியில் கண்டெடுக்கப்பட்ட புத்தர்சிலை ஆந்திர மாநில பௌத்த கலை மரபை ஒத்துள்ளது. தமிழ்நாட்டில் பல்லவர் பாண்டியர் காலத்தில் ஏற்பட்ட சைவ, வைணவ சமய மறுமலர்ச்சி தமிழ் நாட்டைப் போன்று இங்கும் சில இடங்களில் பௌத்த சமயத்திற்கு பின்னடைவு ஏற்பட்டு வைதீக சமய மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கலாம்.

தமிழகத்திலே (கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதல் 12 ஆம் நூற்றாண்டு வரை) மேலாதிக்கம் பெற்ற சோழர் பெருமன்னர்கள் சுமார் ஒரு நூற்றாண்டிற்கு இலங்கையின் பெரும்பகுதியை தமது கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருந்தனர். இக்கால கட்டத்தில் இந்து சமயம் இங்கு மேலோங்கியிருந்தது எனலாம். தமிழ்நாட்டிலே ஆதிக்கம் பெற்ற இரண்டாவது பாண்டிய பேரரசு காலத்திலே அவர்களின் ஆதரவுடன் அவர்களின் தளபதிகளில் ஒருவன் ஆரியச்சக்கரவத்தி தலைமையில் யாழ்ப்பாணத்தில் தமிழரசு ஒன்றை உருவாக்கி கி.பி. 1250 முதல் பல ஆண்டுகள் ஆட்சி செய்தான். இக்காலப் பகுதியில் இந்துசமயச் செல்வாக்கு தீவகத்தில் மேலோங்கியது எனலாம்.

இதன் பின்பு போர்த்துக்கீசர், ஒல்லாந்தர், பிரித்தானியர் ஆட்சி இலங்கையில் ஏற்பட்டது. முன்னைய இருவரின் ஆட்சிக்காலங்களிலும் இந்துசமயம் நலிவுற்றது. பிரித்தானியர் காலத்தில் பொதுவாக சமய சுதந்திரம் நிலவியது எனலாம். ஆதி காலம் தொடக்கம் கிரேக்க உரோம, அராபிய, சீனத் தொடர்புகள் இலங்கையுடன் ஏற்பட்டது. இந்தியாவின் தமிழகம், கேரளம், ஆந்திரம், கன்னடம், கலிங்கம் மற்றும் வட இந்திய தொடர்புகளும் ஏற்பட்டுள்ளன. இவ்வாறான தொடர்புகள் ஏதோ வகையில் தீவகத்திலும் ஓரளவாவது நிலவி வந்தமைக்கு சில இடப் பெயர்கள் சான்று பகர்கின்றன.

பல்லதீவு, பல்லவன்புலம் போன்ற இடப்பெயர்கள் பல்லவத் தொடர்பையும் சோழன்புலம், சோழகனோடை போன்றவை சோழத் தொடர்புகளையும் மாறன்புலம், பாண்டியன் வளவு போன்றவை பாண்டியத் தொடர்பையும், கலிங்கன்புலம், கலிங்கராயன் வளவு போன்றன கலிங்கத் தொடர்பையும் செட்டிவளவு, செட்டியார்தோட்டம் என்பவை செட்டிகளின் தொடர்புகளையும் பணிக்கன்புலம், போன்றவை கேரளத் தொடர்பையும் சீனன்புலம், சாவகன்வளவு போன்றவை முறையே சீனத்தொடர்பையும் சாவகத் தொடர்பையும் காட்டுகின்றன.

புங்குடுதீவில் 90 சதவீதம் இந்துக்களே வாழுகின்றனர். தீவின் நடுப்பகுதியில் குறிப்பிட்டளவு கிறிஸ்தவர்களும் வாழுகின்றனர். பண்டைக்காலம் தொட்டு இந்தியாவின் தென்கோடியில் நெய்தல் நிலத்தில் வாழ்ந்து வந்த பரதவர்கள் 1534 ஆம் ஆண்டு ஆட்சியிலிருந்த போர்த்துக்கல் அரசனால் மதம் மாற்றப்பட்டு கிறிஸ்தவர்களாக்கப்பட்டனர். எனினும் கிறிஸ்தவ அறிவை போதியளவு கொண்டிராத நிலையில் வாழ்ந்து வந்தனர். இக்கால கட்டத்தில் புனித பிரான்ஸிஸ் சவேரியாரின் வருகையானது மிகப் பெரிய மாறுதலை பரதவர்கள் மத்தியில் ஏற்படுத்தியது. ஊக்கத்தையும் உழைப்பையும் மையமாகக் கொண்டு செயலாற்றிய புனிதரின் சேவை மிகு போதகம், அவர்கள் வாழ்ந்து வந்த பாதையை சீர் செய்தது.

1545 ஆம் ஆண்டு ஜுன் மாதம் கிறிஸ்தவர்களுக்கு எதிரான போராட்டத்தில் பரதவ கிறிஸ்தவர்களுக்குப் பல கொடுமைகள் இழைக்கப்பட்டன. இதனால் இவர்கள் தமது தாயகத்தை விட்டு தப்பியோட முனைந்தனர். கொந்தளிக்கும் அலை கடலையும் குமுறிவரும் காற்றையும் துச்சமென மதித்து வெளியேறிய இச்சமூகத்தினர் இலங்கையின் வடபாலுள்ள பலதீவுகளில் குடியேறினர். இவர்களில் ஒரு பகுதியினர் புங்குடுதீவில் தென்கீழ் முனையிலும் இறங்கிக் குடியேறினர்.

சிலகாலம் செல்ல தீவின் மத்திய பகுதியில் ஆலமரங்களும் பற்றைகள், புதர்களும் நிறைந்த இடத்தில் புனித சவேரியாரின் ஆலயத்தை அமைத்தனர். பின்பு அதன் சூழலில் வாழத் தொடங்கினர். இவ்வாறே புங்குடுதீவின் வேறு சில பகுதிகளிலும் கிறிஸ்தவர்கள் வாழத்தொடங்கினர்.

பௌத்த மரபினை அடிப்படையாகக் கொண்டு இலங்கையின் புராதன வரலாறு கூறும் தீபவம்சம், மகாவம்சம் முதலிய நூல்களில் நாகதீபம் ஒரு முக்கிய பௌத்த நிலையமாக கூறப்படுகின்றது. இங்கு புத்தபிரான் வந்து சென்றார் என்ற ஐதீகமும் உண்டு. "நாகதீபம்" என்ற சொல் வட இலங்கை முழுவதையும் குறிக்குமாயினும் சிறப்பாக நயினாதீவினையே குறிப்பிடுமெனக் கருதுவதாய்ப்படுகிறது. "பியங்குதீபம்" மற்றுமொரு முக்கியமான பௌத்த நிலையமாகக் கூறப்படுகின்றது. இங்கு புகழ் பெற்ற "அர்ஹந்தஸ்" (பௌத்த ஞானிகள்) வாழ்ந்தனரென குறிப்பிடப்படுகிறது. இவ்விடம் பற்றி வல்லிபுரப் பொற்சாசனத்திலும் குறிப்பு உள்ளதெனக் கருதப்படுகின்றது. இவ்விடம் புங்குடுதீவு என அடையாளம் காணப்படுகிறது. துறவிகள் தனிமையையும் அமைதியையும் விரும்பி காடுகளில் போன்று தீவுகளிலும் வாழ்ந்திருப்பர் என்று கூறலாம். இவ்விடத்தில் பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை தனது "ஈழத்து வாழ்வும் வளமும்" என்ற நூலில் கூறியவற்றை அவதானிக்கவேண்டும்.

சாலியகுமாரனும் அவன் காதலித்த சண்டாளக் கன்னி அழகுடைக்குமாரி அசோகமாலையும் முன்னோர் பிறவியில் இருந்தனர். அப்பொழுது ஒருநாள் தாங்கள் சமைத்த பன்றிக்கறியை எட்டுத்தேரர்களுக்கு பகிர்ந்து உண்ணக்கொடுத்திருக்கலாம் எனத் தமக்குள் எண்ணி அங்கலாய்த்தனர். அப்பொழுது பியங்குதீவில் வசித்த தருமதின்னர் என்னும் தேரர் அதனை தனது ஞான சிருஷ்டியால் உணர்ந்தார். அவர் உடனே அவர்களிருவரும் வாழ்ந்த கிராமத்துக்கு தேரர் சிலருடன் சென்று அவ்வுணவை அருந்தியருளினார்.

"பியங்குதீபம்" என இங்கு கூறப்பட்டது புங்குடுதீவாகும். நம்பொத்த என்ற சிங்கள நிகண்டில் இதனை புவங்குதீவு எனக் கூறப்பட்டுள்ளது. புங்குடுதீவு என்னும் சொல்லே காலகதியில் "பியங்குதீபம்" என மாறியிருக்கலாம். அதனை புங்கு + உடுதீவு எனப்பிரித்து புங்கமரம் நிறைந்ததீவு எனப்பொருள் கூறலாம். புங்கமரம் நெய்தல் நிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்று என பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை கூறியிருக்கிறார். "பியகுதிஸ விஹர கரிதே" இந்த வாசகத்துக்கு இசிகிராயன், பியகுதிஸ விகாரை என்ற பெயர் கொண்ட விகாரையைக் கட்டுவித்தான் அல்லது இசிகிராயனின் நிர்வாக காலத்தில் பியகுதிஸ என்பவன் இந்த விகாரையை கட்டுவித்தான் என இருவிதமாக பொருள் கொள்ளலாம்.

யாழ்ப்பாணத்தீபகற்பத்திற்கு அப்பால் மேற்குக் கடலில் உள்ள தீவுகளில் பௌத்தம் பரவியிருந்த முக்கியமான தீவு புங்குடுதீவாகும். இத்தீவை பாளி நூல்கள் பியங்குதீபமெனவும், "நம்பொத்த" என்ற சிங்களநூல் "புவங்குதீவு" எனவும் குறிப்பிடுகிறது. பியங்குதீபம் தூய்மையில் சிறந்த பௌத்தர்கள் வாழ்ந்த இடம் என்பது மகாவம்சம் மூலம் அறியக்கிடக்கிறது. துட்டகாமினி போரில் எல்லாளனைக் கொன்ற பின் தனது மாளிகைக்குத் திரும்பி, போரில் நடைபெற்ற கொடுமைகளை எண்ணி மனக்கவலையுற்ற நேரத்தில் பியங்குதீபத்தின் தவப்பள்ளியிலிருந்து தேரர் எண்மர் துட்டகாமினியிடம் சென்று அவனைத் தேற்றினார்கள் என்ற தகவலை மகாவம்சம் தருகிறது. வல்லிபுர விகாரையை கட்டுவித்தவரின் பெயர் "பியகுதிஸ" என வல்லிபுர பொற்சாசனம் தெரிவிப்பதிலிருந்து இந்த திஸ்ஸன் பியங்குதீபத்தில் வாழ்ந்தான் என்பதை அறியமுடிகிறது. துட்டகைமுனு வாழ்ந்த காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டாகும். துட்டகைமுனுவின் வரலாற்றுக் காலத்தில் புங்குடுதீவில் வாழ்ந்த பௌத்த துறவிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுவதால் புங்குடுதீவின் தோற்ற வரலாறு கிறிஸ்துவுக்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலேயே தோன்றிவிட்டது எனலாம்.



புங்குடுதீவு - கோரியாவடியில் உள்ள வெளிச்சவீடு



புங்குடுதீவு - குறிகாட்டுவான் துறைமுகம்

3

# புங்குடுதீவு என்ற பெயர் எப்படி வந்தது?

புங்குடுதீவு என்ற பெயர் எங்கள் கிராமத்துக்கு நீண்ட காலமாகவே வழங்கப்பட்டு வருகிறது. இந்தப் பெயர் எப்படி வந்தது என்பதற்கு பலரும் பல்வேறு கருத்துகளை கூறியிருக்கின்றனர். கடல் கொண்ட குமரிக் கண்டத்தின் எஞ்சிய பகுதிகளே தீவுக்கூட்டம் என்றும் அவற்றில் ஒன்றே புங்குடுதீவு என்றும் கருதப்படுகிறது.

தீவுகள் உண்டானதற்கான கர்ணபரம்பரைத் கதையொன்றும் உண்டு. இராம இராவணயுத்த காலத்தில் மயக்கமுற்றிருந்த தமது வீரர்களை காப்பாற்ற அனுமான் முயன்றான். அதற்காக அவன் இந்தியாவிலுள்ள சஞ்சீவிமலையொன்றினை பெயர்த்தெடுத்து தோளில் சுமந்து கொண்டு ஆகாய மார்க்கமாக இலங்கைக்கு வந்தான். அவன் பாக்குத்தொடுகடலின் மேலாக வரும் பொழுது அம்மலையின் சில பகுதிகள் உடைந்து பாக்குத்தொடுகடலில் விழுந்து விட்டன. அப்படி விழுந்தவை தான் வடகடலின் தீவுகள் என்றும் அதில் ஒன்றே புங்குடுதீவு என்றும் அந்த கர்ணபரம்பரைக் கதை கூறுகிறது.

“பியாங்குதீபம்” என்பது புங்குடுதீவினைக் குறித்துள்ளது என்று வல்லிபுரசாசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. புங்குடுதீவை பாளி இலக்கியங்கள் “பியங்குதீபம்” என்றும் நம்பொத்த என்ற சிங்கள நூல் “புவங்குதீவு” என்றும் குறிப்பிடுகின்றன.

ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் போர்த்துக்கீசரும் ஒல்லாந்தரும் தீவகத்தில் காணப்படும் தீவுகளுக்கு தங்கள் நாட்டில் வழங்கும் பெயர்களைச் சூட்டிக் கொண்டனர். போர்த்துக்கீசர் புங்குடுதீவுக்கு “கொங்குடிரவா” என்று பெயர் சூட்டினர். கி.பி. 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த போர்த்துக்கீச மத குருவான வோ்ணாவோடி குவேறோஸ் என்பவர் புங்குடுதீவை கொங்குடிரவா என்றே குறிப்பிடுகிறார். தனது காலத்தில் இங்கு 800 மக்கள் வாழ்ந்தனர் என்றும் பனந்தோப்புகளும் நெல் வயல்களும் அதிகமாக காணப்பட்டன என்றும் எழுதியிருக்கின்றார்.

கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த போர்த்துக்கீச மதகுருவான "போலோத்த திரிலதே" என்பவர், புங்குடுதீவில் பழைய கட்டிடச் சிதைவுகள் காணப்படுகின்றன, பல மக்கள் வாழ்ந்து வருகின்றனர் என்று குறிப்பிட்டுள்ளார்.

கி.பி 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த போர்த்துக்கீச தளபதியான “றிபெய்ரோ” என்பவர், புங்குடுதீவை “பங்கர்டிவா” (Pangardiva) என்று குறிப்பிடுகிறார். இங்கு 800 மக்கள் வாழ்ந்தனர். ஆண்கள் அதிக உயரமானவர்களாக காணப்பட்டனர். இங்கு பாம்புகள் அதிகம். மான், மயில், மீன், சிப்பிகள் மிகவும் அதிகம் என்றும் அவர் எழுதியிருக்கிறார்.

பல தீவுகளுக்கு மத்தியில் புங்குடுதீவு அமைந்திருப்பதால் ஒல்லாந்தர் தம் தீவுகளின் பெயர்களில் ஒன்றான "மிடில்பேர்க்" என்ற பெயரைச்சூட்டினர்.

பழம்பெரும் எழுத்தாளரும் நீதிபதியும் சட்டசபை உறுப்பினருமான முதலியார் சைமன் காசிச்செட்டி 1834 ஆம் ஆண்டு எழுதிய தனது நூலில் புங்குடுதீவைப்பற்றியும் குறிப்பிடுகிறார். இங்கு 2415 மக்கள் வாழ்ந்தனர் என்றும் ஆடுகள், மாடுகள் பல உள்ளன என்றும் இவற்றிலிருந்து நெய் பெறப்பட்டது என்றும் எழுதியிருந்தார்.

மஞ்சள் நிறமும் வாசனையும் கொண்ட "புயாங்கு" என்ற ஒரு வகை மரம் புங்குடுதீவில் அதிகமாகக் காணப்பட்டதாம். அதனால் இத்தீவுக்கு "புயாங்குதீவு" என்ற பெயர் வந்தது. காலப்போக்கில் இப்பெயர் "புங்குடுதீவு" என்று மாறியது எனச் சிலர் கூறுவர்.

இன்னும் சிலர் இக்கதையை வேறு விதமாகவும் கூறுகின்றனர். மரங்களின் பெயர்கள், அம்மரத்தின் பாகங்கள், செடிகள், செடிகளின் இருப்பிடங்கள் போன்றவற்றை தமிழக இடப்பெயர்கள் கொண்டு திகழ்கின்றன. அவ்வாறு தாவரத்தை அடிப்படையாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இலங்கையிலும் இருக்கின்றன. ஆலடி, மகிழடி, சாதியடி, இலவடி, அத்தியடி, வேம்படி என்னும் தாவரத்தை அடிப்படையாக கொண்ட ஊர்கள் தமிழ் நாட்டில் உள்ளன. நாவலடி, அரசடி, மாவடி, புளியடி போன்ற பெயர்கள் இலங்கையில் உள்ளன. மரப் பெயர்களை நோக்கும் பொழுது பனை, நொச்சி, மருது, காரை, புங்கமரம், சம்பந்தமான பெயர்கள் இலங்கையில் உள்ளன. பெரியதம்பனை, கிளிநொச்சி, சாய்ந்தமருது, காரைதீவு, புங்குடுதீவு என்பனவே அவை. வடக்குப்பனை, திருப்பனை, கவரப்பனை என்பன தமிழகத்தில் உள்ளன. பனங்காடு, நாவற்காடு, பலாக்காடு, மாங்காடு, முனைக்காடு, வெட்டுக்காடு (மட்டக்களப்பு), கள்ளிக்கட்டைக்காடு (மன்னார்), மாங்குளம், புங்கங்குளம், புளியங்குளம் என்பன இலங்கையில் உள்ளன. இவை எல்லாம் தாவரங்களை அடிப்படையாக கொண்டு உருவான ஊர்ப் பெயர்கள். இவ்வாறே புங்க மரம் நிறைந்த தீவு புங்குடுதீவு என்று பெயர் பெற்றிருக்கிறது. "புங்கமரம்" என்ற ஒரு வகை மரம் அக்காலத்தில் இத்தீவில் அதிகமாகக் காணப்பட்டதாம் சிறிய வெள்ளை நிறப்பூக்களையும் அவரை விதை வடிவிலான பெரிய காய்களையும் கொண்ட ஒரு வகை மரமே புங்கமரம். அதனால் இத்தீவுக்குப் "புங்குடுதீவு" என்ற பெயர் வந்தது எனக் கூறுகின்றனர்.

புங்க மரக்காயை சேர்த்து சிறுவர்களுக்கு மாலையாக கழுத்தில் கட்டினால் "நாய்க்கொக்கல்" என்னும் நோய் தீரும் என்று அக்கால மக்கள் நம்பினர். பிற்காலத்திலும் இந்நடைமுறை இருந்து வந்தது. அக்காலத்தில் புங்க மரங்கள் புங்குடுதீவில் அதிகமாகக் காணப்பட்டன.

இந்தியாவில் தமிழ்நாட்டில் 'புங்கனூர்' 'பூங்குடி' என்னும் கிராமங்கள் இப்பொழுதும் இருக்கின்றன. பூங்குடி என்னும் ஊர்ப்பெயரை புங்குடுதீவுடன் தொடர்புபடுத்தி பெயர்விளக்கம் கூறப்படுவதுண்டு. முஸ்லிம் படையெடுப்பு தமிழகத்தில் ஏற்பட்டபோது அங்குள்ள பூங்குடி ஊரினர் சிதறி ஓடினர். படையெடுப்பாளர்களது கைகளிலிருந்து தமது கன்னிப் பெண்களைப் பாதுகாக்க வேண்டிய அவல நிலையில் இங்கு தப்பி ஓடி வந்து குடியேறினர். அப்படிக்குடியேறியவர்கள், இத்தீவுக்கு 'பூங்கொடி' 'திருப்பூங்கொடி' என்னும் பெயர்களைச்சூட்டினர்.

இவ்வாறு 'பூங்கொடித்தீவு' 'பூங்குடித்தீவு' என மாறி அது காலப் போக்கில் புங்குடுதீவு என மருவியது என்றும் கூறுவர். சிலர் இந்த கதையை தனிநாயக முதலி தீவுப்பகுதியில் குடியேறிய வரலாற்றுடன் சேர்த்தும் கூறுவர்.

புங்குடுதீவு ஆதிகாலத்தில் செல்வம் கொழிக்கும் கிராமமாக விளங்கியது. அதனால் அதற்கு "பொன்கையூர்" என்ற பெயர் வழங்கப்பட்டது. அதுவே பின்பு புங்குடுதீவு என்று மாறியதோ என்றும் சிலர் கருதுகின்றனர். கண்டியில் உள்ள அருங்காட்சியகத்தில் பழைய இலங்கைப்படம் ஒன்று இருக்கிறது. ஒல்லாந்தர் காலத்தில் அது அமைக்கப்பட்டது. அந்த இலங்கைப்படத்தில் தீவுப்பகுதி வெகு தெளிவாக குறிக்கப்பட்டிருக்கிறது. புங்குடுதீவுக்கு அங்கு 'Gold Dre Burg" என்ற பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. இதனைக் கொண்டு "பொன் கொடு தீவு" என்றும் அழைக்கலாம்.

டானியல் ஜோ்ன் என்னும் அறிஞர் கந்தபுராணத்தை சான்று காட்டி பின்வருமாறு விளக்கம் கூறுகிறார். புங்கம் + உடுதீவு = புங்குடுதீவு. இவ்வாறே புங்குடுதீவு என்ற பெயர் வந்தது என்று விளக்கம் கூறுகிறார். புங்கம் = அம்பு உரு உருவுதல் = வேல் உருவிப்பாய்தல். எனவே அம்பு அல்லது வேல் உருவிப்பாய்ந்த இடமே புங்குடுதீவு ஆகியது என்று அவர் கூறுகிறார்.

எஸ். டபிள்யூ. குமாரசாமி என்ற அறிஞர் இன்னுமொரு கருத்தைக் கூறுகிறார். அவர் புங்குடுதீவு என்ற பெயர் சிங்களப் பெயரின் திரிபு என்று கூறுகிறார். "புயங்கு திவயின" என்ற சிங்களச் சொல்லின் திரிபே "புங்குடுதீவு" என்று கூறுகிறார். "திவயின" என்ற சிங்களச் சொல்லின் பொருள் "தீவு" ஆகும். "புயங்கு திவயின" என்ற சிங்களப் பெயரை தமிழர்கள் "புயங்குடைய தீவு" என்று வழங்கினர் என்றும் அதுவே பின்பு "புங்குடுதீவு" என்று மாறியிருக்கலாம் என்றும் அவர் எழுதியிருக்கிறார்.

இவரது கருத்துக்கு எதிரான கருத்தை பேராசிரியர். க.கணபதிப்பிள்ளை முன் வைக்கிறார். "நம்பொத்த" என்ற சிங்கள நிகண்டில் இது "பியங்கு தீவம்" எனக் கூறப்பட்டுள்ளது. புங்குடுதீவு என்ற சொல்லே காலகதியில் "புயங்குதீவம்" என மாறியிருக்கலாம். அதனை புங்கம் +உடு+தீவு எனப்பிரித்து புங்கமரம் நிறைந்த தீவு எனப்பொருள் கூறலாம். புங்கமரம் நெய்தல் நிலத்துக்குக் கருப்பொருள் என்றும் அவர் கூறுகிறார்.

வரலாற்று ஆசிரியர்களின் வரிசையில் ஒல்லாந்து தேசத்தவரான போல் டேயஸ் சுவாமிகளும் முக்கியமானவர். இவர் புங்குடுதீவு பற்றியும் எழுதியிருக்கிறார். "பொங்காதிவ" ஒரு பெரிய தீவாகும். மக்களை மிகவும் கவரக்கூடிய அளவிற்கு சிறப்பான அம்சங்கள் அங்கில்லை, கற்பூமியுள்ளது. அங்கு மான், முயல், மீன், பெரிய மட்டிகள் என்பன பெருவாரியாகக் கிடைக்கின்றன. பின்னையவற்றை அவித்துச் சாப்பிடுவது தான் நன்று. இந்தியாவின் பிற பகுதிகளிலும் பார்க்க இங்குள்ள ஆண்கள் மிகவும் உயரமானவர்களாகக் காணப்படுகிறார்கள்" என்று அந்த அறிஞர் எழுதியுள்ளார்.

புங்குடுதீவு என்பது நாற்புறமும் கடலால் சூழப்பட்ட தீவாகும். இந்தத்தீவுக்குள்ளும் பல்வேறு சிறு சிறு தீவுகள் காணப்படுகின்றன. இவ்வாறு இங்கு 8 சிறு தீவுகள் அமைந்திருக்கின்றன. பல்லதீவு, கேரதீவு, ஊரதீவு, காரைதீவு, வரதீவு, கண்ணாத்தீவு, மண்டைதீவு, நடுவுத்துருத்தி (துருத்தி =தீவு) என்று அவை அழைக்கப்படுகின்றன. குறிகாட்டுவான் என்ற இடமும் தீவு போன்ற அமைப்புக் கொண்டதே

இவற்றுள்ளே பல்லதீவும், கண்ணாத்தீவும் இன்னும் கடல் சூழ்ந்த சிறு தீவுகளாக உள்ளன. கேரதீவு ஒல்லாந்தர் காலத்திலே முருகைக்கல் பாதையால் பிரதான தீவுடன் இணைக்கப்பட்டுவிட்டது. பிற்காலத்தில் நடுவுத்துருத்தியும் தார் வீதியால் பிரதான தீவுடன் இணைக்கப்பட்டுவிட்டது. ஏனைய சிறு தீவுகள் இயற்கையாகவே கடல்வற்றி மேடாகி பிரதான நிலப்பரப்புடன் ஒரே தரையாகி விட்டன, பல்லதீவிலும் கண்ணாத்தீவிலும் புற்தரைகள் இருக்கின்றன. கோடை காலத்தில் கடல்நீர் வற்றும் போது பிரதான தீவில் வாழும் மாடு, ஆடு போன்ற மந்தைகள் பல்லதீவுக்கும் கண்ணாத்தீவுக்கும் நடந்து சென்று புல் மேய்ந்துவிட்டு திரும்பி வந்தன.

# 4

# புங்குடுதீவின் பகுதிகள்

இந்தியாவையும் இலங்கையையும் பிரிக்கும் பாக்கு நீரிணையில் இலங்கைக்குரிய கடற்பகுதியில் யாழ்ப்பாண குடாநாட்டின் தென்மேற்குத் திசையில் தீவகம் அமைந்திருக்கிறது. இந்தத் தீவகத்தின் நடுநாயகமாக நான்கு பக்கங்களும் கடலால் சூழப்பட்ட தீவாக புங்குடுதீவு அமைந்திருக்கிறது. "ப" வடிவில் அமைந்துள்ள இத்தீவு, யாழ்ப்பாண நகரிலிருந்து கடற்பாதையால் இணைக்கப்பட்டுள்ளது. யாழ் நகரிலிருந்து 23 கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்திருக்கிறது. 34 கி.மீட்டர் சுற்றளவுள்ள இத் தீவு கிழக்கு மேற்காக 9 கி. மீட்டர் நீளமும், வடக்குத் தெற்காக 5 கி. மீட்டர் அகலமும் கொண்டது. 28.9 சதுர கிலோமீட்டர் பரப்புடையது. யாழ்ப்பாண நகருக்கும் புங்குடுதீவுக்கும் இடையில் வேலணைத்தீவும் இரண்டு கடல்களும் உள்ளன. வேலணைத்தீவையும் யாழ் நகரையும் பண்ணைத்தாம்போதி இணைக்கிறது. புங்குடுதீவையும் வேலணைத்தீவையும் அம்பலவாணர் தாம்போதி இணைக்கிறது. புங்குடுதீவில் சில ஓடைகளும் முனைகளும் உள்ளன. இத்தீவு, வடக்காக பல்லதீவு, கேரதீவு, வரதீவு, கண்ணாத்தீவு ஆகிய கடலேரிகளால் பிரிக்கப்பட்ட சிறுதரைப்பகுதிகளையும் தென்மேற்கில் குறிகாட்டுவான், நடுவுத்துருத்தி ஆகிய சிறு கடற் பாதையால் இணைக்கப்பட்ட நிலப்பகுதிகளையும் கொண்டு புங்குடுதீவு என்னும் பெயருடன் விளங்குகிறது. குறிகாட்டுவான் 38 ஹெக்டயர் பரப்பும், நடுவுத்துருத்தி 88 ஹெக்டயர் பரப்பும் கொண்டவை..

தீவின் மத்திய பகுதி தாழ்வாகவும் கரைப்பகுதிகள் உயர்ந்த தரையமைப்பினைக் கொண்டதாகவும் இருக்கின்றன. புங்குடுதீவில் மலைகள் இல்லை; ஆனால் தீவின் தென்கிழக்கே உயரம் கூடிய வீராமலை என்னும் பகுதி இருக்கிறது. வடமேற்குப் பகுதி படிப்படியாக தாழ்ந்து செல்கிறது. புங்குடுதீவில் ஆறுகள் இல்லை; ஆனால் "கள்ளி ஆறு" என்னும் தாழ்ந்த பகுதி இருக்கிறது. மாரிகாலங்களில் வீராமலை மற்றும் அதன் அயலிலுள்ள உயரமான பகுதிகளிலிருந்தும் நீர்வழிந்தோடி கள்ளியாற்றினூடாக கடலை சென்றடையும். இக்கள்ளியாறு மாரிகாலத்தில் ஆறு போலவே ஓடிக்கொண்டிருக்கும்.

இந்தக் கள்ளியாற்றை விட சோழகனோடை, மின்னியன் வாய்க்கால் ஆகிய இரண்டு நீர் வெளியேற்றும் பாதைகளும் உள்ளன. இங்கே கடல்நீர் உட்புகுவதைத் தடுக்கும் பாரிய உவர்நீர் தடுப்புகளும் காணப்படுகின்றன. புங்குடுதீவின் மத்தியில் 8 ஏக்கர் பரப்பளவுடைய "முற்றவெளி" என்ற இடம் இருக்கிறது. கோடைகாலத்தில் இது விளையாட்டு மைதானமாக பயன்படுத்தப்படும். மாரிகாலத்தில் நீர் நிரம்பிக் குளம்போல் காட்சியளிக்கும். புங்குடுதீவின் தென்பகுதி உயரம் கூடியதாகவும் வடபகுதி உயரம் குறைந்த பகுதியாகவும் இருப்பதுடன் கேரதீவைச் சார்ந்த பகுதிகள் சதுப்பு நிலத்தை ஒத்ததாக இருக்கிறது. புங்குடுதீவின் சராசரி வெப்பநிலை $80^0$ பரனைற்றாகவும் வருடாந்த மழைவீழ்ச்சி 30 செ.மீற்றருக்கு குறைவானதாகவும் காணப்படுகிறது. நன்னீர் வளம் ஆங்காங்கே சிறிதாகவே காணப்படுகிறது. நன்னீர் உள்ள இடங்களில் குடிப்பரம்பல்கள் அதிகமாக இருப்பதை அவதானிக்க முடிகிறது. யாழ்ப்பாணக் குடாநாடும் மற்றத்தீவுகளும் போல் புங்குடுதீவும் மயோசீன் காலத்தில் கடலிலிருந்து சுண்ணாம்புக் கற்பாறைத்திடலாக மேலுயர்த்தப்பட்டதெனக் கூறப்படுகிறது.

இலங்கையும் இந்தியாவும் ஒரு காலத்தில் ஒன்றாக இணைந்திருந்தன. அவ்வாறே யாழ்ப்பாணக்குடாநாடும் அதன் அருகே உள்ள தீவுகளும் ஒன்றாக இணைந்திருந்தன. இவை கடல்கோள்களினால் மேற்கே இருந்த தரைப்பகுதி பலதீவுகளாக பிரிக்கப்பட்டன. அதன் காரணமாகவே தீவுகள் உருவாகின என்று கூறப்படுகிறது.

கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலந்தொட்டு புங்குடுதீவிலும் மக்கள் நடமாட்டம் நிலவிவந்துள்ளது. இத்தீவு யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு அண்மையில் உள்ளது. தென்னிந்தியாவுக்கு சற்று தொலைவில் உள்ளது. மன்னர்களின் படையெடுப்பாலும், நாடுகளுக்கு செல்லும் ஆர்வத்தாலும் மீன்பிடித்தல் போன்ற தொழில்களினாலும் அவர்களில் ஒருசாரார் புங்குடுதீவில் குடியேறியிருக்கின்றனர். புங்குடுதீவு மற்றத்தீவுகளை விட நடுவே அமைந்துள்ளமையாலும் தென்னிந்தியத் தொடர்புகள் இருந்து உள்ளமையாலும் இங்கு மக்கள் நெருக்கமாக வாழ்ந்துள்ளனர் என்று கூறப்படுகிறது. தீவின் வடபகுதியில் மக்கள் குறைவாகவும் தென்பகுதியில் அதிகமாகவும் குடிப்பரம்பல் காணப்படுகிறது.

யாழ்ப்பாணக் குடாநாடும் தீவுப்பகுதிகளும் சுண்ணாம்புக்கல் அடையல்களால் ஆக்கம் பெற்றவை. யாழ்ப்பாணக் குடா நாடும் இலங்கையின் வடமேல் கரையோரமும் 'மயோசின்' எனப்படும், புவிச்சரிதவியற் காலத்தில் கடலின் கீழ் இருந்தன என்றும் அக்காலத்தில் தான் சுண்ணக் கற்பாறைகள் உருவாகின எனவும் பின்னர் பூமியின் அசைவால் மேலெழுந்தன எனவும் அறியப்படுகிறது. யாழ்ப்பாணக் குடாநாடு போலவே தீவுகளும் மயோசீன் காலத்தில் கடலிலிருந்து சுண்ணாம்புக் கற்பாறைத்திடலாக உயர்ந்தன. மற்றத்தீவுகளைப் போலவே பொதுவாக புங்குடுதீவின் தரைத்தோற்றம் அமைந்துள்ளது. புங்குடுதீவின் தரைத்தோற்றம் பொதுவாக சமமானதாகவே காணப்படுகிறது. சிறிது உயரமான பகுதிகளாக தென்கிழக்கிலுள்ள வீராமலை, மாவுதிடல் ஆகிய இடங்கள் அமைந்துள்ளன. இவை கடல் மட்டத்திலிருந்து பொதுவாக 10 அல்லது 15 அடி உயரத்தில் காணப்படுகின்றன. உயரமான வீராமலைப் பகுதியில் இருந்து வடமேற்கு நோக்கி நிலம் படிப்படியாக தாழ்ந்து செல்வதையும் காணமுடிகிறது. புங்குடுதீவின் நிலப்பகுதி, கடலும் வயலும் காடும் கலந்து காணப்படுகிறது. புங்குடுதீவுக்குள் உள்ள மண்டைதீவு என்னும் பகுதியில் மலையடிச்சரிவு காணப்படுகிறது. மலையடிவாரம் ஆழ்கடலின் உள்ளே செங்குத்தாக சரிந்து செல்கிறது. தீவெங்கும் உப்பு நீர் தரையினூடே நெடுந்தூரம் உட்சென்றுள்ளது. பெரியகிராய் குளம், இணுவிட்டியாகுளம், உப்பங்களி என்பன இங்குள்ள பெரிய நீர் நிலைகளாகும்.

புங்குடுதீவில் பொதுவாக ஒரே மண்வகையே காணப்படுகிறது. வளம்குறைந்த நரைமண் தொகுதியே பெரும்பாலான பகுதிகளில் காணப்படுகிறது. சிப்பிகலந்தமண், களிமண், ஊரிகலந்தமண் கொழுக்கிக்கல்கலந்த மண் என்பனவும் ஆங்காங்கே காணப்படுகின்றன. 12 ஆம் வட்டாரத்தின் மத்திய பகுதியில் சில இடங்களில் செம்மண் காணப்படுகிறது. வடகிழக்கு, தென்கிழக்குப்பகுதிகளில் மணல் காணப்படுகிறது. நிலத்தின்கீழே சுண்ணாம்பும் மக்கியும் சில இடங்களில் கற்பாறைகளும் உள்ளன. வெண்மணல் புங்குடுதீவைச் சுற்றியுள்ள கடற்கரைகளில் காணப்படுகிறது. வீடுகட்ட அதிகம் பயன்படுத்தப்படும் இம்மண், தெற்குக்கடற்கரையில் உள்ள அம்மன் கோவிலடிக்கும் ஆஸ்பத்திரியடிக்கும் இடையில் அதிகமாகக்காணப்படுகிறது. மழைநீரை ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு தேக்கி வைக்கக்கூடிய தன்மை இந்நிலத்துக்கு குறைவு. மழை பெய்த பின் சிறிது காலத்திலேயே நீர் பூமிக்கடியில் சென்று கடலோடு கலந்து விடுகிறது.

இதுவே இங்கு நன்னீர்ப்பிரச்சினைக்குக் காரணமாகும். புங்குடுதீவின் நீர்வளத் தன்மையைப் பொறுத்தவரை 68 சதவீதமான கிணறுகளில் உவர்த்தன்மை கொண்ட நீரே காணப்படுகிறது. நன்னீர் வளம் ஆங்காங்கே சில பகுதிகளில் காணப்படுகின்றன. கண்ணகை அம்மன் கோவிலடியிலும் மேற்கே சங்கத்தாகேணிப் பகுதியிலும், நாவலடியிலும் நன்னீர் வளம் அதிகமாக காணப்படுகிறது. மற்றப்பகுதிகளில் நன்னீர் பிரச்சினை அதிகமாகவே இருக்கிறது. இங்கு பல இடங்களில் மழையை நம்பியே பயிர் செய்யப்படுகின்றன. மடத்துவெளி, மாவுதிடல், பிட்டிவயல், தல்லமி என்பன அவ்வாறு பயிர் செய்யப்படும் பிரதானமான இடங்களாகும்.

புங்குடுதீவுக்குள் பல குறிச்சிகள் இருக்கின்றன. சில பகுதிகளின் பெயர்கள் காரணத்துடன் வந்துள்ளன. சில காரணம் இல்லாமலே தோன்றியிருக்கின்றன. மடத்துவெளி, குறிச்சிக்காடு, ஆலடி, ஆஸ்பத்திரியடி, சந்தையடி, குறிகாட்டுவான், நடுவுத்துருத்தி, கரந்தலி, வீராமலை, மாவுதிடல், வல்லன், ஊரதீவு, வரதீவு, களதீவு, வாடை, சங்கத்தார்கேணி, நுணுக்கல், கழுதைப்பிட்டி, வீரம்புளியடி, சிறுப்பிட்டி, முனைப்புலம், கோட்டைக்காடு, பெரியகிராய், தல்லமி, முருக்கடி, நடுக்குறுச்சி, கிழக்கூர், பெருங்காடு, பெருக்கடி, தொட்டத்துமுனை, கோரியாவடி, சின்ன இறுபிட்டி, பெரிய இறுபிட்டி, புளியடித்துறை, சங்குமாலடி, கேரதீவு, சந்தையடி, பறண்டாத்தோட்டம் போன்ற குறிச்சிகள் முக்கியமானவை. இவற்றைவிட சிறிய குறிச்சிகளும் இருக்கின்றன. இவற்றுக்கும் தனித்தனி பெயர்கள் உள்ளன. புங்குடுதீவில் "போக்கத்தை" என்று ஒரு இடம் இருக்கிறது. இது புவக்வத்த - பாக்குத் தோட்டம் என்ற சிங்களச் சொல்லின் திரிபு என்றும் சிலர் கூறுவர்.

புங்குடுதீவில் பெருக்கடி என்னும் ஒரு இடம் இருக்கிறது. அடிக்கடி கடல் பெருக்கு ஏற்பட்டதால் அந்தப் பெயர் வந்திருக்கலாம் என்று கூறப்படுகிறது. புளியடித்துறையிலே பழமைவாய்ந்த பெருக்கு மரம் ஒன்று உள்ளது. இம்மரம் அராபியரால் அறிமுகப்படுத்தப்பட்டதாக தெரியவருகிறது. இதனாலும் பெருக்கடி என்ற பெயர் வந்திருக்கலாம் எனவும் கூறப்படுகிறது.

மரங்களின் பெயரால் எழுந்த பல குறிச்சிகள் புங்குடுதீவில் இருக்கின்றன. முருக்கடி, புங்கொடி, இத்தியடி, ஆலடி, ஈச்சமுனை, கள்ளியாறு என்பன அவற்றில் சிலவாகும். புங்குடுதீவின் தெற்குப்புறத்தில் வீராமலை என்ற உயர்ந்த பகுதி காணப்படுகிறது. வீரமலை பின்பு வீராமலை என்று மாறியதாகவும் கூறப்படுகிறது. புங்குடுதீவில் ஆரம்பத்தில் காடுகள் இருந்திருக்க வேண்டும். அதனாலேயே பெருங்காடு, குறிச்சிக்காடு, நாயித்தங்காடு, கோட்டைக்காடு என்று குறிச்சிகளுக்குப் பெயர் வந்தன.

புங்குடுதீவில் ஆரம்ப காலத்தில் கடல் போக்குவரத்தே அதிகமாக இடம்பெற்றது. இத்தீவின் கரையோரங்களில் பல இறங்கு துறைகள் இருந்து வந்துள்ளன. புளியடித்துறை, கழுதைப்பிட்டி, பெரியதுறை, குறிகாட்டுவான், பெருக்கடி, குளத்துவான், மடத்துவெளி, பழையதுறை, சங்குமாலடி என்பன அவைகளாகும். சில வருடங்களுக்கு முன்பு கழுதைப்பிட்டியே பிரதான இறங்குதுறையாக விளங்கியது. இன்று குறிகாட்டுவானே பிரதான இறங்குதுறையாக விளங்குகிறது. மற்றவை மங்கி மறைந்து வருகின்றன. மேற்குத் தொங்கலில் கழுதைப்பிட்டியும் தென்மேற்குப்பக்கம் குறிகாட்டுவானும் அமைந்திருக்கின்றன. புளியடித்துறை என்ற பழையதுறைமுகம் இவை இரண்டுக்குமிடையில் அமைந்திருக்கிறது.

புளியடித்துறையே ஆரம்பகாலத்தில் முக்கியதுறையாக விளங்கியது. இங்கிருந்தே நயினாதீவு, நெடுந்தீவு, எழுவைதீவு, ஊர்காவற்றுறை, அலுப்பாந்தி போன்ற இடங்களுக்கு போக்குவரத்துகள் இடம்பெற்றன. பொருட்களும் ஏற்றி இறக்கப்பட்டன.

ஆதிகாலத்தில் புங்குடுதீவின் தெற்குப்புறத்தில் குளத்துவான் என்ற துறைமுகம் இருந்தது. இது வீராமலை என்ற உயர்கல்மேட்டில் கோரியாவடியில் இருந்தது. இன்றும் இவ்விடத்தில் வெளிச்சவீடு ஒன்று உள்ளது. இது ஓர் ஒடுங்கிய குடாவாக அமையப்பெற்றதால் அக்காலம் வடகீழ் பருவப் பெயர்ச்சிக் காற்றுக்காலத்தில் வெளிநாட்டுப் பாய்மரக்கப்பல்கள், வள்ளங்கள் ஒதுங்கி நின்று தங்கிச் செல்ல வசதியாய் அமைந்துள்ளது. கோரியாவடி என்பது வடமாகாணத்தில் சில இடங்களில் வெளிச்ச வீடு இருக்கும் இடத்தைக் குறிக்கிறது. எனவே புங்குடுதீவிலும் வெளிச்சவீடு இருக்கும் பகுதி கோரியாவடி என்று பெயர்பெற்றிருக்கிறது. இங்கு ஒல்லாந்தரால் கட்டப்பட்ட வெளிச்ச வீடு இருக்கிறது. அந்தக்காலத்தில் இவ்வெளிச்சவீடு அங்கு வரும் கப்பல்களுக்கு வழி காட்டின. 1939 ஆம் ஆண்டு காலத்தில் இரண்டாவது உலகப் போர் காலத்தில் இவ்வெளிச்சவீடு இருந்த பகுதியைச் சுற்றி காப்பிரிப் படைவீரர்கள் பாசறை அமைத்திருந்ததை பலர் இப்பொழுதும் கூறுவர். 1950 காலப்பகுதியில் வெளிச்சவீடு சுழன்று ஒளிபாய்ச்சி கடற் பயணிகளுக்கு வழிகாட்டியது. அப்போது அது சுழன்று சுழன்று ஒளிபாய்ச்சுவது அழகாக இருக்கும். கோரியாவடியை அடுத்த பகுதியில் சிறுசிறு கற் பாறைகள் இருக்கின்றன. மாரிகாலத்தில் இவற்றுக்குப் பக்கத்தில் கடல் நீர் வந்துவிடும். அலை அடிக்கும் பொழுது கடல்நீர் இக்கற்பாறைகளையும் தாண்டி சிறுதூரம் ஊருக்குள் வந்து விடும். அபாயம் எதுவும் ஏற்படுவதில்லை. இப்போது இந்த வெளிச்சவீடு செயலிழந்து விட்டது. கட்டிடங்கள் மீது மரங்கள் வளர்ந்துள்ளன.

குளத்துவான், வத்தைகள் வரக்கூடிய வாய்க்கால் போன்ற அமைப்புள்ள கடற்பகுதியாகும். இது பண்டைக்காலத்தில் ஒரு துறைமுகமாக விளங்கியிருக்கலாம். இந்தியர், அரேபியர் போன்றோர் இங்கு வந்திறங்கியிருக்கலாம் என்று நம்பப்படுகிறது. சேதுக்கரை, கச்சதீவு, நெடுந்தீவு, இவற்றைத் தொட்டுக்கொண்டு குளத்துவானுக்கு வந்த வத்தைகள், கப்பல்கள், மண்டைதீவின் கிழக்குப்புறமாக அலுப்பாந்தி, கொழும்புத்துறை போன்ற ஊர்களைத் தொட்டுக்கொண்டு பூநகரித்துறையில் நங்கூரமிட்டன. புங்குடுதீவில் பசளைக்காக வெட்டப்பட்ட புங்கமர இலைகள் "குளத்துவான்" துறையில் வத்தைகளில் ஏற்றப்பட்டு அலுப்பாந்தியில் இறக்கப்பட்டன. நெடுந்தீவில் சேகரிக்கப்பட்ட மாட்டெரு குளத்துவானிலேயே இறக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

1900 ஆம் ஆண்டு காலப்பகுதியில் புளியடித்துறைமுகம் திருத்தி அமைக்கப்பட்டது. இறங்குதுறை அமைக்கப்பட்டு கடற்பகுதி தோண்டி ஆழமாக்கப்பட்டது.இக்காலங்களில் நெடுந்தீவில் இருந்து வள்ளங்கள், மோட்டார் படகுகள், வத்தைகள் என்பன நயினாதீவு, புங்குடுதீவு, அனலைதீவு, எழுவைதீவு போன்ற தீவுகளைத் தொட்டுக்கொண்டு ஊர்காவற்றுறை, காரைநகர், துறைமுகங்களைச் சென்று சேரும். அதன்பின்பு அங்கிருந்து அராலித்துறை அலுப்பாந்தித்துறை ஆகியதுறைகளைச் சென்றடையும். கோழி, ஆடு, மாடு, பனம்பொருட்கள், தேங்காய், கருவாடு, சிப்பி, சங்கு மற்றும் பசளைக்கேற்ற குழை வகையான பூவரசு, ஒதி, எருக்கிலை என்பனவே அக்கால ஏற்றுமதிப் பொருட்கள். இவை இந்த கடல்வழிப்பாதைகள் மூலம் ஏற்றுமதி செய்யப்பட்டன. புங்குடுதீவில் பல்ல தீவுக்கருகே உள்ள இடம் சங்குமாலடி ஆகும்.



புங்குடுதீவு – மடத்துவெளிப் பகுதியின் ஓர் அழகிய தோற்றம்



புங்குடுதீவு – குறிகாட்டுவான் வாசிகசாலை

இங்கு சங்குகளும் சிப்பிகளும் குவிக்கப்பட்டன. இங்கிருந்தே இவை சிங்கப்பூர் போன்ற பிற தேசங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதாக அறியமுடிகிறது. கழுதைத்திசையான வடமேற்கே கழுதைப்பிட்டி என்ற துறை உண்டு. இங்கு கழுதைகளும் முயல்களும் அதிமாக காணப்பட்டன. குறிகாட்டுவான்துறை அமைப்பதற்கு முன்பு இதுவே பிரதான துறையாக விளங்கியது.

புங்குடுதீவின் மேற்குத் திசையில் தீவு போல் அமைந்துள்ள இடமே குறிகாட்டுவானாகும். இத்தீவு பிரதான தீவுடன் தரைப் பாதையால் இணைக்கப்பட்டிருக்கிறது. மேற்குக்கடலில் உள்ள தீவுகளை குறிப்பாக காட்டுவதால் குறிகாட்டுவான் என்ற பெயரைப் பெற்றது. 1960ஆம் ஆண்டின் முற்பகுதியில் குறிகாட்டுவான் இறங்குவதுறை அமைக்கப்பட்டது. குடாநாட்டு மக்களும் தென்னிலங்கை யாத்திரிகர்களும் நயினாதீவுக்கும் நெடுந்தீவுக்கும் குறிகாட்டுவானூடாகவே பிரயாணம் செய்கின்றனர்.

வானிலை ஆராய்ச்சிக்கு மிகப் பொருத்தமான இடமென குறிகாட்டுவானை ஒரு அறிஞர் குறிப்பிட்டார். நெடுந்தீவு மக்களின் போக்குவரத்தை இலகுவாக்கவும் நயினாதீவு யாத்திரிகர்களுக்கு உதவிசெய்யவும் குறிகாட்டுவான் துறைமுகத்திட்டம் உருவாக்கப்பட்டது.

“கோட்டைக்காடு” என்னும் பகுதி கோட்டை இருந்த பகுதியாகும். “களதீவு” என்னும் பகுதி போர் நடந்த இடம் என்று கருதப்படுகிறது. “வெற்றியாமுனை” வெற்றிபெற்ற இடம் என்று கூறப்படுகிறது. சோழகனோடை, பல்லதீவு, பெருங்காடு என்பன அரசியலோடு தொடர்புடைய கிராமங்களாக இருந்துள்ளன. சீனன்புலம், சங்குமாலடி, சிப்பியேற்றந்துறை என்பன வெளிநாட்டு வர்த்தகத் தொடர்பு கொண்ட துறைமுகங்களாகும். சிப்பியேற்றந்துறையில் முஸ்லிம் வியாபாரிகளின் கடைகள் இருந்ததாக கருதப்படுகிறது. சிறந்த வகையான சங்குகள் இங்கிருந்து பல நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

தோட்டம் செய்வதற்கு உரியஇடம் இங்கு “தோட்டமுனை” என்ற பெயரில் இருந்தது. அது காலப் போக்கில் “தொட்டது முனை” என்று சிதைந்து வழங்குகிறது. மடத்துவெளித்துறையிலிருந்து படகுகள் மூலம் யாழ்ப்பாணம் சென்றனர். அந்த இடம் பரந்த வெளியாகும். அந்த வெளியில் பயணிகள் தங்க மடம் கட்டியிருக்கிறார்கள். அது “மடத்துவெளி” என்று அழைக்கப்பட்டது. மடத்துவெளியில் பழமை வாய்ந்த கிணறு இருக்கிறது. இது வற்றுவதேயில்லை.

புங்குடுதீவில் உள்ள குளங்களில் பெரிய கிராய்க்குளம், இனுவிட்டியாகுளம், சின்னக்கிராய்க் குளம் என்பன முக்கியானவை. பெரியகரைக்குளம் என்பது பெரியகிராய்க்குளம் என்றும் சின்னக்கரைக்குளம் சின்னக்கிராய்க்குளம் என்றும் வந்ததென்பர். உயரமான பகுதியான வீராமலையில் விழும் மழை நீரானது பெரிய கிராய்க்குளம், சின்னக்கிராய்க்குளம், இனுவிட்டியாகுளம் போன்ற குளங்களை நிரப்புகிறது. மிகுதி நீர் குறிச்சிக்காட்டின் தாழ்நிலத்தினூடாக செல்லும். அவ்வாறு நதிபோன்று சென்று கேரதீவுக்கருகே கடலில் சேருகின்றது. இவ்வாறு மழைவெள்ளம் ஓடி வரும் பகுதியே கள்ளி ஆறு என அழைக்கப்படுகின்றது. மழைகாலத்தில் பெரியகிராய், சின்னக்கிராய் குளங்களில் நீர் நிறைந்து விடும். இக்குளங்கள் முறையே 9,10,11,12, 1,4,5, ஆகிய வட்டாரங்களினூடாக மூன்று மைல் நீளத்துக்கு பாய்ந்து கேரதீவுக்கடலில் சங்கமமாகிறது.

புங்குடுதீவில் கடல் நீரும் தரை நீரும் கலக்கும் இடங்களில் முன்பு தடுப்புக்கதவுகள் இருக்கவில்லை. அதனால் கடல் மீன்கள் பெரியகிராய்க் குளத்தில் வந்து தங்கின. ஆனால் இப்போது அந்த தடைக்கதவு இருப்பதால் அவ்வாறான மீன்கள் இப்போது பெரிய கிராய்க்குளத்தில் காணப்படுவது குறைவாகும். மாரிகாலத்தில் இந்தக் குளங்கள் எல்லாம் நிரம்பியவுடன் களதீவு அருகே உள்ள தடுப்புக்கதவு திறந்து விடப்படுகின்றது.

கள்ளி ஆறும் கரைபுரண்டு ஓடத் தொடங்கிவிடும். மாரிகாலத்தில் புங்குடுதீவில் பெய்யும் மழை முள்ளியன் வாய்க்கால், சோழகன் ஓடை, கள்ளியாறு போன்ற பள்ளமான பகுதிகளால் கடலில் கலந்து விடுகிறது. புங்குடுதீவில் பெரியதும் சிறியதுமாய் 38 குளங்கள் இருக்கின்றன. இவை அனைத்தும் கோடை காலத்தில் வரட்சி அடைந்து விடுகின்றன. மழைநீரை கடலிற்கு சென்று விடாமல் தடுப்பதற்கு பல செயல் திட்டங்கள் அமுல்படுத்த வேண்டும்.

கோடைகாலத்திலும் இந்தக் குளங்களில் நீர்தேங்கி நிற்கச் செய்யவேண்டும் என்று பலர் முயற்சி செய்தனர். 1949ஆம் ஆண்டு பெரிய கிராய்க்குளத்தை ஆழமாக்கும் முயற்சி நடைபெற்றது. முதலில் தென்கிழக்குப்பகுதி ஆழமாக்கப்பட்டது. வடக்குப்பக்கத்தில் இக்குளத்துக்குள் பல கிணறுகள் தோண்டப்பட்டன. இந்தமுயற்சி அமரர். சோ. க. ஐயம்பிள்ளை தலைமையில் நடைபெற்றது. மற்றைய குளங்களிலும் இவ்வாறான முயற்சிகளை சர்வோதய தொண்டர் அமரர். க. திருநாவுக்கரசு மேற்கொண்டார். குளங்களை திருத்தி அமைக்கும் பணியில் இப்பொழுது "லண்டன் பாலா" ஈடுபட்டு வருகிறார். அவரின் முயற்சியால் பல குளங்கள் திருத்தி அமைக்கப்படுகின்றன. மழைநீரை சேமித்து வைப்பதற்காகவே இந்தக் குளங்கள் அமைக்கப்பட்டன. பெரிய கிராய்க்குளம் மூலம் பயிர்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டது. அயலில் உள்ள சலவைத் தொழிலாளிகளுக்கு இந்தக்குளம் பெருநன்மையாக விளங்கியது. சின்னக்கிராய்க்குளமும் இணுவிட்டியாகுளமும் ஏப்ரல்மாதம் வரை நீரை தம்மகத்தே வைத்திருக்கும். கால் நடைகளுக்கு இவை நீரை வழங்கின.

வெட்டுக்குளத்தில் மக்கள் நீராடினர். பக்கத்தில் உள்ள புகையிலைத் தோட்டத்துக்கு வெட்டுக்குளம் மூலம் நீர் பாய்ச்சப்பட்டது. தல்லமிக்குளத்தில் ஹரிஜனமக்கள் நீராடுவர். இக்குளத்தின் மூலம் தல்லமியில் உள்ள நெல்வயல்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டது. இன்னும் வல்லனையும் மாவுதிடலையும் இணைப்பதுபோல் திகழி எனும் அழகுமிக்க குளமும் உள்ளது. நக்கந்து இதன் அருகே உள்ள இன்னொரு குளமாகும்.

மற்றச் சிறு குளங்கள் மூலமும் பயிர்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டன. கோடைகாலத்தில் இக்குளங்களில் உள்ள நீர் வற்றிவிடும். கடைசியாக இருக்கின்ற நீர் கால்நடைகளுக்கு குடிக்க உதவும். புங்குடுதீவின் பிரதான பகுதிக்கும் ஊரைதீவுக்கும் இடைப்பட்ட நீண்டபகுதி தரவை நிலமாகக் காணப்படுகிறது. இந்நிலப்பரப்பில் மாரிகாலத்தில் வெள்ளம் நிறைந்துவிடுகிறது. கோடைகாலத்தில் சோழகக்காற்றின் தாக்கத்தால் புழுதி எழுப்பப்படுகிறது. இத்தரவை நிலத்தில் புல் செதுக்குதல், மண் அகழ்தல், சிப்பி எடுத்தல் என்பன நிகழ்வதால் உயிரியற்சூழல் பெரிதும் பாதிக்கப்படுகிறது. இந்நிலங்களின் சூழல் நல்ல முறையில் பேணப்பட்டால் மந்தை மேய்ச்சலுக்குரிய நல்லதரவை நிலமாக இதை மாற்றலாம்.

**5**

# புங்குடுதீவில் தனிநாயகமுதலி பரம்பரை

புங்குடுதீவில் முற்காலத்தில் வாழ்ந்த மக்கள் தொகையை அறியமுடியாமலிருக்கிறது. கி.பி. 1 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த போர்த்துக்கீச மதகுருவான குவேறோஸ் கருத்துப்படி புங்குடுதீவில் 800 மக்கள் வாழ்ந்தனர். ஒல்லாந்து மதகுருவான போல் டேயஸ் என்பவரும் இத்தொகையினையே குறிப்பிடுகிறார். 1824 ஆம் ஆண்டு இலங்கை குடிசனக் கணக்கின்படி 1802 மக்களும் 1834 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட சைமன் காசிச் செட்டியின் நூலின்படி 2415 மக்களும் வாழ்ந்தனர் என்று கூறப்படுகிறது. இலங்கை குடிசனக் கணக்கெடுப்பின்படி 1871 இல் 3966 மக்களும் 1971 இல் 13766 மக்களும் 1981இல் 14622 மக்களும் வாழ்ந்தனர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

1991 ஆம் ஆண்டு இடப்பெயர்வின் பின் இங்கு சுமார் 500 மக்கள் வாழ்ந்தனர். 2001 இல் சுமார் 2000 மக்கள் வாழ்ந்தனர். இப்பொழுது (2006) சுமார் 6000 மக்கள் வாழுகின்றனர். 1991க்கு முன்பு இடப்பெயர்வுக்கு முன்பு புங்குடுதீவின் மத்திய பகுதியிலேயே மக்கள் நெருக்கமாக வாழ்ந்தனர். கிழக்கு மேற்குப் பகுதியில் குறைந்தளவு மக்கள் வாழ்ந்து வந்த போதிலும் குறிப்பிட்ட சில பகுதிகளில் செறிவாக வாழ்ந்தனர். இத்தீவின் மேற்குப்புறப் பகுதியான குறிகாட்டுவான், நடுவுத்துருத்தி, நுணுக்கல், பல்லதீவு, கேரதீவு போன்ற இடங்களில் மக்கள் ஐதாகவே வாழ்ந்தனர். பெரிய இறுபிட்டி, சின்ன இறுபிட்டி, பெருங்காடு போன்ற பகுதிகளில் நெருக்கமாகவே வாழ்ந்து வந்தனர். கிழக்குப்பகுதியில் குறிச்சிக்காடு, மடத்து வெளி, வரதீவு, ஊரதீவு போன்ற பகுதிகளில் மக்கள் ஐதாகவே வாழ்ந்து வந்தனர். கண்ணகைபுரம், வல்லன், மாவுதிடல், கணேச வித்தியாசாலையடி போன்ற பகுதிகளில் மக்கள் நெருக்கமாக வாழ்ந்தனர். மத்திய பகுதியில் வடக்கு, தெற்கு பெருங்காடு பகுதிகளில் அதிகளவில் வாழ்ந்தனர். சங்கத்தார் கேணி பகுதியில் ஐதாக வாழ்ந்தனர்.

கண்ணகி வழக்குரை காதையிலே வெடியரசனின் கதை கூறப்படுகிறது. (வி.சி. கந்தையா- 1967). வெடியரசன் தீவுப்பகுதிகளின் மன்னனாக விளங்கினான். அவன் நெடுந்தீவில் கோட்டை கட்டி அவ்வூரையே இராசதானியாகக் கொண்டு ஆட்சி புரிந்தான். வெடியரசன் நெடுந்தீவையும், அவன்தம்பி வீரநாராயணன் புங்குடுதீவையும், விளங்குதேவன் நயினாதீவையும், ஏரிளங்குரவன் வேலணைத் தீவையும் ஆட்சி புரிந்தனர் என நாட்டார் இலக்கியங்கள் கூறுகின்றன.

“மார்த்தாண்ட சிங்கையார் முத்துக்குளிக்குங் கடலையும் தனதாக்கி முத்துக் குளிப்பித்து வந்தான். அக்கடலைக் காக்குமாறு ஒரு கடற்படையையும் நெடுந்தீவிலே வைத்தான். அக்கடற்படை அதிபனாக பரதவத் தலைவனை வைத்து அவனுக்கு வெடியரசன் என்னும் பட்டமளித்தான். (வெடியரசன் என்பதன் பொருள் வெளியரசனாகும்) அவன் இடங்கள் தோறும் மரக்கலங்களையும் போர்வீரர்களையும் துணைத்தலைவர்களையும் வைத்துக் காத்து வந்தான்” என்று யாழ்ப்பாணச் சரித்திரம் என்ற நூலில் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை எழுதியுள்ளார்.

டானியல் ஜோன் (1878) என்ற அறிஞரும் வெடியரசன் பற்றி எழுதியிருக்கிறார். வெடியரசன் நெடுந்தீவில் கோட்டை கொத்தளங்களை நிறுவி தீவுப்பற்றுகளை தன்னடிப் படுத்தி அரசியலுக்குரிய படைக்கலங்களுடன் இராச்சியம் பண்ணினான் என்று அவர் எழுதியிருக்கிறார். வெடியரசன் சோழமன்னனின் படைகளுடன் நடந்த போரில் வீரமரணம் அடைந்தான் என்று கூறப்படுகிறது. யாழ்ப்பாண வரலாற்று ஆதார நூல்களான யாழ்ப்பாணச் சரித்திரம், யாழ்ப்பாண வைபவமாலை என்பனவற்றின்படி 1365 ஆம் ஆண்டு மொகலாய மன்னர்கள் மாலிக்கபூர் தலைமையில் படைநகர்த்தி தென்னிந்தியாவை வெற்றி கொண்டனர். அப்போது பாண்டிய அரசும் அதன்கீழ் சரணடைந்திருந்த சோழ சமஸ்தானங்களும் சின்னாபின்னமாகின. ஆனால் சோழ சமஸ்தானங்களில் ஒன்றான சேயூர் சமஸ்தானம் சரணடைய மறுத்தது. அதன் தலைவர் இருமரபும் தூய சேயூர் தனிநாயக முதலி தன் இரு சகோதரிகளின் கற்புக்கு களங்கம் ஏற்படாதிருக்க அவர்களை தன் அரண்மனை நிலவறையில் தள்ளி அடைத்துவிட்டு சகோதரர்கள் அறுவருடன் இரவோடிரவாக காரைக்கால் துறைமுகத்திலிருந்து புறப்பட்டான். அவன் தன்னை பின் தொடர்ந்து வந்த அடிமைகளின் குடிமைகளோடு கப்பலேறி நெடுந்தீவில் வந்திறங்கினான்.

அக்காலப்பகுதியில் யாழ்ப்பாண இராச்சியத்தில் மன்னர்கள் இருக்கவில்லை. தனிநாயக முதலி, தன் சகோதரர்கள் அறுவரையும் யாழ்ப்பாணத்தின் மற்றைய பகுதிகளுக்கு பரிபாலன முதலிகளாக அமர்த்தி, தான் நெடுந்தீவிலிருந்து தீவகத்தினை பரிபாலித்துக்கொண்டிருந்தார். இவர்களது பரிபாலனம் சிங்கை ஆரியச் சக்கரவர்த்திகளின் வருகையின் பின் நிறைவுபெற்ற பொழுதும் பின்பு வந்த அந்நியர் ஆட்சியின் போது இம்முதலிகளின் பரம்பரையினரே அவ்வப்பிரிவு நிர்வாக அதிபர்களாக நியமனம் பெற்றனர். தனிநாயக முதலியினது வாரிசுகளின் பரிபாலனம் 1365 முதல் 1948 வரை நடைபெற்றுள்ளது. அதாவது யாழ்ப்பாணத்தின் கடைசி மணியகாரன் முத்துக்குமார் வரை இருந்துள்ளது என்பதை மேற்படி வரலாற்று நூல்கள் மூலமும் யாழ்ப்பாணக் கச்சேரியில் (செயலகம்) உள்ள பதிவுகளின் மூலமும் அறிய முடிகிறது.

வெடியரசனின் ஆட்சிக்காலம் முடிந்த சில நூற்றாண்டுகளின் பின்பு தனிநாயக முதலியின் ஆட்சி தொடங்கியது. தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த சேயூர், பொன்பரப்பி, கோலியலூர் ஆகிய ஊர்களைச் சேர்ந்த குடிமக்களுடன் சேயூரை முக்கிய உரிமை நாடாகக் கொண்ட தனிநாயக முதலியும் அவரது சகோதரர்களான குணநாயக முதலி ,குலதிலக முதலி, கனகராயமுதலி, ஐம்பெருமாள் முதலி, முதலான சகோதரர்களும் நெடுந்தீவில் வந்து குடியேறினர்.

1365 ஆம் ஆண்டளவில் அக்காலத்தில் மிகவல்லமை படைத்த சோழப்பேரரசனின் பிரதானியாக இருந்து உதவிய தனிநாயக முதலியை நெடுந்தீவுக்கு அதிபதியாகவும் அவனது சகோதரர்களை ஏனையதீவுகளிலும் குடியேற்றி இலங்கைக்குச் செல்லும் சோழ வீரர்களுக்கு உதவியதாகச் சொல்லப்படுகிறது. தொண்டை மண்டலம் சேயூர் தனிநாயக முதலிக்கு மேழிக் கொடியும் படைப்பரிவாரங்களும் அளித்து ஒரு சிற்றரசனாக ஆள வைத்ததாக சரித்திரம் கூறுகிறது. "யாழ்ப்பாண வைபவ மாலை" யில் மயில்வாகனப்புலவர் இருமரபும் தூய வேளாளனான தனிநாயக முதலி குடியமர்ந்த நெடுந்தீவாம் ஈழ மண்டலமே என்று பாடியுள்ளார்.

யாழ்ப்பாணச் சரித்திரம் எழுதிய முதலியார் இராச நாயகம் தனது நூலில் எட்டாம் பக்கத்தில் ஒரு பாடல் எழுதியுள்ளார்.

*"விண்ணாட்டிறைவன் நிகர் செல்வன் எழில் செறி செய்யூரான் நிறை பொறுமை*
*நீதி அகலான் நறைகமழும் பூங்காவின் மார்பன் புகழும் வேளிர்குல அரசன்*
*நீங்காத கீர்த்தி நிலையாளன் பாங்காய் இனியொருவரில்லா*
*இருமரபும் தூயன் "தனிநாயகம்" என்னும் பெயர் தாங்கும் இனியவனை*
*மற்றுமுள பற்றுனுளர் தொன் நெடுந்தீவு பரிக்கவைத்து"*

என்று தொடர்கிறது அந்தப்பாட்டு

"பரிக்கவைத்தல்" என்றால் அரசாளுதல் என்று பொருள் படும். இந்த தனிநாயக முதலியின் மரபே போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் போன்றோரால் அரச மரபாகக் கணிக்கப்பட்டு இவர்களது வாரிசுகளுக்கே வழங்கப்பட்டு வந்தது. இலங்கை சுதந்திரம் அடைந்த 1948ஆம் ஆண்டுவரை இது தொடர்ந்தது.

"செய்யூர் இருமரபுந் தூய தனிநாயகன் என்னும் வேளாளனை நெடுந்தீவில் இருத்தினான். இப்படியே அவ்வப்பிரபுக்களை அவரவர் அடிமை குடிமைகளுடனே அவ்விடங்களில் இருத்தினர்" என்று 'யாழ்ப்பாண வைபவமாலை' யில் மயில்வாகனப்புலவர் எழுதுகிறார். 'செய்யூர் வேளாளனும் இந்திரனைப்போன்ற செல்வனும் நீதி, பொறுமையாதிய நற்குணங்களையுடையானும் வாசனை பரிமளிக்கும் குவளை மாலை தரித்த மார்பனும் மிகுந்த கீர்த்திப் பிரஸ்தாபனும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனுமாகிய தனிநாயக முதலியை நெடுந்தீவுக்கு அதிபதியாக்கினான்' என்று "யாழ்ப்பாண வைபவ கௌமுதி" என்ற நூலில் க. வேலுப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

ஒல்லாந்தர் காலம் கி.பி. 1658 முதல் 1796 வரையாகும். இவர்கள் காலத்தில் உள்ளூர் அரச மரபினருக்கு "முதலி" "பிரபு" "நிர்வாகத்தலைவர்" பதவி ஆகியன வழங்கப்பட்டன. இவர்களுக்கு வரிசேகரிப்பு உட்பட பல பணிகள் வழங்கப்பட்டன. ஆங்கிலேயர் காலத்தில் அரச மரபுடைய உள்ளூரவர்களை நிர்வாகியாக மரபு பார்த்து அமர்த்துவர். அவர்கள் மணியகாரர்கள் என்று அழைக்கப்பட்டனர். இலங்கை சுதந்திரம் அடைந்த பின்பே டி. ஆர்.ஓ, உதவி அரசாங்க அதிபர், கிராம சேவகர்கள் முறை வந்தது. புங்குடுதீவில் அல்லது நெடுந்தீவில் அமரர்களான சிலருக்கு நினைவுமலர் வெளியிடும் பொழுது இருமரபும் தூய தனிநாயக முதலி பரம்பரையில் வந்தவர் என்று எழுதப்பட்டிருப்பதை நோக்கலாம்.

தனிநாயக முதலி பரம்பரையின் நிர்வாகம் நெடுந்தீவிலிருந்து மண்டைதீவு வரை நீண்டிருந்தது. இப்பகுதிகளில் 16 ஆலயங்கள் இவர்களுக்கு சொந்தமாக இருந்தன. இவற்றில் நான்கு ஆலயங்கள் புங்குடுதீவில் இருந்தன.

இறுபிட்டி -பெரியபுலம் பிள்ளையார் ஆலயம், கண்ணகைபுரம்- கண்ணகை அம்மன் ஆலயம், தல்லையபற்று - முருகமூர்த்தி ஆலயம், புதையல் - ஆதிவிநாயகர் ஆலயம் என்பனவே அவை. தனிநாயக முதலி பரம்பரையினர் புங்குடுதீவில் பல இடங்களில் பிள்ளையார் ஆலயங்களை நிறுவினர்.

புங்குடுதீவின் முதல் ஆலயமான இறுபிட்டி பெரியபுலம் பிள்ளையார் ஆலயத்தின் மூலமூர்த்தியை, தனிநாயக முதலியின் வாரிசான இனங்காத்த முதலி நெடுந்தீவிலிருந்து கொண்டுவந்து தாபித்தார். இன்னுமொரு பழைய ஆலயமான கண்ணகி அம்மன் ஆலயம் நரசிங்க முதலியின் மகனும் ஏழுதீவின் உடையாராக விளங்கிய முத்துக்குமாரு உடையாரால் 1818 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. தனிநாயக முதலியின் 18வது ஆண்வாரிசும் தீவகத்தின் (1990 வரை) மணியகாரரான கதிரவேலு மணியகாரர், முத்துடையாரின் மகளை திருமணம் செய்து தல்லையபற்றில் குடியமர்ந்தார். கண்ணகை அம்மன் ஆலயம் முத்துடையாரால் கதிரவேலு மணியகாரருக்கு சீதனமாக வழங்கப்பட்டு மாமனும் மருமகனும் தீவகத்தில் சமகாலத்தில் மணியகாரராகவும், உடையாராகவும் கடமையாற்றினர்.

தல்லையபற்று முருகமூர்த்தி ஆலயம் 1892 ஆம் ஆண்டு தீவக மணியகாரர்மகள் இராமலிங்கபிள்ளை (திருமதி வைத்தியநாத உடையார் - ஆனைக்கோட்டை) அவர்களால் சுண்ணாம்புக் கட்டடத்தில், வேலை மூலவராகக் கொண்டு மடாலயமாய் முதல் குடமுழுக்கு செய்யப்பட்டதாகவும் நிரந்தர அர்ச்சகர் மூன்று வேளைகளும் பூசையும் நடத்தினார் என்றும் விசேட தினங்களில் 500க்கு மேற்பட்ட பக்தர்கள் வழிபட்டார்கள் என்றும் யாழ். கச்சேரியில் உள்ள பதிவேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

புங்குடுதீவிலுள்ள மேற்படி நான்கு ஆலயங்களையும் மணியகாரரின் ஆறு பெண் பிள்ளைகளான சின்னத்தங்கைச்சிப்பிள்ளை, கற்பாத்தைப்பிள்ளை, இராமாசிப்பிள்ளை, பெரியநாச்சிப்பிள்ளை, நாகாத்தைப்பிள்ளை, திருமதி சண்முகம், ஆண்பிள்ளைகளான வேலணை உடையார் சுப்பிரமணியம் புங்குடுதீவு உடையார் இராமநாதர் ஆகிய எண்மரும் கட்டிக்காத்து வந்தனர். தனிநாயக முதலி பரம்பரையில் வந்த இனங்காத்த முதலியால் நெடுந்தீவிலிருந்து கொண்டுவரப்பட்டு ஸ்தாபிக்கப்பட்ட முதல் ஆலயம் தான் இறுபிட்டி பெரியபுலம் பிள்ளையார் ஆலயம். இனங்காத்த முதலியின் பேரர் கனகசபை, தல்லையபற்றில் கதிரவேலு மணியகாரரின் மூத்த மகள் சின்னத்தங்கச்சிப்பிள்ளையை திருமணம் செய்ததன் மூலம் பெரும்பாலான நிலபுலங்கள் இவ்வாலயத்துக்கு தர்மசாதனமாக கிடைத்தது.

கனகசபையின் மூத்தமகனின் பெயர் சிதம்பரநாதர் (சின்னப் போடியார்) ஆகும். சிதம்பரநாதரின் மூத்தமகனின் பெயர் கந்தையா (அம்பலவாணர் ஆசிரியரின் தந்தை) அடுத்த பிள்ளைகள் இராமநாதர் (சுப்பையா), நாகநாதர் (அப்பாக்குட்டி), கதிரவேலு (அப்பச்சியர்), தங்கக்குட்டிப்பிள்ளை, இவர்கள் அனைவரும் 1950களில் இவ்வாலயத்தின் இன்னுமொரு வாரிசான ஏகாம்பரத்துடன் இணைந்து தனது மூத்த பேரனார் பெரிய நாகநாதரின் குழந்தைகளிடம் இவ்வாலய நிர்வாகத்தை கையளித்தனர். தனிநாயக முதலியின் பரம்பரையான பெரிய நாகநாதருடைய வாரிசுகளே தற்போது கொடியேற்றத் திருவிழாவை செய்து வருகின்றனர்.

நெடுந்தீவைப் பிறப்பிடமாகக் கொண்ட கதிரவேலு மணியகாரர், புங்குடுதீவு நரசிங்க முதலியின் மகன் முத்துக்குமாரு உடையாரின் மகளை திருமணம் செய்து பிறந்த பிள்ளைகள்தான் அந்த ஆறு பெண்களும் இரண்டு ஆண்களுமாவர். இரண்டாவது பெண்ணான கற்பாத்தைப்பிள்ளை, மைத்துனரான இராமலிங்கம் முதலியை மணந்து பிறந்த முதற் பிள்ளையே கதிரவேலு உடையாராவார் (கறுப்பாத்த உடையார்) கற்பாத்தைப்பிள்ளை தன்தந்தையாரின் நூற்றுக்கணக்கான நிலபுலங்களை கண்ணகை அம்மன் ஆலயத்துக்கு தர்மசாதனம் செய்தார்.

இவர் பின்பு ஆலய நிர்வாகத்தை தன் மூத்த மகனான கதிரவேலு உடையாரிடம் வழங்கினார். கதிரவேலு விஸ்வலிங்கம் சபாரெத்தினம் ராஜரத்தினம் என்பவர் தான் தற்போதைய தர்மகர்த்தாவாவார். ராஜரத்தினத்தின் தம்பி திருஞானமும் கோயிலில் உரிமை உடையவர். புதையல் ஆதி விநாயகர் ஆலயம், கதிரவேலு மணியகாரரின் நான்காவது பெண் பெரியநாச்சிப்பிள்ளையின் பெயரில் பதியப்பட்டுள்ளது. இவர் வேலணையில் திருமணம் செய்து இவ்வாலயத்தை மிக பக்திசிரத்தையுடன் ஆதரித்து வந்தார்.

## சேர். வைத்திலிங்கம் துரைசுவாமி



பெரியநாச்சிப்பிள்ளையின் மகள் கதிராசிப்பிள்ளை, வைத்தியலிங்கத்தை மணந்து இவ்வாலயத்தை பராமரித்து வந்தார்.வைத்திலிங்கம் - கதிராசிப்பிள்ளை தம்பதியரின் புதல்வனே இலங்கையின் முதல் சபாநாயகரான சேர் வைத்திலிங்கம் துரைசுவாமி ஆவார். இவர்கள் 1920களில் புலம்பெயர்ந்து யாழ்நகரில் வாழ்ந்தனர். புங்குடுதீவு கதிரவேலு மணியக்காரரின் நான்கவது மகள் பெரியநாச்சிப் பிள்ளையின் பேரனே இந்த சேர். வைத்திலிங்கம் துரைசுவாமி என்பதில் புங்குடுதீவு மக்கள் பெருமைப்படுகின்றார்கள். 1940களில் சேர். வைத்திலிங்கம் துரைசுவாமியின் மைத்துனர் திருஞானம் அவர்களின் புதல்வி திருமதி ஞானமணி சிவராமலிங்கம் (ஆசிரியை) அவர்கள் ஆதிவிநாயகர் விக்கிரகத்தை தல்லையபற்று முருகன் ஆலயத்தில் வைத்தார்.

கதிரவேலு மணியகாரரின் மகள் இராமாசிப்பிள்ளையினால் 1892 இல் ஆரம்பிக்கப்பட்டதுதான் தல்லையபற்று முருகன் ஆலயம் என்று கச்சேரியில் உள்ள பதிவேட்டில் (பதிவுஎண் - 1805) பதியப்பட்டுள்ளது. இராமாசிப்பிள்ளை - ஆனைக் கோட்டை வைத்தியநாதர் உடையாரை திருமணம் செய்து பிறந்த பிள்ளையே யாழ்ப்பாணத்தின் கடைசி மணியகாரரான முத்துக்குமாரு ஆவார். அவர் மனைவியின் பெயர் மேர்வின். தற்பொழுது அம்பலவாணர் அரங்கு அமைந்துள்ள வளவு உட்பட நூற்றுக்கணக்கான நிலபுலங்களை தன் இடப்பெயர்வு காரணமாக இவ்வாலயத்துக்கு இராமாசிப்பிள்ளை தர்மசாதனம் செய்தார். தன் கடைசித்தம்பியான புங்குடுதீவின் உடையாராக இருந்த இராமநாதரிடம் ஆலய நிர்வாகத்தை கையளித்தார்.

வேலணை உடையாரின் மகள் நாகாத்தைப்பிள்ளை என்பவர், மைத்துனர் சிதம்பரநாதரை திருமணம் செய்து 10 ஆண்டுகளுக்கு மேல் குழந்தை பெறாமல் இருந்தமையால், முருகனைப்போற்றி கந்தையா உடனான ஐந்து குழந்தைகளைப் பெற்றார்.

தனது தந்தையாரால் வரப்பெற்ற புங்குடுதீவின் ஆதனங்களை சிறிய தந்தையாரான இராமநாத உடையாரிடம் கையளித்து ஆலய வளர்ச்சிக்கு உதவினார். இவரின் பேரனே அம்பலவாண ஆசிரியராவார். போர்த்துக்கேயரும், ஒல்லாந்தரும், ஆங்கிலேயரும் குலஆசாரப்படியான அரசமரபாய் தனிநாயக முதலியின் பரம்பரையை ஏற்று அவர் தம் ஆட்சிகளில் முக்கிய நிர்வாகப்பதவிகளை அவர்களுக்கே வழங்கினர்.

1948ஆம் ஆண்டு இலங்கை சுதந்திரம் அடையும் பொழுது, தீவுப்பகுதியின் நிர்வாக எச்சங்களாக பெரும்பாலும் தனிநாயக முதலி பரம்பரையினரே இருந்தனர். தனிநாயக முதலியின் 22வது நேரடி வாரிசாக தீவுப்பகுதியின் மணியகாரரான கதிரவேலு மணியகாரர் விளங்கினார். இவரின் மகள்தான் இராமாசிப்பிள்ளை. இராமாசிப்பிள்ளையின் மகனான முத்துக்குமாரு என்பரே யாழ்ப்பாண மாவட்டத்தின் (1920 முதல் 1948 வரை) கடைசி மணியகாரராவார். முத்துக்குமாரு மணியகாரரின் மகனான கதிரவேலு, ஆனைக்கோட்டையின் கிராம அதிகாரி ஆவார். முத்துக்குமாரு மணியகாரரின் தந்தை வழி வந்த சின்னையா மணியகாரரே, வலிகாமம் மேற்கின் கடைசி மணியகாரராவார்.

தனிநாயக முதலியின் இன்னுமொரு வாரிசுதான் இலங்கையின் முதலாவது சபாநாயகரான சேர். வைத்திலிங்கம் துரைசுவாமி ஆவார். வை. துரைசுவாமியின் சகோதர்தான் பொறியியலாளர் வை. பொன்னுத்துரை. யாழ்ப்பாணத்தின் கடைசி மணியகாரரான முத்துக்குமாருவின் உடன்பிறந்த சகோதரிதான் திருமதி. பொன்னுத்துரை.

தனிநாயக முதலியின் இன்னுமொரு தம்பியாராகிய தெய்வேந்திர முதலி வலிகாமம் மேற்கின் (நவாலி) முதலியாக இருந்தவர். தெய்வேந்திர முதலியின் வாரிசுகளே தீவுப்பகுதியின் முன்னாள் மணியகாரர்களான முத்தையா பிள்ளை மணியகாரரும் அவரது மகன் சோமசுந்தர மணியகாரருமாவார்கள். 1949ஆம் ஆண்டு சோமசுந்தர மணியகாரர் இறந்தார். இவரது மரணத்தின்பின் தீவுப்பகுதியின் மணியகாரராக 1947 வரை புங்குடுதீவின் சரவணமுத்து உடையார் கடமையாற்றினார். அவ்வாறு உடையாராக இருந்து கொண்டு புங்குடுதீவின் உயர்ச்சிக்கு வழிவகுத்தார்.

19ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாண மாவட்டத்தில் 8 வரிவசூலிப்பு அதிகாரிகள் செயற்பட்டனர். அவர்களில் ஒருவர் தீவுப்பகுதிக்கான அதிகாரியாவார். 1946 முதல் 1947 வரை அவ்வாறு கடைசி வரிவசூலிப்பு அதிகாரியாக செயற்பட்டவர் தான் அ. சரவணமுத்து உடையார். இவர் புங்குடுதீவுக்கும் உடையாராக கடமையாற்றினார். தனிநாயக முதலியின் வாரிசான கதிரவேலு உடையாரின் (கறுப்பாத்தை உடையார்) மகளை திருமணம் செய்ததன் மூலம் சரவணமுத்து உடையார் புங்குடுதீவின் உடையாரானார். இவரது மனைவிக்கு புங்குடுதீவில் பல காணிகள் உண்டு .அவ்வாறான காணிகளில் ஒன்றில்தான் தற்பொழுது புங்குடுதீவு அரசினர் மகாவித்தியாலயம் உயர்ந்து நிற்கிறது.

தற்பொழுது நெடுந்தீவு மேற்கில் "நெழுவெலி" என்ற இடத்தில் "தனிநாயக முதலிவளவு" என்ற இடம் இருக்கிறது. மூன்று ஏக்கர் அளவுள்ள இந்தக்காணியை பொதுமக்கள் பராமரித்து வருகின்றனர். இதன் அருகில் தனிநாயகமுதலி வழிபட்டு வந்த நெழுவெலி பிள்ளையார் ஆலயமும் அமைந்திருக்கிறது.

1787 ஆம் ஆண்டு யாழ் வண்ணை வைத்தீஸ்வரன் ஆலயத்தில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அந்த ஆலயத்தை அமைத்த வைத்திலிங்கச் செட்டியாருக்கு உதவியாக இருந்தவர் யாழ்ப்பாண நிருவாக முதலி ஆறுமுகமுதலி ஆவார். ஆறுமுகமுதலியின் இல்லம் வண்ணை வெள்ளாளந் தெருவில் அமைந்திருந்தது.

அந்த கும்பாபிஷேக விழாவில் ஆறுமுகமுதலி தர்மகர்த்தாவாக இருந்து தர்ப்பை தரித்துக் கொண்ட வரலாறு எல்லாம் அவ் ஆலயத்தில் உள்ள செட்பேடு ஒன்றில் பதியப்பட்டுள்ளது. தனிநாயக முதலியின் பரம்பரையினர் வடமராட்சியிலும் இருந்துள்ளனர். வடமராட்சியில் மயிலிட்டியின் கடைசி உடையாராக பூதத்தம்பி உடையார் கடமையாற்றி இருக்கிறார்.

1940 -1950 காலப் பகுதியில் திருநெல்வேலி ஆசிரிய கலாசாலையில் அதிபராக கடமையாற்றியவர். சுவாமிநாதன் ஆவார். இவர் தெல்லிப்பளைக்கிராம சபையின் தலைவருமாவார். இவரும் தனிநாயக முதலியின் பரம்பரையில் வந்தவரே.

தென்மராட்சி மறவன்புலவு கடைசி உடையாரின் மகள், யாழ்முத்துக்குமாரு மணியகாரின் மகன் கதிரவேலு விதானையாரை திருமணம் செய்வர். இருவரும் தனிநாயக முதலி பரம்பரையைச் சேர்ந்தவர்களே. தனிநாயக முதலியின் இன்னுமொரு சகோதரரின் வாரிசான வன்னிமுதலியின் கடைசி எச்சமே பூனகரியின் கடைசி உடையாரான அம்பலவாண உடையார்.

இவ்வாறு தனிநாயக முதலியின் பரம்பரையினர் வட இலங்கை முழுவதும் பரந்து வாழ்ந்தனர். அதனால் தான் 1927ஆம் ஆண்டு இலங்கை அரசசபைக்கு ஒன்பது மாகாணங்களிலிருந்தும் ஒன்பது அங்கத்தவர் தெரிவு செய்யப்பட்டபொழுது வடமாகாணத்தின் அங்கத்தவராக தனிநாயக முதலி பரம்பரையில் வந்த சேர். வைத்திலிங்கம் துரைசுவாமி போட்டியின்றித் தெரிவு செய்யப்பட்டார். பின்பு இலங்கையின் முதலாவது சபாநாயகராகவும் புகழ்பெற்றார்.

### தனிநாயக முதலியின் தேசவழமை மரபு

தனிநாயக முதலியின் வாரிசுகள் தம் திருமண உறவுகளை தமது பரம்பரைக்குள்ளேயே வைத்துக் கொண்டனர். இவர்களது குடும்ப பாரம்பரிய ஒழுங்குகள் பல உள்ளன. வயதான பெற்றோர்கள் ஆண்பிள்ளைகளுடனேயே தமது கடைசி காலத்தைக் களிப்பர். தமது இல்லங்களை தமது கடைசி ஆண்பிள்ளைகளுக்கே முதுசமாக கொடுப்பர். பெண்பிள்ளைகளைவிட ஆண்பிள்ளைகளுக்கே அதிக சொத்துக்களைக் கொடுப்பர். இன்று வரையுள்ள பிரத்தியேக மரபே இதுவாகும். இது யாழ்ப்பாணத் தேசவழமைச் சட்டங்களுக்கு புறம்பான வழக்கமாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

தனிநாயக முதலியைப் போலவே நரசிங்க முதலியும் தீவுப்பகுதியில் புகழ்பெற்றவர். இந்த நரசிங்க முதலி புங்குடுதீவில் வாழ்ந்தவர். நரசிங்க முதலியின் மகன்தான் முத்துக்குமாரு உடையார். முத்துக்குமாரு உடையாரின் மகன்தான் அம்பலவாண உடையார். அம்பலவாண உடையாரின் மகன்தான் பசுபதிப்பிள்ளை விதானையார்.

இவ்விபரங்கள் 1918ஆம் ஆண்டு எழுந்த வயாவிளான் க. வேலுப்பிள்ளை எழுதிய "யாழ்ப்பாண வைபவ கௌமுகி" என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஆ. சரவணமுத்து உடையார்



தீவுப்பகுதியைச் சேர்ந்த உடையார்களில் ஆ. சரவணமுத்து உடையார் முக்கியமானவர். இவர்தான் புங்குடுதீவின் முதலாவது சமாதான நீதவான் (J.P) ஆவார். புங்குடுதீவின் பாடசாலைகள் பலவற்றின் உருவாக்கத்துக்கு இவர் உதவியிருக்கிறார். முக்கியமாக புங்குடுதீவு மகாவித்தியாலயத்தின் உருவாக்கத்துக்கு இவர் முன்னின்று உழைத்தார்.

இவர் வழி வந்த பரம்பரையினர் புங்குடுதீவின் வளர்ச்சிக்கும் புங்குடுதீவு மக்களின் உயர்ச்சிக்கும் பாடுபட்டனர்.

புங்குடுதீவின் சமூக சேவையில் பெரியவாணர் பெரிதும் ஈடுபட்டவர். சரவணமுத்து உடையாரின் மூத்த மகள் இந்த பெரியவாணரைத் திருமணம் செய்தவர். சரவணமுத்து உடையாரின் மூத்தமகன்தான் இராசேந்திர விதானையார். இவர் நீண்ட காலம் புங்குடுதீவு மேற்குப்பகுதிக்கு விதானையாராக கடமையாற்றியவர்.

இந்த இராசேந்திர விதானையார்தான் முதன்முதலில் யாழ்ப்பாண நகரில் ரக்ஷி சேவையை ஆரம்பித்தவர். இவ்வாறான சேவையை இதற்கு முன் எவரும் வடஇலங்கையில் ஆரம்பிக்கவில்லை "யாழ்ரதம்" என்ற பெயரில் நடைபெற்ற இந்த ரக்ஷி சேவையில் ஐந்துக்கு மேற்பட்ட வாடகைக்கார்கள் சேவையில் ஈடுபட்டன.

புங்குடுதீவைச் சேர்ந்த வர்த்தகர்கள் சிலர் பின்னாளில் கொழும்பிலும் இவ்வாறான டக்ஷி சேவையை நடத்தியிருக்கின்றார்கள். எஸ். சிவபாதம் தெமட்டகொடையிலும், வல்லிபுரம் இராமநாதன் பிலாமரச்சந்தியிலும் இவ்வாறன டக்ஷி சேவையை நடத்திப் பெயர் பெற்றனர்.

புங்குடுதீவைச் சேர்ந்த பல அறிஞர்கள் நிர்வாகத்துறையிலும் கல்வித்துறையிலும் கடமையாற்றினர். நிர்வாகத்துறையைப் பொறுத்தவரை கு. நாராயணசாமி முக்கியமானவர். கல்வித்துறையைப் பொறுத்தவரை பேராசிரியர் வி. செல்வநாயகம் முக்கியானவர். இந்த கு. நாராயணசாமி தமிழ் அறிஞர் வி. செல்வநாயகம் அவர்களின் மகளைத் திருமணம் செய்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறே புங்குடுதீவுக் கிராமத்தில் பிறந்த அறிஞர்கள் பலர் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் நல்ல நிலையில் உள்ளனர். நிர்வகத்துறையில் மட்டுமன்றி கல்வித்துறை, வைத்தியத்துறை, பொருளியல்துறை, கலைத்துறை, வர்த்தகத்துறை என்று பல்வேறு துறைகளிலும் உயர்ந்து நிற்கின்றனர். அவர்களின் வேர்கள் புங்குடுதீவில் நிற்க விழுதுகள் உலகமெங்கும் பரவி நிற்கின்றன. அவை எமது கிராமத்தின் பெயரை உலக அளவில் வெளியிட்டு நிற்கின்றன.

# 6

# புங்குடுதீவு போக்குவரத்தும் வாணர்தாம்போதியும்

யாழ் நகருக்கும் வேலணைத்தீவுக்கும் இடையிலிருக்கும் பண்ணைப்பாலமும் புங்குடுதீவுக்கும் வேலணைத்தீவுக்கும் இடையில் இருக்கும் வாணர்தாம்போதியும் அமைப்பதற்கு முன்பு தீவுப்பகுதி தனித்தனிக்கூறுகளாக பிரிந்திருந்தது. தீவுப்பகுதி மக்கள் அனைவரும் கடல்மார்க்கமாகவே பிரயாணம் செய்தனர். வாணர்தாம்போதி அமைப்பதற்கு முன்பு புங்குடுதீவு மக்கள் இரண்டுவழிகளில் பிரயாணம் செய்தனர். மடத்து வெளித்துறையில் இருந்து வள்ளங்களில் சுருவில், வேலணைத் துறைமுகங்களுக்குச் சென்று அங்கிருந்து கால் நடையாக அல்லது வாகனங்களில் அல்லைப்பிட்டிவரை சென்றனர். மீண்டும் படகுகள் மூலம் ஆழ்கடற்பரப்பினைக் கடந்து பண்ணையில் அல்லது அலுப்பாந்தியில் இறங்கி யாழ் நகரைச் சென்றடைந்தனர்.

இதுதவிர வேலணை வடக்கில் அராலிக் கடலினூடாக வள்ளங்களில் சென்று அராலி சென்று இறங்கி யாழ் நகருக்கு சென்றனர். மிகச்சிலர் அல்லைப்பிட்டியிலிருந்து மண்டைதீவு சென்று அங்கிருந்து வள்ளங்களில் பூநகரி சென்றதுண்டு. அடுத்ததாக புங்குடுதீவு இறுப்பிட்டியிலுள்ள புளியடித்துறையிலிருந்து ஊர்காவற்றுறைக்கும் அலுப்பாந்திக்கும் படகுகள் மூலம் பிரயாணம் செய்தனர். புளியடித்துறையிலிருந்து புறப்படும் படகு, நயினாதீவு, அனலைதீவு, எழுவைதீவு ஆகிய தீவுகளில் தரித்து பின்பு அலுப்பாந்திக்கு சென்றடையும்.

1953 ஆம் ஆண்டு வாணர்தாம்போதி அமைக்க ஆரம்பித்த போது புங்குடுதீவு மக்களின் போக்குவரத்துப் பிரச்சினை தீர ஆரம்பித்தது. 1956ஆம் ஆண்டு பண்ணைப்பாலம் பூர்த்தியானபோது தீவுப்பகுதி மக்களின் போக்குவரத்தில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. இப்பொழுது புங்குடுதீவிலுள்ள குறிகாட்டுவான் இறங்குதுறை, நெடுந்தீவு, நயினாதீவு மக்களுக்கு பிரதான இறங்கு துறையாக விளங்குகிறது. வாணர்தாம்போதி அமைப்பதற்கு முன்னர் நெடுந்தீவு, நயினாதீவு மக்கள் ஊர்காவற்றுறை ஊடாகவே பயணித்தனர். இத்தாம்போதி அமைத்த பின்னர் இவ்வூர்களின் மக்களும் குறிகாட்டுவான் ஊடாக பயணிக்கத் தொடங்கினர்.

யாழ்ப்பாண நகரிலிருந்து ஆரம்பிக்கும் பிரதான வீதி பண்ணைப் பாலத்தை தாண்டி வேலணையூடாக வந்து வாணர்தாம்போதியில் மிதந்து புங்குடுதீவைத் தொடுகின்றது. இந்தப் பிரதான வீதி மடத்து வெளி, குறிச்சிக்காடு, சென்று ஆலடிச்சந்தியூடாக திரும்பி ஆஸ்பத்திரிச் சந்தியூடாக பெருங்காடு அடைந்து, ஒருபகுதி குறிகாட்டுவானுக்கும் இன்னுமொருபகுதி இறுபிட்டிக்கும் செல்லுகின்றது. புங்குடுதீவின் பிரதான வீதியில் மடத்துவெளிச்சந்தியிலிருந்து மேற்கே திரும்பும் வீதியொன்று ஊரைதீவு, முள்ளியன் வாய்க்கால், சோழகனோடை, கேரதீவு, கள்ளியாறு போன்ற இடங்களைத் தாண்டி இறுபிட்டி வரை செல்கிறது.

1940 ஆம் ஆண்டளவில் யாழ்ப்பாணத்தில் அரச அதிகாரியாக இருந்தவர் ஹட்சன் என்னும் ஆங்கிலேயர். இவரது ஒற்றைக்கண்ணில் மட்டும் பார்வை இருந்தது. அதனால் அவரை ஒற்றைக்கண் ஹட்சன் என்று அழைத்தார்கள். புங்குடுதீவின் போக்குவரத்துக்கு இந்த ஹட்சனது பங்களிப்பு அதிகமாகவே இருந்திருக்கிறது. புங்குடுதீவில் மடத்துவெளி தொடக்கம் இறுபிட்டி வரை கிறவல் மண் போட்டு வீதியாக அமைக்க உதவியவர் இவரே. அக்காலத்தில் ஹட்சன் அவர்கள் மடத்து வெளியிலிருந்து கிராமசபை வரை குதிரைவண்டியில் அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார். 1965 அளவில் அல்பிறட் தம்பி ஐயா ஊர்காவற்றுறை பாராளுமன்ற உறுப்பினராக இருந்த காலத்தில் இக்கிறவல் மண்பாதை தார்ப் பாதையாக மாற்றப்பட்டது. அதன்பின்பு பெருங்காடு - குறிகாட்டுவான் பாதை அமைக்கப்பட்டது. நீண்டநாட்களின் பின் வல்லன் பாதை அமைக்கப்பட்டது. புங்குடுதீவு கிழக்கில் வல்லன் மாவுதிடல் வீராமலைப் பகுதிகளுக்கு ஊடாக பஸ் போக்குவரத்து சேவை விஸ்தரிப்பதற்காக வல்லன் வீதித்திட்டம் உருவாக்கப்பட்டது. இவ்வீதியை அமைப்பதற்கான காணிகளை எடுப்பதற்கு அளவு செய்யும் அதிகாரிகள் வந்தபொழுது அப்பகுதிமக்கள் கடும் எதிர்ப்பைத் தெரிவித்தனர். அத்தகைய ஒருதிட்டம் தங்கள் பகுதிக்கூடாக வரும் என்பதை அவர்கள் நம்ப மறுத்தனர். ஆனாலும் கிராம முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட பலர் தமது காணிகளை வீதி அகலப்படுத்துவதற்காக விட்டுக் கொடுத்தனர்.

புங்குடுதீவிலிருந்து யாழ் நகர் செல்ல நான்கு அல்லது ஐந்து மணித்தியாலங்கள் செலவு செய்த காலம்போய், ஒரே ஒரு மணித்தியாலத்தில் செல்லக்கூடிய வசதியை இந்த தரைப்பாதைகள் வழங்கின. புங்குடுதீவுக்கான தரைப்பயணத்தை இலகுவாக்கியதில் வாணர்தாம்போதியின் பங்கு மிகப்பெரியதாகும். அதை அமைத்த வாணர் சகோதரர்கள் (க. அம்பலவாணர், ச. அம்பலவாணர்) இன்னும் போற்றப் படுகின்றனர். யாழ் நகருக்கும் இதற்கும் இடையில் வேலணைத்தீவும் இரு கடல்களும் இருக்கின்றன. யாழ் நகரையும் வேலணையையும் பண்ணைப்பாலம் இணைக்கிறது. வேலணைத்தீவையும் புங்குடுதீவையும் அம்பலவாணர் தாம்போதி இணைக்கிறது.

கடந்த அரை நூற்றாண்டுகளுக்குள் இவை அமைக்கப்பட்டன. வாணர்தாம்போதி அமைத்து முடிந்தபின்பே பண்ணைத்தாம்போதி பூர்த்தி செய்யப்பட்டது. பண்ணைத்தாம்போதி பூர்த்தியடையாது பாலம் அமைக்கும் வேலை நடந்தபோது சில காலம் தீவுப்பகுதிமக்கள 'மாதுரப்புரவி' என்ற இயந்திரப்பாதை மூலம் பயணம் செய்தனர். இந்த 'மாதுரப்புரவி' பின்பு ஊர்காவற்றுறைக்கும் காரைநகருக்கும் இடையில் சேவையில் ஈடுபட்டது.

புங்குடுதீவுக்கும் வேலணைத்தீவுக்கும் இடையில் வாணர்பாலம் அமைப்பதற்கு முன்பு இணுவில் சோடாக் கம்பனி உரிமையாளர் சிவபாதசுந்தரம் என்பவர் 1947இல் பஸ் ஒன்றை இவ்வீதியூடாக சேவையில் ஈடுபடுத்தியிருந்தார் என அறிய முடிகிறது. இந்த பஸ்வண்டி மடத்து வெளியூடாக இறுபிட்டி வரையும் சேவையில் ஈடுபட்டிருந்தது. காலப்போக்கில் தீவுப்பகுதி மோட்டார் பஸ் கம்பனி இதனைப் பொறுப்பேற்று நடத்தி வந்துள்ளது.




புங்குடுதீவு – ஆலடிச்சந்தியில் உள்ள அலங்கார வளைவு




புங்குடுதீவு – 12ஆம் வட்டாரத்தில் உள்ள அம்பலவாணர் அரங்கு

தம்பிஜயா என்பவர் குறிகாட்டுவானிலிருந்து நயினாதீவு, நெடுந்தீவு, ஆகிய பகுதிகளுக்கு படகுச் சேவை செய்தார். தனிப்பட்ட சிலரும் இறுபிட்டி - மடத்துவெளி வீதியூடாக தமது வாகனங்களை வாடகைக்கு ஓட்டினர். புங்குடுதீவைச் சேர்ந்த ஏகாம்பரம், ஆறுமுகம், நாகலிங்கம், தம்பையா, தம்பிஜயா, ராசு, சிவசம்பு ஆகியோர் இவ்வாறான மோட்டார்கார்களை வைத்திருந்தனர். மடத்து வெளித்துறையில் இருந்து பொருட்களை ஏற்றியிறக்குவதில் ஒரு சிலரின் மாட்டுவண்டிகளும் சேவையில் ஈடுபட்டன.

1953 ஆம் ஆண்டின் பின்னர் இத்தீவின் உள்ளூர் போக்குவரத்தில் தீவுப்பகுதி மோட்டார் பஸ் கம்பனி ஈடுபாடு கொண்டிருந்தது. 1958 இன்பின் அரசாங்க பஸ் வண்டிகள் சேவையில் ஈடுபடத் தொடங்கின. 1966 ஆம் ஆண்டின் பின்பே யாழ்ப்பாணம் - இறுபிட்டி பஸ்சேவை ஆரம்பமாகியது. 1969ஆம் ஆண்டிலிருந்து குறிகாட்டுவான் - யாழ்ப்பாண பஸ் சேவை ஆரம்பித்தது. 1950-1977 காலப்பகுதியில் 15 மோட்டார் கார்கள் சேவையில் ஈடுபட்டன.

பிற்காலத்தில் பொன்னம்பலம், தம்பிராசா, கந்தசாமி, சுப்பையா, போன்றோரும் பயணிகளை தமது கார்கள் மூலம் ஏற்றிச் சென்றனர். 4 பேர் ஏறக்கூடிய காரில் குறைந்தது 15 பேரையாவது ஏற்றி இறக்கினார்கள். இந்த வீதிகளிலே இ.போ.ச. பஸ்களும் ஓடத்தொடங்கின.

இவை குறிப்பிட்ட நேரங்களிலேயே ஓடும். அந்த பஸ்கள் ஓடுவதற்கு 10 அல்லது 15 நிமிடங்களுக்கு முன் இந்த கார்கள் ஓடும். 1970 ஆம் ஆண்டளவில் தனியார் பஸ்கள் ஓடத் தொடங்கியதும் இந்த கார்கள் எல்லாம் நின்றுவிட்டன. 1980களில் ஆரம்பத்தில் ஏறக்குறைய 40 சிறிய ரக வான்கள் யாழ் - குறிகாட்டுவான் போக்குவரத்துச் சேவையில் ஈடுபட்டிருந்தன.

ஒவ்வொரு இருபது நிமிடத்துக்கு ஒருமுறை புங்குடுதீவிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு பஸ்கள் புறப்பட்டன. புங்குடுதீவு போக்குவரத்தை நினைத்ததும் ஒருவருக்கு வாணர் சகோதரர்களின் பெயர் நினைவிற்கு வரும். பெரியவாணர் (க.அம்பலவாணர்) 1890ஆம் ஆண்டும் சின்னவாணர் (ச.அம்பலவாணர்) 1893ஆம் ஆண்டும் புங்குடுதீவில் பிறந்தனர்.

பெரியவாணர் புங்குடுதீவு அமெரிக்கன் மிஷன் பாடசாலை, கோப்பாய், கிறிஸ்தவக்கல்லூரி, யாழ்ப்பாணக்கல்லூரி ஆகியவற்றில் கல்விகற்றவர். அக்காலத்தில் புங்குடுதீவு மக்கள் போக்குவரத்தில் பட்ட கஷ்டங்களை அனுபவ ரீதியாக உணர்ந்தார்.

ஒரு நாட்டின் கிராமங்கள் முன்னேற்றம் அடைவதற்கு அங்குள்ள போக்குவரத்து பாதைகள் வசதியாக அமைந்திருக்க வேண்டும். தீவுப்பகுதிக் கிராமங்களுக்கு தரைப்பாதைகள் மட்டுமன்றி கடற்பாதைகளும் முக்கிய தேவைகளாக அமைகின்றன. யாழ்ப்பாண நகரத்திலிருந்து 28 கிலோமீற்றர் தூரத்தில் நடுக்கடலில் "ப" வடிவில் அமைந்திருக்கும் நிலப்பரப்புதான் புங்குடுதீவுக் கிராமம்.

4.8 கிலோமீற்றர் தூரமுள்ள வாணர் தாம்போதி இலங்கையிலேயே மிக நீண்ட தாம்போதியாகும். புங்குடுதீவு மக்களின் நீண்ட கால முயற்சியின் பின்பே இது அமைக்கப்பட்டது. ஒரே நேரத்தில் இரண்டு பஸ்கள் எதிரெதிரே கடக்கக்கூடிய அகலமான வீதி. ஐம்பதுக்கு மேற்பட்ட மதகுகளும் ஒரு பெரிய பாலமும் இந்த நீண்ட பாதையில் அமைந்திருக்கின்றன. கடலின் நடுவே பெரிய பாறாங்கற்களை நட்டு அதன்மீது மணலும் சீமெந்தும் பூசி தார் இட்டு நீண்ட வீதியாக இந்த தாம்போதி அமைக்கப்பட்டிருக்கிறது.

புங்குடுதீவின் போக்குவரத்தை தரைப்பாதையினூடாக இலகுபடுத்திய பெருமை இந்த அம்பலவாணர் தாம்போதிக்கே உரியது. மேற்படி பாதை அமைப்பதில் முன்னின்று உழைத்த அம்பலவாணர் சகோதரர்களை புங்குடுதீவு மக்கள் என்றும் நன்றியுடன் நினைவில் வைத்திருக்கிறார்கள். புங்குடுதீவில் பிறந்த சமூக சேவகர்கள் தான் பெரிய வாணரும் சின்னவாணரும். இவர்கள் இருவரும் இளமைக்காலத்திலேயே புங்குடுதீவு மக்கள் போக்குவரத்தில் அனுபவிக்கும் கஷ்டங்களை அனுபவ ரீதியாக உணர்ந்திருந்தனர்.

பெரிய வாணர் படிப்பு முடிந்ததும் தொழில் தேடி மலேசியா சென்றார். மலேசியாவில் தீவுகளுக்கிடையே அமைந்துள்ள தாம்போதிகள் போன்று புங்குடுதீவுக்கும் வேலணைக்கும் இடையில் ஒரு பெரிய தாம்போதியை அமைக்க வேண்டுமென்று அவர் கனவு கண்டார். தமது கனவை நனவாக்க பெரிய சாதனைகளை அவர் செய்யவேண்டியிருந்தது.

மலேசியாவில் வாழ்ந்த புங்குடுதீவு மக்களை ஒன்று திரட்டி 'மலேசியா - புங்குடுதீவு ஐக்கிய சங்கம்' என்ற அமைப்பை உருவாக்கினார். புங்குடுதீவு மக்களின் போக்குவரத்துப் பிரச்சனைகளைத்தீர்ப்பதற்கான வழிவகைகளை ஆராய்ந்தார். 1918ஆம் ஆண்டு நாடு திரும்பிய பெரியவாணர் முறைப்படி தாம்போதியை அமைக்க வேண்டுமென புங்குடுதீவிலுள்ள வீடுகள் தோறும் கையொப்பம் வாங்கி அரசுக்கு அனுப்பினார்.

தாம்போதி அமைப்பது சம்பந்தமாக கொழும்பில் அரச பிரதிநிதிகளைச் சந்திப்பது, பத்திரிகைகளுக்கு அறிக்கைகளைச் சமர்ப்பிப்பது, போக்குவரத்து ஆவணங்களைப் புகைப்படங்கள் மூலம் நாடு முழுவதும் அறியச் செய்வது போன்ற பணிகளில் பெரியவாணர் முழு முயற்சியுடன் ஈடுபட்டார். புங்குடுதீவிலுள்ள வீடுகள் தோறும் சென்று கையொப்பங்களை வாங்குவதில் சின்ன வாணரும் அவருடன் சேர்ந்து செயற்பட்டார்.

1922 ஆம் ஆண்டு "புங்குடுதீவு மகாஜன சேவா சங்கம்" என்ற சங்கத்தை ஆரம்பித்த அம்பலவாணர் சகோதரர்கள், பல அங்கத்தவர்களை சேர்த்துக் கொண்டனர். இதற்காக அதனை 1926 ஆம் ஆண்டு "அகில இலங்கை மகாஜன சேவா சங்கம்" என்று பெயர் மாற்றினார்கள். இந்த அமைப்பினூடாக அரச பிரதிநிதிகள், தேசாதிபதி போன்றோரை அழைத்து வந்து பிரச்சினைகளை எடுத்துக்கூறினர்.

அதன் பலனாக 1935 இல் சட்டநிரூபண சபையில் தாம் போதி அமைக்கும் பிரேரணை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. சட்டநிரூபண சபையின் அங்கத்தவர்களாக இருந்த கண்டி அங்கத்தவர் பண்டிட் பட்டுவந்துடாவ, தொழிற்சங்கவாதி ஏ.ஈ. குணசிங்க, ஆங்கிலேயப் பிரதிநிதி சேர். வில்லியம் ஆகியோர் தாம்போதி அமைக்க வேண்டும் என்று பல ஆதாரங்களுடன் வாதாடி அனுமதியையும் நிதியையும் பெற்றுக் கொடுத்தனர். வாணர் சகோதரர்கள் கண்ட கனவு நனவாகியது.

புங்குடுதீவையும் வேலணைத் தீவையும் இணைக்கும் இந்த வாணர் தாம்போதியை அமைப்பதற்கு பொறியியல் தொழில் நுட்ப ஆலோசகராகவும் புங்குடுதீவு நலன்புரிச்சங்க ஆலோசகராகவும் வாணர் சகோதரர்களுக்கு பக்கபலமாக இருந்து பொறியியலாளர் என்.ஏ. வைத்திலிங்கம் கடமையாற்றினார்.

1935 ஆம் ஆண்டு அம்பலவாணர் தாம்போதி வேலைகள் ஆரம்பமாகின. பல்வேறு வழிகளில் சமூகப் பணியாற்றிய பெரியவாணர், தீவக மக்களின் வளர்ச்சியை கருத்திற்கொண்டு 1947 ஆம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தலில் சுயேச்சையாக போட்டியிட்டார். அப்பொழுது அவரால் 3701 வாக்குகளையே பெறமுடிந்தது. பெரும்பாலும் புங்குடுதீவு மக்களே அவருக்கு வாக்களித்தனர். பொதுத் தேர்தலில் தன்னுடன் போட்டியிட்டு வெற்றி பெற்ற அல்பிரட் தம்பிஐயாவை அழைத்து தாம்போதி வேலையைப் பூர்த்தி செய்து தருமாறு கேட்டுக்கொண்டார்.

காவலூர் எம். பி. அல்பிரட் தம்பிஐயா 1953 ஆம் ஆண்டு அம்பலவாணர் தாம்போதியை மக்கள் பயன்படுத்தும் வகையில் திறந்து வைத்தார். அதற்கு முன்பே, அதாவது 1948ஆம் ஆண்டிலேயே பெரியவாணர் மரணமானார். பெரியவாணர் அமைத்த பிரமாண்டமான தாம்போதி அன்று முதல் இன்று வரை இளமையாகவே காட்சியளிக்கிறது. எந்தப் போருக்கும் செல்லடிக்கும் குண்டு மழைக்கும் அது அசைந்து கொடுக்கவில்லை. அது அம்பலவாணரின் பெயரைச் சொல்லிக்கொண்டு இன்றும் கம்பீரமாக தலை நிமிர்ந்து நிற்கிறது. வாணர் சகோதரர்களை புங்குடுதீவு மக்கள் என்றுமே மறந்ததில்லை. அவர்களுக்கு புங்குடுதீவு மக்கள் நினைவுச் சின்னம் ஒன்றை நிறுவினர்.

அந்த நினைவுச்சின்னம்தான் "அம்பலவாணர் அரங்கு" ஆகும். புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிரதான வீதியில் இந்த அரங்கு அமைந்திருக்கின்றது. 30 பரப்புக்காணியில் இந்த பிரமாண்டமான அரங்கு எழுந்து நிற்கிறது. அம்பலவாணர் அரங்கு திறப்புவிழா 1977 இல் பெருவிழாவாக நடைபெற்றது. பல கலை நிகழ்ச்சிகள் இடம்பெற்றன. இயல், இசை, நாடகம் என்று நிகழ்ச்சிகள் இடம்பெற்றன. புங்குடுதீவின் அறிஞர்கள், எழுத்தாளர்கள் வர்த்தகப் பெருமக்கள் என்று பல்வேறு மக்கள் இந்த விழாவில் கலந்து கொண்டனர்.

1991ஆம் ஆண்டு இராணுவ நடவடிக்கையின் போது புங்குடுதீவிலிருந்து 95 சதவீத மக்கள் யாழ். குடாநாட்டுக்கு இடம் பெயர்ந்தனர். இந்த வாணர்தாம்போதியினூடகவே அவர்கள் இடம் பெயர்ந்தனர். மக்கள் பாவனைக்கு உட்படாத நிலையில் உள்ளூர் வீதிகளும் ஒழுங்கைகளும் அழிவுற்றன. 2003 ஆம் ஆண்டு புங்குடுதீவின் பிரதான வீதி மட்டும் புனரமைக்கப்பட்டது. அம்பலவாணர் தாம்போதியின் வீதியின் மேற்பரப்பு மட்டும் தார் பூசி சீர் செய்யப்பட்டுள்ளது. ஆனால் கடல்நீர் தொடும் பகுதி நீண்டநாட்களாக சீரமைக்கப்படவில்லை. அந்தப்பகுதியும் சீர் செய்யப்பட வேண்டும்.

புங்குடுதீவு மக்களின் வாழ்வில் ஒளியேற்றிய அம்பலவாணர் சகோதரர்களை என்றும் நினைவு படுத்தும் வகையில் இரண்டு நினைவுச்சின்னங்கள் எழுந்து நிற்கின்றன. அவை தான் வாணர்தாம் போதியும் அம்பலவாணர் அரங்கும் ஆகும்.

புங்குடுதீவு மக்களுக்காக வாணர் சகோதரர்கள் வாணர்தாம்போதியை அமைத்தனர். புங்குடுதீவு மக்கள் வாணர் சகோதரர்களை நினைவு கூரும் வகையில் பிரமாண்டமான வாணர் அரங்கை அமைத்துள்ளனர்.



கள்ளியாறு வாய்க்கால்



சோளகனோடை வாய்க்கால்




இறுப்பிட்டி உவர்நீர்த்தடுப்பணை



புனரமைக்கப்பட்ட மினியன் வாய்க்கால்
நீர்வெளிச்செல்லும் வழி

# 7

# புங்குடுதீவின் நிர்வாகம்

புங்குடுதீவில் உள்ள சமூக அமைப்பு பெரும்பாலும் யாழ்ப்பாண மாவட்டத்தில் உள்ள சமூக அமைப்பைப் போன்றதேயாகும். ஆனாலும் யாழ்ப்பாணத்திலுள்ள அத்தனை சமூகப்பிரிவுகளும் இங்கு இல்லை. பெரும்பாலான பிரிவுகள் தொழில் அடிப்படையிலேயே உள்ளன.

சமூகத்தின் உயர் குடியினரான அந்தணர்கள் அநேகமாக கோயில்களுக்கு அருகிலேயே வாழ்ந்தனர். புங்குடுதீவு கிராஞ்சியம்பதி கந்தசாமி கோவிலுக்கு அருகில் உள்ள வளாகத்தில் பிராமணர்கள் வாழும் அக்கிரகாரம் என்னும் சிவாச்சாரியார்கள் குடியிருப்புகள் இருந்தன. சதாசிவக் குருக்கள், மார்க்கண்டேய ஐயர், ஜம்பு கேஸ்வரக்குருக்கள், சின்னத்துரைக் குருக்கள் என்போர் இந்த அக்கிரகாரத்திலேயே வாழ்ந்தனர். இந்த அக்கிரகாரத்தின் அருகிலேயே இலங்கையின் முதலாவது சமஸ்கிருதப் பாடசாலை தோற்றுவிக்கப்பட்டது.

பெரும்பாலான மக்கள் விவசாயிகளாக இருக்கிறார்கள். இவர்கள் வேளாளர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். அடுத்ததாக மீனவர்கள் வாழுகிறார்கள். பெரும்பாலும் கிறிஸ்தவர்களே மீன்பிடித்தொழிலைச் செய்கின்றனர். போர்ச்சூழலின் முன்பு புங்குடுதீவில் 850 கிறிஸ்தவக் குடும்பங்கள் வாழ்ந்தன என்று கணக்கெடுப்பொன்று கூறுகிறது. மரவேலை உலோகவேலை செய்வோர் அதிகமாக தீவின் மேற்குப்புறத்தில் வாழ்ந்தார்கள். நாவிதர்களும் சீவல் தொழிலாளர்களும் தீவின் சில சில பகுதிகளில் இருக்கிறார்கள். சலவைத் தொழிலாளர் பெரியகிராய்க் குளத்தை அடுத்த பகுதிகளில் வாழ்ந்தார்கள். பறையடிப்போர் கிழக்கூரில் உயரப்புலத்திலும் மேற்கூரில் நுணுக்கலிலும் வாழ்ந்தார்கள். இவர்களில் பலரும் இப்பொழுது இடம் பெயர்ந்திருக்கிறார்கள்.

தீவுப்பகுதி ஆதிகாலந் தொட்டு யாழ்ப்பாணக் குறு நில மன்னர்களின் ஆட்சியின் கீழ் அல்லது அனுராதபுரம், பொலநறுவை போன்ற நகரங்களை ஆட்சி செய்த அரசர்களின் கீழ் ஆட்சி செய்த தேசாதிபதிகளின் கீழ் இருந்திருக்க வேண்டும். புங்குடுதீவும் இவ்வாறான நிலைமையிலேயே ஆளப்பட்டிருக்க வேண்டும். யாழ்ப்பாணத் தமிழ் அரசர்களின் காலத்தில் அவர்களது பிரதிநிதிகள் மூலமும் பின்னர் போர்த்துக்கீசர் ஒல்லாந்தர் ஆகியோரின் காலத்தில் யாழ்ப்பாண நிருவாக அதிகாரி மூலமும் புங்குடுதீவு நிர்வகிக்கப்பட்டிருக்கிறது. இங்கு வாழும் மக்களுக்கு அனைத்துத் தீவு மக்களுடனும் தொடர்பு இருக்கிறது. இவர்கள் தென்னிந்தியாவிலிருந்தும் வந்திருக்கக்கூடும் என்றும் நம்பப்படுகிறது. தென்னிந்தியாவிலிருந்து வந்த தனிநாயக முதலியின் பரம்பரையினர் தீவுப்பகுதிகள் எங்கும் வாழுகின்றனர். அவர்களது பரம்பரையினர் புங்குடுதீவிலும் குடியேறினர். தனிநாயக முதலியின் ஆட்சி நெடுந்தீவு முதல் மண்டைதீவு வரை நீண்டிருக்கிறது என்று வரலாறு சொல்கிறது. அவரது சகோதரர்கள் தீவுப்பகுதியின் மற்றத் தீவுகளுக்கு பொறுப்பாக இருந்தனர்.

இலங்கையை கி.பி. 1505இலிருந்து போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் தமது ஆட்சிக்கு உட்படுத்தியிருந்தனர். இவர்கள் தமது ஆட்சி நிர்வாகத்தை பரிபாலிப்பதற்காக உள்ளூரில் ஓரளவு படித்த செல்வந்தர்களுக்கு விதானையார், உடையார், மணியகாரர் என்னும் அரசபதவிகளை வழங்கி அவர்கள் மூலம் ஆட்சி நிர்வாகத்தை செய்து வந்தனர். இந்த வகையில் புங்குடுதீவின் நிர்வாகமும் இத்தகைய படிமுறைப்பதவிகளில் இருந்தவர்களால் மேற்கொள்ளப்பட்டன. இவர்கள் தங்களது அதிகாரப் பரப்பிற்கமைய செயற்பட்டார்கள். புங்குடுதீவில் கோயில் இல்லாத காலம், பள்ளிக் கூடம் இல்லாத காலம், வைத்தியசாலை இல்லாத காலம் என்று ஒரு காலம் இருந்தது. இவ்வாறான காலகட்டத்தில் கிராமக் கோடு வருவதற்கு முன்பு சண்டை சச்சரவுகளை பெரியவர்கள் தீர்த்து வைத்திருக்கிறார்கள். அந்தப் பெரியார்களை அப்பணிக்கு தகைமை வாய்ந்தவர்களாக அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. புங்குடுதீவின் உறுதி ஆவணங்களின் பதிவுகளின் படி 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புங்குடுதீவில் பசுபதி உடையார் என்பவர் நீதிமன்றம் இல்லாத நீதிபதியாக தன்வீட்டின் தலைவாசலில் வழக்குகளைத் தீர்த்து வைத்தார். இவருக்குப்பின்பு இவர் மகன் வைத்திலிங்க உடையாரும் அவர்மகன் கல்வித்தந்தை வ. பசுபதிப்பிள்ளை விதானையாரும் பரம்பரை உடையார் விதானையாராக விளங்கினர். இவர்களைப் போலவே சரவணமுத்து உடையார், இராசேந்திரம் விதானையார் என்று இன்னுமொரு பரம்பரையும் ஊரில் இருந்தது. மாணிக்கம் முருகேசு அவர்களும் அரசாங்கத்தால் உடையாராக நியமனம் பெற்றார். முருகேசு உடையார். புங்குடுதீவுக்கு மட்டுமல்லாது நெடுந்தீவு, நயினாதீவு, வேலணை, ஊர்காவற்றுறை என்று தீவகம் முழுமைக்கும் பொறுப்பதிகாரியாக கடமையாற்றினார். புங்குடுதீவின் நிர்வாகத்தில் இடம்பிடித்தோரில் கதிரவேலு ஆறுமுகம் உடையார் (கறுப்பாத்தை), இராமநாத உடையார், முத்துக்குமார் உடையார், ஐயம்பிள்ளை உடையார், வைத்திலிங்கம் உடையார், இராமலிங்க முதலியார், பசுபதிப்பிள்ளை விதானையார், சுப்பிரமணியம் விதானையார் (தம்பு), சின்னத்துரை விதானையார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள்.

1948இல் இலங்கை சுதந்திரம் அடைந்த பின் குடியேற்றவாத ஆட்சிக்காலத்தின் நிர்வாக முறையில் பல்வேறு சீர் திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. கச்சேரிமுறை நீக்கம், சிவில் சேவை முறையில் மாற்றம் கிராமத்தலைமைக்காரன், விதானையார் முறையில் மாற்றம் என்பன பிரதான மானவையாகும். 1963ஆம் ஆண்டு, பரம்பரையாக கிராமத்தில் செல்வாக்கும் அதிகாரமும் மிக்க குடும்பத்திலிருந்து விதானையார், கிராமத்தலைமைக்காரன் ஆகியோர் அரசாங்க அதிபரால் நியமிக்கும்முறை ஒழிக்கப்பட்டு புதிய கிராமசேவையாளர் சேவை ஆரம்பிக்கப்பட்டது. காரியதிகாரி, உதவி அரசாங்க அதிபர் எனப் பெயர் மாற்றம் பெற்றார். 500 குடும்பங்களுக்கு ஒரு கிராம சேவையாளர் என்ற நிலை உருவாகியது. உதவி அரசாங்க அதிபர், பிரதேச செயலாளராக மாறினார். கிராமத்தலைமைக்காரன், விதானையார், கிராமசேவையாளர், கிராமசேவை உத்தியோகத்தர், கிராம உத்தியோகத்தர் என்று பெயர்மாறின. பிரித்தானியர் ஆட்சியின் போது ஊர்காவற்றுறையில் இருந்த மாவட்ட வருமான அதிகாரியினால் நிர்வகிக்கப்பட்டது. அதன் பின்பு வேலணையில் உள்ள உதவி அரசாங்க அதிபரினால் புங்குடுதீவு நிர்வகிக்கப்பட்டது. இப்பொழுது வேலணை பிரதேச செயலாளரால் நிர்வகிக்கப்படுகிறது. 12 வட்டாரங்களைக் கொண்ட இத்தீவு முதலில் இரண்டு கிராமசேவகர்கள் பிரிவாகவும் பின்பு மூன்று கிராம சேவகர்கள் பிரிவாகவும் பிரிக்கப்பட்டது. புங்குடுதீவு கிழக்கு, புங்குடுதீவு மேற்கு, புங்குடுதீவு மத்தி என்பனவே அந்த கிராமசேவகர்கள் பிரிவுகளாகும். பின் 12 பிரிவாகப் பிரிக்கப்பட்டது.

குவைரோஸ் என்ற அறிஞரின் கணிப்புப்படி 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்கு 800 மக்கள் வாழ்ந்தார்கள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. போல் டயஸ் என்ற கிறிஸ்தவபாதிரியார் இந்த காலப்பகுதியில் இதே அளவு மக்களே வாழ்ந்தார்கள் என்று குறிப்பிடுகிறார். அதாவது 1658க்கும் 1665 க்கும் இடைக்காலத்தில் 800 மக்கள் வாழ்ந்தார்கள் என்று குறிப்பிடுகிறார். சைமன் காசிச்செட்டி என்ற அறிஞர் 1834ஆம் ஆண்டளவில் 2415 மக்கள் வாழ்ந்தனர் என்று எழுதியிருக்கிறார். இலங்கை குடிசன மதிப்பின்படி 1824 ஆம் ஆண்டு 1802 மக்கள் வாழ்ந்தனர் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. பத்து வருடங்களின் பின் கணக்கெடுத்தபொழுது 5888 மக்கள் வாழ்ந்தனர் என்றும் 1990 ஆம் ஆண்டு 15634 மக்கள் வாழ்ந்தனர் என்றும் கணிக்கப்பட்டுள்ளது.

1991 ஆம் ஆண்டு இடப்பெயர்வின் போது 95 சதவீதமான மக்கள் ஊரை விட்டு வெளியேறினர். 500 மக்களே புங்குடுதீவில் தங்கினர். இவர்களில் அதிகமானவர்கள் வயது போனவர்களே. சமாதான ஒப்பந்தத்தின் பின் சிலர் மீண்டும் ஊருக்குள் வந்து குடியேறினர். அதாவது 2002 ஆம் ஆண்டு 2582 மக்கள் வாழ்ந்தனர். இப்பொழுது (2006) இங்கு ஏறக்குறைய 6000 மக்களே வாழுகின்றனர். இவர்களில் சிறு தொகையினர் வெளியூர்களைச் சேர்ந்தவர்கள். தொழில் செய்வதற்காக வந்து குடியேறினர்.

புங்குடுதீவில் பிறந்த பலர், பாராளுமன்றத் தேர்தல்களில் போட்டியிட்ட போதிலும் வெற்றி பெறவில்லை. 1935ஆம் ஆண்டு தேர்தலில் ஜே.வி. அமரசிங்கம் போட்டியிட்டு தோல்வியடைந்தார். 1948 ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்து விடுபட்டு எமது நாட்டில் முதல் தேர்தல் நடைபெற்றது. இத்தேர்தலில் தீவகத்தில் போட்டியிட்டவர்களில் புங்குடுதீவு வேலணைத் தாம்போதியை அமைத்த பெரியவாணரும் ஒருவர். அந்தத் தேர்தலில் அவர் தோல்வியடைந்தார். பெரியவாணரது தோல்வியும் அவரது மரணமும் புங்குடுதீவுக்கிராமத்தை இருளாக்கியது. அத்தேர்தலில் பெரியவாணர் 3701 வாக்குகளைப் பெற்று மூன்றாவது இடத்துக்கு வந்தார். 1956 ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் வி.வ. நல்லதம்பி போட்டியிட்டு 719 வாக்குகளைப் பெற்று மூன்றாவது இடத்தைப் பெற்றார்.

1960 ஜூலை மாதத்தில் நடைபெற்ற தேர்தலில் தமிழ்க்காங்கிரஸின் சார்பில் போட்டியிட்ட எஸ்.சேனாதிராசா 2671 வாக்குகளைப் பெற்று இரண்டாவது இடத்தைப் பெற்றார். 1970 ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் சுயேச்சையாகப் போட்டியிட்ட பி. கதிரவேலுவுக்கு 5013 வாக்குகள் பெற்று இரண்டாம் இடம் கிடைத்தது.

இந்தத் தேர்தலில் சுயேச்சையாக போட்டியிட்ட பி.கதிரவேலு, தமிழரசுக்கட்சியின் சார்பில் போட்டியிட விண்ணப்பித்த போதிலும் அனுமதி கிடைக்காததால் சுயேச்சையாக போட்டியிட்டார். தீவுப்பகுதியில் வேலணையை அடுத்து புங்குடுதீவிலேயே அதிக வாக்காளர்கள் இருக்கிறார்கள். இதனால் இத்தேர்தலில் பிரதேசவாதம் மேலெழவே புங்குடுதீவு வாக்காளர்களில் கணிசமானவர்கள் கதிரவேலுவுக்கே வாக்களித்தனர். இன்று வரை புங்குடுதீவில் இருந்து எவரும் இலங்கையின் பாராளுமன்றக் கதிரையில் அமரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

புங்குடுதீவின் கிராமசபையினூடாக புங்குடுதீவின் வளர்ச்சிக்கு பலர் தொண்டாற்றி இருக்கின்றனர். அவர்களில் முதன்முதலாக தலைமைப்பதவியை வகித்தவர் வ.பசுபதிப்பிள்ளை விதானையாராவார்.

ச.அம்பலவாணர் (சின்னவாணர்), அதிபர் க. செல்லத்துரை, அதிபர் வி.வ.நல்லதம்பி, அதிபர் சபாரெத்தினம் (பெரிய சபாவாத்தியார்), வே.இ.அம்பிகைபாகன் (குமாரசாமி) மற்றும் வர்த்தகர்களான கு.வி.தம்பித்துரை போன்றோரும் கிராமசபைத்தலைவர்களாக சேவையாற்றியிருக்கிறார்கள். திருமதி. யோகம்மா புங்குடுதீவில் முதலாவது பெண் கிராமசபை அங்கத்தவராவார். இவர் இரண்டாம் வட்டார அங்கத்தவராக இருந்து கொண்டு புங்குடுதீவு முழுவதற்கும் சேவை செய்தார். சிவனாமம், ராசரெத்தினம் ஆகியோர் புங்குடுதீவு இளைஞர் மன்றத்தினூடாக போட்டியிட்டு தெரிவு செய்யப்பட்ட அங்கத்தவர்கள். இவர்கள் இருவருக்கும் கார்கள் சொந்தமாக இருந்தன. கிராமமுன்னேற்றத்தில் பங்கு கொண்டனர்.

1974 ஆம் ஆண்டு கிராமசபைத் தேர்தல் நடைபெற்ற போது பன்னிரண்டு வட்டாரத்துக்கும் பன்னிரெண்டு அங்கத்தவர்கள் தெரிவு செய்யப்பட்டனர். இவர்களில் கே. மதியாபரணம் கிராமசபைத் தலைவராக தெரிவு செய்யப்பட்டார். இதன்பின்பு கிராமசபைத் தேர்தல் நடைபெறவில்லை. 1980ஆம் ஆண்டு மாவட்ட அபிவிருத்திச் சபைத் சட்டத்தின் மூலம் அதுவரை நிலவிய கிராம சபைகளும் பட்டின சபைகளும் இல்லாதொழிக்கப்பட்டு மாவட்ட அபிவிருத்திச் சபைகள் உருவாக்கப்பட்டன. இச்சபையின் தேர்தல் நடைபெற்றபோது தீவுப்பகுதியை பிரதி நிதித்துவப்படுத்தும் வகையில் புங்குடுதீவைச் சேர்ந்த வே.க. சோமசுந்தரம் தெரிவு செய்யப்பட்டார். 1987 ஆம் ஆண்டு பிரதேசசபைகள் அறிமுகப்படுத்தப்பட்டன. அதன்படி மாகாணசபைகளின் கீழ் உள்ளூராட்சி நிறுவனங்கள் (பிரதேச அரசாங்கங்கள்) உள்ளடக்கப்பட்டன. தற்பொழுது யாழ். மாவட்டத்தில் 17 உள்ளூராட்சி சபைகள் இருக்கின்றன. இவற்றுள் 13 பிரதேச சபைகள் உள்ளடக்கப்படுகின்றன. இவற்றுள் ஒன்றான வேலணை பிரதேச சபைக்குள் புங்குடுதீவும் அடங்குகிறது. புங்குடுதீவு மக்கள் நீண்டகாலமாகவே சுயநிர்ணய உரிமைக்காக குரல் கொடுத்து வந்துள்ளனர். புங்குடுதீவில் பிறந்த பல இளைஞர்கள் மண்மீது அபிமானம் கொண்டு இயக்கங்களில் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் பல்வேறு போராட்டங்களில் ஈடுபட்டு வெற்றி பெற்றிருக்கிறார்கள். சிலர் அந்த மண்மீட்புப் போரில் மாவீரர்களாகியிருக்கிறார்கள். 1980 ஆம் ஆண்டு இலங்கையில் மாவட்ட அபிவிருத்திச்சபைத் தேர்தல் நடைபெற்றது. யாழ்ப்பாண மாவட்டத்தில் தமிழர் விடுதலைக் கூட்டணியினர் வெற்றி பெற்றனர். தீவுப்பகுதியை பிரதிநிதித்துவப்படுத்துவதற்காக புங்குடுதீவைச் சேர்ந்த வே.க.சோமசுந்தரம் தெரிவு செய்யப்பட்டார்.

புங்குடுதீவில் பிறந்த பலர் வடபகுதிக்கு வெளியேயும் தேர்தல்களில் போட்டியிட முயன்றனர். முக்கியமாக கொழும்பைக் குறிப்பிடவேண்டியிருக்கிறது. இரண்டாயிரமாம் ஆண்டுக்குப் பின் புங்குடுதீவைச் சேர்ந்த பலர் கொழும்பு மாநகர சபையிலும் போட்டி போட்டிருக்கிறார்கள். 10ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த திருவாசகமணி நா. சண்முகம், கலைஞர் எம். உதயகுமார், புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த இலட்சுமணபிள்ளை ஸ்ரீகாந்தன் ஆகியோர் கொழும்பு மாவட்டத்தில் பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டார்கள்.

நா.சண்முகம் புங்குடுதீவின் பிரபலமான சமூக சேவையாளர். எம். உதயகுமார் பல நாடகங்களிலும் திரைப்படங்களிலும் நடித்த பழம் பெரும் கலைஞர். இலட்சுமணபிள்ளை ஸ்ரீ காந்தன் கொழும்பில் பிரபல வர்த்தகரும் சமூக சேவையாளருமாவார்.

புகழ் பூத்த பெரியோர்கள் புங்குடுதீவில் பிறந்திருக்கிறார்கள். தனித்தமிழ் இயக்கத்தின் தலைவர் மறைமலை அடிகள் ஆவார். இவரின் தாயார் புங்குடுதீவிலே பிறந்தவர். யாழ்ப்பாணத்திலே புகழ்பெற்ற ஆன்மீக வாதி யோகர் சுவாமிகள் ஆவார். இவரின் தந்தையார் புங்குடுதீவில் பிறந்தவர்.

இலங்கையை ஆண்ட கடைசி மன்னன் ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன். இவனது படைப்பிரிவு ஒன்றுக்கு தலைமை தாங்கியவன் புங்குடுதீவில் வீராமலையை பிறப்பிடமாக கொண்டவன் என்று கூறப்படுகிறது.

அரச நிர்வாக சேவையில் அதி உயர் பதவிகளை வகித்தவர்கள் பலர் எம்மூரில் பிறந்திருக்கிறார்கள். எஸ்.நாராயணசுவாமி, தி,திருலிங்கநாதன், ஆ.தில்லைநாதன், க.சண்முகநாதன், செ.சடாட்சர சண்முகதாஸ், இ.இளங்கோ, எஸ்.தனபாலசிங்கம் ஆகியோரார் அரச நிர்வாகத்துறையில் புகழ் பெற்றவர்கள்.

க.சண்முகநாதன் யாழ்ப்பாண அரசாங்க அதிபராக கடமையாற்றியிருக்கிறார். சு.மகாலிங்கம், மாகாணப் பணிப்பாளராகவும் மாகாணக் கல்வி அமைச்சின் சிரேஷ்ட உதவிச் செயலாளராகவும் கடமையாற்றியவர். நூலக சேவையின் மூலம் தம்மை இனங்காட்டிக் கொண்டவர்களில் காலஞ்சென்ற கலாநிதி இ.வே. பாக்கியநாதனும் திருமதி பாக்கியநாதனும், திருமதி திருமகள் கார்த்திகேயனும் முக்கியமானவர்கள்.

திருமதி நவரெத்தினம், த. துரைசிங்கம், சு.மகாலிங்கம், த.தவராசா, எஸ்.புலேந்திரன், மு.சிவபாதம் போன்றோர் கல்வித்துறையில் உயர் பதவிகள் வகித்துள்ளனர்.

புங்குடுதீவுக் கிராமத்தில் பலர் சட்டத்தரணிகளாக தம்மை உயர்த்தி நீதிச் சேவையிலும் பணியாற்றி இருக்கிறார்கள். இவர்களில் காலஞ்சென்றவர்களான ப.கதிரவேலுவும் எஸ்.கே. மகேந்திரனும் முக்கியமானவர்கள்.

மு.நேமிநாதன், கே.வீ. தவராசா, க. சண்முகரெத்தினம், காயத்திரி அம்பலவாணர், வாசுகி கண்ணையா போன்றோரும் சட்டத்தரணிகளாக கடமையாற்றியிருக்கிறார்கள்.

யாழ். பல்கலைக்கழக இரசாயனவியற்துறை விரிவுரையாளர் செல்வி யசோதா தியாகராஜா, மருத்துவத்துறை சிரேஷ்ட விரிவுரையாளர் தயாளன் அம்பலவாணர். மருத்துவத்துறை உளநோய் மருத்துவப் பேராசிரியர் கலாநிதி தயா சோமசுந்தரம் போன்றோரும் புங்குடுதீவைச் சேர்ந்தவர்களாவர்.

புங்குடுதீவின் கூட்டுறவு அமைப்பு வளர்ச்சியில் ப.கதிரவேலு, எஸ்.கனகலிங்கம், எஸ். கருணாகரன் போன்றோர் சிறப்பான முறையில் பணியாற்றியிருக்கிறார்கள்.

எஸ். கனகலிங்கம் வடமாகாண கூட்டுறவுச் சங்கங்களின் தலைவராக இருந்து சேவையாற்றுகிறார். கல்வி நிர்வாகப்பணியில் திரு. புலேந்திரன் முல்லைத்தீவில் நீண்டகாலம் கல்விப்பணிப்பாளராக கடமையாற்றினார். அவர் ஓய்வு பெறும் பொழுது வடகிழக்கு மாகாண கல்வித்திணைக்களத்தில் கல்விப்பணிப்பாளராக கடமையாற்றினார்.

புங்குடுதீவில் பிறந்த இன்னுமொரு கல்வியாளரான கலாநிதி சோமசுந்தரேஸ்வரன் புங்குடுதீவின் வளர்ச்சியில் உழைப்பவர். இவர்களைப் போலவே ஆரம்பகால அறிஞர்களாக நிர்வாகிகளாக பலரைக் குறிப்பிடலாம். அவர்களில் உடையார்கள் விதானைமார்கள் பிரபலமானவர்கள். கிராமக்கோடு வருவதற்கு முன் சண்டை சச்சரவுகளை சுமுகமாகத் தீர்த்து வைத்த பெரியவர்களையும் அவர்களை அப்பணிக்கு தகைமை வாய்ந்தவர்களாக அரசு ஏற்றுக்கொண்டமையும் குறிப்பிடத்தக்கது. நூற்றாண்டுப்பார்வையில் உறுதி ஆவணங்களின் பதிவுகளின்படி பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புங்குடுதீவில் பசுபதி உடையார் என்பவர் நீதிமன்றம் இல்லாத நீதிபதியாய் தன்வீட்டிலேயே வழக்குகளை தீர்த்து வைத்தார். இவருக்குப் பின்பு இவர்மகன் வைத்திலிங்க உடையாரும் அதன் பின்பு அவர்மகனான கல்வித்தந்தை வ. பசுபதிப்பிள்ளை விதானையாரும் கோயில்பரம்பரை தர்மகர்த்தாக்கள் போன்று பரம்பரை உடையார்கள் விதானையார்களாக விளங்கினார்கள். இவர்களைப்போலவே சரவணமுத்து உடையார். இராசேந்திரம் விதானையார் என்ற இன்னுமொரு பரம்பரைக் கொடியும் புங்குடுதீவில் உண்டு வ. பசுபதிப்பிள்ளை காலத்திலேயே அவருடைய சிபார்சின் வழி மாணிக்கம் முருகேசு அவர்கள் உடையாராக அரசாங்கத்தால் நியமனம் பெற்றார்.

## மா. முருகேசு உடையார்

முருகேசு உடையாரின் பணிகள் பன்முகத் தன்மை கொண்டவை. அந்தக்காலத்தில் மக்கள் மத்தியில் சண்டை என்பது பெரும்பாலும் வாய்ச் சண்டையாகவே இருக்கும். அடிபிடி, குத்துவெட்டு, சூடு என்பது அறவே இல்லாத காலம் என்று அக்காலத்தை நாம் நினைவு கூரலாம். தீவகம் முழுமையிலும் ஒரு வருஷத்தில் அடிபிடி என்பதே இரண்டு மூன்று என்றே கணக்கிடலாம். இத்தகைய சூழ்நிலையை உருவாக்கியதில் அந்தக் கால அறிஞர்களும் ஆசிரியர்களும் சாஸ்திரிகளும், விதானை உடையார்களும் பெரும்பங்கு வகித்தனர். அவர்களில் ஒருவரே முருகேசு உடையார் அவர்கள்.

வைத்தியர் வாறார் என்றால் நோயாளிக்கு வருத்தம் குறையுமாம். உடையார் வாறார் என்றால் சண்டை நிற்குமாம். விதானையார் வாறார் என்றால் வேலிச்சண்டை நிறுத்தப்படுமாம். வாத்தியார் வாறார் என்றால் வாக்குவாதம் மறைந்து விடுமாம். அக்காலம் முருகேசு உடையார் குடும்பச்சண்டை, காணிச்சண்டை முதலியவற்றைக் கிராமக்கோடு வருவதற்கு முன்பு நகரக்கோட்டுக்குப் போகாமல் சமரசம் செய்து வைத்தவர். இவர் திடீர் மரண விசாரணை அதிகாரியாகவும் கடமை செய்தவர். பின்பு திரு. நமசிவாயம் திடீர் மரண விசாரணை அதிகாரியாகக் கடமையாற்றினார். உடையார் பயிர்ச்செய்கைக்குழுத் தலைவராகவிருந்து வானம் பார்த்த பூமியில் மழை காலத்துப் பயிர்களை அழிக்கும் மிருகங்களைக் கட்டுப்படுத்தும் சட்ட அதிகாரமும் இவருக்கு இருந்தது.

இறுபிட்டி சனசமூக நிலையம், கிராம முன்னேற்றச் சங்கம் முதலியவற்றின் தலைவராகவும் விளங்கியவர். இத்தோடு இவர் காலத்தில் வாழ்ந்த இவருடைய மைத்துனரான விசுவலிங்கம் கார்த்திகேசு அவர்களுக்கு உறுதுணையாக அவருடைய சேவைகளுக்கும் உதவியவர். அரசாங்க சேவையிலிருந்த கார்த்திகேசு அவர்களே சத்துணவுத்திட்ட, பால் சபையின் தீவுப்பகுதி மேற்பார்வையாளராய் இருந்தார். ஐக்கிய மோட்டார் படகுச் சங்கத்தை உருவாக்கித் தீவுப் பகுதியின்

மோட்டார் படகுச் சேவையை நெறிப்படுத்திய கார்த்திகேசு அவர்களே நயினாதீவுப் படகுச்சேவையை ஆரம்பித்து புளியடித்துறையை இறங்குதுறையாக்கி பிரயாணிகளுக்கு கடல் ஆபத்து நேராமல் செய்தவர். மோட்டார் படகு இல்லாத காலத்தில் பாய்மரப் படகுகள், பெரிய வத்தைகள் புளியடித்துறையிலிருந்து புறப்பட்டாலே காற்றுப் போக்கோடு இலகுவாக நயினாதீவு - அனலைதீவு செல்லும் என்பதை ஆதாரங்களோடு நிறுவியபோது முருகேசு உடையாரின் ஆலோசனைகளும் அதற்கு மிக உதவியது.

நயினாதீவு நாகம்மாள் கோயில் திருவிழாக்களின் போது புளியடித்துறையில் யாத்திரிகர் மடம் ஒன்றும் தாகசாந்தி நிலையம் ஒன்றும் என இரு கீற்றுக் கொட்டகைகளை நிர்மாணித்த திரு. கார்த்திகேசுவுக்கு முருகேசு உடையார் பக்கபலமாகவும் துணையாகவும் பாடுபட்டவர். பெரியபுலம் வீரகத்தி விநாயகர் ஆலயத்தின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் முருகேசு உடையாருக்குப் பெரும் பங்கு இருந்தது. ஆலய நிர்வாக சபைத் தலைவராகவும் செயலாளராகவும் கடமையாற்றியதோடு திருவிழா உபயகாரர்களை ஒழுங்கு செய்வதிலும் முன்னணி வகித்தவர்.

இவருக்குப் பின்பு உடையார் உத்தியோகம் என்பது இல்லாமலே போய்விட்டது.

## முருகேசு சின்னத்துரை விதானையார்



அந்த நாட்களில் மக்கள் மத்தியில் ஏற்படும் பிணக்குகளைச் சுமுகமாகத் தீர்த்து வைப்பதில் சிறந்தவராக விளங்கியவர், இந்தச் சின்னத்துரை விதானையார் ஆவார். திடகாத்திரமான உருவமும் தீர்க்கமான உள்ளமும் கொண்டவர். தனது ஆற்றலாலும் நிறைந்த ஆளுமையாலும் தான் வகித்த பதவிக்குப் பெருமை சேர்த்தவர். முருகேசு பார்வதிப்பிள்ளை தம்பதியருக்கு மகனாகப் பிறந்த இவரது புகழ் புங்குடுதீவில் மட்டுமன்றி அனைத்துத் தீவுகளிலும் பரவியிருந்தது. நரசிங்க முதலியார் தோம்பு பரம்பரையில் வந்தவரான இவருடைய தாய்மாமன் முத்துக்குமாரு உடையாரும் சிறந்த நிர்வாகி.

புங்குடுதீவின் கல்வி வழிகாட்டி பசுபதிப்பிள்ளை அவர்கள் காலமான பின் புங்குடுதீவு கணேச வித்தியாலயத்தின் முகாமையாளராகக் கடமையாற்றிப் பாடசாலை வளர்ச்சியில் பெரும் பங்காற்றினார். புங்குடுதீவு கிழக்கு கண்ணகி அம்மன் ஆலய வளர்ச்சியில் சின்னத்துரை விதானையாரின் பங்களிப்பு அளப்பரியது. 'சின்னத்துரை விதானையார்' என்று எல்லோராலும் அன்புடன் அழைக்கப்பட்ட கணபதிப்பிள்ளை முருகேசு சின்னத்துரை 1869ஆம் ஆண்டு பிறந்தவர். புங்குடுதீவின் கிழக்குப்பகுதிக்கு விதானையாராக நீண்டகாலம் கடமையாற்றியவர்.

அந்தக்காலங்களில் கண்ணகை அம்மன் கோவிலின் பஞ்சாயத்தில் சின்னத்துரை விதானையார் முக்கிய பங்குவகித்து தேர்த்திருவிழாவையும் தீர்த்தத் திருவிழாவையும் செய்து வந்தார். புங்குடுதீவில் நடைபெற்ற சிலப்பதிகார விழாவில் சின்னத்துரை விதானையாரின் பங்களிப்பு அதிகம் உண்டு. விழாவுக்கு வந்த பிராமணப் பெரியார்களுக்கு பிராமணர்களைக் கொண்டே சமையல் செய்து கொடுத்தார். அவர்கள் தங்குவதற்கு ஏற்ற வகையில் தனது வீட்டை சீர் செய்து வழங்கினார்.

ஊர் வளர்ச்சிக்கும் சின்னத்துரை விதானையார் பெரும் பங்காற்றினார். 1910இல் வ. பசுபதிப்பிள்ளை விதானையாரின் மறைவின் பின் கணேச வித்தியாசாலையின் முகாமைப் பதவியை ஏற்று நடத்தினார். புங்குடுதீவு சண்முகநாதன் வித்தியாசாலை அமைப்பதற்கு உதவி வழங்கினார். புங்குடுதீவு கிழக்கு கிராம முன்னேற்றச்சங்க தலைவராக இருந்து பல பணிகளிலும் ஈடுபட்டார். விதானையாரின் தன்னலமற்ற சேவைக்காக எலிசபெத் மகாராணியாரின் தங்கப்பதக்கம் வழங்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார். சின்னத்துரை விதனையார் 1957ஆம் ஆண்டு காலமானார். சின்னத்துரை விதானையாரின் பரம்பரையினரே கண்ணகி அம்மன் கோவிலின் தேர்த்திருவிழாவையும் தீர்த்தத் திருவிழாவையும் செய்து வருகின்றனர். இவரது மகனான அமரர் சௌந்தரராஜன் அம்மன் கோவிலின் நிர்வாக சபையில் பலவருடங்கள் பொருளாளராகப் பணியாற்றியவர்.

புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவிலின் ஆரம்பகால வளர்ச்சியில் அமரர் மு. சின்னத்துரை விதானையாரின் பங்களிப்பு அளப்பரியது. சின்னத்துரை விதானையாரின் மூத்த மகளின் பிள்ளைகளும்மூன்றாவது மகள் முத்துவும், நான்காவது மகள் மங்கையும் கனடாவில் இப்பொழுது வாழுகிறார்கள். விதானையாரின் மகள் முத்துவே புங்குடுதீவின் முதலாவது பெண் ஜூரி (1976) ஆவார். கடைசி மகன் நவரட்ணராஜா லண்டனில் வாழுகிறார். இவர்கள் வெளியூரில் வாழ்ந்தாலும் தாம் பிறந்த பூமியான புங்குடுதீவை மறந்துவிடாமல் அடிக்கடி வந்து போகின்றனர். சின்னத்துரை விதானையாரைப் போலவே அவரது குடும்பத்தினரும் சிறப்பாக வாழுகிறார்கள்.

ஆரம்பத்தில் புங்குடுதீவு கிழக்குப்பகுதிக்கு க.மு. சின்னத்துரை விதானையாராக கடமையாற்றிய போது மேற்கே இராசேந்திரம், விதானையாராக கடமையாற்றினார். இரண்டு கிராமசேவர்கள் பிரிவாக இருந்த புங்குடுதீவு 1972ஆம் ஆண்டு முதல் மூன்று பிரிவாக பிரிக்கப்பட்டது. கிழக்குப்பிரிவுக்கு பாலசிங்கமும், மத்தியபிரிவுக்கு வைத்திலிங்கமும், மேற்குப்பிரிவுக்கு அருளலிங்கமும் கிராம சேவகர்களாக நியமிக்கப்பட்டனர். புங்குடுதீவு 5 ஆம் வட்டாரம் தில்லையம்பலம் வாத்தியாரின் மகனான பாலசிங்கம், ஆசிரியராக இருந்து கிராம சேவகராக நியமிக்கப்பட்டவர். முதலில் நயினாதீவிலும் பின்பு புங்குடுதீவிலும் கடமையாற்றியவர். சிறந்த நிர்வாகி. புங்குடுதீவில் விதானைமாரின் பணி பற்றி குறிப்பிடும் பொழுது "கிளாக்கர் கார்த்திகேசு" என்று அழைக்கப்பட்ட ஆறுமுகம் கார்த்திகேசுவின் பணிபற்றியும் குறிப்பிடவேண்டும். இவர் நீண்டகாலம் 11ஆம் வட்டாரத்தின் கிராமசபை அங்கத்தவராக கடமையாற்றியவர். பதிவு செய்யப்படாத உத்தியோகப்பற்றற்ற நொத்தாரிசாக கடமையாற்றியவர் என்று கூறிவிடலாம். நொத்தாரிசுமார்களான கா. விநாசித்தம்பி, வே.க.சுப்பிரமணியம், அருளம்பலம் ஆகியோருக்கும் புறக்டர் கதிரவேலுவுக்கும் உத்தியோக பூர்வமான பதிவாளராகக் கடமையாற்றினார்.

## இ. வைத்திலிங்கம் விதானையார்



புங்குடுதீவில் பிறந்த தலைசிறந்த நிர்வாகி. புங்குடுதீவின் கிழக்குப்பகுதி விதானையாராக நீண்டகாலம் கடமையாற்றியவர். விதானைமாருக்கெல்லாம் வழிகாட்டியவர். ஊரைதீவில் பிறந்த இராமநாதர் வைத்திலிங்கம், புங்குடுதீவு திருநாவுக்கரசு வித்தியாலயம், கணேசவித்தியாலயம் ஆகியவற்றில் கல்விகற்றவர். 68-71வரையான காலத்தில் விதானையாராக கடமையாற்றினார். புகழ் பெற்ற சின்னத்துரை விதானையாரின் மகள் வர்ணத்தை மணமுடித்தவர். கிழக்கே வைத்திலிங்கம் விதானையாராக கடமையாற்றிய பொழுது மேற்கே குமாரசாமி, விதானையாராக கடமையாற்றினார். வைத்திலிங்கம் அவர்களின் காலத்தின் பின் விதானையார் என்ற பெயர்மாறி கிராமசேவகர் என்ற பெயர் வந்தது. வைத்திலிங்கம் விதானையார் தெங்கந்திடல் பிள்ளையார் ஆலய பரிபாலனசபைத் தலைவராக இருந்து கொண்டு அக்கோவிலின் வளர்ச்சிக்கு உதவியவர். அக்கோவிலின் புனர்நிர்மாணத்தில் முன்னின்று உழைக்கிறார்.

## த. வடிவேலு விதானையார்



த. வடிவேலு ஆசிரியராகக் கடமையாற்றி விட்டு விதானையாராக வந்தவர். அனலைதீவு. வேலணை போன்ற இடங்களில் கடமையாற்றி விட்டு புங்குடுதீவின் மேற்குப்பகுதி விதானையாராக பதவி ஏற்றவர். முதலாந்தர விதானையாராவார். அருளலிங்கம் விதானையாருக்கு பின்பு கடமையாற்றினார். அப்பொழுது கிழக்குப்பகுதிக்கு குமாரதாசும், மத்தியபகுதிக்கு வைத்திலிங்கமும், மேற்குப்பகுதிக்கு வடிவேலுவும் கிராம சேவையாளர்களாக கடமையாற்றினர். புங்குடுதீவின் மூன்று கிராம சேவகர்கள் பிரிவு இவர் காலத்திலேயே ஆறு பகுதியாக பிரிந்தது.

## அருளலிங்கம் விதானையார்

புங்குடுதீவு மேற்குப் பகுதிக்கு திரு. அருளலிங்கம் நீண்டகாலம் விதானையாராக கடமையாற்றினார். அப்பொழுது கிராம முன்னேற்றத்தில் பங்கு கொண்டார். தற்பொழுது கனடாவில் வாழும் இவர் திருக்கேதீஸ்வரம் திருவாசகமடம் அமைப்பதில் பெரும் பங்காற்றினார். இவரும் இவரது மனைவியாரும் இலங்கை வந்து திருவாசகமடத்தை புனருத்தாரணம் செய்து மீண்டும் இயங்க வைத்து திறப்பு விழா செய்தனர். புங்குடுதீவு விதானைமார்களில் குமாரசாமி விதானையாரும் சிறப்பான இடத்தைப் பெறுகிறார். பின்னாளில் இவரே இறப்பு, பிறப்பு திருமணப் பதிவாளராக செயற்பட்டவர். புங்குடுதீவில் பிறந்த பலரின் பிறப்புச்சாட்சிப்பத்திரத்தில் பதிவாளராக குமாரசாமி விதானையாரின் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கிறது. புங்குடுதீவின் தண்ணீர்ப்பிரச்சினையில் அக்கறை கொண்டு கடற்கரைகளில் அணைகட்டியவர். புங்குடுதீவில் இராசேந்திரம் விதானையாரும் முக்கிய இடத்தைப் பெறுகிறார். புங்குடுதீவு மக்களில் பலரை கிளிநொச்சி போன்ற பிரதேசங்களில் குடியேற்றி அவர்களது வாழ்க்கைக்கு வழிகாட்டியவர் இராசேந்திரம் விதானையாராவர். புங்குடுதீவில் கிழக்கு, மேற்கு என்று இரண்டு பிரிவுகளாக இருந்த கிராமசேவகர் பிரிவு, பின்பு கிழக்கு, மேற்கு, மத்தி என்று மூன்று பிரிவுகளாக அதிகரித்தது.

இப்பிரிவுகளில் த. வடிவேலு, என். வைத்திலிங்கம், எஸ்.பாலசிங்கம், எஸ். அருளலிங்கம் ஆகியோர் கடமையாற்றினர். அந்த மூன்று பிரிவுகளும் பின்பு 6 பிரிவுகளாக அதிகரித்தன. எஸ். வைத்திலிங்கம், சோம. சச்சிதானந்தன், கே. சந்திரன், ரெட்ணகுமார் போன்றோர் கிராமசேவையாளர்களாக பணியாற்றினர். புங்குடுதீவைச்சேர்ந்த சடாட்சர சண்முகதாஸ் யாழ்.செயலகத்தில் அதிகாரியாக கடமையாற்றியபோது 12 கிராமசேவகர்கள் பிரிவு உருவாக்கப்பட்டது. இடப்பெயர்வின்போது கு. சந்திரன், நா. சுந்தரராஜன் போன்றோர் கிராமசேவகர் வேலையை ஒரு சேவையாகக் கருதிச் செயற்பட்டனர்.

## நிர்வாகத் திறமைமிக்க
## திருஞானம் திருலிங்கநாதன்



அழகிய முகம், ஒளி வீசும் கண்கள், நிமிர்ந்த நடை, நிலை தளராத உள்ளம், இளைய நெஞ்சம், இடையறாத சிந்தனை, இனிமையான உரையாடல்கள் இவற்றின் முழு உருவம் தான் அமரர் தி. திருலிங்கநாதன். இலங்கை வரலாற்றில் வடபுலத்தில் தனிநாயக முதலி பரம்பரையினர் நிர்வாகத்தில் சிறந்து விளங்கினர். தனிநாயக முதலிக்கு ஆறு தம்பிமார் இருந்தனர். தனிநாயக முதலி நெடுந்தீவுக்குத் தலைமை தாங்க அவனது சகோதரர்கள் யாழ். குடாநாட்டின் பல்வேறு ஊர்களுக்கும் தலைமை தாங்கினர். பொன்னாவளவு (வன்னி), அரியாலை, கரவெட்டி, நவாலி, இருபாலை போன்ற பகுதிகளை தனிநாயக முதலியின் சகோதரர்கள் ஆட்சி செய்தனர்.

இந்தப் பரம்பரையில் வந்த ஒரு நிர்வாகியே அமரர் தி. திருலிங்கநாதன் . 04.08.1929இல் புங்குடுதீவில் பிறந்த அவர், ஆரம்பக் கல்வியை யாழ். பரமேஸ்வராக் கல்லூரியிலும் உயர்கல்வியை இலங்கைப் பல்கலைக் கழக பேராதனை வளாகத்திலும் பெற்று விவசாய விஞ்ஞானப் பட்டதாரியாக வெளியேறினார். இலங்கை நிர்வாக சேவையில் இணைந்து பல்வேறு திணைக்களங்களில் பணிப்பாளராக கடமையாற்றினார். 1970களில் திட்டமிடல், திட்டம் தயாரித்தல், திட்ட அமுலாக்கல் போன்ற விடயங்கள் பற்றிக் கற்பிக்கும் விரிவுரையாளராகவும் விளங்கினார். "ஆற்றல்" என்னும் அறிவியல் சஞ்சிகையை வெளியிட்டார்.

கொழும்பிலுள்ள பல நூலகங்களுக்குச் சென்று பல ஆய்வுகளில் ஈடுபட்டுத் தமிழ் இலக்கிய வளர்ச்சி பற்றி "தேடல்" என்ற இலக்கிய ஆய்வு மன்றத்தை ஏற்படுத்திப் படைப்பாளிகளை ஒன்றிணைத்து பல நூல்கள் வெளிவர ஆவன செய்தார். அவரது பல்கலை நிபுணத்துவம், துணிச்சல், ஆழ்ந்த அறிவு, செயற்றிறன், வசீகரம், இளைய நெஞ்சம் போன்றன அவரை மாமணியாகவும் உருவாக்கியது. சமய ஈடுபாடும் புலமையும் கொண்ட பரம்பரையில் பிறந்த அவர், தனது தொழில்சார் விடயங்களில் நிறைந்த அறிவும் உயர் அதிகாரிகளுடன் சமனாக நின்று பேசும் ஆற்றலும் மற்றவர்களுக்கு உதவும் மனப்பாங்கும் மாறுபடுவோரை திருத்தும் வல்லமையும் பெற்றிருந்தார். புங்குடுதீவு பெருமக்கள் மீது அபிமானமும் நட்பும் உடையவராகவும் நகைச்சுவையும் நிறைந்தவராக அவர் வாழ்ந்தார். பொருளியல், அரசியல், மொழி, சமயம் போன்ற துறைகளில் அறிவும் ஆய்வுத் திறனும் பெற்றிருந்த இவர், பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். இவை பற்றி மும்மொழிகளிலும் பேசக்கூடிய ஆற்றலும் பெற்றிருந்தார்.

1985 ஆம் ஆண்டு அரச சேவையிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும் சீடா நிறுவனம், யாழ். பல்கலைக்கழகம் போன்றவற்றில் அதிதி விரிவுரையாளராகவும் கடமை புரிந்துள்ளார். பல்வேறு இராஜதந்திரிகளுக்கு ஆலோசகராக இருந்து வழிகாட்டினார். யாழ்ப்பாணத்தில் விசேட ஆட்பதிவுத் திணைக்கள ஆணையாளராக கடமையாற்றிய காலத்தில் "பெண்கள் ஆய்வு அபிவிருத்தி மன்றத்தை ஏற்படுத்தி பெண்களுக்கு தலைமைத்துவம், சுயதொழில் போன்ற பயிற்சிகளை வழங்கினார். வட, கிழக்கு மாகாண அபிவிருத்தி, பனைவள அபிவிருத்தி ஆகியவற்றில் அதிக அக்கறை காட்டினார். தமிழார்வம் காரணமாக புதிய கலைச்சொல்லாக்க முயற்சிகளில் சுயாதீனமாக ஈடுபட்டார். அவர் 24.08.2005இல் காலமானார். மனைவி கமலாவையும் ஒரேயொரு மகனையும் மருமகளையும் விட்டுப் பிரிந்து சென்றிருக்கிறார். 75 வயது வரை வாழ்ந்த அவர் இன்னும் சில காலம் வாழ்ந்திருந்தால் அவரது ஆற்றல் மூலம் நாம் பல நன்மைகளைப் பெற்றிருக்கலாம். அவர் பிறந்த புங்குடுதீவின் புகழும் உயர்ந்திருக்கும்.

## உதவி அரசாங்க அதிபர்
## சி. சடாட்சரசண்முகதாஸ்



புங்குடுதீவு 3ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த பிரபல தெரணியகல வர்த்தகர் இராமநாதர் சின்னத்தம்பிக்கும் நல்லம்மாவுக்கும் மகனாக 31.10.1946 இல் பிறந்தார். சடாட்சரசண்முகதாஸின் ஆரம்பக் கல்வி ஆரம்பித்தது ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாசாலையில். பள்ளிப் பருவத்திலேயே அதீத திறமையைக் காட்டிய சடாட்சர சண்முகதாஸ் 9 வயதிலேயே புலமைப் பரிசில் சித்தி பெற்றார். இடைநிலைக் கல்வியும் உயர்நிலைக் கல்வியும் வேலணை மத்திய மகாவித்தியாலயத்தில் தொடர்ந்தன. அங்கு மாணவர் தலைவனாகவும் சாரணராகவும் விளங்கினார்.

கலைமாணிப் பட்டம் பெற்றுப் பல்கலைக் கழகம் விட்டு வெளியேறிய சடாட்சரசண்முகதாஸ், இலங்கை மின்சாரத் திணைக்கள எழுதுநராக நியமனம் பெற்றார். அங்கு கடமையாற்றும் போது இலங்கை நிர்வாக சேவைக்கான திறந்த போட்டிப்பரீட்சைக்குத் தோற்றினார். 1970.10.01 ஆம் திகதி அன்றுதான் இலங்கையின் அதியுன்னத சேவையான இலங்கை நிர்வாக சேவையில் அவர் நுழைந்தார். காரியதிகாரியாக (D.R.O) வெல்லாவெளியில் அவர் பணி 1971ஆம் ஆண்டில் ஆரம்பித்தது. வறுமையில் வாடிய வெல்லாவெளி மக்கள் வாழ்வு உயர அல்லும் பகலும் அயராது பாடுபட்டார். அப்போதுதான் 1974. 06.06 அன்று பதுளையில் நீண்டகாலம் வர்த்தகத்தில் ஈடுபட்ட சின்னத்தம்பி தம்பிராஜா அவர்களினதும் அவர்தம் துணைவியார் தங்கரத்தினத்தினதும் செல்வமகள் ஜெயராணியைக் கரம்பற்றினார். 1976ஆம் ஆண்டு உதவி அரசாங்க அதிபராகக் களுவாஞ்சிக்குடியில் பதவி ஏற்றார். மக்களின் பொருளாதாரம் உயரவும், பண்பாடு பெருகவும் பணிகள் பல புரிந்தார். 1978ஆம் ஆண்டு மட்டக்களப்பு, களுவாஞ்சிக்குடியில் சூறாவளி அனர்த்தங்களை விளைவித்தபோது அங்கு அவர் கடமையாற்றாத போதும் அம் மக்களின் துயரைத் துடைக்கச் சூறாவளி நிகழ்ந்து 3ஆம் நாள் பதுளையில் இருந்து உணவு, உடைகள் எடுத்து வந்து தாராளமாக உதவினார். 1983ஆம் ஆண்டு வகுப்புக் கலவரத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டவர்களுள் அவரும் ஒருவர். அக்காலத்தில் அவர் குடும்பம் பதுளையில் வசித்தது. உடைமைகள் அனைத்தையும் இழந்து அவரும் அவர் குடும்பமும் அல்லற்பட்டனர். துன்பம் நெருங்கிவரும் போது துயரடையாமல் தன் பணியைத் தொடர்ந்தவர் அவர். 1984இல் வேலணை உதவி அரச அதிபரானார்.

புங்குடுதீவும் வேலணை உதவி அரச பிரிவில் அடங்கியது. அப்போது நாகபூஷணி அம்பாளின் வருடாந்த உற்சவத்தின்போது அலுவலகப்பான்மையிலும், தானும் ஓர் அம்பிகை அடியார் என்ற முறையிலும் தன்னால் இயன்ற உதவிகள் அனைத்தையும் ஆலயத்திற்கும் அடியார்களுக்கும் செய்தவர். 1984 ஆம் ஆண்டில் மட்டக்களப்புக்கு கச்சேரித் தலைமையக உதவி அரச அதிபராக இடமாற்றம் பெற்றார். 1989இல் யாழ்ப்பாணம் தலைமையக உதவி அதிபராகப் பதவி பெற்றுக் கடமையாற்றினார். வடகிழக்கு மாகாண சபையில் மேலதிக கல்வி இயக்குநர் என்னும் பதவியை வகித்தார். மாகாணசபை என்ற புதுக்கரு உருவாகி நல்ல முறையில் செயற்படத் தன் வல்லமையைத் தந்தவர் அவர். இக்காலத்தில் வடகிழக்கு மக்கள் அனைவரினது சுபிட்சத்துக்காகத் திட்டங்கள் பல தீட்டிச் சிறப்புடன் அவற்றை நடைமுறைப்படுத்தினார். திடீரென நோய்வாய்ப்பட்டுக் கொழும்பு நவலோக மருத்துவமனையில் 1994.11.30ஆம் நாளன்று இறைவனடி சேர்ந்தார். அவர் மறைந்தாலும் அவரது சேவைகளை எவரும் இலகுவில் மறந்துவிடமாட்டார்கள்.

## பிரதம எழுதுவினைஞர்

## அ. ந. தம்பிராசா

புங்குடுதீவு கிராம சபையில் அரைநூற்றாண்டுக்கு மேலாக எழுதுவினைஞராகப் பணியாற்றிய இவர், பாரம்பரிய வைதீக சைவத்தமிழ் மரபிலே புகழ் பெற்ற ஆசிரியர் நல்லதம்பி அவர்களின் புதல்வராவார். இவருடைய ஆலோசனையில்லாமல் புங்குடுதீவில் எந்த ஒரு அபிவிருத்தித் திட்டமோ விளையாட்டு விழாவோ நடந்ததாக வரலாறு இல்லை. சிறந்த உதைபந்தாட்ட, கரப்பந்தாட்ட வீரன். புங்குடுதீவு மேற்கு இறுபிட்டி சனசமூக நிலையத்தினை உருவாக்கி அதன் ஆரம்பத் தலைவராகப் பல ஆண்டுகள் பணியாற்றியவர். தீவுப்பகுதி சனசமூக நிலையங்களின் தலைவராக இருந்து உதைபந்தாட்டக் கரப்பந்தாட்டப் போட்டிகளை ஒழுங்குபடுத்தி சிறந்த முறையில் நடத்தியவர். யாழ். மாவட்ட சனசமூக நிலையங்கள் மூலம் நடத்தப்பட்ட கரப்பந்தாட்டப் போட்டிகளில் இறுபிட்டி சனசமூக நிலைய கரப்பந்தாட்டக் குழுவின் தலைவராக இருந்து எல்லாப் போட்டிகளிலும் பங்குபற்றி முதலாவது இடத்தைப் பெற்றுச் சிறந்த கரப்பந்தாட்ட வீரருக்கான விருதினையும் பெற்றுக் கொண்டவர். இவர் ஒரு சிறந்த உதைபந்தாட்ட கரப்பந்தாட்ட மத்தியஸ்தர். புங்குடுதீவு நலன்புரிச் சங்கம், புங்குடுதீவு இளைஞர் கழகம், மத்திய மகாவித்தியாலய பெற்றோர். ஆசிரிய சங்கம், கிராம முன்னேற்றச் சங்கம், இந்து இளைஞர் சங்கம், புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கம் முதலியவற்றின் பணிகளில் பெரிதும் ஈடுபட்டவர். புங்குடுதீவு கொம்மாபிட்டி - சங்குமால் நீண்ட வீதி அமைப்பை நிறைவேற்றி வைத்த பெருமை இவரையே சாரும். எந்த ஒரு திட்டத்தையும் மிகவும் திட்டமிட்டுச் சிறப்பாகச் செய்து முடிக்கும் ஆற்றல் மிக்கவர். புங்குடுதீவு கிராமசபைத் தலைவர்களின் செயலாளராகப் பணியாற்றிய இவர், தகுந்த ஆலோசனைகளை வழங்கி வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

## எஸ். இராமலிங்கம்

புங்குடுதீவு 12இல் பிறந்த எஸ். இராமலிங்கம் ஒரு சிறந்த நிர்வாகி ஆவார். நீண்டகாலம் கொழும்பில் கடமையாற்றினாலும் புங்குடுதீவின் வரலாறு, பண்பாடு போன்றவற்றை அறிந்து வைத்திருந்தார். பல பகுதிகளிலும் உதவி அரசங்க அதிபராக கடமையாற்றியவர். எமது கிராமத்தின் எழுச்சி முயற்சிகளில் முன்னிற்பவர். கொழும்பு புங்குடுதீவு அபிவிருத்திச்சங்கம் ஏற்படுத்தப்பட்டபோது அதன் செயலாளராக கடமையாற்றி சங்கத்தின் பணிகளுக்கு முன்னின்று உழைத்தவர்.

# 8

# புங்குடுதீவின் தொழில்கள்

1950க்கு முன்பு பாரம்பரிய விவசாய முறைகள் மூலமே பொருளாதாரம் பேணப்பட்டது. இங்கு வாழ்ந்த மக்கள் தாழ்நிலங்களில் நெல், வரகு போன்ற பயிர் வகைகளையும் உயர் நிலங்களில் பயறு, உழுந்து, குரக்கன், சாமை, வெங்காயம், மிளகாய், புகையிலை, மரக்கறி வகைகளையும் பயிரிட்டு வந்தனர். அவை அனைத்தும் மழையை நம்பியே செய்யப்பட்டன. மழைநீரை தேக்கி வைத்திருந்து விவசாயம் செய்யக்கூடிய குளங்கள் போன்றவை அதிகம் இல்லாமையால் குறுகிய காலத்திலேயே இப்பயிர்ச்செய்கையும் முடிந்துவிடும். புகையிலை வெளி இடங்களுக்கு அனுப்பப்பட்டாலும் நெல்லும் சிறுதானியங்களும் உள்ளூர்த் தேவைகளையே பூர்த்தி செய்தன.

20ஆம் நூற்றாண்டின் ஆரம்பப்பகுதியில் தீவுப்பகுதிகளில் பெருமளவு பணப்புழக்கம் இருக்கவில்லை. ஒவ்வொருவரும் தமது சேவைக்குப்பதிலாக பண்டங்களை வழங்குதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர். நாவிதர்கள், சலவைத்தொழிலாளர்கள், பறையடிப்போர் போன்றோர் சேவைகளுக்கு நெல், உபதானியங்கள், பனம்பொருட்கள் போன்றன கூலியாக வழங்கப்பட்டன.

புங்குடுதீவில் கால் நடைவளர்ப்பு என்பது இலகுவாக செய்யக்கூடியதாக இருந்தது. அதிக புல்வெளி இருந்தன. கோடை காலத்தில் தரிசு நிலங்கள் இருந்தன. இவற்றில் கால்நடைகள் மேயக்கூடிய வாய்ப்பு இருந்தது. கால்நடைகளிலும் குறிப்பாக செம்மறிஆடு வளர்ப்பு என்பது புங்குடுதீவின் கிழக்கு, மத்திய பகுதிகளில் சிறப்புற்று விளங்கியது. குறிச்சிக்காட்டுக்கும் மடத்து வெளிக்கும், வரதீவுக்கும் இடைப்பட்ட பகுதியில் வயல் நிலங்களும் சிறு பற்றைகளும் இருந்தமையால் அப்பகுதியில் செம்மறியாடு வளர்க்க வசதியாக இருந்தது. செம்மறி ஆடுகளை மேய விட்டுவிட்டு உரிமையாளர் அவற்றைப் பார்த்துக் கொண்டு நிற்பார்.

1950-1970 ஆம் ஆண்டு காலப்பகுதிகளிலும் சிலர் செம்மறியாடுகளை வளர்த்ததை என்னால் அவதானிக்கக் கூடியதாக இருந்தது. விதைப்புகள் நடைபெறும் காலங்களில் கால்நடைகளை அறுக்கையாக கட்டி அவிழ்த்தும், கோடை காலங்களில் கால்நடைகள் அனைத்தையும் அவிழ்த்து விட்டும் பாதுகாத்தனர். இந்த அறிவித்தல்களை கிராமசபையினர் பறையடித்து (பிரேத்தம்) மக்களுக்கு தெரிவிப்பர்.

ஆரம்பத்திலிருந்து புங்குடுதீவில் அதிக பனை மரங்கள் இருந்தன. புங்குடுதீவு மக்களின் உணவில் கணிசமான பகுதி பனம் பொருட்களிலிருந்தே கிடைத்தன. பனம் பொருட்கள் பல வள்ளங்கள் மூலம் எடுத்துச் செல்லப்பட்டு யாழ்ப்பாணச் சந்தையில் விற்பனை செய்யப்பட்டன. சில பனம்பொருட்கள் இந்தியாவுக்குக்கூட ஏற்றுமதி செய்யப்பட்டன. இப்படி இவை வள்ளங்கள் வத்தைகள்மூலம் ஏற்றிச் செல்வதற்கு திமிலர் என்ற மீன்பிடியாளர்கள் பெரிதும் உதவினர். "திமில்" என்பது தோணியைக் குறிக்கிறது.

தென்னையும் புங்குடுதீவு மக்களின் உணவுத் தேவையின் ஒரு பகுதியைப் பூர்த்தி செய்தது. வீடுகளில் கூட 10 - 12 வரையான தென்னைமரங்கள் வளர்க்கப்பட்டன. வீடு வேய்வதற்கும் வேலி அடைப்பதற்கும் தென்னங்கிடுகுகள் பயன்படுத்தப்பட்டன. 1950-1991 காலப்பகுதியில் புங்குடுதீவில் ஏறக்குறைய 70 கள்ளிறக்கும் தொழிலாளர் குடும்பங்கள் காணப்பட்டன. இவர்களில் பெரும்பாலோர் பள்ளர் சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். ஒரு சிலர் இந்தியாவில் தமிழ் நாட்டிலிருந்து வந்திருந்தனர். பருவகாலத்தில் பனையிலும் வருடம் தோறும் தென்னையிலிருந்தும் கள் இறக்கப்பட்டது. பனங்கள் தென்னங்கள் என்பன உள்ளூர் தேவைகளுக்கே பயன் படுத்தப்பட்டன.

புங்குடுதீவில் மீன்பிடித் தொழில் ஆரம்பத்தில் பாரம்பரிய முறையிலேயே செய்யப்பட்டன. 1950-1991 காலப்பகுதியில் இங்கு மீன்பிடித் தொழிலில் ஈடுப்பட்ட 50 குடும்பங்கள் இருந்தன. இத்தொழிலாளர்கள் உள்ளூர் மக்களின் கடலுணவுத் தேவையை பூர்த்தி செய்வதை நோக்கமாகக் கொண்டு தொழில் செய்தனர். வீச்சுவலை, பறிக்கூடு மூலம் மீன்பிடிக்கும் முறையே அதிகமாக காணப்பட்டது. பருவகாலத்தில் வெளியூர்க்காரர்கள் புங்குடுதீவுக்கு வந்து தெற்குக் கரையில் கோரியாவடி முதல் குறிகாட்டுவான் வரை உள்ள கடற்கரையில் வாடிகள் அமைத்து ஆழ்கடல் மீன்பிடியில் ஈடுபடுவர். இவர்கள் தாம் பிடிக்கும் கடலுணவின் பெரும்பகுதியை யாழ்ப்பாணச் சந்தையில் விற்பதையே வழக்கமாகக் கொண்டிருந்தனர். உள்ளூர் மக்கள் சிலர் இரவில் பந்தம், சூள், பெற்றோமக்ஸ் வெளிச்சத்தின் துணையுடன் மீன்களைப் பிடித்து தமது குடும்பத்துக்கான மீன் தேவையைப்பூர்த்தி செய்வர். மீன்பிடித் தொழில் சாதி அடிப்படையிலேயே செய்யப்பட்டது.

தச்சுத் தொழில் செய்பவர்கள் புங்குடுதீவின் 4 ஆம் வட்டாரத்திலேயே செறிந்து வாழுகின்றனர். 1980ஆம் ஆண்டளவில் இத்தொழில் செய்யும் 400 குடும்பங்கள் இங்கு வாழ்ந்தனர். உள்ளூரில் வீடுகள் கட்டுவதற்கும் கோயில்கள் கட்டுவதற்கும் இவர்களது சேவை பெறப்பட்டது. இவர்கள் வெளியூர்களுக்கும் சென்று தொழில் செய்தனர்.

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் பெருந்தோட்டப்பயிர்ச்செய்கை அறிமுகப்படுத்தப்பட்டது. யாழ்ப்பாண மாவட்டத்தைச் சேர்ந்த பலர் பெருந்தோட்டப்பகுதிகளில் தொழில் நாடிச்சென்றனர். அப்படிச் சென்றவர்களில் புங்குடுதீவைச் சேர்ந்தவர்களும் அடங்குவர். எஸ்ரேற் வாத்தியார், கிளார்க் வேலை என்பவற்றில் பலர் ஈடுபட்டனர். எஸ்ரேற் வாத்தியார்களாக இருந்தவர்கள் பின்பு அரசாங்க ஆசிரியர்களாக மாறினர். அக்காலத்தில் சிங்கப்பூர் மலாயாவுக்கான இடம்பெயர்வில் புங்குடுதீவைச் சேர்ந்த நூற்றுக்கணக்கானோர் ஈடுபட்டனர். மலேசியன் பென்சனியர்கள் பலர் புங்குடுதீவிலும் இருக்கின்றனர். வர்த்தக நோக்கங்கொண்டவர்கள் தென்னிலங்கைக்குச் சென்றனர். இவர்கள் ஊரெல்லாம் சென்று உழைத்த பணம் புங்குடுதீவிற்கு வந்து சேர்ந்தது. புங்குடுதீவு தபாலகத்தில் இந்தப் பணத்தை வழங்கு வது தான் பெரிய வேலையாக இருந்தது. மணியோடர்ப் பொருளாதாரம் உருவாகியது.

1950ஆம் ஆண்டுகளுக்குப்பின் பாடசாலைகளிலிருந்து இடைவிலகிய பலர் தென் இலங்கையிலுள்ள வர்த்தக நிலையங்களில் வேலை செய்யச் சென்றனர். பின்பு இவர்களிற் சிலர் அவ்வப்பகுதிகளில் கடைகள் போன்றவற்றை வாங்கி முதலாளிகளாக ஆனார்கள்.

முதலாளிகள், ஆசிரியர்கள், சிப்பந்திகள், மற்றும் அரச ஊழியர்கள் தமது வருமானத்தை புங்குடுதீவுக்கு மணியோடர் மூலம் அனுப்பினர். இவ்வகையான நடைமுறை மணியோடர் பொருளாதரம் என அழைக்கக்கூடிய அளவுக்கு உயர்ந்தது. விவசாயத்துடன் தொடர்புடையவர்களில் சிலர் 1950களில் அரசினால் ஆரம்பிக்கப்பட்ட வன்னிப்பிரதேசக்குடியேற்றத் திட்டங்களில் குடியேறினர். அங்கு சென்றவர்களிற் பலர் காடுகளை அழித்து கமம் செய்தனர். அவர்களிற் சிலர் சிறு சிறு விவசாயங்களைச் செய்தனர்.

ஐரோப்பியர் ஆட்சிக்காலத்தில் பெரும்பாலான வர்த்தக மையங்கள் அவர்களுக்குச் சொந்தமானவையாக இருந்தன. ஐரோப்பியர் சம்பந்தப்படாத வர்த்தக நிலையங்கள் இந்தியச் செட்டிமார்கள், இந்திய முஸ்லிம்கள், கொழும்புச் செட்டிமார்களுக்கு சொந்தமானவையாக இருந்தன. "செட்டிமார்களும், முஸ்லிம்களும் நாட்டின் சுறுசுறுப்பான வர்த்தகர்கள்" என்று 1799 ஆம் ஆண்டு ஆளுநர் நோர்த் கூறியிருக்கின்றார். 1880 களில் அரிசி, புடவை மற்றும் அத்தியாவசியப் பொருள்களின் வர்த்தகத்தில் செட்டியார்களின் 86 நிறுவனங்களும் முஸ்லிம்களின் 64 நிறுவனங்களும் முன்னணி வகித்தன. அக்காலத்தில் புறக்கோட்டை சில்லறை வர்த்தகம் முழுமையாக இவ்வாறான சமூகத்தினரின் கைகளில் இருந்தது.

1960-1961 ஆம் ஆண்டுகளில் இலங்கை அரசாங்கம் இலங்கையில் மொத்த வர்த்தகத்தில் ஈடுபட்டு வந்த இந்திய, பாகிஸ்தான் வர்த்தகர்களின் தற்காலிக வதிவிட விசாவை இரத்துச் செய்தது. அதனால் அவர்கள் உடனடியாக நாட்டை விட்டு வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் இந்தியத்தமிழர்கள் தமது கடைகளில் விசுவாசமாக வேலை செய்த தீவுப்பகுதி இளைஞர்களிடமும் பாகிஸ்தானியர்கள் கொழும்பு முஸ்லிம்களிடமும் சொற்ப விலைக்கோ அல்லது இலவசமாகவோ தமது கடைகளை கொடுத்துவிட்டுச் சென்றனர்.

இதனால் உப உணவு வர்த்தகம் தீவுப்பகுதி வர்த்தகர்களின் கைக்குச் சென்றடைந்தன. இதனால் புங்குடுதீவு இளைஞர்களும் முதலாளிகளாக உயர்ந்தனர். இதனால் புறக்கோட்டையில் 4ஆம், 5ஆம் குறுக்குத்தெருக் கடைகள் பல புங்குடுதீவு முதலாளிகள் வசமாயின. புங்குடுதீவு பொருளாதாரத்தில் உயர்ந்தது. மக்கள் வங்கி, கிராம வங்கி, கூட்டுறவு வங்கி, பண்டக சாலை, நீதிமன்றம், கிராம நீதி மன்றம், நூல் நிலையம், நெசவு நிலையம், சனசமூக நிலையங்கள், உபதபால் நிலையங்கள் எனப் பல தோன்றின. இவை ஊர் வளர்ச்சிக்கு பெரிதும் பயன்பட்டன.

பாடசாலைகளுக்கென்று சிறுசிறு விளையாட்டு மைதானங்கள் அமைந்திருந்தாலும் ஊருக்கு மத்தியில் சகலருக்கும் பொதுவான ஒரு விளையாட்டு மைதானம் அமைந்திருக்கிறது. 8 பரப்பு அளவுள்ள முற்றவெளியே அது. இதுவே ஊரினதும் மாணவர்களினதும் வளர்ச்சியையும் விளையாட்டு ஊக்கத்தையும் கொடுத்தது. மாரிகாலத்தில் மழை நீர் நிறைந்து சேறும் சகதியுமாக காணப்படும் இம் மைதானம், கோடை காலத்தில் புழுதியும் தூசியும் நிறைந்து காணப்படும்.

புங்குடுதீவு வர்த்தகர்கள் தென்னிலங்கையின் பல இடங்களிலும் வர்த்தகம் செய்த போது பெயருடனும், புகழுடனும் விளங்கினர். அவர்கள் எந்த ஊரில் வர்த்தகம் செய்தார்களோ அந்த ஊரின் பெயரும் வர்த்தகத்தின் பெயரும் அவர்களின் பெயர்களுடன் சேர்ந்து கொண்டன.

"பொறளை- நாகலிங்கம், காவத்தை-கணபதிப்பிள்ளை, பாணந்துறை - ஐயாத்துரை, அகலவத்தை-பொன்னையா, பள்ளிமடு-ராசையா, தெரணியகல - தம்பர், பதுளை-வைத்திலிங்கம், உப்புக்குளம்-பொன்னையா, குளியாப்பிட்டி -அப்பாக்குட்டியர், மகோ-கண்ணையா, பெல்மதுளை-ராசையா, குறுவிட்ட -ராசையா, நுவரெலியா-கார்த்திகேசு என்பவை இவற்றுக்கு சில உதாரணங்களாகும்.

புங்குடுதீவுக்குள்ளே பிரதான சந்திகளில் ஆரம்பம் முதல் பலர் கடைகள் வைத்து வியாபாரம் செய்தனர். சந்தையடியில் சுப்பிரமணியமும் பரநிருபசிங்கமும் நீண்டநாட்கள் கடை வைத்திருந்தனர். இவர்களைப் போலவே பலரும் ஒவ்வொரு சந்தியிலும் பிரதான விதிகளின் ஒரங்களிலும் கடை வைத்து வியாபாரம் செய்தனர். 1958ஆம் ஆண்டு கலவரத்தின் பின் தென் இலங்கையில் கடை வைத்திருந்த சிலர் தமது கடைகளை புங்குடுதீவில் திறந்தனர். அவர்களில் காவத்தை கணபதிப்பிள்ளையும் அகலவத்தை - கந்தையாவும் முக்கியமானவர்கள். ஆரம்பத்தில் புங்குடுதீவில் சில கடைகளே இருந்தன. அவையும் கொட்டில் கடைகளாகவே காணப்பட்டன. அவற்றில் சந்தையடியில் ஆரம்பமான கடைகள் முக்கியமானவை. சந்தையடியில் முதன்முதலில் மாம்பழக் கார்த்திகேசு என்பவர் கடை வைத்திருந்தார் என்று அறிய முடிகிறது.

பொன்னையர் என்பவர் தனது கடையை மகாவித்தியாலயத்துக்கு எதிரே உள்ள வளவில் ஆரம்பித்தார். மின்சாரம் வராத அக்காலத்தில் நெல்லுக் குற்றிக் கொடுப்பார். நெல்லுக் குற்றுவதற்கு கையால் இயக்கக் கூடிய உரலும் உலக்கைகளும் அவரது கடைக்குள் இருந்தன. அவர் தனது கடைக்குப் பின்வளவில் சின்னக் கதிர்காமம் என்ற கோயிலையும் ஏற்படுத்தினார். வே.சுப்பிரமணியம் 3 ஆம் வட்டாரத்தில் மாரியம்மன் கோவில் வீதியில் கடை வைத்திருந்தார். அந்த கடையை மணியத்தார் 1955ஆம் ஆண்டளவில் சந்தையடியில் அமைத்தார். அக்கடையே பிற்காலத்தில் சந்தையடி மணியம்கடை என்று புகழ்பெற்றது. புங்குடுதீவில் முதன்முதலில் இரண்டு மாடிக்கட்டிடத்தில் உருவான கடை இவருடையதே ஆகும். அனைத்து மருந்துச் சாமான்களும் இவரது கடையில் விற்பனைக்கு இருந்தன.

சுப்பிரமணியம் பெரிய செல்வந்தராக விளங்கினார். அவர் கடை வைத்திருந்ததுடன் புகையிலை தோட்டமும் செய்தார். தனது ஊரில் உள்ள மக்களுக்கு பல சேவைகளையும் செய்தார். தான் வாழ்ந்த பகுதியில் உள்ள கிணறுகளைச் சுத்தம் செய்தார். கால்நடைகள் நீர் பருகுவதற்கு குளங்களை அமைத்தார். பொதுக்கிணறுகள் பலவற்றை அமைத்துக் கொடுத்தார். அவற்றில் இரண்டு கிணறுகள் முக்கியமானவை. ஒன்று மேற்கூரில் பெருங்காடு கந்தசாமி கோயில் குளத்துக்கும் பிரதான வீதிக்கும் இடையில் இருக்கும் கிணறு. மற்றது கிழக்கூரில் கண்ணகை அம்மன் கோவிலுக்கு முன்னே தண்ணீர் பந்தலுக்கு அருகில் இருக்கும் கிணறு. மணியத்தார் மரண வீடுகளுக்கு உதவுவதில் முன்னிற்பார். இவரது வீட்டில் பலவண்டில்களும் மாடுகளும் நின்றன. மரணவீட்டுக்கு பூவரசங்கட்டைகளை இவரது மாட்டுவண்டி மூலமே ஏற்றி இறக்க ஆவன செய்வார். பிற்காலத்தில் தனது ட்றக்டர் வண்டி மூலம் இச்சேவையைச் செய்தார்.

1972 ஆம் ஆண்டு சந்தையடியிலுள்ள தனது கடையை மகன் கருணாகரனுக்குக் கொடுத்துவிட்டு புதியகடையொன்றை பெருங்காட்டுப் பிள்ளையார் கோவிலடியில் அமைத்தார். தனது சொத்துகளை தனது பிள்ளைகளுக்குப் பிரித்துக் கொடுத்து விட்டே காலமானார். சந்தையடியில் மணியங்கடை போலவே பரநிருபசிங்கம் கடையும் பழமையானது. இவரது கடையே பத்திரிகை பலவற்றுக்கு ஏஜென்சியாக விளங்கியது. இவருக்கு கார் ஒன்றும் சொந்தமாக இருந்தது. இவரின் கடைக்கு எதிரே ஆறுமுகம் என்பவரும் கடை வைத்திருந்தார்.

அம்மாகடைச் சந்தியில் தம்பிப்பிள்ளை என்பவர் கடை வைத்திருந்தார். "அம்மா" என்று அழைக்கப்பட்டவரும் அவரது கணவர் சின்னையரும் கடையைத் திறந்தனர். "அம்மா" என்பவர் கடை வைத்திருந்தபடியால் "அம்மாகடைச்சந்தி" என்று பெயர் வந்து விட்டது. அதே காலத்தில் சற்றுத்தள்ளி நெத்தலிக் கந்தையர் கடைவைத்திருந்தார். இவரது கடை சட்டி, பானை, மருந்துச் சாமான்களுக்குப் புகழ்பெற்றது. கணேச வித்தியாசாலைக்கு முன்புறம் சுப்பிரமணியம் நீண்டகாலம் கடை நடத்தினார். அதே கடையை பின்பு தம்பையாவும் பிள்ளைகளும் நடத்தினர். இக்கடையை பின்னாளில் சோதி என்பவர் நடத்தினார்.

அம்மா கடைச் சந்தியில் உள்ள அம்மா கடையை விஸ்வலிங்கம் என்பவர் நடத்தினார். அது அப்பொழுது கூப்பன் கடையாக விளங்கியது. அதே கடையை பின்பு இலட்சுமணன் நடத்தினார். அதற்கு எதிரே பின்பு குழந்தை கடை கட்டினார். அம்மாகடைச்சந்தியின் இடது பக்க வீதியின் மூலையில் நெத்தலிக் கந்தையரின் மருமகன் வே. கோபாலபிள்ளை இன்னுமொரு கடை கட்டினார். அதை க. தனபாலன் நடத்தி வந்தார்.

1945காலப்பகுதியில் அம்பலவாணர் அரங்கிற்கு எதிரே வைரவநாதர் கந்தையா என்பவர் கடை வைத்திருந்தார். அவரின் காலத்தின் பின்பு அதே இடத்தில் தம்பிப்பிள்ளை கடை வைத்திருந்தார். ஆலடிச்சந்தியில் முதலில் குமார் என்பவர் கடை ஆரம்பித்தார். இதே சந்தியில் 1945 அளவில் கார்த்திகேசு தம்பையா கடை அமைத்தார். அது ஆலடிச் சந்தியின் கிழக்கு வீதியில் (வாசிகசாலை இருக்கும் இடத்தில்) அமைந்திருந்தது. இதே கிழக்குவீதியில் தனது வளவில் இராசையர் ஒரு கடை வைத்திருந்தார்.ஆலடிச்சந்தியின் ஆலமரத்துக்குக்கீழ் சாமியார் தாமோதரம் பிள்ளை நீண்ட நாட்களாக கடை வைத்திருந்தார். அவரை அடுத்து இதே இடத்தில் வினாசித்தம்பியர் நீண்டகாலம் கடை வைத்திருந்தார்.

ஆலடிச்சந்தியின் தெற்கு வீதியில் முருகேசு என்பவர் கடை வைத்திருந்தார். 1965 காலப்பகுதியில் நாகமுத்து ஆச்சி கடை வைத்திருந்தார். ஆலடிச்சந்தியின் கிழக்குப்புறக்காணி சரவணமுத்து ஆசிரியருக்கு சொந்தமாக இருந்தது. அந்தவளவில் சு. கோபாலன் புதியகட்டிடம் ஒன்றை கட்டினார். அந்தக் கட்டிடத்தின் ஒரு அறையில் கந்தையா கடை வைத்திருந்தார். நடு அறையில் மருந்துக்கடை இருந்தது. மற்றக்கடை நாகமுத்து ஆச்சிக்கு வழங்கப்பட்டது.

கண்ணகை அம்மன் கோவில் பிரதான வீதியில் வல்லன் வீதி ஆரம்பிக்கும் சந்திக்குப்பெயர் குழந்தை கடையடிச்சந்தி ஆகும். குழந்தைவேலு என்பவர் நீண்டகாலமாக கூப்பன்கடை வைத்திருந்தமையால் "குழந்தை கடையடிச்சந்தி" என்று பெயர்வந்து விட்டது. இந்த குழந்தையரின் மகன் கு. கனகலிங்கம் தான் அம்மன் கோவில் நிருவாக சபையின் பொருளாளர். அம்மன் கோவிலின் பின்வீதியில் சின்னையா கடை வைத்திருந்தார். 10 ஆம் வட்டாரத்தில் மணியாறன் தோட்டவீதியில் சாண்டாத்தி கடையும் பழமையானது. இந்தக்கடையை பின்பு கணேசன் என்பவர் நடத்தினார்.

இறுபிட்டியிலும் பலர் கடைகளை ஆரம்பித்தனர். தம்பர் என்பவர் கடை வைத்திருந்ததால் தம்பர் கடைச்சந்தி என்ற பெயரே வந்து விட்டது. துரையப்பா என்பவரும் கடைவைத்திருந்தார். பெருங்காடு பிரதானவீதியில் வேதக்குட்டியர் கடை வைத்திருந்தார். இந்த இடம் வேதக்குட்டியர் கடையடி என்று இன்றும் கூறப்படுகிறது.

குறிகாட்டுவானில் சு. திருநாவுக்கரசு நயினாதீவு பக்தர்களுக்காக தண்ணீர்ப்பந்தல் அமைத்தார். அவரது சேவைக்கு அரசாங்கம் அவ்விடத்தில் காணி வழங்கியது. அந்தக்காணியின் ஒரு பகுதியை தண்ணீர்ப்பந்தலுக்கு வழங்கினார். மிகுதிப்பகுதியில் கடையொன்றைக் கட்டி நீண்ட நாட்கள் நடத்தி வந்தார். போக்கத்தையில் கணபதிப்பிள்ளை கடை அமைத்தார். அதன்பின்பு அதை சரவணமுத்து நடத்தினார். இப்பொழுதும் அந்தக் கடை நின்று நிலைக்கிறது. அதை நாதன் செய்து வருகிறார். அதன் பின்னுள்ள வெதுப்பகமும் நடைபெறுகிறது.

புங்குடுதீவின் சந்தையடியில் ஒரேயொரு நகை செய்யும் பட்டறை இருந்தது. அதை மு. இராமலிங்கம் என்பவர் நீண்டகாலம் நடத்தி வந்தார். புங்குடுதீவுக்கு நீண்டநாட்களின்பின் மின்சாரம் வந்தது. அதன்பின்பு சில தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டன.மிளகாய்த்தூள் அரைக்கும் ஆலையை வே.க.சோமசுந்தரம் கந்தசாமி கோவிலடியில் ஆரம்பித்தார். சுண்ணாம்பு தயாரிக்கும் தொழிற்சாலையை மு. சிவலிங்கம் ஆரம்பித்தார். புங்குடுதீவின் முதலாவது வெதுப்பகத்தை போக்கத்தையில் காவத்தை கணபதிப்பிள்ளை ஆரம்பித்தார். 1945 அளவில் பழையதுறையில் ஐயம்பிள்ளை, ஆறுமுகம் ஆகியோர் கடை வைத்திருந்தனர்.

1950 ஆம் ஆண்டளவில் மடத்து வெளித்துறையில் செல்லப்பா என்பவர் கடை வைத்திருந்தார். அவர் இறங்குதுறையினூடாக வரும் பயணிகளிடம் ஆயம் (கூலி) பெற்றுக்கொண்டே இந்தக் கடையை நடத்தி வந்தார். அதனால் "ஆயக்காரச் செல்லப்பா" என்றும் அழைக்கப்பட்டார். சிவசம்பு, நாகலிங்கம், சோமாஸ்கந்தன் ஆகியோர் மடத்துவெளி முருகன் கோவிலுக்கு முன்பு இளையதம்பி கட்டிடத்தில் நீண்டகாலம் கடை வைத்திருந்தனர்.

வல்லனில் நீண்டகாலம் குதிரைக்கார மணியம் கடை வைத்திருந்தார். இவரது கடைக்குப் பக்கத்தில் லோயர் நடராசாவும் கடை வைத்திருந்தார். சண்முகநாதன் வித்தியாலயத்துக்கு அருகில் மருதப்பு என்பவர் கடை வைத்திருந்தார். நடராசா என்பவரால் புதையல் என்ற இடத்தில் கடையொன்று நடத்தப்பட்டது. வெ. கார்த்திகேசு, என்.கே. மயில்வாகனம் அவர்களின் மாமனாராவார். இவர் புங்குடுதீவு கிராமசபையின் உதவித் தலைவராக இருந்தவர்.

இவர்தான் புங்குடுதீவில் முதன்முதலில் கொட்டில் அமைத்து சுருட்டுக் கைத்தொழிலை ஆரம்பித்து வைத்தவர். கொழும்பிலும் அவருக்கு கடை இருந்தது. 1983இல் திரு கார்த்திகேசு புங்குடுதீவு இணக்க சபையில் அங்கத்தவராக இருந்து சேவை செய்தவர்.

பிற்காலத்தில் அமைக்கப்பட்ட கடைகளில் பெரும்பாலானவை, வெளியூர்களில் கடைவைத்திருந்து அங்கு ஏற்பட்ட கலவரங்கள் காரணமாக புங்குடுதீவுக்கு வந்து அவர்களால் அமைக்கப்பட்ட கடைகளாகும். காலப்போக்கில் சந்தையடி, கந்தசாமி கோவிலடி, இறுபிட்டி, குறிகாட்டுவான் ஆலடி அம்மாகடைச்சந்தி போன்ற பிரதான வீதிகளிலும் கிராமத்தில் உட்புறங்களிலும் சிறுசிறு கடைகள் உருவாகின.

இலங்கையின் இனப்பிரச்சினை காரணமாக 1975க்குப் பின்னர் மெதுவாகவும் 1983ஆம் ஆண்டுக்கு பின்னர் அதிகமாகவும் புங்குடுதீவைச் சேர்ந்த இளைஞர்கள் பலர் ஜேர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து, சுவிற்சர்லாந்து, கனடா போன்ற நாடுகளுக்கு இடம் பெயர்ந்தனர். பின்பு தமது குடும்பத்தினரையும் அங்கு அழைத்துக் கொண்டனர். புங்குடுதீவுப் பொருளாதாரம் "ஶாவ்ற பொருளாதாரமாக" மாறியது. 1991 ஆம் ஆண்டு தீவுப்பகுதி நோக்கிய இராணுவ படையெடுப்பு புங்குடுதீவின் மக்களில் பெரும்பாலானோரை இடம்பெயரவைத்தது. 17000 பேர் வாழ்ந்த புங்குடுதீவில் 800 பேராகக் குறைந்தனர். இது புங்குடுதீவின் பொருளாதார அமைப்பில் மிகப்பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது.

சைமன் காசிச் செட்டி என்ற அறிஞர் இலங்கையின் பழைய வரலாறுகளை எழுதியவர். இவர் தனது நூலொன்றில் புங்குடுதீவில் செய்யப்பட்ட தொழில்கள் பற்றியும் எழுதியிருக்கிறார். புங்குடுதீவில் வாழ்ந்தவர்கள் "விவசாய உற்பத்தியிலேயே அதிக கவனம் செலுத்தியிருந்த போதிலும் மந்தை வளர்த்தல், மீன்பிடித்தல், சிப்பியெடுத்தல் போன்றவற்றிலும் ஈடுபட்டார்கள்" என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆரம்பகாலந்தொட்டு புங்குடுதீவில் பாரம்பரிய முறையிலேயே விவசாயம் செய்யப்பட்டுவந்தது. மேட்டுநிலங்களில் சிறுதானியங்களும் புகையிலைச் செய்கையும் தாழ்நிலங்களில் நெல்லுற்பத்தியும் செய்யப்பட்டன. பெரும்பாலும் இவை மழையை நம்பியே செய்யப்பட்டு வந்தன. இந்த விவசாயச் செயற்பாடுகள் சுயதேவைகளை மட்டுமே பூர்த்தி செய்தன. போதிய விஞ்ஞான தொழில் நுட்ப வசதிகள் அற்ற அக்காலத்தில் மக்கள் மந்தைகளை வளர்த்து அவற்றின் பயன்களை உணவுக்காக பயன்படுத்தினர். அது மட்டுமன்றி அவற்றின் உதவியுடனேயே விவசாயத்தையும் மேற்கொண்டு வந்தனர். நிலத்தை உழுவதற்கும் சூடு மிதிப்பதற்கும் எருது மாடுகளையே பயன்படுத்தினர். உள்ளூர் பிரயாணங்களுக்கு மாட்டு வண்டிகளையே பயன்படுத்தினர். பொதுவாக ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு பசு மாடு வளர்க்கப்பட்டது. ஒவ்வொரு வீட்டிலும் கறந்த பசுப்பாலில் சிறிதளவு கோயிலுக்கு கொடுக்கும் வழக்கம் இருக்கிறது. மிஞ்சியபால் மூலம், தயிர், வெண்ணை செய்யப்பட்டன. ஆடுகளும் வளர்க்கப்பட்டன. சில வசதி படைத்த வீடுகளில் மாட்டுப்பட்டிகள் இருந்தன.

மாரிகாலத்தில் புங்குடுதீவின் வயல்களில் நெல்விளையும். அதில் செழித்து வளரும் முதல் நெற்கதிர்கள் சிலவற்றை வெட்டி எடுத்து கற்றையாக கட்டி வீட்டுவாசலின் மேல்வளையில் கட்டித்தொங்கவிடுவது வழக்கமாகும். நெல்வயல்கள் உள்ளவர்களின் வீடுகள் அனைத்திலும் இந்த நெற்கதிர்கள் தொங்குவதைக் காணலாம். இச்செயலானது நெல்பயிரிடுதலுடன் புங்குடுதீவு மக்கள் எத்தனை தொடர்பு பட்டிருந்தார்கள் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

தாழ்வான வயல்களில் நெல்லும் உயர்ந்த இடங்களிலே வரகு, பயறு, உழுந்து, எள்ளு முதலியனவும் மாரிகாலத்தில் பயிரிடப்பட்டன. நன்னீர் உள்ள இடங்களில் வாழை, மரமுந்திரிகை நடப்பட்டன. தெற்குப்பகுதி போன்ற இடங்களில் மிளகாய், வெண்டி, கத்தரி, தக்காளி, மரவெள்ளி, பாகல் முதலியன பயிரிடப்பட்டன. சில இடங்களில் புகையிலை, மிளகாய், வெங்காயம் என்பன பயிரிடப்பட்டன.

காலநிலையின் தன்மையும் நிலக்கீழ் நீரின் அருமையும் புங்குடுதீவின் விவசாயத்துக்கு பெரிதாக இடமளிக்கவில்லை. ஆனாலும் நீர் வசதியுள்ள இடங்களில் தோட்டநிலங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் புகையிலைச் செய்கையும் மிளகாய்ச் செய்கையும் நடைபெற்றன. தென்னை, வாழை என்பன மக்கள் குடியிருப்பு பகுதிகளில் வளர்க்கப்பட்டன. இவை அனைத்தும் பெரும்பாலும் உள்ளூர் தேவைகளையே பூர்த்தி செய்தன. சாமி, தினை, குரக்கன் போன்ற பயிர்களும் சில இடங்களில் பயிரிடப்பட்டன. பனைவளம் என்பது மிக அதிகமாகவே இங்கு காணப்படுகிறது. அடுத்தபடியாக தென்னை அதிகமாகக் காணப்படுகின்றது. கிளா போன்ற தாவரங்கள் அதிகமாகக் காணப்பட்டன. இராவணன் மீசைப்புல் என்ற தாவரம் புங்குடுதீவின் கடற்கரைகளில் அதிகமாகக் காணப்பட்டது. வான்பயிர்களும் அதிகம் காணப்படுகின்றன. பூவரசு, ஆல், அரசு, வேம்பு, இத்தி, மருது என்பனவே அவ்வாறான பயிர்கள். முள்முருக்கு, கதிகால், முட்கிளுவை என்பன வேலி அடைப்பதற்கு பெரிதும் பயன்படுத்தப்படும் தாவரங்களாகும்.

தரையின் மேல் நீரை சேகரித்து உட்செல்லவிடும் வகையில் பல குளங்கள் புங்குடுதீவில் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் இணுவிட்டியாகுளம், பெரியகிராய்க் குளம், சின்னக்கிராய்க்குளம், நக்கந்துக்குளம், வெட்டுக்குளம், தல்லமிக்குளம், மாரியம்மன் கோவிற்குளம், மண்டைதீவுக்குளம், நுணுக்கற்குளம், அடைகாத்தகுளம், முத்துட்டுக்குளம், மஞ்சள் கரைச்சான்குளம், நாச்சிமார் கோயிலடிக்குளம் அரியநாயகன்குளம் என்பன முக்கியமான குளங்களாகும். பெரியகிராய்க் குளத்திலிருந்து நீர் பாய்ச்சப்பட்டு சில பகுதிகளில் தோட்டப்பயிர் செய்யப்பட்டன. தல்லமிக் குளத்திலிருந்து அயலில் உள்ள நெல்வயல்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டன. ஆரம்பத்தில் துலாக்கள் மூலம் நீர் இறைக்கப்பட்டன. பின்பு தண்ணீர் பம்புகள் மூலம் தண்ணீர் இறைக்கப்பட்டன. பொதுவாக பெரும்பாலான குளங்களிலிருந்தும் பயிர்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டது.

கடந்த அரை நூற்றாண்டில் மழைவீழ்ச்சி படிப்படியாக குறைந்து வந்துள்ளது. போர்க்காரணங்களாலும் பயிர்செய்கை படிப்படியாக கைவிடப்பட்டு வந்துள்ளது. தற்போது முற்றாகவே கைவிடப்பட்டு விட்டது. ஒரு காலத்தில் பச்சைப்பசேல் என விளங்கிய விளைநிலங்கள் இன்று ஊர்மக்களின்றி வனாந்தரமாக காட்சியளிக்கின்றன.

நெல்வயல்கள் மட்டுமல்ல வழமையாக செய்யப்பட்டுவந்த தோட்டப்பயிர்ச் செய்கைகள் கூட அருகிவிட்டன. ஒரு காலத்தில் மாரிகாலத்தில் மடத்துவெளி வயற்பரப்பும் தல்லமி வயற்பரப்பும் பச்சைப்பசேல் என்று காட்சியளிக்கும். அத்தனை வயல்களிலும் நெற் செய்கை செய்யப்படும். இன்று மடத்துவெளியில் இராணுவத்தினர் இருக்கின்றனர். தல்லமி வயல்கள் வரண்டு காணப்படுகின்றன. ஆரம்ப காலத்தில் விவசாயம் கால்நடை வளர்ப்பு ஆகியவற்றில் புங்குடுதீவு செழித்து வளர்ந்தது. பின்பு இங்குள்ள மக்கள் வர்த்தகத்தில் அதிக ஈடுபாடு காட்டினர். அதை அடுத்து உத்தியோகம் தேடுதலிலும் விருப்பம் காட்டினர்.

புங்குடுதீவில் மிகப்பெரிய அளவில் மந்தை மேய்ச்சலுடன் விவசாயமும் மேற்கொள்ளப்பட்டதாக பல அறிஞர்கள் குறிப்பிட்டிருக்கின்றார்கள். 1987 ஆம் ஆண்டளவில் 155 செம்மறி ஆடுகள் இருந்ததாக தெரியவருகிறது. 1950 ஆம் ஆண்டுவரை செம்மறி ஆடுகள் அதிகமாக வளர்க்கப்பட்டன.

புங்குடுதீவு கிழக்கில் கனகர் என்பவர் கடைசியாக செம்மறி ஆடுகள் வளர்த்தார். குறிச்சிக்காடு, இணுவிட்டியாகுளம் பகுதிகளில் அவர் இந்த ஆடுகளை மேய்த்துவந்தார். அவர் இறந்த பின்பு புங்குடுதீவில் செம்மறியாடுகளும் அழிந்து போய்விட்டன.

விவசாயத்தைவிட மீன்பிடித் தொழிலுக்கே தீவுப்பகுதி அனைத்துமே பொருத்தமான இடமாக காணப்படுகிறது. புங்குடுதீவு நாற்புறமும் வளமான கடற்பரப்பினால் சூழப்பட்டதால் எல்லாக் காலங்களிலும் மீன் பிடிக்கக் கூடியதாக அமைந்துள்ளது. ஒதுக்கமான குடாக்களையும் கொண்டு அமைந்துள்ள படியால் மீன்பிடித்தொழிலுக்கு ஏற்ற சகல இயற்கை வளங்களும் ஒருங்கே அமையப்பெற்றுள்ளன.

ஊரைச் சுற்றி ஓரளவு பரவைக்கடல் உள்ள படியாலும் ஆழ்கடலும் சமுத்திரமும் சிறிது தூரத்தில் உள்ளமையாலும் இது மீன் பிடித்தலுக்கு ஏற்ற இடமாக அமைந்துள்ளது. பொருத்தமான முறையில் இராமர் அணையும் அமைந்துள்ளமை மேலும் வசதியாக இருக்கின்றன.

அதிகமான மீன்கள் இவ்விடங்களுக்கு வந்துபோக வசதியாக இருக்கிறது. சில இடங்கள் மீனவருக்கு தமது தொழிலைச் செய்ய இலகுவாக இருக்கிறது.

புங்குடுதீவின் கடற்பரப்பில் பலவகை மீனினங்கள் வாழுகின்றன. கரையோரங்களை அடுத்த பகுதிகளில் விளை, மதணன், சீலா, திரளி, ஒட்டி, ஓரா போன்ற மீன்கள் பிடிபடுகின்றன. சற்று ஆழமான பகுதிகளில் சுறா, திருக்கை, பாரை, கட்டா, சூடை, வாளை போன்ற மீன்கள் பிடிபடுகின்றன. கரைசார் பகுதிகளில் நண்டு, மட்டி, சங்கு என்பன பெருமளவில் பிடிக்கப்படுகின்றன. ஒரு வருடத்தில் பன்னிரண்டு மாதங்களும் மீன்பிடிக்கக் கூடிய வசதிகள் இங்கிருக்கின்றன.

ஆழ்கடல் மீன்களை இயந்திரப்படகுகள் மூலம் பிடிக்கும் அதே வேளை, கரையில் உள்ள மீன் வளங்களை சாதாரண மீனவர் ஒருவரால் பாரம்பரிய முறையில் பிடிக்கக் கூடியதாக இருக்கிறது.

புங்குடுதீவில் மீனவமக்கள் பண்டைக்காலம் தொட்டே மீன் பிடித்தொழிலில் ஈடுபட்டு வந்துள்ளனர். அக்காலங்களில் மீன்பிடிப்பதற்காக வளங்கள் அதிகமிருந்தும் மீன்பிடித்தொழில் சம்பந்தமான போதிய அறிவு இன்மையாலும் வேண்டிய உபகரணங்கள் இன்மையாலும் மீனவர்களால் அதிக வருமானத்தைப் பெற முடியவில்லை. பெரும்பாலும் கட்டுமரங்களில் சென்றே மீன்பிடித்தனர்.

காலவோட்டத்தில் தூண்டில் போடுதல், பறிவைத்தல், வலைவிரித்தல், களங்கண்ணி அமைத்தல் போன்ற முறைகளிலும் மீன்பிடிக்கத் தொடங்கினர். ஆழம் குறைந்த வாடைக் கடலில் நண்டு பிடித்தலிலும் ஈடுபட்டனர். சில மீனவப் பெண்களும் நண்டு பிடித்தலில் சிறந்தவர்களாக விளங்கினர்.

மாரிகாலம் பிறந்து விட்டால் நூற்றுக்கு மேற்பட்ட வள்ளங்களும் கட்டுமரங்களும் புங்குடுதீவை நோக்கிச் செல்லும். ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் புங்குடுதீவின் மேற்கு, தெற்கு கடற்கரைகளை நிறைத்து விடுவார்கள். மீன்பிடித்தல், கருவாடு பதப்படுத்தல் போன்ற தொழில்களில் ஈடுபடுவர். இத்தொழிலில் உள்ளூர் மீனவர்கள் மட்டுமன்றி வெளியூர் மீனவர்களும் ஈடுபடுவர். இவர்கள் வாடிகளை அமைத்து தொழில் புரிவர்.

இயந்திர வள்ளங்கள் மூலம் ஆழ்கடலுக்கு சென்று அதிகமான மீன்கள் பிடித்து வரப்படும். வடகீழ் பருவப் பெயர்ச்சிக்காற்று (வாடைக்காற்று) வீசத் தொடங்கியதும் தீவுப்பகுதிகளில் மீன் வளம் அதிகரிக்கத் தொடங்கும். மீன்கள் தீவுகளின் தெற்குப்பக்கத்தில் ஒதுங்க முயலுவதன் மூலம் அந்த வளங்கள் அதிகரிக்கும். இக்கால கட்டத்தில், பலாலி, மயிலிட்டி, கரையூர் மாதகல், தாளையடி, வல்வெட்டித்துறை, பருத்தித்துறை, காங்கேசன்துறை போன்ற அயற் பிரதேசங்களிலிருந்து மீனவர்கள் மீன்பிடி உபகரணங்களுடன் புங்குடுதீவை நோக்கி வருவர். படகுகள், வாடி கட்டுவதற்கான மரங்கள், கிடுகுகள் போன்றவற்றை லொறிகளில் ஏற்றிக்கொண்டு வந்து புங்குடுதீவில் குடியேறி விடுவர். வெளியூர் மீனவக் குடும்பங்கள் பல புங்குடுதீவுக் கடற்கரைக்கு வந்து விடும். புங்குடுதீவின் தெற்கே கோரியாவடி முதல் மேற்கே குறிகாட்டுவான் வரை உள்ள நீண்ட கடற்கரையில் வாடிகள் அமைப்பர். இரவில் மீன் பிடிக்கச் செல்வதும் பகலில் கூத்துங் கும்மாளமுமாகவும் இருப்பர். புங்குடுதீவே கலகலப்பாக மாறிவிடும். மீன்கள் பெருவாரியாக கிடைக்கும்பொழுது அவற்றை வெட்டி உப்பில் ஊறப்போட்டு காயவைத்துக் கருவாடு செய்வர்.

மீன்பிடித் தொழில் சாதி அடிப்படையில் இருந்ததால் குறிப்பிட்ட சாதியைச் சாராதவர்கள் இத்தொழிலை செய்ய முன்வரவில்லை. எனினும் மீன்பிடித் தொழிலாளர்களிடமிருந்து மீன் மற்றும் கடல் உணவுகளை கொள்வனவு செய்து சைக்கிள் வண்டிகளில் தீவின் உட்பகுதிக்கு கொண்டு சென்று சாதி பேதம் பாராது சிலர் விற்பனை செய்து வந்தனர். இங்கு பிடிக்கப்படும் மீன்களை வாங்கி விற்பதற்கென்றே உள்ளூரில் பல மீன் வியாபாரிகள் உருவாகி விடுவார்கள். அவர்கள் தாங்கள் கொள்வனவு செய்யும் மீன்களை உடனடியாகவே யாழ்ப்பாணம் அனுப்பிப் பணம் பண்ணி விடுவர். அம்மீன்கள் யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்பு போன்ற தூர இடங்களுக்கும் அனுப்பிவைக்கப்படும்.

காலம் ஓடிக்கொண்டிருக்கிறது. தீவுப்பகுதியின் மீன்வளம் வற்றவில்லை. ஆனால் மீன்பிடிப்போர் குறைந்து விட்டார்கள்.யுத்தங்கள் வந்தன, இடப்பெயர்வுகள் இடம்பெற்றன. வெளியூர் மீனவர்கள் வரவு குறைந்தது. உள்ளூர் மீனவர்களும் இடம்பெயர்ந்தனர்.

மின்பிடித் தொழில் வலுவிழந்துவிட்டது. யுத்த நிறுத்தம் வந்தது. மீன்பிடித்தொழில் ஓரளவு. மீண்டும் தொடங்கியது. ஆனால் வழமையான மீன் பிடித்தொழில் அளவுக்கு இன்னும் வந்துவிடவில்லை. மீன்பிடித் தொழில் முன்பு போல் வளமுடன் வளருமா? அல்லது இருக்குந் தொழிலே இன்னும் தேய்ந்து விடுமா? காலம் தான் பதில் சொல்லவேண்டும்.

புங்குடுதீவில் 1960 ஆம் ஆண்டு காலப்பகுதியில் நெசவுத் தொழிலும் நடைபெற்றது. ஐயம்பிள்ளை ஆசிரியர் இந்தியா சென்று காந்தி அடிகளுடன் வாழ்ந்தவர். நெசவுத்தொழில் போன்றவற்றை அறிந்து கொண்டார். புங்குடுதீவு திரும்பிய ஐயம்பிள்ளை ஆசிரியர், நெசவுத்தொழிலை புங்குடுதீவில் அறிமுகப்படுத்தினார். மேற்கூரில் மாரியம்மன் கோவிலடியிலும் இறுபிட்டியிலும் சந்தையடியிலும் கைத்தறி நிலையங்கள் அமைக்கப்பட்டன. கிழக்கூரில் ஆலடிச்சந்தியிலும் வீராமலையிலும் ஊரைதீவிலும் கைத்தறி நிலையங்கள் அமைந்திருந்தன.

இவற்றுக்குப் பொறுப்பாக ராஜலக்சுமி ஆசிரியை விளங்கினார். ஐயம்பிள்ளை ஆசிரியரின் மகன் தியாகராசாவும் சிறந்த நெசவு ஆசிரியராவார். புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் இ.குலசேகரம்பிள்ளை ஆசிரியரின் வழிகாட்டலில் பல மாணவிகள் நெசவை ஒரு பாடமாக எடுத்தார்கள். பாடசாலை விட்டு விலகிய மாணவிகள் பலர் கைத்தறி நிலையங்களில் நெசவுப்பயிற்சி பெற்றார்கள். இக்கைத்தறி நிலையங்களில் நெய்யப்பட்ட துவாய்கள், சேலைகள் விற்பனைக்கு வந்தன.

புங்குடுதீவில் கயிறு திரிக்கும் தொழில் அதிகமாக அறிமுகப்படுத்தப்படாவிட்டாலும் கயிறு திரிக்கும் தறியுடன் கூடிய நிலையமொன்று சவேரியார் கோவிலுக்குப் பக்கத்தில் நீண்ட நாட்கள் இயங்கியது. அச்சூழலில் வாழ்ந்த இளம்பெண்கள் இங்கு பயிற்சி பெற்றனர்.

செக்குகளை அமைத்து எண்ணை வாணிபம் செய்த பலர் புங்குடுதீவில் இருந்தனர். கிழக்கூரில் தம்பாப்பிள்ளை என்பவர் அம்மா கடைச் சந்தியடியில் செக்கு வைத்து எண்ணை வடித்து வியாபாரம் செய்தார். மேற்கூரில் தபாற்கந்தோருக்கு அண்மையிலும் எண்ணை வடிக்கும் செக்கு இருந்தது.

புங்குடுதீவு - நயினாதீவு பலநோக்குக் கூட்டுறவுச்சங்கம் தீவுப்பகுதி மக்களின் தொழில் வாய்ப்புக்கும் ஏனைய சேவைகளுக்கும் முக்கிய பங்களிப்பை வழங்கியது. இச்சங்கத்தின் ஆரம்பகாலத்தலைவராக சட்டத்தரணி பி. கதிரவேலு நீண்ட காலம் கடமையாற்றினார். இவரது காலத்திலேயே இச்சங்கத்துக்கு மேற்கூரில் தனியான பணிமனையும் கிழக்கூரில் கிளை நிறுவனமும் உருவாகியது. அதன்பின்பு சு. யோ. பூராசா தலைவராக செயற்பட்டார்.

அதன் பின்பு எஸ். தில்லைநாதன் தலைவராக இருந்தார். 1984 முதல் 1989 வரை அ. கருணாகரன் சங்கத்தின் தலைவராகக் கடமையாற்றினார். இவரை அடுத்து க. திருநாவுக்கரசும் பின்பு கனகலிங்கமும் தலைவர்களாக தெரிவு செய்யப்பட்டனர். இந்த ப. நோ.கூ. சங்கத்தின் மூலம் புங்குடுதீவு மக்களுக்கு பல சேவைகள் கிடைத்தன. பலருக்கு நேரடியாகவும் இன்னுஞ் சிலருக்கு மறைமுகமாகவும் தொழில்கள் கிடைத்தன.

9

# புங்குடுதீவின் பேச்சு வழக்கும் வாழ்க்கை வட்டச்சடங்குகளும்

புங்குடுதீவுக்குரிய நாட்டார் பாடல்கள் பலவுள்ளன. வயது முதிர்ந்த பெண்கள் சாவீட்டில் ஒப்புச் சொல்லும் போது பொருள் பொதிந்த பல ஒப்பாரிப்பாடல்களாக அவை வெளிவருகின்றன. சிலர் குழந்தைகளைத் தாலாட்டும் பொழுதும் இவ்வாறான நாட்டுப்பாடல்களைப் பாடுகின்றனர். உழவர்கள் உழும்பொழுதும் அரிவி வெட்டும் பொழுதும் இவ்வாறான பாடல்களைப் பாடினர்.

புங்குடுதீவின் நடுப்பகுதியில் வாழும் கிறிஸ்தவர்கள் மத்தியில் நாட்டுப்பாடல்கள் பல வழக்கிலிருக்கின்றன. அவர்கள் மீன்பிடித் தொழிலில் ஈடுபடும் பொழுது இவ்வாறான நாட்டுப் பாடல்களைப் பாடுகின்றனர். அவர்கள் கிறிஸ்தவ சமயம் சம்பந்தப்பட்ட பல நாட்டுக் கூத்துகளை மேடையேற்றியிருக்கின்றனர். சிறந்த நாட்டுக் கூத்துக்கலைஞர்கள், அவர்கள் மத்தியில் வாழ்ந்தனர். புங்குடுதீவு புனித பிரான்ஸிஸ் சவேரியார் ஆலயத்தின் வருடாந்த உற்சவம் வருடா வருடம் வைகாசி மாதத்தில் நடைபெறும். இவ்வாலயத்தின் கடைசித் திருவிழாவில் ஆலய முன்றலில் பல கலை நிகழ்ச்சிகள் நடைபெறும். அதிலே பல சரித்திர நாடகங்களும் நாட்டுக் கூத்துகளும் நடைபெறும். இந்த நாட்டுக் கூத்துகள் புங்குடுதீவின் கிறிஸ்தவ மக்களின் பாரம்பரியங்களை எடுத்துக்காட்டும் விழாவாக அமையும்.

புங்குடுதீவு மக்கள் பேசும் சில பேச்சு வழக்குச் சொற்கள் இலக்கியத்தரம் வாய்ந்தனவாகக் காணப்படுகின்றன. துருத்தி என்ற சொல்லை உதாரணமாகக் கொள்ளலாம். இங்குள்ள குறிச்சி ஒன்றுக்கு "நடுவுத்துருத்தி" என்ற பெயர் உள்ளது. துருத்தி என்பது தீவு என்பதைக் குறிக்கும் இலக்கியச்சொல்லாகும். இத்தீவு மக்கள் குப்பையை கஞ்சல் என்று குறிப்பிடுவர். கஞ்சல் என்பது குப்பையைக் குறிக்கும் பழந்தமிழ்ச் சொல்லாகும்.

பிறரிடம் எதையாவது இரந்து பெறுவதனை மரியாதைக்குறைவாக நினைக்கும் மன உணர்வினை "சங்கேனம்" என்னும் சொல் உணர்த்துகிறது. இச்சொல் "சங்கயீனம்" என்ற பழந்தமிழ்ச் சொல்லிலிருந்து மருவியிருக்கிறது. 'பறையாமல் இரு' என்றால் 'பேசாமல் இரு' என்று பொருள்படுகிறது. பறைதல் என்ற சொல் யாழ்ப்பாண மாவட்டம் எங்கிலும் பயன்படுத்தப்பட்டாலும் புங்குடுதீவில் மிக அதிகமாகவே பயன்படுத்தப்படுகிறது. மலையாள மொழியிலும் 'பறையிறது' என்பது தமிழ் மொழியைப் போலவே 'பேசுவது' என்ற பொருளைக் கொடுக்கிறது. 'சீமால்' என்ற சொல்லும் பழமை வாய்ந்ததாக இருக்கிறது. வீட்டிற்கு முன்னால் உள்ள வேலியை அது குறிக்கிறது. புங்குடுதீவு வீடுகளில் சீமால் வேலி அடைக்கப்படும்.

புங்குடுதீவு மக்களின் பேச்சு வழக்கில் உள்ள பல சொற்கள் பொருள் பொதிந்தவையாகவும் சந்தர்ப்ப சூழ்நிலைகளைத் தெரிவிப்பனவாகவும் அமைந்திருக்கின்றன. இவர்களுடைய உரையாடல்களில் வரும் உலகியல் வழக்கு வாக்கியங்கள், நவீன இலக்கியக்காரர்களுக்கும், சொல்லாராய்ச்சி செய்யும் மொழியியல் அறிஞர்களுக்கும் பெருவிருந்தாய் அமையக்கூடியன. ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

"நல்ல காரியங்கள் கை கூடுவதற்கு நிருபம் வேண்டும்" என்பர். நிருபம் என்ற சொல்லுக்கு கட்டளை, கடிதம், தீர்மானம் என்று அகராதிகள் பொருள் கூறுகின்றன. ஆனால் புங்குடுதீவில் 'நிருபம்' என்ற சொல்லுக்கு 'அதிர்ஷ்டம்' என்றே பொருள் கொள்ளப்படுகிறது.

'இந்தக் கட்டாக்காலிகளின் இமிசை பொறுக்க முடியவில்லை' என்று கூறுதல் வருத்தி உண்டாக்கும் வேதனையை குறிக்கும், "இம்சை" என்ற சொல்லே இங்கு 'இமிசை' என்று மாறியிருக்கிறது. 'இமிசை' க்குப் பதிலாக 'ஆய்க்கினை' என்ற சொல்லையும் பயன்படுத்துவர்.

'அவன் அம்பலோகி மாதிரி திரியிறான், வாழ்க்கையில் முன்னேற்றம் இல்லை' என்பர். 'அம்பலோகி' என்பது அதிக ஆசையுள்ளவன்' என்று பொருள்படும். அவசரக்காரனைப் பார்த்து 'அத்தடிப்படுகிறாயே' என்பர். "அரிசி அள்ளிய காகம் மாதிரி அவசரப்படுகிறாயே" என்றும் கூறுவர்.

கணவன் குடித்துவிட்டு வந்து மனைவியை அடிப்பான். கோபத்தினால் அவள் கணவனை திட்டுவாள். 'அடியறுந்து போவான்', 'போக்கறுந்து போவான்', 'கோதாரியில் போவான்' 'பாடையில போவான்' 'பத்தியெரிஞ்சு போவான்' போன்ற சொற்றொடர்களை அவள் பயன்படுத்துவாள்.

'போக்கணங்கெட்ட சீவியம் சீவிக்கிறதை விட போய்ச்சேர்ந்திடலாம்' என்ற சொற்றொடருக்கும் மரியாதை இல்லாத வாழ்க்கை என்று பொருள் கூறலாம். 'ஒருத்தரும் என்னை நழுக்கியிரு என்று சொன்னதில்லை' என்பர். நழுக்கியிரு, அரக்கியிரு. என்ற இரு சொற்களும் தள்ளியிரு என்ற பொருளையே குறிக்கின்றன. 'கட்டுப்பாட்டுடன் கூடிய வேதனையா' என்பதனை 'கட்டாய்க்கினையா' என்று கேட்பர்.

ஒரு மனைவி தன் கணவனிடம் பணம் கொடுத்து சில பொருட்களை சந்தையடியில் வாங்கி வரும்படி சொல்லுவாள். கணவன் சில குறிப்பிட்ட பொருட்களை ஞாபகமறதி காரணமாக வாங்காமல் விட்டு விட்டு வந்து விடுவான். 'ஏன் வாங்கி வரவில்லை?' என்று மனைவி கேட்பாள். 'அயத்துப்போனேன்' என்பான் கணவன். இந்த உரையாடலில் 'அயத்துப்போனேன்' என்ற சொற்றொடருக்குப் பொருள் "மறந்து போனேன்" என்பதாகும். அயர்ந்து போனேன் என்பது நித்திரை கொண்டுவிட்டேன் என்பதைக் குறிக்கிறது.

ஒருவரைப்பற்றி இன்னொருவர் நல்லவிதமாகப் பேசலாம். தவறான விமர்சனத்தை தொடர்ச்சியாக முன்வைத்துக் கொண்டிருந்தால் விமர்சனத்தைக் கேட்டுக் கொண்டிருப்பவர் 'இந்த கிலிசு கெட்ட கதையை விடப்பா' என்பார். 'கிலிசு கெட்ட கதை' என்ற சொற்றொடருக்கு 'பரிசு கெட்ட கதை' என்ற சொற்றொடரும் பாவனையில் உள்ளது. இந்த இரண்டு சொற்றொடர்களும் 'இவை நல்ல கதையல்ல' கெட்ட கதை என்ற கருத்தையே பொருளாகத் தருகின்றன.

இளைஞன் உயர் சாதிக்காரன். அவன் தாழ்ந்த சாதிப் பெண் ஒருத்தியை காதலித்து விட்டான். இந்தச் செய்தி இளைஞனின் பெற்றோருக்குத் தெரியவருகிறது. பெற்றோர்கள் உடனே. 'இது என்ன நீரோசை. நிற்பாக்கியம்' என்று தம் தலையில் அடித்துக் கொள்வர். ஆழ்ந்த வேதனையை வெளிப்படுத்துவதற்கு இவ்வாறான சொற்களையும் பயன்படுத்துகின்றனர்.

அப்பொழுது புங்குடுதீவில் மலசல கூடங்கள் புழக்கத்தில் வரவில்லை. வளவுகளில் பனைமரங்களின் மறைப்புகளில் மலங்கழிப்பர். மலங்கழிக்கப்போவதை 'வளவுக்கிருக்கப்போகிறேன்' என்று சொல்லுவர்.

'கல்யாண வீட்டுக்காலங்களில் எங்களூர் பறையடிப்போர் வீடுகளில் அடுப்பு எரியாது' என்று ஒருவர் சொன்னார்.

'ஏன்' என்று கேட்டார் மற்றவர்.

'பறையடிப்போர் குடும்பத்தின் ஓசுவனம் கல்யாண வீட்டோட தான்' என்றார் முதலாமர். 'ஓசுவனம்' என்பது தனியே உணவை மட்டும் குறிப்பிடாது வாழ்க்கையினையும் குறிக்கின்றது. 'சீவியம்' என்ற சொல்லும் இதன் ஒத்த கருத்தாகவே உள்ளது.

'எவ்வளவு அரிசி கிடக்குது' என்று கணவன் மனைவியிடம் கேட்டான்.

'இண்டையான் ஓசுவனத்துக்கு காணும்' என்றாள் மனைவி.

இங்கு இன்றைய என்பது இண்டையான் என்று மாறியிருக்கிறது.

புங்குடுதீவுக் கிராமத்தின் வீடொன்று இருளாக இருக்கிறது. அரிக்கன் லாம்பு மட்டுமே ஒளிருகிறது. பாட்டனார் வெற்றிலைத்தட்டத்தை தேடுகிறார். அவருக்கு இரவில் கண் தெரிவது குறைவு. வெற்றிலைத் தட்டத்துக்குள் பாக்கு வெட்டியைக் காணவில்லை. பாட்டனார் பேரனை அழைத்து 'பாக்குவெட்டியை காணவில்லை தடவிப்பார்' என்றார். அரிக்கன் லாம்புடன் பேரன் எல்லா இடமும் தேடிப்பார்த்துவிட்டு வந்து பாட்டனிடம் சொல்லுகிறான் 'எல்லா இடமும் தடவிப் பார்த்திட்டன் காணேல்ல'. இங்கு 'தடவிப்பார்த்தல்' என்ற சொல்லுக்கு 'தேடிப்பார்த்தல்" என்பது பொருளாகும்.

புங்குடுதீவில் பல குடும்பங்கள் குடிசைகளில் வாழ்ந்தன. அந்தக் குடும்பங்களில் சில வெளிநாடுகளுக்குச் சென்றன. வசதி வாய்ப்புடன் வாழ்ந்தன. இலங்கையில் போர் நிறுத்தம் ஏற்பட்ட போது பல குடும்பங்கள் ஊரைப்பார்க்கும் ஆசையில் இலங்கைக்கு வந்தன. அவர்களில் குடும்பப் பெண்கள் கொழும்பு மெயின் வீதியில் புடவைக் கடைகளில் ஏறி இறங்கினர். அவர்களில் ஒருவர் சாரிக்குப்பதிலாக ஜீன்ஸ் அணிந்திருந்தார். ஜீன்ஸ் கிழிந்து விடுமோ என்ற அளவிற்கு இறுக்கமாக இருந்தது. வெயிலிலும் கோர்ட் அணிந்திருந்தார். கைகள் இரண்டிலும் காப்புகள் அடுக்கப்பட்டிருந்தன. நெற்றியில் குங்குமப்பொட்டு இருந்தது. தாலிக்கொடி மொத்தமாக இருந்ததால் எடுப்பாகத் தெரிந்தது. அவர் குதிரைபோல் அங்கும் இங்கும் அலைந்து திரிந்தார். கணவன் முழங்கால் வரையான காற்சட்டையுடன் அவர் பின்னால் இழுபட்டுத்திரிந்தார்.

இவர்களைப் பார்த்து அவர்களின் அயல்வீட்டுக் காரரான புங்குடுதீவில் வாழ்ந்த ஒருவர் சொல்லுகிறார். 'அவை கிடந்த கிடைக்கு இப்ப அவையளின்ர கெச்சிதமும் கெளிமதமும் எப்பிடியிருக்கெண்டு பாருங்க'. ஆம் இங்கு கெச்சிதம் என்றால் என்ன? கெளிமதம் என்றால் என்ன? என்ற கருத்தை உணர்கிறோம். ஆனால் நேரடியான பொருளைக் கூறமுடியாதுள்ளதல்லவா?

சில சொற்கள் பேச்சுவழக்கில் இப்படியும் மாறியிருக்கின்றன. 'பராசக்தி' என்ற சொல்லை 'பிராயத்தி' என்று உச்சரிப்பார். 'மகாலெட்சுமி' என்ற பெயரை 'மகாச்சி' என்று உச்சரிப்பர். 'நடராசா' என்ற பெயரை 'நர்ராசா' என்றும் துரைராசா என்ற பெயரை துர்ராசா என்றும் சொல்லுவர்.இவை போன்ற எத்தனையோ பேச்சு வழக்குச் சொற்கள் புங்குடுதீவில் புழக்கத்தில் உள்ளன. யாழ். மாவட்டத்தின் வேறு பிரதேசங்களில் பேசப்படும், அது என்பதை உது என்றும் அங்கே என்பதை உங்கே என்றும் பேசுவதில்லை. ஆனால் அப்பர் என்பதை கொப்பர் என்று சிலர் பேசுவர்.இச்சொற்களை எல்லாம் வயது வந்தவர்கள் தாராளமாகவே பயன்படுத்தியிருக்கின்றனர். ஆனால் இன்றைய புங்குடுதீவின் இளைஞர் யுவதிகளுக்கு இவை புதுமையாக இருக்கலாம்.

## வாழ்க்கை வட்டச் சடங்குகள்

மக்கள் தம் சமுதாய வழக்கத்துக்கு ஏற்ப சிலவாழ்க்கை வட்டச் சடங்குகளை கையாளுகிறார்கள். யாழ்ப்பாணக் குடாநாட்டு மக்களைப் போலவே தீவுப் பகுதி மக்களும் இந்த சடங்குகளைக் கடைப்பிடிக்கிறார்கள். ஆனாலும் புங்குடுதீவு மக்கள் கையாளும் தன்மையில் சில வேறுபாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. வாழ்க்கை வட்டச் சடங்குகளாக இங்கு பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு ஆகியவையே எடுத்துக்கொள்ளப்படுகின்றன.1950 ஆம் ஆண்டளவில் நடைபெற்ற விடயங்களே பெரும்பாலும் இங்கு எடுத்துக்காட்டப்படுகிறது.

## பிறப்பு

1950 ஆம் ஆண்டுக்கு முன்னர் புங்குடுதீவில் குழந்தைகளைப் பெற்றெடுப்பது உள்ளூர் மருத்துவிச்சியின் உதவி கொண்டேயாகும். ஒவ்வொரு காலகட்டத்திலும் ஓரிரு பெண்களே இதில் பிரபலம் பெற்றவர்களாக இருந்தனர். 50களில் கிழக்கூரில் ஐயன்பெண்சாதி, ஆனாசி போன்ற மருத்துவிச்சிகள் பிரபலம் பெற்றிருந்தனர். பிள்ளைத்தாச்சிப்பெண் வயிற்றில் நோவு உணர்ந்ததும் உறவினர்கள் ஊர் மருத்துவிச்சிக்கும், கட்டாடிக்கும் செய்தி சொல்லி அனுப்புவர். வீட்டின் ஒருபகுதியில் பாய் விரித்து சேலைகள் போட்டு மெத்தை போல் ஆக்குவர். இந்த இருக்கைக்கு மேலே வீட்டுவளையில் பலமான ஒரு சேலையை முறுக்கி கட்டி பிடிகயிறு செய்வர்.

பெண்ணுக்கு வயிற்றுவலி நீண்டு கொண்டே போனால் ஊரின் ஆயுர்வேதப் பரியாரியார் வரவழைக்கப்படுவார். அவர் மருந்து கொடுக்க மருத்துவிச்சி கருமமாற்ற பிள்ளைத்தாச்சி வளையில் தொங்கும் பிடிகயிறை இரு கைகளாலும் இறுகப்பற்றிக்கொண்டு குழந்தையைப் பெறுவாள். நஞ்சுக்கொடி விழாவிட்டால் மருத்துவிச்சி தனது திறமையால் அக்கொடியை எடுத்து தாயையும் பிள்ளையையும் காப்பாற்றிவிடுவாள்.

நஞ்சுக்கொடியை வெளியே எடுக்க முடியாமல் உயிரிழந்த பெண்களும் உள்ளனர். பனையோலை வாரப் பயன்படுத்தும் சத்தகத்தினால் மருத்துவிச்சி தொப்பூழ்க் கொடியை வெட்டுவாள். கட்டாடி அல்லது அவன் மனைவி வந்து துடக்குச் சேலையை எடுத்துக் கொண்டு பிள்ளை பெற்றவள் உடுப்பதற்கான மாத்துச் சேலையை கொடுத்துச் செல்வர். கட்டாடி ஆறுமுகமும் கட்டாடி சின்னத்தம்பியும் இந்த சேவையைச் செய்தது எனது ஞாபகத்துக்கு வருகிறது. ஆண்குழந்தை பிறந்தால் வீட்டு முற்றத்தில் நின்று வீட்டின் பின்பக்கம் விழும்படி வீட்டுக்கூரைக்கு மேலால் உலக்கை எறிவார்கள்.

குழந்தை தாய்ப்பால் கற்கண்டுத்தண்ணி, தேநீர் போன்றவற்றைக் குடித்து வளரும். வீட்டு வளையில் சேலையால் கட்டப்பட்ட ஏணையில் வளர்த்தி குழந்தையை தாலாட்டித் தூங்கவைப்பர். வசதி படைத்தவர்கள் மரத்தாலான தொட்டிலிலும் குழந்தையை தூங்க வைப்பர். முப்பதாம் நாள் நாவிதர் பிள்ளை பிறந்த வீட்டுக்கு வந்து குழந்தையின் துடக்கு மயிரை மழிப்பர். கிழக்கூரில் அவிரியானும் மேற்கூரில் சின்னவனும் இந்தப்பணியைச் செய்தனர்.

நாற்பத்தைந்தாம் நாள் குழந்தையை பெற்றோர் கோயிலுக்குக் கொண்டு செல்வர். சிலர் அன்றே குழந்தைக்கு பெயரும் வைப்பர். பிள்ளையின் பதிவு இதன் பின்னரே நடைபெறும்.

வளர்ந்து வரும் பிள்ளை ஐந்து வயதில் பாடசாலைக்குச் செல்லும். பாடசாலையில் அல்லது கோயில்களில் ஏடு தொடக்கப்படும். புங்குடுதீவு கிழக்கு ஸ்ரீகணேச வித்தியாலயத்தில் கோபால பிள்ளை வாத்தியார் எனக்கு ஏடு துவக்கியது ஞாபகத்தில் உண்டு.

## பூப்பு

பெண்பிள்ளைக்கு சாமத்தியம் கண்டதும் அவரை வீட்டின் ஒரு மூலையில் இருத்துவர். ஒரு பெண் பூப்பெய்துவதை சாமத்தியப்படுதல், பெரியபிள்ளையாதல், வயதுக்கு வருதல் என்ற தொடர்களாலும் குறிப்பிடுவர். பெண்பிள்ளை சாமத்தியப்பட்டதும் கட்டாடிக்கும் உறவுக்காரருக்கும் சொல்லியனுப்புவர்.

சாமத்தியப்பட்ட பெண்ணை அன்று மாலை அல்லது இரவே குப்பையின் மீது இருத்தி முழுக்காட்டுவர். இதற்கு குப்பைத் தண்ணீர் வார்த்தல் என்று கூறப்படும். புதிய உடைகளை உடுத்துவர். உறவினர்கள் அவருக்கு பணம் போன்றவற்றை வழங்குவர். ஒரு சில நாட்களின் பின் பெண் அறையை விட்டு வெளியேறி வளவுக்குள் உலவுவாள்.

சாமத்தியப்பட்ட பெண்ணை முப்பது நாள்மட்டும் சத்துணவு கொடுத்து பிரத்தியேகமாக கவனிப்பர். நல்லெண்ணெய்க்குள் முட்டை வெள்ளைக்கருவை விட்டு கத்தரிக்காய் சாறு சேர்த்து சிறிது மிளகு தூள் சேர்த்து அடித்துத் தினமும் குடிக்க கொடுப்பர். முப்பத்தோராம் நாள் உறவினர்கள் ஒன்று கூடி சாமத்தியப்பட்ட பெண்ணுக்கு வீட்டில் துடக்குக் கழிப்பர். வசதியானவர்கள் பிறிதொரு நாளில் பெரிதாக சாமத்திய வீடு செய்வார்கள். தாய்மாமன் நிறைகுடம் வாங்குவார். தாய்மாமன் வீட்டிலிருந்து "புட்டுக்களி" எடுப்பார்கள்.

## திருமணம்

புங்குடுதீவில் பெரும்பாலும் திருமணம் பேசியே செய்யப்படும். பேச்சின் தொடக்கம் உறவினர் மூலமாக விசாரித்தறிவதாக இருக்கும். முதற்கட்டத்தில் இணக்கம் தெரிவிக்கப்பட்டால் பொருத்தம் பார்க்கப்படும். சாதகப் பொருத்தம் பார்ப்பதற்கென ஊரிலுள்ள சாத்திரியாரிடம் சென்று கேட்பர். பொருத்தமாயின் சீதனப் பேச்சுவார்த்தை நடைபெறும். பெண்ணுக்குப் பெற்றோர்கள் இயன்றளவு நகை கொடுப்பர். வசதியுள்ளோர் காணிகளையும் எழுதுவர். கலியாணப்பேச்சு முடிவானதும் முதலில் பெண் வீட்டாரும் பின்பு மாப்பிள்ளை வீட்டாரும் வேறுவேறு நாட்களில் பலகாரப் பெட்டி பரிமாறுவார்கள். வசதியுள்ளவர்கள் முற்றத்தில் பந்தல்போட்டு மணவறை வைத்து பெரிதாக கல்யாணவீடு செய்வர். வசதியற்றோர் அடக்கமாக நெருங்கிய உறவினர்களுக்கு மட்டுமே சொல்லி திருமணம் செய்வர். இதை "கையால் சோறு கொடுத்தல்" என்று சொல்லுவர்.

திருமணம் முடிந்த அன்று மணப்பெண் மணமகனுக்கு தலைவாழை இலையில் சோறு பரிமாறுவாள். மாப்பிள்ளை உண்டு முடிந்ததும் அவர் விட்ட மிச்ச உணவுடன் அதே இலையில் மணமகளும் உண்ணுவாள். மணமக்கள், மணமகன் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்கே முதலிரவு காண்பார்கள். மூன்றாம் நாள் மணமக்கள் பெண் வீட்டுக்கு அழைத்து வரப்படுவர். ஒரு வாரத்தின் பின் மணமக்கள் முதன் முதலில் கோயிலுக்குச் செல்லுவர். அதன் பின்பு இருவரும் யாழ் நகர் சென்று தமக்கு வேண்டிய பொருட்களை வாங்கி வருவர். இதனை "நாட்கடைக்குச் செல்லுதல்" என்று கூறுவர். பெரும்பாலும் புங்குடுதீவு மக்கள் புங்குடுதீவுக்குள்ளேயே திருமணம் செய்யவிரும்புவர். வெளியூர் நண்பர்களின் உறவினால் சில வேளைகளில் வெளியூர்களிலும் திருமணம் செய்வதுண்டு.

## இறப்பு

புங்குடுதீவில் ஒருவர் இறந்ததும் அயலூர்களிலுள்ள அவரது உறவினர்களுக்கு செய்தி அறிவிப்பர். காலால் நடந்து சென்றே செய்தி சொல்லுவர். செத்தவீட்டுக்குப் பறை அடிப்பதற்கும் பாடை செய்வதற்கும் பறை அடிப்போருக்கும் செய்தி அனுப்புவர். 12ஆம் வட்டாரத்திலுள்ள உயரப்புலம் பகுதியில் பறையடிப்போர் வாழ்கிறார்கள். 4ஆம் வட்டாரத்திலும் சில பறையடிப்போர் வாழ்கிறார்கள். கிழக்கூர் மக்கள் உயரப்புலத்திலும் மேற்கூர் மக்கள் நுணுக்கலிலும் பறையடிப்போருக்குத் தெரிவிப்பர். சிலர் சைவக்குருக்களை அழைப்பித்து சவக்கிரியை செய்வர். தீட்சை கேட்டோருக்கு சுண்ணம் இடிக்கப்படும். நாட்டின் ஏனைய பிரதேசங்களோடு ஒப்பிடும் போது புங்குடுதீவு மக்கள் மரணவீட்டில் வரவேற்கும் பண்பு வித்தியாசமானது. மரண வீடுகளில் அனுதாபம் தெரிவிக்க வருபவர்களை அன்போடு உபசரித்து தமது இரு கைகளை அவர்களின் இரு கைகளுடன் இணையவைத்து அழைத்துச் சென்று இறந்தவரின் உடலுக்கு மரியாதை செலுத்திவிட்டு சென்று அமரும் வேளை வெற்றிலைத்தட்டத்தினைக் கொடுத்து உபசரிக்கும் நிகழ்ச்சி இத்தீவு மக்களின் பண்பாக இருப்பதைக் காணலாம்.

பெண்கள் ஒப்புச்சொல்லி மாரடித்து அழுவர். உறவினர் வரும்பொழுது அவர்களை கட்டி அணைத்தவாறு ஒப்புச்சொல்லி அழுவர். ஒப்புச் சொல்லும் பொழுது விதம் விதமான (நாட்டுப்பாடல்களை) ஒப்பாரியை அங்கே கேட்கலாம்.

மூத்தமகன் கொள்ளிக்குடம் கொண்டு செல்வார். சுடலை சென்றடைந்ததும் பாடையை இறக்கிவைத்து விட்டு இறந்தவரின் உடலை விறகுமேடையில் வளர்த்துவர். அதன் பின்பு இறந்தவருக்கு வாய்க்கரிசி போடுவர். பெண்கள் சுடலைக்குச் செல்லமாட்டார்கள், அதனால் வாய்க்கரிசியை வீட்டிலேயே போட்டுவிடுவர்.

கொள்ளி வைப்பவர் தனது இடது கையில் கொள்ளி வைப்பதற்காக நெருப்புத்தணல் மூட்டப்பட்ட சந்தனக் கட்டையை வைத்திருப்பார். குடம் வலது புறத்தோளில் இருக்கும் ஒவ்வொரு தரம் விறகு மேடையை சுற்றிவரும் பொழுதும் தலைமாட்டில் நிற்கும் நாவிதர் கொள்ளிக்குடத்தில் ஓட்டை விழும் வகையில் மெல்லியதாக கத்தியால் கொத்துவார். மூன்றாவது முறை சுற்றி வந்ததும் கொள்ளிவைப்பவர் தலைமாட்டில் எதிர்ப்புறம் நோக்கிக் கொண்டு குடத்தை பின்புறமாக விழுத்தி உடைத்துவிட்டு தலைப்புறத்தில் கொள்ளியைச் செருகிவிட்டு திரும்பிப் பார்க்காமல் வீடு நோக்கிப் புறப்படுவார். உறவினர்கள் அவரைத் தாங்கிப்பிடித்துக் கூட்டிச்செல்வர். அப்பொழுது சுடலைக்கு வந்த பெரும்பாலோர் அவரைப் பின் தொடர்ந்து செல்வர். தந்தைக்கு அவரது மூத்த மகனும் தாய்க்கு அவரது கடைசி மகனும் கொள்ளி வைப்பர். ஊரவர் சிலர் சுடலையில் நின்று சவம் எரிப்பர். அவ்வாறு எரிப்பதற்கு சாராயம் அல்லது கள்ளுக்கொடுப்பர். பறை அடிப்போருக்கும் பாடை கட்டியோருக்கும் சம்பளம் வழங்கப்படும்.

மூன்றாம் நாள் "காடாத்தல்" செய்வர். இறந்தவரின் சாம்பலை பானையில் போட்டு கொள்ளி வைத்தவர் தோளில் சுமந்துவருவார். நெருங்கிய உறவினர்கள் எலும்பு கலந்த சாம்பலை கடகங்களில் போட்டு தோளில் சுமந்துவருவர். இறுதியில் சாம்பலை கடலில் கரைப்பர். சில எலும்புகளை நாவிதர் எடுத்து வைப்பார். அந்தியேட்டிக்கிரியை கீரிமலைக் கடற்கரையில் நடைபெறும் போது அவ்வெலும்புகள் கடலில் வீசப்படும்.

சாம்பல் அள்ளிய அன்று வீட்டில் சைவக்கறி வைத்து சோறு சமைப்பர். அன்று நாவிதருக்கும் கட்டாடிக்கும் சமைக்காத உணவுப்பொருள் வழங்கப்படும். அவற்றை அவர்கள் சீலையில் பொட்டலமாக கட்டிச்செல்வர். புங்குடுதீவின் பிரதான சுடலை 10ஆம் வட்டாரத்தில் தெற்குக்கடற்கரையில் மணற்காட்டில் அமைந்திருக்கிறது. வல்லன், குறிகட்டுவான், கேரதீவு போன்ற இடங்களிலும் சுடலைகள் உண்டு . பிரேதம் எடுத்த நாளிலிருந்து எட்டாம் நாள்வரை உறவினர்கள் செத்த வீட்டில் இரவில் படுத்துறங்கிக்காலையில் வீடு செல்வர். எட்டாம்நாள் வரை செத்த வீட்டில் உலை வைக்க மாட்டார்கள். அயலவர்களும் உறவினர்களும் தினமும் உணவு கொண்டு வந்து கொடுப்பர் .

எட்டாம் நாளில் இறைச்சி, மீன்கறி, நண்டுக்கறி, கணவாய்க்கறி, மரக்கறி, சோறு முதலியவற்றைப் படைப்பர். இது எட்டாஞ் சடங்கு எனப்படும்.

முப்பத்தோராவது நாளில் "அந்தியேட்டி" கொடுப்பர். சிலர் கீரிமலைக்குச் சென்று அந்தியேட்டி செய்வர். சிலர் புங்குடுதீவுக் கடற்கரையிலும் செய்வர். கொள்ளி வைத்தவருக்கு அன்று மொட்டை தட்டப்படும். இறந்த முதலாவது ஆண்டின் நிறைவில் கொடுக்கப்படுவது "ஆட்டத்திவசம்" என்றும் தொடர்ந்து வரும் ஆண்டுகளில் கொடுக்கப்படுவது "திவசம்" என்றும் அழைக்கப்படும்.

இப்பொழுது புங்குடுதீவு மக்கள் கொழும்பிலும் இறக்கிறார்கள், கனடா, சுவிற்சர்லாந்து போன்ற வெளிநாடுகளிலும் இறக்கிறார்கள். அங்கும் இறுதிக் கிரியைகள் புங்குடுதீவில் நடைபெறுவதை ஒட்டியே நடைபெறுகின்றன. இவ்வாறு இந்த வாழ்க்கை வட்டச்சடங்குகள் எந்தப்பகுதியில் நடைபெற்றாலும் புங்குடுதீவு மக்கள் (சைவர்கள்) இந்த மரபை ஒட்டியே செய்கிறார்கள்.

# 10

# மு. தளையசிங்கமும் பூரண சர்வோதய இயக்கமும்



இலங்கை அப்பொழுது அமைதியாக இருந்தது. 1965இல் இருந்து 1972 வரையான காலப்பகுதி அது. ஒரு ஆசிரியர் இரத்தினபுரி புனித ஆலோஷியஸ் கல்லூரியில் படிப்பித்து விட்டு தனது சொந்த கிராமமான புங்குடுதீவு மகாவித்தியாலயத்துக்கு மாற்றலாகி வருகிறார். மெல்லிய உருவமும் வலிதான உள்ளமும் கொண்ட அந்த ஆசிரியர்தான் மு. தளையசிங்கம். அவர் புங்குடுதீவுக்கு வந்ததும் பாடசாலைகளிலும் ஊரிலும் புதிய ஒளி ஒன்று பிறக்கின்றது. மு. தளையசிங்கம் தனது பாடசாலையில் சிறந்த ஆசிரியராக திகழ்ந்ததால் அவர் மாணவர்களால் கவரப்படுகிறார். சக ஆசிரியர்களும் அவரை விரும்பினர். அவர் எதைச் சொன்னாலும் அதைச் சிரம் மேற்கொண்டு செய்யும் நிலைக்கு மாணவர்கள் தள்ளப்படுகிறார்கள்.

மாணவர்கள் தன் பால் ஈர்க்கப்பட்டதைக் கண்ட மு. தளையசிங்கம் பாடசாலை முடிந்ததும் அவர்களுக்குத் தனியான வகுப்புகள் நடத்தி ஆற்றுப்படுத்துகிறார். ஆரம்பத்தில் அது உயர்வகுப்பு மாணவர்களுக்கே நடத்தப்படுகிறது. பின்பு மற்ற வகுப்புகளுக்கும் தொடர்கிறது. இவ்வாறு மாணவர்களோடு மு.த.வுக்கு ஏற்பட்ட தொடர்பு புங்குடுதீவு இளைஞர்கள் மீதும் விழுகிறது. வேலையற்று வீண் பொழுது போக்கிக் கொண்டிருக்கும் இளைஞர்கள் தங்கள் வீணான நேரத்தை பிரயோசனமான முறையில் கழிக்க அவர்கள் விளையாடுவதற்காக வலைப்பந்து வாங்கிக் கொடுத்து அவர்கள் மாலை நேரங்களில் விளையாட வழி சமைத்தார்.

அவர்களை ஒன்று சேர்த்த மு.த. 'சக்தி கூட்டுறவு இயக்கம்' என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தினார். அவர்கள் சிறு சிறு வேலைகளில் தம்மை ஈடுபடுத்தி வருவாயைத் தேடிக் கொள்ளும் வழியையும் காண்பிக்கிறார். எல்லாத் தொழிலும் புனிதமானவை என்பதை புகட்ட கடலில் மீனவர்கள் பிடித்துவரும் மீன்களைக் கொள்வனவு செய்து மு. த. வும் அவரது குழுவைச் சேர்ந்த இளைஞர்களும் பொது மக்களுக்கு விற்று பணம் சம்பாதித்ததை ஒரு முன்மாதிரியாக செய்து காட்டுகின்றனர். புங்குடுதீவில் பயிர்ச்செய்கைக்குப் பயன்படுத்தப்பட்டு வந்த ஆனால் பாழடைந்து போன கிணறுகளையும் குளங்களையும் சிரமதானமூலம் துப்புரவாக்கி நல்ல நிலைக்கு கொண்டு வருவதை ஓர் பெரும் இயக்கமாக நடத்தி முடித்தார்.

இந்த வரலாற்றின் மூலம் புங்குடுதீவில் புரட்சிகர இயக்கமொன்று உருவானது. அந்த சிரமதானப் பணிகளில் ஈடுபட்ட இளைஞர்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் பயன்படுத்திய "இராமன்குண்டு" என்ற குளத்தை இவர்கள் சிரமதானம் செய்த போது தாழ்த்தப்பட்ட மக்களும் இவர்களோடு இணைந்து வேலை செய்தனர். அந்தச் சிரமதான முடிவில் சமபந்திப் போசனம் இடம் பெற்றது இன்னுமொரு திருப்பு முனையாகும். மு. தளையசிங்கமும் அவரது குழுவினரும் தாழ்த்தப்பட்ட மக்களோடு சேர்ந்து ஒரே பந்தியில் இருந்து உணவு உண்டனர்.

இவ்வாறு ஆரம்பித்த மு தளையசிங்கத்தின் பொதுப்பணி பெரியதொரு புரட்சிகர செயல்திட்டமாக மாறியது. மு. தளையசிங்கம் 1968ஆம் ஆண்டில் புங்குடுதீவில் முதன் முதலாக சர்வோதய அமைப்பொன்றை உருவாக்கினார். அதன் ஆரம்ப வைபவம் புங்குடுதீவு கந்தசாமி கோவில் முன்றலில் இளையப்பா வாத்தியார் தலைமையில் நடைபெறுகிறது. பின்னர் புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் சர்வ மதத் தலைவர்களை ஒன்று கூட்டி சர்வோதய இயக்க அமைப்பு பெருவிழாவாக கொண்டாடப்படுகிறது. இந்த விழாவின் இறுதி நிகழ்ச்சியாக தளையசிங்கம் உட்பட ஐந்து இயக்க இளைஞர்கள் தமது ஜீவதான சத்தியாக்கிரக சத்தியப் பிரமாணத்தை மேற்கொண்டனர்.

அதைத் தொடர்ந்து மு. தளையசிங்கத்தின் அக்கறை, உயர் சாதிக்காரர்களால் உரிமைகள் பறிக்கப்பட்டுக்கிடக்கும் தாழ்த்தப்பட்ட மக்களின் பக்கம் திரும்புகிறது. ஒரே கிராமத்தில் அவர்கள் உயர் சாதிக்காரர்களால் ஒடுக்கி அடக்கப்பட்டிருந்தார்கள்.

அவர்கள் கோயிலுக்குள் செல்ல முடியாது, பொதுக்கிணறுகளில் தண்ணீர் அள்ள முடியாது. தண்ணீர் பருகுவதற்கு தனியான பாத்திரங்கள் ஒதுக்கப்பட்டன. அவர்களில் மிகக் கேவலமான நிலையில் இருந்தவர்கள் சைவசமயத்தைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட மக்களே. முதலில் மு. தவின் சிந்தனை அவர்களை மேலெழ வைக்க வேண்டுமென்று ஆவல் கொண்டது. அவரும் அவர்களது தோழர்களும் தாழ்த்தப்பட்டவர்கள் வழிபடும் "பெத்தப்பா" கோவிலுக்குச் சென்று ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அவர்களோடு வழிபாட்டில் பங்குபற்றினர். அவர்கள் சுத்தமாக இருக்கவேண்டும் என்பதையும் தம் பிள்ளைகளின் கல்வியை ஊக்கப்படுத்த வேண்டும் என்பதையும் மு.த. போதித்தார். படிப்படியாக அவர்கள் வழிபாட்டில் பங்குபற்றிய மு. த.வும் அவரது சர்வோதய இயக்கத்தவரும் சம பந்திப் போசனத்தையும் மேற்கொண்டனர். இச்சம பந்திப் போசனத்துக்கு ஆதரவு அளிப்பதாக வாக்குறுதி கொடுத்த சைவப் பெரியார்கள் சிலரும் ஆசிரியப் பெருந்தகைகள் சிலரும் நிகழ்ச்சி நடைபெறும் நேரங்களில் அவ்விடத்திலிருந்து நழுவிப்போய் விடுவர்.

தாழ்த்தப்பட்டவர்களை படிப்படியாக தெங்கந்திடல் பிள்ளையார் கோவில், கலட்டிப்பிள்ளையார் கோவில், கண்ணகி அம்மன் கோவில் ஆகியவற்றுக்கு அழைத்துச் சென்று கூட்டுப்பிரார்த்தனை நடத்தத் தொடங்கினர். இந்நிகழ்ச்சிகளுக்கு அக்காலத்தில் கோவில் குருக்களாக இருந்த அமரர் கணேசராசக் குருக்கள் முழு ஆதரவு தந்து ஒத்துழைப்பு வழங்கினார். ஒரு பிராமணருக்கு இருந்த அக்கறை பெரும் பாலான வேளாளர்களுக்கு இருக்கவில்லை.

அப்பொழுது சைவ தாழ்த்தப்பட்ட மக்களிடையேயும் கிறிஸ்தவ தாழ்த்தப்பட்ட மக்கள் இடையேயும் நாங்கள் பெரியவர்கள் நீங்கள் சிறியவர்கள் என்ற போட்டியும் நிலவியது. இந்தப் பகைமையைப் பயன்படுத்தி, வேளாளர்கள், அவர்களை மோதவிட்டு வேடிக்கை பார்த்தனர். இதற்கு உதாரணமாக புங்குடுதீவின் மத்தியில் இருந்த "பருத்தியடைப்பு" கிணற்றில் தண்ணீர் அள்ளுவது தொடர்பாக அவர்கள் மத்தியில் எழுந்த மோதலைக் குறிப்பிடலாம். இந்த விடயத்தில் மு. த. வின் தலைமையில் அவர்களது தோழர்கள் தலையிட்டு இரு பகுதியினரிடையேயும் சமாதானத்தை ஏற்படுத்தி வைத்தனர்.

அப்பொழுது புங்குடுதீவில் வேளாளர்கள் தண்ணீர் அள்ளும் பொதுக்கிணறுகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் தண்ணீர் அள்ள முடியாத நிலை நீண்ட நாட்களாக நிலவி வந்தது. புங்குடுதீவு கண்ணகி அம்மன் கோவில் நன்னீர் கிணறுகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவருக்கும் தண்ணீர் அள்ளும் உரிமை கொடுக்கப்பட வேண்டும் என்று மு.த. நடத்திய சத்தியாக்கிரக உண்ணாவிரத போராட்டம் மாபெரும் புரட்சியாகும். இரண்டு மாதங்களுக்கு மேல் நடந்த இப்போராட்டம் பலவகையான தோற்றங்கள் கொண்டது. மாபெரும் கல்வியாளர்களால் செய்ய முடியாத ஒரு போராட்டத்தை ஒரு சாதாரண பட்டதாரி ஆசிரியரால் நடத்த முடிந்தது.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் இப்போராட்டம் முன்வைக்கப்பட்டது. கிறிஸ்தவ சைவ தாழ்த்தப்பட்ட ஆண்களும் பெண்களும் தண்ணீர் அள்ளுவதற்காக குடங்களைக் கொண்டு பினனே வர மு. தளையசிங்கமும் அவரது பெருந் தொகையான ஆதரவாளர்களும் முன்னே சென்றனர். இவர்களை கிணற்றடிக்கு செல்லவிடாது பெருந்தொகையான வேளாள ஆண்களும் பெண்களும் கைகளில் பொல்லுகள், ஆயுதங்களுடன் மறித்து நின்றனர். மண்ணையும் கற்களையும் அள்ளிவீசினர். மு. தளையசிங்கம் தனது இளைஞர்களைத் தூண்டியிருந்தால் எதிர்த்து நின்ற அனைவரும் சிதறி ஓடியிருப்பர். ஆனால் அதைச் செய்யாது அமைதியான சர்வோதய வழிமுறையிலேயே பரிகாரம் தேட முயன்றார். அதனால் ஒரு வெள்ளிக்கிழமை கண்ணகி அம்மன் கோவிலுக்கு அருகில் உள்ள பத்திரகாளி அம்மன் கோவிலில் உண்ணாவிரதம் இருக்க ஆயத்தமானார். ஒரு வெள்ளிக்கிழமை மு. தளையசிங்கமும் அவரது நெருங்கிய மாணவருமான சு. வில்வரெத்தினமும் உண்ணாவிரதம் இருந்தனர்.

அடுத்த நாள் பெரிய கூட்டம் ஒன்றைக் கூட்டி மக்கள் ஆதரவைத் தேட வேண்டும். அந்தப் பொறுப்பை மு. பொன்னம்பலத்திடம் ஒப்படைத்து அதற்கு உதவியாக செ. சிவநாதனையும் குமாரதாஸையும் நியமித்தனர். இளைஞர்கள் எல்லோரும் அவர்கள் பின் நின்றனர். அவர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டிருந்த இரவு ஊர்காவற்றுறை பாராளுமன்ற உறுப்பினர் வீட்டில் ஆலய தர்மகர்த்தாக்களின் கூட்டம் ஒன்று நடை பெற்றது. உண்ணாவிரதம் இருப்பவர்களை பொலிஸாரைக் கொண்டு தாக்கி சிறையில் தள்ள வேண்டும் என்று அங்கு முடிவெடுக்கப்படுகிறது.

அன்று நள்ளிரவு மது போதையில் வந்த இரண்டு பொலிஸார் காளி கோவிலுக்குள் நுழைந்து உண்ணா விரதம் இருந்த மு. தளையசிங்கத்தையும் சு. வில்வரெத்தினத்தையும் தாக்கி இரத்தம் சிந்த வைத்து சிறையில் தள்ளுகின்றனர்.

அடுத்த நாள் இதைக்கேள்விப்பட்ட புங்குடுதீவு மக்கள் அல்லோலகல்லோலப்படுகின்றனர் பதறிப்போன கோயில் நிர்வாகிகளும் க.பொ. இரத்தினமும் உடனே அரசாங்க அதிபரையும் தீவுப்பகுதி உதவி அரசாங்க அதிபரையும் அழைத்து வந்து கூட்டம் ஒன்றைக் கூட்டினர்.

தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த வெள்ளையன் என்பவரைக் கூட்டிவந்து தடுக்கப்பட்ட கிணற்றில் தண்ணீர் அள்ள வைத்தனர். அந்த நல்ல காரியத்தை தாமே முன்னின்று செய்தது போல் பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுகின்றனர்.

எவ்வாறாயினும் மு. தளையசிங்கத்தின் போராட்டம், தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமையை வென்றெடுப்பதிலேயே முடிகிறது. ஆரம்பத்தில் தாழ்த்தப்பட்ட கிறிஸ்தவ சமூகத்துக்கு இவ்வுரிமை மறுக்கப்பட்டாலும் அவர்களும் படிப்படியாக தமது உரிமையை நிலை நாட்டி வெற்றி பெறுகின்றனர்.

இத்தனைக்கும் மு. தளையசிங்கமும் சு. வில்வரெத்தினமும் எதற்காக தாக்கப்பட்டு சிறையில் தள்ளப்பட்டனர்? ஊர்காவற்றுறை நீதிமன்றத்தில் வழக்கு நடந்த போது கோயில் நிர்வாகிகள் சாட்டிய குற்றம் அவ்விருவரும் அம்மன் கோவில் உண்டியலை உடைத்துத் திருடினர் என்பதே! இதற்கு ஆதரவாக சாட்சி சொல்ல வந்தவர்களில் புங்குடுதீவின் சமூக சேவையாளர்களும் இருந்தனர்.

பூரண சர்வோதய இயக்கம் தொடர்ந்து பெரிதாக இயங்கியது. சக்தியாக்கிரகத்தில் மு. த. தாக்கப்பட்டதன் காரணமாக அவர் இளவயதில் இறந்து விட்டார். மு.த.வின் இறப்பின் பின் அவரது சகோதரர் மு. பொன்னம்பலம் இவ்வியக்கத்தை கொண்டு செலுத்தினார். நாட்டின் யுத்தச் சூழ்நிலை காரணமாக பூரண சர்வோதய இயக்கத்தின் செயற்பாடுகள் தடைப்பட்டன.

அமரர் தளையசிங்கம் புங்குடுதீவில் பிறந்த அறிஞர்களில் முக்கியமானவர். அவர் ஆசிரியராக எழுத்தாளராக, இளைஞர்களின் வழிகாட்டியாக பல்வேறு பரிமாணங்களை எடுத்தவர். மக்களின் வாழ்வுக்கு மார்க்சீய சிந்தனைகள் மட்டும் போதாது அதற்கு அடுத்த பாய்ச்சலும் தேவை என்று கூறி உலக புத்தி ஜீவிகளை திகைக்க வைத்தவர். எழுத்துடன் மட்டும் நின்று விடாமல் சத்திய செயல்கள் மூலம் தலைவனாகலாம் என்று எடுத்துக் கூறியவர். அமரர் மு.தளையசிங்கம் சிறுகதை, நாவல், கட்டுரை, விமர்சனம், மெய்யுள் என்று பல்வேறு ஆக்கங்களை எழுதிப் புகழ்பெற்றவர்.

இவர் எழுதிய 'போர்ப்பறை' 'மெய்யுள்' 'ஈழத்து ஏழாண்டு இலக்கிய வளர்ச்சி' 'கலைஞனின் தாகம்' என்னும் நூல்களும் 'ஒருதனிவீடு' என்ற நாவலும் படைப்பிலக்கியத்துறையில் சிறந்தவை என்று பாராட்டப்பட்டவை. 'உள் ஒளி' 'ஈழவிடுதலை' ஆகிய பத்திரிகைகளை அன்றே நடத்தியவர். புங்குடுதீவில் பிறந்த பல இளைஞர்களை ஒன்றிணைத்து கிராம எழுச்சிக்கு வழிவகுத்தவர். மு.பொன்னம்பலம், சு.வில்வரெத்தினம், அமரர் நாகேசு தர்மலிங்கம்,செ.ஈஸ்வரமூர்த்தி, தம்பிஜயா தேவதாஸ், என்.கே.மகாலிங்கம், ப.சுந்தரலிங்கம் வீ. பாலசுப்பிரமணியம், மு. நேமிநாதன், எஸ். குமாரதாஸ், செ. சிவநாதன் போன்ற பல இளைஞர்கள் அவர் வழிகாட்டலில் சென்று உயர்ந்தனர். ஆக்க இலங்கியங்களையும் இலக்கிய விமர்சனங்களையும் மட்டுமல்லாமல் நவீன காலத்துக்குரிய இலக்கிய வடிவம் குறித்து இவரது உரத்த சிந்தனைகளை பல மட்டங்களிலும் பல்வேறான எதிர்ப்பினைகளைத் தர வழிவகுத்தன. இவை தவிர இவர் கோட்பாட்டு மட்டத்தில் முன்வைத்தவை மார்க்சீய வாதிகளுக்கும் இவருக்குமிடையே பலவித வாதங்களைத் தொடர வழிவகுத்தன. மார்க்சீயத்தைத் தாண்டி ஒரு கோட்பாடு பற்றிய இவரது சிந்தனைகளுக்கு "மெய்முதல்வாதம்" என்ற பெயரிட்டார். இவரது கருத்துகள் வெளியாகத் தொடங்கிய அறுபதாம் ஆண்டுகளில் இருந்து இன்று வரை பலர் இவரது கருத்து நிலையை ஒட்டியும் வெட்டியும் தமது கருத்துகளைத் தந்துள்ளனர்.

இவரது சமகாலத்தவர்களான கா. கைலாசபதி, கா.சிவத்தம்பி முதற்கொண்டு சிவசேகரம் நுஃமான் வரையான மார்க்சிய ஆய்வாளர்களும் தமிழக எழுத்தாளர்களான சுந்தர ராமசாமி, ஜெயமோகன், வேதசகாயகுமார் முதலானவர்களும் விமர்சிக்கத் தலைப்பட்டனர். மக்கள் இலக்கியம் குறித்து எழுந்த கலை இலக்கிய கோட்பாடான "சோசலிச யதார்த்தவாதம்" முன்னுரிமை பெற்றிருந்த அறுபதுகளில் அதற்கு மாறாக "பிரபஞ்ச யதார்த்தவாதம்" என்னும் கலைக்கோட்பாட்டை மு.தளையசிங்கம் முன்வைத்து இயங்கினார். இவர் முன்வைத்த கருத்தியல்களான "மெய்முதல்வாதம்" "மெய்யுள்" "பிரபஞ்ச யதார்த்தவாதம்" என்பன தமிழ் இலக்கியச் சூழலுக்கு புதியவையாக விளங்கின.

மு.தளையசிங்கம் எழுத்துடன் மாத்திரம் நின்று விடவில்லை. தனது முற்போக்குச் சிந்தனைகளை செயல் மூலம் நிறுவிக் காட்டியவர். தாழ்த்தப்பட்டோர் என்று சொல்லப்படுபவர்கள் பொதுக்கிணறுகளில் தண்ணீர் அள்ளவேண்டும் என்று சத்தியாக்கிரகம் செய்தவர். அவரது சகாவான சு. வில்வரெத்தினத்துடன் சத்தியாக்கிரகம் செய்து தாக்கப்பட்டார். அவ்வாறு தாக்கப்பட்டதன் காரணமாக மு.த. இளவயதிலேயே இறக்கவேண்டி ஏற்பட்டது எனலாம். அமரர் மு.தளையசிங்கம் தன் குழுவினருடன் சேர்ந்து "பூரணி" என்னும் இலக்கியச் சஞ்சிகையையும் வெளியிட்டார். அறிவுத்தாகமும் சிந்தனைத் தெளிவும் உள்ளவர்களுக்கு உவகை தரும் ஏடாக "பூரணி" திகழ்ந்தது.

அமரர் மு.த. எழுதிய சிறுகதைகள் "புதுயுகம் பிறக்கிறது" என்ற தலைப்பில் 1965 ஆம் ஆண்டு வெளிவந்தது. இவர் எழுதிய "ஒரு தனி வீடு" என்ற நாவலும் 1984இல் இந்தியாவில் நூலுருப் பெற்றது. இக்கதை தமிழ் ஈழ இயக்க தொடக்க காலத்தில் அதற்கான அவசியம் ஏற்பட்ட சந்தர்ப்ப சூழ் நிலைகளை மிகத் தெளிவாக எடுத்துச் சொல்கிறது.

இவர் எழுதிய "ஏழாண்டு இலக்கிய வளர்ச்சி" என்னும் விமர்சன நூல் 1984இல் இந்தியாவில் வெளியிடப்பட்டது. அமரர் மு. தளையசிங்கம் எழுதிய "கலைஞனின் தாகம்" என்னும் நூல் 1985இல் இந்தியாவில் வெளியிடப்பட்டது.

உடல், உயிர், மனத்தளங்களையும் கடந்த கலைப் பரவச நிலைக்கு மனிதனை உயர்த்துவதே உண்மையான கலை இலக்கியம் என்று கூறும் இவர், மனிதனின் பரிணாம வளர்ச்சியில் அப்பணி நடக்க வேண்டிய காலகட்டத்தை நாம் அடைந்து விட்டோம் என்னும் தனது நம்பிக்கையை அறிவு ரீதியாக அழகுற ஆணித்தரமாக இந்நூல் மூலம் முன்வைக்கிறார்.

மு.தளையசிங்கம் எழுதிய "முற்போக்கு இலக்கியம்" என்னும் 48 பக்கங்களைக் கொண்டநூல் 1948ஆம் ஆண்டு இந்தியாவில் வெளியிடப்பட்டது.

மு.தளையசிங்கம் எழுதிய "போர்ப்பறை" "மெய்யுள்" ஆகிய நூல்களும் பிரபலம் பெற்றவை. போர்ப்பறை நூலுக்கு 1970இல் இலங்கை சாகித்திய மண்டலப் பரிசு கிடைத்தது. "மெய்யுள்" என்ற நூல் இவர் இறப்புக்குப்பின் 1974இல் வெளிவந்தது.

1935ஆம் ஆண்டு ஒக்டோபர் மாதம் 20ஆம்திகதி புங்குடுதீவு 9ஆம் வட்டாரத்தில் பிறந்த மு.தளையசிங்கம், ஆரம்பக்கல்வியை புங்குடுதீவிலும் உயர்கல்வியை இரத்தினபுரியிலும் கற்றவர். பேராதனைப் பல்கலைக்கழகத்தில் பி.ஏ. பட்டம் பெற்றார். பின்பு புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் ஆசிரியராக கடமையாற்றினார். இவரது மனைவி பெயர் கனகம்மா. இவர்களுக்கு இரண்டு புதல்வர்களும், இரண்டு புதல்விகளும் இருக்கிறார்கள். பிள்ளைகள் அனைவருக்கும் திருமணமாகிவிட்டது. மூத்தமகளைத் தவிர மற்றவர்கள் மூவரும் வெளிநாடுகளில் வசிக்கிறார்கள்.

பிரபல கவிஞர் மு. பொன்னம்பலம் இவரது சகோதரராவார். 02.04.1973இல் காலமாகும் வரை அவர் வாழ்ந்த முப்பத்தெட்டு ஆண்டுகளில் ஏற்படுத்திய சலனம் இன்றுவரை தொடர்கிறது. மு.தளையசிங்கம் நீண்டகாலம் உயிரோடு இருந்திருந்தால் கலை இலக்கிய அரசியல் உலகில் அவரது பெயர் மேலும் பிரகாசித்திருக்கும். அவர் பிறந்த ஊர் என்பதால் புங்குடுதீவின் புகழும் மேலோங்கியிருக்கும்.

11

# க. திருநாவுக்கரசுவும் வட இலங்கை சர்வோதய இயக்கமும்



புங்குடுதீவின் வளர்ச்சிக்காகப் பல சங்கங்கள் உருவாக்கப்பட்டன. அவை உள்ளூரிலும் வெளியூரிலும் இயங்குகின்றன. புங்குடுதீவுக்குப் பெயர்வாங்கித் தந்த நிறுவனங்களில் வட இலங்கை சர்வோதய இயக்கமும் ஒன்றாகும். இந்த இயக்கத்தை புங்குடுதீவுக்குக் கொண்டு வந்தவர் அமரர் க.திருநாவுக்கரசு ஆவார். அரசியல் மூலம் தமிழ் மண்ணில் அபிவிருத்திகளைப் பெருக்க முடியுமென எண்ணிய திருநாவுக்கரசு காந்திய வழியில் சென்று சர்வோதயத்தில் இணைந்து கொண்டார். 1972ஆம் ஆண்டு அவ்வியக்கத்தில் சேர்ந்து கொண்ட அவர் 11 ஆண்டுகளாக உண்மை ஊழியனாக செயலாற்றினார். பெரும்பான்மைச் சமூகத்தோடு சமாளிக்க முடியாது என்பதை உணர்ந்தார். சர்வோதயத் தலைமைப்பீடம் வடபகுதியை ஓரம் கட்டுவதைக் கண்ட திருநாவுக்கரசு அவ்வியக்கத்திலிருந்து பிரியவேண்டிய நிலை ஏற்பட்டது.

1983ஆம் ஆண்டு ஜூலைக் கலவரம் நிகழ்ந்தது. அந்த ஆண்டுதான் வட இலங்கைச் சர்வோதய இயக்கத்தை புங்குடுதீவில் உருவாக்கினார்கள். வடபகுதியின் பல இடங்களில் சர்வோதய நிலையங்கள் அமைக்கப்பட்டன. விவசாயப்பண்ணைகள், சிறுவர் பாடசாலைகள், சுகாதார சேவை நிலையங்கள், மலிவு விலைக்கடைகள், சேமிப்பு நடைமுறைகள், முத்தமிழ் நிகழ்வுகள், சிரமதானங்கள், அன்னதானங்கள், தண்ணீர்ப்பந்தல்கள், போன்ற பல்வேறு நிகழ்ச்சித்திட்டங்கள் மூலம் கிராமங்களை எழுச்சியடையச் செய்தனர். திருநாவுக்கரசு அவர்கள் கிராம மக்களுக்கு நல்ல சேவைகளைச் செய்து அவர்களை உயர்வடையச் செய்தார்.

அமரர் திருநாவுக்கரசு கொழும்பில் வாழும் புங்குடுதீவு மக்களை ஒன்றிணைத்து கொழும்பு புங்குடுதீவு மக்கள் அபிவிருத்திச் சங்கம் என்ற நிறுவனத்தை உருவாக்க மூலகாரணமாக நின்றார். அந்நிறுவனம் இப்பொழுது புங்குடுதீவு மக்களுக்கு பல்வேறு சேவைகளை செய்து வருகிறது. தலைவராக வி.ரி.தமிழ்மாறனும் செயலாளராக எஸ்.இராமலிங்கமும் பொருளாளராக சி.முருகானந்தவேலும் பணியாற்றுகிறார்கள். 2001ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 3ஆம் திகதி சர்வோதய தொண்டர் க. திருநாவுக்கரசு காலமானார். அவர் விட்டுச் சென்ற சர்வோதய நிலையம் இன்றும் சேவை செய்கிறது. அமரரின் சகோதரிகளான க.புஷ்பமணியும், பொ.ஜமுனாதேவியும் அச்சேவைகளைத் தொடர்கிறார்கள்.

அமரர் திருநாவுக்கரசின் முயற்சியால் ஆரம்பித்து வைக்கப்பட்ட "கொழும்பு புங்குடுதீவு மக்கள் அபிவிருத்திச் சங்கம்" பல நல்ல முயற்சிகளில் ஈடுபடுகிறது. அது புங்குடுதீவு மக்கள் முன்னேற்றம் பாடசாலை அபிவிருத்தி போன்றவற்றின் வளர்ச்சிக்காக பாடுபடுகிறது.

1939 ஆம் ஆண்டு புங்குடுதீவில் பிறந்த க. திருநாவுக்கரசு 1956 ஆம் ஆண்டு தொடக்கம் நாட்டுக்காக தன்னை அர்ப்பணித்துத் தொண்டு செய்தவர். இளம்பராயத்தில் தமிழ் அன்னை மீது பற்றுக் கொண்ட இவர், தமிழரசுக் கட்சியில் இணைந்தால் தான் தமிழுக்கும் தமிழ் மண்ணுக்கும் விடிவு காலம் என நினைத்து தந்தை செல்வாவுடன் இணைந்து தமிழரசுக் கட்சியை வளர்த்தெடுக்க மேடைமேடையாகப் பேசி ஆதரவு தேடிக்கொடுத்த சிறந்த மேடைப் பேச்சாளன். புங்குடுதீவு இளைஞர் கழக பொதுச் செயலாளராக இருந்த காலத்தில் இயல், இசை, நாடகத்துறையை வளர்த்தெடுப்பதிலும், பாடசாலைக் கல்வி மேம்பாட்டிற்குப் பல ஆசிரியர்களை நியமனம் செய்வதற்கும் ஒழுங்குகளை மேற்கொண்டு பிள்ளைகளுக்குக் கல்வி அறிவை ஊட்டிய பெருமை இவருக்குண்டு.

புங்குடுதீவு கிராமசபையில் 1964 - 1968 வரை தலைவராக இருந்தகாலத்தில் கிராமத்தில் பல அரும்பெரும் சேவைகளைச் செய்தார். கிராம சபைக்கான புதிய கட்டிடம், நூல் நிலையம், சித்த ஆயுர்வேத வைத்தியசாலை, இலவச குடிநீர் விநியோகம், 12 வட்டாரங்களிலும் பொதுக்கிணறுகள், மலசலகூடங்கள், பொதுவீதி அமைத்தல் போன்றவற்றுடன் பிரதான வீதி ஒழுங்கைகளை அகலித்துச் சிறந்த போக்குவரத்தை ஏற்படுத்தியவர். போக்குவரத்து நெடுஞ்சாலை அமைச்சுடன் தொடர்பு கொண்டு வீதிகளை அகலித்து திருத்தஞ்செய்தும், காந்தி வீதி, தொழிலாளர்புர வீதி, மாக்கொண்டை வீதி, சிவலப்பிட்டி வீதி, கொம்பாபிட்டி வீதி, சங்குமாலடி வீதி போன்ற பலவீதிகளை அமைத்தும் 1570 அடி நீளமான மணியகாரன் வீதியைப் புதிதாகத் திறந்து கொடுத்தும் மக்கள் இலகுவாகப் பிரயாணஞ்செய்ய உதவி செய்த மாபெரும் தொண்டர். வீதிகளை அமைக்கும்பொழுது மக்களிடம் இருந்து வந்த எதிர்ப்புகளை எல்லாம் கண்டும் நிலை தடுமாறாது தான் எடுத்த கருமத்தை முடித்து வைக்கும் அஞ்சா நெஞ்சன்.

ஈற்றில் அரசியல் மூலம் தமிழ் மண்ணில் அபிவிருத்திகளைப் பெருக்க முடியாதெனக் கண்ட அவர் காந்திய வழியில் சென்ற சர்வோதய இயக்கத்தில் 1972 ஆம் ஆண்டு இணைந்து 11 ஆண்டு காலமாகச் செயற்பட்டார். வடபகுதியின் பல பகுதிகளிலும் கிராமோதய நிலையங்கள் அமைத்து விவசாயப் பண்ணைகள், சிறுவர் பாடசாலைகள், சுகாதார சேவை நிலையங்கள், மலிவுவிலை கிராமக்கடைகள், சேமிப்பு நடைமுறைகள், முத்தமிழ் நிகழ்வுகள், சிரமதானங்கள், அன்னதானங்கள், தண்ணீர்ப்பந்தல்கள் போன்ற பல நிகழ்வுகள் மூலம் கிராமங்களை எழுச்சியடையச் செய்தார்.

அதன் பின் சர்வோதய தலைமைப்பீடம் வடபகுதியை ஓரங்கட்டுவதைக் கண்டு அவர்களை விட்டுப் பிரிந்து 1983 ஆம் ஆண்டு வட இலங்கை சர்வோதயத்தை ஸ்தாபித்தார். இவரது வெற்றிப் பாதையில் பல உதாரணங்களைக் காணலாம்.

கேரதீவு சர்வோதய எழுச்சிக் கிராமம் வளர்ந்து நிற்கின்றது. இது இவரது ஆற்றலை வெளிப்படுத்தி நிற்கிறது. புங்குடுதீவு கிராமங்களை நன்னீர்த் திட்டத்தின் கீழ் உருவாக்க கள்ளியாறு கடல்நீர் ஏரியை வடகடலோடு உள்ள அதனது தொடர்பைத் துண்டித்து அணை, பாலம் அமைத்து நன்னீர் திட்டத்திற்கு ஆரம்ப வித்திடப்பட்டது. பல குளங்கள் ஆழமாக்கப்பட்டு தரிசு நிலங்கள் விவசாயக் காணியாக மாற்றமடைய வைத்தமை கடைசியாக மறைவின் போதுங்கூட அடைகாத்த குளம் சான்று பகர்ந்து நிற்கிறது.

இத்திட்டப்படி வரண்ட காலப்பகுதியில் நாளாந்தம் 20 பனை வீதம் பனை ஓலைகளை வெட்டி பசுக்களுக்கு உணவாக்கி அவை உண்ணும் போது கண்குளிரப் பார்த்து மகிழ்ந்தது இறுதிவரை நடைபெற்ற ஒரு திட்டமாகும்.

வாசிப்பதன் மூலம் மனிதன் பூரணத்துவம் அடைகின்றான். இதில் வெற்றி கண்ட இவர் எதிர்கால சந்ததிக்கென ஆகக் குறைந்தது இருபத்தையாயிரம் புத்தகங்களையாவது சேர்த்து அறிவாலயம் அமைக்க இறுதி வரை அரும்பாடுபட்டு அயராது உழைத்தவர்.

திருநாவுக்கரசு ஆன்மீக வழி நின்று சுவாமி "யோகர்" அவர்களின் ஆசீர்வாதம் பெற்று அறவழி நின்று அறக்கொடை புரிந்து திருவடிநிலை அமைத்து முற்றோதல் புரிந்து இறை வழிபாட்டை வெளிப்படுத்திய ஓர் ஆன்மீகவாதியாவார். தானங்களிலே சிறந்த தானம் அன்னதானம் என எண்ணியவர். நல்லைக் கந்தனின் வீதியிலே சுவாமியின் நற்கருணையால் சிறந்த அன்னதானத்தை நடாத்தி எமது கிராமத்தின் பெயரைப் புகழடைய வைத்தவர். அமரர் சுகபோக வாழ்வுகள் இவரது வாசற்படி வரை, பல தடவைகள் உள் நாட்டிலிருந்தும் வெளிநாட்டிலிருந்தும் வந்தபோதெல்லாம் அதைத் தூக்கி எறிந்துவிட்டு ஏழைகளின் தோழனாக எளிமையின் சின்னமாக எம் மத்தியிலே எம் மண்மீது இறுதிவரை வாழ்ந்து தனக்கென ஒரு சகாப்தத்தையே உருவாக்கி விட்டார். அன்னார் எம் மக்கள் மீது மட்டுமல்லாது குடாநாடு முழுவதும் தனது சேவையை விஸ்தரித்து வெற்றி கண்டார்.

புங்குடுதீவிலிருந்து புலம்பெயர்ந்து கொழும்பில் வாழும் புங்குடுதீவு மக்களை இணைத்து ஒரு தகுதி வாய்ந்த கழகத்தினை உருவாக்கினார். இதில் இணைக்கப்பட்ட அனைவரும் பொது நோக்குள்ளவர்களாகவும் தமிழ் அன்னை மேல் தீராத மோகம் கொண்டவர்களாகவும், சமய ஆசார சீலராகவும், கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டுடன் ஒழுகியவர்களாகவும் இருந்தது மிகவும் பெருமைக்குரிய விடயமாகும். அந்தக் கழகத்திற்கு "கொழும்பு - புங்குடுதீவு மக்கள் அபிவிருத்திக் கழகம்" என்ற நாமத்தைச் சூட்டி "என்கடன் பணிசெய்து கிடப்பதே"என்ற தாரக மந்திரத்திற்குக் களங்கமேற்படாத வகையில் வாழ்ந்த இவர், தன்னால் இனி நாட்டுக்கு ஒன்றும் செய்யமுடியாது என்பதை சுவாமிகள் உணர்த்தியதால் புங்குடுதீவின் வளர்ச்சியை எண்ணி அந்தக் கழகத்திடம் ஒப்படைத்து அறம் காத்த ஆத்மா விண்ணுலகு சென்று அணையாத தீபமாக சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது.

தீவுப்பகுதியின் வளர்ச்சியையிட்டு க. திருநாவுக்கரசு அவர்கள் கண்ட கனவை நனவாக்க அவரது சர்வோதய இயக்கத் தொண்டர்கள் முயலுகிறார்கள். சர்வோதயத் தொண்டர் க. திருநாவுக்கரசு விட்டுச் சென்ற பணியை அவரது சகோதரிகளான க. புஷ்பமணியும் பொ. ஜமுனாதேவியும் தொடர்கிறார்கள். காந்திஜி, வினோபாஜி அடியொற்றி வாழ்ந்த பிரபல சமூகத்தொண்டர், 2001 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 03 ஆம் திகதி ஓய்வு பெற்று உறங்கிவிட்டார். அவர் மறைந்து விட்டாலும் அவர் உருவாக்கிய வட இலங்கை சர்வோதய இயக்கம் என்றும் மறையாது. இது என்றும் அவர் பெயரைச் சொல்லிக் கொண்டேயிருக்கும்.

12

# புங்குடுதீவுக் கோவில்கள்

புங்குடுதீவு சமயங்களுக்கு பேர் போன ஒரு புனித பூமியாகும். நீண்ட காலமாக சைவ சமயம் இங்கு தளைத்து வளர்ந்து வருகிறது. குறிப்பிட்ட அளவு கிறிஸ்தவர்களும் வாழுகிறார்கள். ஒரு காலத்தில் இது ஒரு பௌத்த தலமாக விளங்கியதாகவும் கூறப்படுகிறது. புங்குடுதீவில் இப்பொழுது 60க்கும் மேற்பட்ட சைவ் ஆலயங்கள் இருக்கின்றன. கிராமங்களை காக்கும் தெய்வமாகப் போற்றப்படும் ஐயனார் ஆலயங்கள் தீவின் வடக்கு, கிழக்கு, தெற்கு ஆகிய திசைகளில் அமைந்திருக்கின்றன. மேற்கில் பேய்ச்சி அம்மன் ஆலயம், கிழக்கில் கண்ணகை அம்மன் ஆலயம், நடுவே முத்துமாரியம்மன் ஆலயம் என அம்மன் ஆலயங்களும் எழுந்தருளியிருக்கின்றன.

புங்குடுதீவில் 90 சதவீதம் இந்துக்கள் வாழ்ந்தனர். தீவின் மத்தியில் கணிசமான அளவு கிறிஸ்தவர்கள் வாழ்ந்து வந்தனர். தீவின் நடுப்பகுதியில் உரோமன் கத்தோலிக்க சவேரியார் ஆலயமும் மேற்கே அமெரிக்கன் மிஷன் திருச்சபைத் தேவாலயமும் இருக்கின்றன.

புங்குடுதீவில் இந்து சமயம் நீண்டகாலமாகவே நிலவி வந்திருக்கிறது. கி.பி.16,17, 18, ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட போர்த்துக்கீசர் ஒல்லாந்தர் ஆட்சியினால் அது மிகவும் நலிந்து காணப்பட்டது. பிரித்தானியர் ஆட்சிக்காலம் தொடக்கத்திற்கு சற்று முன்பும் குறிப்பாக அவர்கள் ஆட்சி தொடங்கிய பின்பு ஏற்பட்ட மத சுதந்திரத்தின் விளைவாக இந்து சமயத்தின் நிலைக்களன்களாகக் கோவில்களே விளங்குகின்றன. கோயில்களே சமய சமூக பண்பாட்டு மையங்களாக விளங்கின. அவற்றை மையமாக வைத்தே சமூகம் செயற்பட்டு வந்தது.

அரச ஆதரவில் 1890இல் பதிவு செய்யப்பட்ட யாழ்ப்பாண மாவட்ட இந்துக் கோயில்கள், கிறிஸ்தவ ஆலயங்கள் பற்றிய கையெழுத்துப் பதிவேடு ஒன்று இருக்கிறது. இப்பதிவேட்டில் 1800 - 1860 வரையுள்ள காலப்பகுதியில் புங்குடுதீவில் அமைக்கப்பட்ட இருபது கோவில்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இவற்றுள் 10 பிள்ளையார், 7 அம்மன், 2 முருகன், ஒரு ஐயனார் கோயில் என்பன அடங்குகின்றன. குறிப்பிட்ட கோயில்கள் நிறுவப்பட்ட ஆண்டு, நிறுவியவர், நிர்வாகி, கோயில்கள் அமைக்கப்பட்ட பொருள்கள் நாட்பூசை, திருவிழா, பங்குபற்றிய மக்கள் தொகை ஆகியன பதிவேட்டில் இடம் பெற்றுள்ளன.

கி.பி. 1800-1860க்கு இடையில் பல இந்து ஆலயங்கள் அமைக்கப்பட்டு நன்கு செயற்பட்டு வந்தமையை நோக்கும் பொழுது இக்காலத்தில் யாழ்ப்பாணத்தின் பிற இடங்களைப் போலவே இங்கும் ஒரு சமயப் புத்துயிர்ப்பு மீண்டும் ஏற்பட்டமையை அவதானிக்க முடிகிறது. இவ்வாறு ஏற்பட்ட புத்துயிர்ப்பின் தொடக்க காலத்திலேதான் ஆறுமுக நாவலர் (1823 - 1879) தோன்றி இப்புத்துயிர்ப்பினை முன்னெடுத்துச் சென்று வெற்றி கண்டார்.

1800 - 1860 காலப்பகுதியில் அமைக்கப்பட்ட கோவில்களில் பெரும்பாலானவை பிள்ளையார், அம்மன், முருகன், நாச்சிமார், ஐயனார் போன்ற தெய்வங்களுக்கான கோவில்களே. சிவனுக்குரிய தனிப்பட்ட கோயில்கள் இல்லாவிடினும். சிவவழிபாடு, சிவவிரதங்கள், சிவராத்திரி விழாக்கள் முதலியனவும் நடைபெற்றுள்ளன. சில கோயில்களின் பெயர்கள் மாற்றமடைந்துள்ளன. இத்தகைய மாற்றங்கள் 20 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டன.

புங்குடுதீவு கண்ணகி அம்மன் கோயில், ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி அம்பாள் என மாறியது. குறிகாட்டுவான் பேய்ச்சி அம்மன் கோயிலின் பெயர், ஜெகன்மாதா மனோன்மணி அம்மன் என மாற்றப்பட்டுள்ளது. ஊரதீவு பாணாவிடை ஐயனார் கோவில், சிவன் கோயிலாக மாறிவிட்டது. புங்குடுதீவு கிழக்கிலுள்ள நாச்சிமார் கோயில்களில் இரண்டு முருகன் கோயில்களாக மாறிவிட்டன. உதாரணமாக மடத்துவெளி நாச்சிமார் கோயில், வயலூர் பாலசுப்பிரமணிய கோயில் என்று மாறிவிட்டது. இக்காலப்பகுதியில் எந்தக் கோயில்களுக்கும் இராஜகோபுரங்கள் கட்டப்படவில்லை.

பெரியபுலம் பிள்ளையார் ஆலயத்தின் நடேசர் விக்கிரகம், புங்குடுதீவுக் கோயில்களில் உள்ளவற்றில் காலத்தால் முந்தியது எனக் கூறப்படுகிறது. அறுபத்துக்கு மேற்பட்ட பெரிய, சிறிய கோயில்களிலே சுமார் 15 கோயில்கள் மஹோற்சவக் கோயில்களாகும். சின்னக்கதிர்காமத்தின் திருவிழாக்காலம் கலண்டரில் இடம்பெற்றாலும் கோயில் செயற்படாமலுள்ளது.

கண்ணகை அம்மன் கோயில், கிராஞ்சியம்பதி சிவன்கோயில். பெருங்காடு முத்துமாரியம்மன் கோவில் 4ஆம் வட்டாரம் ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி அம்மன் கோயில் ஆகியவற்றுக்கு வானளாவிய இராஜ கோபுரங்கள் அமைக்கப்பட்டு உள்ளன. மடத்து வெளி வயலூர் முருகன் கோவிலுக்கு இப்பொழுது இராஜ கோபுரம் கட்டப்படுகிறது. பெரிதும் சிறிதுமாக 10க்கு மேற்பட்ட அம்மன் ஆலயங்கள் உள்ளன. புங்குடுதீவிலுள்ள சில பிள்ளையார் கோயில்களை இனங்காத்த முதலி பரம்பரையினர் கட்டினர்.

புங்குடுதீவின் சில கோவில்களில் மஹோற்சவ காலங்களில் பெரிய கலைவிழாக்கள் போலவே திருவிழாக்கள் நடைபெற்றன. இவ்விழாக்களுக்கு யாழ்ப்பாணத்திலிருந்து சிறந்த நாதஸ்வர தவில் கலைஞர்களை வரவழைத்து சிறப்பான கச்சேரிகள் நிகழ்த்துவர். சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதி வரை சதிர்க்கச்சேரிகளும், சின்னமேளம் இசைக்கச்சேரிகளும் சில விழாக்களில் இடம் பெற்றன. கண்ணகை அம்மன் கோயில், கலட்டிப் பிள்ளையார் கோயில், பெரியபுலம் பிள்ளையார் கோயில், பெருங்காடு கந்தசாமி கோயில் ஆகியவற்றிலே மஹோற்சவங்கள் பிரமாதமாக பல்வேறு கலை நிகழ்ச்சிகளுடன் நடைபெற்றன.

புங்குடுதீவிலுள்ள சிவாசாரியார்களும் ஏனையோரில் ஒருசாராரும் சமய அறிவிலே சிறந்து விளங்கினர். இருபதாம் நூற்றாண்டில் இருந்தோரில் சிவஸ்ரீ சோமசுந்தரக்குருக்கள், ஐ.கைலாசநாதக்குருக்கள், சி.சதாசிவக்குருக்கள், ஸ்ரீநிவாசக்குருக்கள் முதலியோரைக் குறிப்பிடலாம். அந்தணர் அல்லாதவர்களிலே வ.பசுபதிப்பிள்ளை, வைத்தியர். க. கணபதிப்பிள்ளை, க. சதாசிவம்பிள்ளை ஆசிரியர், சேதுபதி ஆசிரியர், வை. நாகமணி, தி.குருமூர்த்தி சாஸ்திரிகள், வித்துவான். சி. ஆறுமுகம், வித்துவான். பொன், அ. கனகசபை, தி. சதாசிவம் ஆசிரியர் சி.க. நாகலிங்கம் ஆசிரியர் போன்ற பல

அறிஞர்கள் சைவத்திருமுறைகளிலும் சைவ சித்தாந்தங்களிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தனர். இவர்கள் தாம்வாழ்ந்த இடத்திலுள்ள கோயில்களில் திருமுறை ஓதுதல், புராண படனம் செய்தல், பதிகங்கள், ஊஞ்சற்பாடல்கள் இயற்றுதல் போன்ற சமயப் பணிகளில் ஈடுபட்டனர்.

1954 ஆம் ஆண்டு கண்ணகை அம்மன் கோயில் முன்றலில் நடத்தப்பட்ட சிலப்பதிகார விழாவும் 1960ஆம் ஆண்டு கலட்டி விநாயகர் ஆலயத்தில் தமிழுக்கும், தமிழர் நன்மைக்குமாக நடத்தப்பட்ட மஹாயாகமும் கோடியர்ச்சனையும் பின்பு இதே ஆலயத்தில் நடைபெற்ற தமிழர் திருமுறை அர்ச்சனையும் குறிப்பிடத்தக்கன. புங்குடுதீவிலே சைவ சமய வளர்ச்சிக்காக வ.பசுபதிப்பிள்ளை விதானையாரால் உருவாக்கப்பட்ட சைவ கலா சங்கத்தின் சமய கல்விச் செயற்பாடுகளும் அக்கழகம் கிராஞ்சியம்பதி முருகன் ஆலயச் சூழலிலே 1967இல் நடத்திய சைவப்பெருமகாநாடும் க. திருநாவுக்கரசு தலைமையில் இயங்கிய சர்வோதயத்தின் சமூக சமயப் பணிகளும் நன்கு குறிப்பிடத்தக்கன.

சென்ற நூற்றாண்டின் எண்பதுகளில் ஏற்பட்ட போர் அனர்த்தங்களாலும் 991இல் ஏற்பட்ட மக்கள் இடம் பெயர்வினாலும் இங்கு பல நூற்றாண்டுகளாக நிலவி வந்த உட்கட்டுமானம் சீர் குலைந்து விட்டது. 1996 மே மாதம் தொடக்கம் மக்கள் சிலர் மீளக் குடியேறத் தொடங்கினர். 1991ஆம் ஆண்டு தொடக்கம் பல வகையிலும் பாதிப்படைந்த கோவில்கள் புனர் நிர்மாணம் செய்யப்பட்டு வருகின்றன. வெளிநாடுகளில் புலம் பெயர்ந்து வாழும் சமயப்பற்றும் தேசப்பற்றுமுள்ள புங்குடுதீவு மக்களே முன்வந்து உதவி செய்து வருகின்றனர். கொழும்பு முதலிய இடங்களிலுள்ள சில வர்த்தகர்களும் பிறரும் தத்தம் பங்களிப்புகளைச் செய்து வருகின்றனர். 2002 ஆம்ஆண்டிலே ஏ 9 பாதை திறக்கப்பட்ட பின்னரே கோயில்த்திருப்பணிகளும் துரிதப்படுத்தப்பட்டு திருப்பணிகளும் மகா கும்பாபிஷேகங்களும் நடைபெறுகின்றன. புங்குடுதீவை சேர்ந்தவர்கள் உள்நாட்டிலிருந்தும் வெளிநாட்டிலிருந்தும் ஊருக்கு வந்து செல்லுகின்றனர்.

புங்குடுதீவிலே அறுபத்துக்கும் மேற்பட்ட சைவ ஆலயங்களும் நான்கிற்கு மேற்பட்ட கிறிஸ்தவ ஆலயங்களும் இருக்கின்றன. சிறியதும் பெரியதுமான இக்கோயில்களிலே 14 அம்மன் கோயில்கள், 8 பிள்ளையார் கோயில்கள், 5 முருகன் ஆலயங்கள், 4 ஐயனார் கோயில்கள், 3 சிவன் கோயில்கள். 24 வைரவர் கோயில்களும் இருக்கின்றன. மூன்று பெத்தப்பா கோயில்களும் இருக்கின்றன.

# புங்குடுதீவு 10ஆம் வட்டாரம்
# அருள்மிகு கண்ணகை அம்மன் என வழங்கும்
# ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரி அம்பாள் ஆலயம்

மூர்த்தி, தலம், தீர்த்தம், விருட்சம் ஆகியவை ஒருங்கே அமையப்பெற்று வரலாற்றுச் சிறப்பு மிக்க ஆலயமாக விளங்குவது கண்ணகையம்மன் என வழங்கும் அருள்மிகு ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரி அம்பாள் ஆலயம் ஆகும். இவ்வாலயம் புங்குடுதீவு தெற்குக் கடற்கரை மணற்பரப்பில் ஏறக்குறைய ஆயிரம் பரப்பு நிலத்தில் அமைந்துள்ளது. நெடுந்தீவை பிறப்பிடமாகக் கொண்ட கதிரவேலு மணியகாரர் அவர்கள் புங்குடுதீவு நரசிங்க முதலியின் மகன் முத்துக்குமாரு உடையார் அவர்களின் மகளை திருமணம் செய்து பிறந்த பிள்ளைகள் ஆறு பெண்களும் இரு ஆண்களும் ஆவர். அவர்களின் இரண்டாவது பெண்ணான கற்பாத்தைபிள்ளை, மைத்துனர் இராமலிங்க முதலியை திருமணம் செய்து பிறந்த முதல் பிள்ளையே தீவகத்தில் மிகவும் பிரபல்யம் பெற்று விளங்கிய கதிரவேலு மணியகாரர் பேரர் கதிரவேலு உடையார் ஆவார். (கறுப்பாத்த உடையார்). கற்பாத்தைபிள்ளை என்பவர் தன் தந்தையாரின் நிலபுலங்களின் பல நூற்றுக்கணக்கான பரப்பு நிலங்களை மேற்படி ஆலயத்துக்கு தர்மசாதனம் செய்துள்ளார். இவர் இதற்கு பின் ஆலயநிர்வாகத்தினை தன் மூத்தமகனான கதிரவேலு உடையாரவர்களிடம் கையளித்துள்ளார். அவரின் மூத்த மகன் விஸ்வலிங்கம் என்பவரும் விஸ்வலிங்கத்தின் மூத்த மகன் சபாரத்தினம் என்பவரும் சபாரத்தினத்தின் மூத்தமகன் ராஜரத்தினம் என்பவரும் தம்பியார் திருஞானம் என்பவரும் நிரந்தர தர்மகர்த்தாக்களாக இருந்து பரிபாலன சபையுடன் இயங்கி வருகின்றனர். இக்கோயில் பற்றி கர்ணபரம்பரைக் கதையொன்று கூறுவார்கள்.

கதிரவேலு ஆறுமுகம் உடையார், காலத்தால் முற்பட்ட நிலச்சுவாந்தர் ஆவார். இவருக்குப் புங்குடுதீவு கிழக்கில் இருந்து தெற்குக் கடற்கரை வரை காணிகள் உண்டு. இவர் தனது பட்டியிலிருந்து மந்தைகளைக் காலையில் வெளியில் மேய்ந்து வருவதற்காகத் திறந்து விடுவார். ஒரு நாள் மாலையாகியும் அவரது மாடுகள் பட்டிக்குத் திரும்பவில்லை. உடனே உடையார் மாடுகள் வழமையாக மேயப்போகும் இடங்களுக்குத் தேடிப்போனார். கோரியா என்னும் இடத்தில் கடற்கரையின் ஒரு பகுதியில் ஏதோ ஒன்றைச் சுற்றி வளைத்துக் கொண்டு அவரது மாடுகள் நின்றன. மாடுகளின் நடுவே ஓர் அழகிய பேழை காணப்பட்டது. சென்றவர்கள் பேழையைத் தூக்கிக் கரைக்குக் கொண்டு வந்ததும் பெட்டியை ஓரிடத்தில் வைத்தபோது அப்பெட்டி நிலத்தில் இருப்புக்கொள்ளவில்லை.

அவர்கள் மீண்டும் அப்பெட்டியைத் தூக்கிக் கொண்டு தற்போது கோவில் அமைந்துள்ள இடத்திற்கு வந்தனர். அங்குள்ள ஒரு பழைமை வாய்ந்த பூவரசம் மரத்தின் நிழலிலே வைத்துவிட்டு திரும்பவும் தூக்கினர். ஆனால் அவர்களால் மீண்டும் அப்பெட்டியை அவ்விடத்தில் இருந்து தூக்க முடியவில்லை. பெட்டியைத் திறந்து பார்த்தனர். அதனுள் அழகான அம்பாள் சிலை ஒன்று காணப்பட்டது. இதனைப் பார்த்துக் கொண்டு நின்ற ஒரு வயோதிபப் பெண் உருக்கொண்டு "நான் திருவருள் கூட்டிய கண்ணகிப்பெண். என்னுடன் எனது பாதுகாப்பிற்காக வந்த பத்திரகாளிக்கும் இந்த இடம் பிடித்துக் கொண்ட படியால் இங்கு வந்து சேர்ந்தோம்.



புங்குடுதீவு கண்ணகை அம்மன் என வழங்கும்
ஸ்ரீ இராஜராஜேஸ்வரி அம்பாள் ஆலயத் தேர்த்திருவிழா



புங்குடுதீவு -10ஆம் வட்டாரம்
கண்ணகைபுரம் கண்ணகை அம்மன் கோவில் தெப்பைக்குளம்

எங்களை இந்த இடத்திலேயே பிரதிஷ்டை செய்து ஆறுதல் படுத்துங்கள். நன்மை உங்களை நாடி வரும். வேறு ஆறு சிலைகள் வெவ்வேறு இடங்களுக்குப் போயிருக்கின்றன. அங்குள்ளோர் அவற்றைப் பார்க்கட்டும்" என்று கூறினாள். பெண் கூறியதைக் கேட்ட அங்கு நின்ற அத்தனை பேரும் பக்திப் பரவசமாயினர். ஆறுமுகம் உடையார் கிராம மக்களுடன் சேர்ந்து கோவில் அமைக்கும் பணியில் இறங்கினார். மறுநாள் இரவு மழையுடன் கூடிய பெரும் புயல் அடித்தது. அதிகமான பனைமரங்கள் முறிந்து விழுந்தன. இம்மரங்களைக் கொண்டு அப்பெட்டி வைக்கப்பட்டிருந்த இடத்தில் ஆலயம் அமைக்கப்பட்டு, கண்ணகி அம்மனை அங்கு பிரதிஷ்டை செய்து நித்திய பூசைகள் செய்து வழிபட்டனர். இவ்வாலயத்தின் வடக்குப் பக்கமாக காவல் தெய்வமாகிய பத்திரகாளி அம்மனுக்கும் சிறிய ஆலயம் ஒன்றினை அமைத்து நித்திய பூசைகள் மேற்கொள்ளப்பட்டன. இதுதான் அந்தக் கதை.

பழமை வாய்ந்த பூவரச மரம் ஆலயத்தின் தல விருட்சமாகியது. காலத்திற்குக் காலம் கடல்மூலம் ஆலயத்திற்குத் தேவையான தளபாடப் பொருட்கள் கரையை வந்தடைந்தன. நாளடைவில் ஆலயத்திற்குச் சுண்ணாம்புக் கற்களினாலான நிரந்தரக் கட்டிடம் அமைக்கப்பட்டது. 1880ஆம் ஆண்டிலிருந்து நித்திய பூசைகளுடன் திருவிழாவும் நடைபெறத் தொடங்கியது. ஆடிமாத பூர நட்சத்திரத்தை அந்தமாகக் கொண்ட பத்து நாட்களுக்குத் திருவிழா நடைபெற்றது. அம்மனுக்கு விழாவெடுக்க முற்பட்ட வேளையில் பக்தர் ஒருவரின் கனவில் அம்பாள் காட்சி தந்து கொடிமரம் செய்வதற்கான மரம் கடற்கரையில் வந்து கிடப்பதாகவும் அதனைக் கொடித்தம்பம் செய்வதற்கு உபயோகப்படுத்துமாறும் பணித்தருளினாள். ஊரவர்கள் அதிகாலை கடற்கரைக்குச் சென்று பார்க்கையில் நீளமான மரமொன்று கரையில் ஒதுங்கி இருப்பதைக் கண்டனர். 1931ஆம் ஆண்டு மீண்டும் கோவில் புனரமைப்புச் செய்யப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்றது. இவ்வாலயக் கும்பாபிஷேகத்தின் போது கருவறையில் ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரி அம்பாளும், இரண்டாம் மண்டபத்தின் வடக்குப் புறத்தில் தெற்கு வாசலின் ஊடாகச் சமுத்திரத்தை நோக்கியபடி ஸ்ரீ கண்ணகி அம்பாளும் பிரதிஷ்டை செய்யப்பட்டனர். இதனைக் கொழும்பு பிரபல வர்த்தகர் பொறளை கா. நாகலிங்கம் அவர்கள் ஏனையவர்களின் உதவிகளையும் பெற்றுச் செய்து முடித்தார். இவ்வாண்டிலிருந்து கோவில் திருவிழா சித்திரை மாதத்திற்கு மாற்றப்பட்டது. 1932இல் உரிமையாளர் பரம்பரையில் இருவர் உட்பட ஐவர் கொண்ட பஞ்சாயம் ஏற்படுத்தப்பட்டது.

1944இல் கோவில் மீண்டும் புனருத்தாரணம் செய்யப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது. ஆலயத்தின் கொடியேற்றத் திருவிழாவை ஆறுமுகம் உடையார் பரம்பரையினரும், இரண்டாம் திருவிழாவை மார்க்கண்டு சோதிநாதர் குடும்பமும், மூன்றாம் திருவிழாவான ஆசிரியர் திருவிழாவை ஆசிரியர்களும், நான்காம் திருவிழாவை சுப்பையா நடராசா குடும்பமும், ஐந்தாம் திருவிழாவை பெ. முத்துவேலு, க. நாகலிங்கம் குடும்பத்தினரும், ஆறாம் திருவிழாவைக் கடற்றொழிலாளர்களும், ஏழாம் திருவிழாவை கொழும்பு வாழ் புங்குடுதீவு வர்த்தகர்களும், எட்டாம் திருவிழாவை சி. முத்துக்குமாரு குடும்பமும், ஒன்பதாம் திருவிழாவை பன்னிரண்டாம் வட்டார மக்களும், தேர்த்திருவிழாவை முத்துக்குமார் உடையாரும் அவரின் பின் உரித்தாளர் க. மு. சின்னத்துரை விதானையார் குடும்பமும், பூங்காவனத் திருவிழாவை மா. கந்தையா குடும்பத்தினரும், வைரவர் மடையை சின்னையா குடும்பத்தினரும் செய்து வந்தனர். வேட்டைத் திருவிழாவன்று சுவாமி வேட்டையாடுவதற்காக, தல்லையப்பற்று முருகன் ஆலயத்திற்கு வருகை தருவார்.

1957இல் மீண்டும் ஆலயத்தின் சுண்ணாம்புக் கட்டிடம் முழுவதும் அழிக்கப்பட்டுப் புதிதாக சீமெந்துக் கட்டிடம் அமைக்கப்பட்டது. இத்திருப்பணியை மு. முத்தையாபிள்ளை அவர்கள் செய்து முடித்தார். 1964இல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. 1979இலிருந்து சித்திரா பூரணையைத் தேர்த்திருவிழாவாகக் கொண்டு பதினைந்து நாட்களாகத் திருவிழாக் காலம் அதிகரிக்கப்பட்டது. 1957இல் ஆரம்பிக்கப்பட்ட இராஜகோபுர வேலைகளும், பின்னர் ஆரம்பிக்கப்பட்ட சித்திரத்தேர் வேலைகளும் 1979இல் பூர்த்தி செய்யப்பட்டன. இவ்வாலயத்தின் உருவாக்கத்தில் முன்னின்று உழைத்த ஆசிரியர்களான வித்துவான் சி ஆறுமுகம், நா. கார்த்திகேசு, க. தாமோதரம்பிள்ளை, சி.சின்னத்துரை, சி. க. நாகலிங்கம், அ.க. கண்ணையா, சட்டத்தரணி ப. கதிரவேலு, கொழும்பு வாழ் புங்குடுதீவு வர்த்தகர்களான மு. முத்தையாபிள்ளை, நா.க. மயில்வாகனம், சி.கு. செல்லையா, சி. முத்துக்குமாரு, நா.சி. செல்லையா, இ.க.கந்தையா, ந. செல்லத்துரை, மு. கனகசபாபதி, சோ.க.ஐயம்பிள்ளை, அ. குழந்தைவேலு, க. தியாகராசா, மு.ச.சண்முகராசா, த. கிருஷ்ணசாமி, சிவஸ்ரீ ப.கணேசராசக்குருக்கள் ஆகியோர் என்றும் நினைவில் கொள்ளப்பட வேண்டியவர்கள் ஆவர்.

இவ்வாலயத்திருப்பணி வளர்ச்சிக்கு அல்லும் பகலும் அயராது உழைத்தவர்கள் பலர். அவர்களுள் க. அம்பலவாணர் ஆசிரியர், நா. பாலசிங்கம் ஆசிரியரும் சே. சின்னத்தம்பி, சி. கனகசபை, ம. இராசையா, சி. இலகுப்பிள்ளை, வே. சுப்பையா, ந. செல்லத்துரை அ. கண்ணையா, த. மாதுங்கர், அ. சோமசுந்தரம், வ. சின்னத்தம்பி, ச. பொன்னம்பலம், டாக்டர். சி.கணேஸ், நா. நல்லத்தம்பி, வ. இராமலிங்கம், ஆ. விசுவலிங்கம், மு. தில்லையம்பலம், திருமதி. முத்துலெட்சுமி, சண்முகரத்தினம், க. நாகலிங்கம் (குணமாலை) ஆசிரியர், வ. சின்னப்பு, இ. தம்பு ஆசிரியர், நீ. ஆறுமுகம் ஆசிரியர், நீ. சேதுபதி தலைமை ஆசிரியர், ச. அம்பலவாணர். சி.க நடராசா, க. கனகசபை, நா. அ. கனகசபை, சி. சின்னையா, ப. செல்லத்துரை, ஆ. கார்த்திகேசு, ஆ. கனகலிங்கம், சி. கு. நல்லதம்பி, மு.வ. நடராசா, அ. தம்பிராசா, சி. சரவணமுத்து ஆசிரியர், நா. விசுவலிங்கம், மா. கந்தையா, ம. கண்ணையா, சி. சிவகுரு, நீ. முத்தையா, மு. குமாரசாமி, மு. தியாகராசா, த. கந்தையா, சி. குமாரசாமி, க. ஆறுமுகம், வி. ஆறுமுகம், சோ. சேனாதிராசா, அ. கணபதிப்பிள்ளை, ச. சதாசிவம், மு. கனகரத்தினம், சி. பரராசசிங்கம், ஆ. வில்வரத்தினம், வீ. இராமநாதன், சு. கந்தையா ஆசிரியர், அ.கனகசபை, நா.சி. நடராசா, தா. இராசலிங்கம் ஆசிரியர். க. மார்க்கண்டு, வே. சுப்பிரமணியம், சிவத்திரு சரவணமுத்து, பெ. முத்துவேலு, க. செல்லத்தம்பி இன்னும் பலர் பணிபுரிந்துள்ளனர்.

ஆரம்ப கால அர்ச்சகராகப் பிரம்மஸ்ரீ சபாபதி ஐயர் இருந்துள்ளார். இவரின் பின் சிவஸ்ரீ குமாரசாமி ஐயர், சிவஸ்ரீ கு. இரத்தினசபாபதி ஐயர், சிவஸ்ரீ இ. நடராசா ஐயர், சிவஸ்ரீ கணேசராசக் குருக்கள், சிவஸ்ரீ ந. இரவீந்திரநாத ஐயர் ஆகியோர் ஆலய அர்ச்சகர்களாக இருந்துள்ளனர். கும்பாபிஷேக, வருடாந்த மகோற்சவ சிவாசாரியார்களாகக் கோப்பாய் சிவஸ்ரீ வைரவநாதக் குருக்கள், சித்தங்கேணி சிவஸ்ரீ சிவசாமிக்குருக்கள், சிவஸ்ரீ குமாரசாமிக் குருக்கள், பிரதிஷ்டா பூஷணம் சிவஸ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்கள், சிவஸ்ரீ நா. பரமேஸ்வரக் குருக்கள், சிவஸ்ரீ நா. சோமாஸ்கந்தக் குருக்கள், சிவஸ்ரீ ப.பாலசுப்பிரமணியக் குருக்கள் ஆகியோரும் இருந்துள்ளனர்.

1954இல் இவ்வாலயத்தின் முன்றலில் சிலப்பதிகாரப் பெருவிழா நடைபெற்றமை வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்வாகும். ஈழத்தின் பேரறிஞர்களும், இந்தியப் பேரறிஞர்களும் இணைந்து சிலம்புச் செல்வி கண்ணகிக்கு அவளது சந்நிதானத்தில் எடுக்கப்பட்ட இவ்விழா மூன்று நாட்கள் சிறப்பாக நடைபெற்றது.

2005ஆம் ஆண்டு மார்ச் மாதம் இவ்வாலயத்தின் கும்பாபிஷேகம் நடைபெற்றது. 2005 ஆம் ஆண்டு புதிய நிர்வாக சபையினர் தெரிவு செய்யப்பட்டனர். தலைவராக வே. சிவசாமியும் செயலாளராக மு. இலட்சுமணனும் பொருளாளராக கு. கனகலிங்கமும் தெரிவு செய்யப்பட்டனர்.

## புங்குடுதீவு 3 ஆம் வட்டாரம்
## கிராஞ்சியம்பதி சிவன் கோவில்

இலங்கையின் சித்தர் வரிசையில் சிவஸ்ரீ தம்பையா மார்க்கண்டேயக் குருக்களும் ஒருவராவார். அவர், காலியில் எழுந்தருளியிருக்கும் மீனாட்சியம்பாள் சமேத சோமசுந்தரேஸ்வரப் பெருமான் ஆலயத்தில் பலகாலம் குருக்களாக இருந்து கடமையாற்றி வந்தார். செட்டிமாருக்கும் இவருக்கும் ஏற்பட்ட சிறு தகராறு காரணமாக மனமுடைந்த ஸ்ரீ மார்க்கண்டேயக் குருக்கள் அவர்கள் "நான் ஒரு மீனாட்சி சுந்தரனை உண்டாக்குவேன்" என்று சபதம் பூண்டு கொண்டு காலிச் சிவனிடம் விடைபெற்று வெளியேறினார்.

அவர் புங்குடுதீவிற்கு வந்து தமது துணைவி செல்வநாயகி அம்மையாரையும் (சிவன் கோவில் அம்மா) அழைத்துக் கொண்டு இந்தியாவிற்குச் சென்று காசி நகரிலே கங்கையில் நீராடும்போது உருண்டை வடிவமான ஏதோ ஒன்று அவர் கையில் சிக்கியது. அது ஒரு சிவலிங்கமாக இருக்கக் கண்டார். இந்தச் சிவலிங்கம் சுத்த ஸ்படிக வாணலிங்கம். கரும்பொன் சிவப்பு நிறத்தையுடையது. இந்த இலிங்கத்தை அணைத்துக் கொண்டு கங்கைக் கரையேறினார். அந்த சிவலிங்கத்தையே சிவன் கோவிலில் மேற்கு வீதியில் ஓர் இடத்தில் ஒரு சிறு குடில் அமைத்து பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தனர்.

1923ஆம் ஆண்டு இந்நிகழ்ச்சி நடைபெற்றது. கோவில் அமைப்பதற்கு நிலைக்கல்லு, படிக்கல்லு, ஆவுடையார் செய்த கல்லு என்பன அந்நாளில் பிரிட்டிஷ் சட்டசபை உறுப்பினரும் பிரபல நிலக்கிழாரும் ஆகிய திரு. அமரசேகரா என்பவர் உதவியினால் கிடைத்ததென்பர்.

1924ஆம் ஆண்டில் திரும்பவும் இந்தியாவிலுள்ள தேவகோட்டை என்னும் ஊருக்குச் சென்று அங்குள்ள சிற்பாசாரியரிடம் மீனாட்சி அம்பாளின் இரண்டு சிலைகளைச் செய்வித்து எடுத்துக் கொண்டு வள்ளத்தின் மூலம் புளியடித்துறைமுகத்தை வந்தடைந்தார். இணுவிலைப் பிறப்பிடமாகக் கொண்டவரும் பெருங்காடு கிராஞ்சியம்பதி ஸ்ரீ சங்கரமூர்த்தி கந்தசுவாமி கோவில் பிரதான அர்ச்சகருமாகிய சிவஸ்ரீ திருஞான சம்பந்தக் குருக்கள் தமது தலை மகளாகிய செல்வநாயகி அம்மாவிற்கும் அவரது கணவர் சிவஸ்ரீ மார்க்கண்டேயக் குருக்களுக்கும் சீதனமாகவும், மகன் ஸ்ரீ சதாசிவக் குருக்களுக்கு முதுசமாகவும் வழங்கிய நாற்சார் வீடு இருந்த நிலமே இப்போது சிவன் கோவில் அமைந்திருக்கும் இடம். கோவில் வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது 1928ஆம் ஆண்டில் மார்க்கண்டேயக் குருக்கள் அவர்கள் நோய்வாய்ப்பட்டார்.

குருக்கள் தமது அந்திம காலம் நெருங்கி விட்டதை உணர்ந்து, தான் கதிர்காமம் செல்ல வேண்டும் என்றாராம். இந்த நிலையில் பிரயாணம் செய்ய முடியாதே என்று மனைவியார் கூறிய போது, நடந்தே செல்வேன் எனக்கூறிப் பிடிவாதமாகப் புறப்பட்டதால், மனைவியாரும் மைத்துனரும் வண்டி கட்டி உடன் சென்று புகையிரதம் மூலம் காலி போய்ச் சேர்ந்து அங்குள்ள மீனாட்சி சுந்தரேசரின் அனுமதியோடு கதிர்காமம் போய்ச் சேர்ந்தார்கள்.

மாணிக்க கங்கையில் தீர்த்தமாடிய பின் ஒரு மரத்தின் கீழ் வெள்ளைத் துணியை விரிக்கும்படி சொல்லி அதன்மீது சப்பாணி கட்டி அமர்ந்து புங்குடுதீவிலும் சுற்றுப்புறங்களிலுமிருந்து சென்ற பக்தர்களை அழைத்துத் தான் ஒன்பது மணியளவில் சமாதியாவார் என்றும் தனது சமாதிக்கிரியைகளைக் கவனிக்கவென்றே பழனியில் இருந்து இரண்டு பண்டாரப் பரதேசிமார் வந்திருப்பதாகவும், அவர்களாகவே அவ்விடத்திற்கு வந்து ஆவன செய்வார்கள் என்றும் கூறி, எல்லோரையும் நோக்கி எப்படியும் கோவில் திருப்பணிகளை முடித்துக் கும்பாபிஷேகம் செய்யும் படியும் சொல்லியபடியே சமாதி எய்தினார். குருக்கள் அவர்களைப் பிரிந்து தமையனாராகிய ஸ்ரீ சதாசிவக் குருக்கள் அவர்களுடன் புங்குடுதீவு திரும்பிய செல்வநாயகி அம்மா தொடர்ந்து 12 ஆண்டுகள் விரதமாக இருந்து, சதாசிவக் குருக்களின் உதவியோடு பல அன்பர்களின் காணிக்கைகள் நன்கொடைகளோடு சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளிலுள்ள அடியார்கள், கொழும்பு வாழ் அடியார்கள் ஆகியோரின் கைங்கரியங்களையும் வசூல் செய்து திருப்பணிகளைச் செய்வித்து 1933 ஆம் ஆண்டு முன்னேஸ்வரம் சிவஸ்ரீ பூர்ணானர் தேஸ்வரக் குருக்கள், நயினை சிவஸ்ரீ சுவாமிநாதக் குருக்கள் ஆகிய தலைசிறந்த சிவாசாரியார்கள் மூலம் அனாவர்த்தன பிரதிஷ்டா மகா கும்பாபிஷேகம் செய்வித்து, நித்திய நைமித்திய கடமைகளைத் தனது மகன் மீனாட்சி சுந்தரக் குருக்களையும் தனது பெறாமகன் சிவஞானக் குருக்களையும் வைத்து நடத்தி வந்தார். தொடர்ந்தும் ஆலயத் திருப்பணிகளைச் சதாசிவக் குருக்கள் அவர்களின் உதவியோடு செல்வநாயகி அம்மா நடாத்தினார்கள்.

மகன் மீனாட்சி சுந்தரக் குருக்களுக்கு அனலைதீவு ஐயனார் ஆலயப் பிரதம குருக்களின் மூத்த மகளான பரமேஸ்வரி அம்மாவைத் திருமணம் செய்வித்து, மகனோடும் மருமகளோடும் சிவனாலய நித்திய நைமித்தியங்களைச் சிறப்பாக நடத்தி வந்தார். 1961 ஆம் ஆண்டில் பிரதிஷ்டா பூஷணம் நயினை சிவஸ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்கள் தலைமையில் 17 ஹோம குண்டங்களோடு கூடிய மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. அப்போது நாகலிங்கச் சாமியார் தலைமையில் நடராஜர் திருப்பணிச்சபை கூடி அந்தச் சபையினரால் நடராஜப் பெருமானின் சிலையும் பிரதிஷ்டை செய்யப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது. புதிய தேரும் உருவானது. 1968ஆம் ஆண்டு சிவன்கோவில் அம்மா அவர்கள் சிவபதம் அடைந்தார்.

1967 ஆம் ஆண்டு மீனாட்சி சுந்தரக் குருக்கள் பரமேஸ்வரியம்மா தம்பதியினரின் ஒரே வாரிசான மகள் லோகேஸ்வரி அம்மாவுக்கு சிவஸ்ரீ ஸ்ரீநிவாசக் குருக்கள் சாரதாம்பாள் தம்பதிகளின் இரண்டாவது புதல்வரான ஸ்ரீ நாகேந்திரக் குருக்கள் (சின்னமணி ஐயா) அவர்களைத் திருமணம் செய்வித்து கோவில் நித்திய நைமித்தியக் கடமைகளை அவர்களிடம் ஒப்படைத்தனர். அதன் பின்னர் பரமேஸ்வரியம்மாவின் முயற்சியினால், பல அன்பர்களின் நிதியுதவியோடு ஆலயத்தின் கொட்டகைகள் நிறுவப்பட்டன. 1977 ஆம் ஆண்டு பிள்ளையார் கோவில், பஞ்சலிங்கம், மகாவிஷ்ணு ஆகியன நூதனப் பிரதிஷ்டை செய்யப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்றது.

1982ஆம் ஆண்டு புங்குடுதீவு 2ஆம் வட்டாரத்தைச் சேர்ந்தவரும், கொழும்பு 4ஆம் குறுக்குத் தெரு பிரபல வர்த்தகரும், இரத்கம ஸ்ரோர்ஸ் உரிமையாளரும், நாகலிங்கச் சாமியாரின் மருமகனும் ஆகிய நாகலிங்கம் சண்முகம் (உத்தமசோழன்) அவர்களால் சிவன் கோவில் வாசலில் பஞ்ச தளத்தோடு கூடிய இராஜகோபுரம் அமைக்கப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இக்கும்பாபிஷேகத் தினத்தன்றே இந்தியாவின் தலைசிறந்த பாடகரான சீர்காழி எஸ். கோவிந்தராஜன் அவர்களின் இன்னிசைக் கச்சேரியும் சிறப்பாக நடைபெற்றது.

ஊர் மக்களிடமும், கொழும்பு, யாழ்ப்பாண வர்த்தகர்களிடமிருந்தும் நிதி வசூல் செய்யப்பட்டு, 1986ஆம் ஆண்டில் அம்பாளின் தெற்கு வாசலில் இராஜகோபுரம் அமைக்கப்பட்டுக் கும்பாபிஷேகம் நடந்தேறியது. 1991ஆம் ஆண்டு 33 குண்டங்களோடு கூடிய கும்பாபிஷேகம் சிவஸ்ரீ ஸ்ரீநிவாச நாகேந்திரக் குருக்கள் தலைமையில் சிறப்பான முறையில் நடைபெற்றது. அந்த ஆண்டிலே, புரட்டாதி மாதம் "இடம்பெயர்வு நிகழ்வு" இடம் பெற, புங்குடுதீவில் வாழ்ந்த மக்களில் அநேகர் இடம் பெயர்ந்தனர். இந்த வேளையில், இளைப்பாறிய ஆசிரியர் வித்துவான் பொன். கனகசபை அவர்கள் கோவிலைக் கூட்டியும், காலையும் மாலையும் விளக்கேற்றியும் வழிபாடுகள் நடாத்தி வந்தார்.

1994 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பரமேஸ்வரியம்மா இறைபதம் அடைந்தார். 1995ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் இருந்து இடம் பெயர்ந்து வவுனிக்குளம் சிவன் கோவில் அன்னதான மடத்தில் தங்கியிருந்த வேளையில் 1996ஆம் ஆண்டு தைமாதத்தில் சிவஸ்ரீ மீனாட்சுந்தரக் குருக்களும் இறைபதம் எய்தினார்.

வன்னியில் இருந்து வவுனியாவிற்கு வந்து கோவிற்குளம் சிவன் கோவிலில் கும்பாபிஷேகம், மண்டலாபிஷேகம், மகோற்சவம், கந்த சஷ்டி விழா என்பவற்றை நடத்தி வந்தபின், 1998ஆம் ஆண்டு சிவஸ்ரீ ஸ்ரீ நிவாச நாகேந்திரக் குருக்கள் குடும்பத்தினர் திரும்பவும் புங்குடுதீவு சென்று அங்கேயே இருந்து கோவிற் காரியங்களைச் சிறப்புற நடாத்தி வருகின்றார்கள்.

## புங்குடுதீவு 10 ஆம் வட்டாரம்
## கலட்டி வரசித்தி விநாயகர் ஆலயம்

புங்குடுதீவு கிழக்கில் கலட்டியம்பதியில் கோவில் கொண்ட ஸ்ரீ வரசித்தி விநாயகப் பெருமானின் ஆலயம் கலட்டிப் பிள்ளையார் ஆலயம் என்று அழைக்கப்படுகிறது. சிறு குழந்தைகளைப் பள்ளிக்கு முதல் முதலாக படிக்க அனுப்பும் நாளிலும், பட்டப் படிப்புக்காகப் பல்கலைக்கழகம் செல்லும் தினத்திலும் கலட்டிப் பிள்ளையாரைத் தரிசித்து, நேர்த்திக்கடன்களையும், பிரார்த்தனைகளையும் பிள்ளையாரிடம் செய்து கொள்ளாமல் அவர்கள் புறப்படுவது கிடையாது. இளைய ஐயர் மற்றும் பாண்டி ஐயர் முதலாக பரம்பரைப் பூசகரான சொக்கலிங்க ஐயரின் மகன் பஞ்சாட்சர ஐயர் இக்கோவிலின் பூசகரானார். அவரை மக்கள் அன்புடன் பஞ்சண ஐயா என்றே அழைப்பார்கள். அவர் தன் கையால் கறந்த பசும் பாலினால் விநாயகருக்கு அபிஷேகம் பண்ணி, தானே பொங்கிய திருவமுதைப் படைத்து பக்தியுடன் நீண்டகாலமாகப் பூசை செய்து காலை முதல் மாலை வரை அந்தக் கோவிலுள்ளேயே சுற்றிச் சுற்றி வந்து தனது வாழ் நாளைக் கழித்தவர்.

புங்குடுதீவில் பிறந்த துளசியம்மா என்றழைக்கப்பட்ட ஒரு மூதாட்டி அரியாலை சித்திவிநாயகர் ஆலயத்தின் அருகில் சிறுகுடிசை அமைத்து தனியாக வாழ்ந்து வந்தார். அங்குள்ள பனந்தோப்பிலிருந்து கிடைத்த வருமானத்தைக் கொண்டு அங்குள்ள ஒரு வரசித்தி விநாயகர் மீது அளவற்ற பக்தியுடன் தொண்டு செய்து வாழ்ந்திருந்தார். தள்ளாமை காரணமாக மீண்டும் புங்குடுதீவிலுள்ள தமது உறவினருடன் வாழ்வதற்காகப் புறப்பட்டபோது, பிள்ளையாரைப் பிரிந்து வருவதற்கு மனம் இடங்கொடாது தவிக்கையில் அவரது கனவில் பிள்ளையார் தோன்றி, நான் உனக்கு அங்கே வந்து காட்சி கொடுப்பேன், கவலைப்படாமல் போ என்று கூறினாராம். புங்குடுதீவை வந்தடைந்த அந்த மூதாட்டி அன்றிரவு முழுவதும் பிள்ளையாரை நினைத்தபடியேயிருந்து அதிகாலை இருட்டு விலகும் முன்னரே பனந்தோப்பிற்குள் போய் மலசல விமோசனம் செய்யச் சென்றார். அங்கு மின்னல் போன்ற ஓர் ஒளி தோன்றி காட்சி தந்ததாம். உடனே அந்த இடத்தில் அடையாளமாக ஒரு கல்லை வைத்து விட்டு வீடு திரும்பி விடியும்வரை காத்திருந்தாராம்.

பொழுது விடிந்ததும் அயலாருடன் அந்த இடத்திற்கு சென்று பார்க்கையில் முன்னர் இல்லாத ஒரு கொன்றைமரம் திடீர் என்று அங்கு வளர்ந்து நிற்பதை அனைவரும் கண்டு அதிசயித்தனராம். அம்மூதாட்டி அந்தக் கொன்றை மரத்தடியில் அடையாளமாக வைத்த கல்லுடன் ஒரு சூலத்தையும் நாட்டி பொங்கல் படையலுடன் வழிபட ஆரம்பித்தார். இது ஒரு கர்ண பரம்பரைக் கதையாகும். இதைவிட இன்னொருவர் கூறிய வரலாற்றின்படி ஆரம்பத்தில் இக்கோவில் சிறிதாக ஒரு கொன்றைமரத்துடன் இருந்தபோது, வெள்ளைச்சி என்றழைக்கப்படும் ஒரு மூதாட்டி பிள்ளையாரையும், வைரவரையும் தனது கண்ணாரக் கண்டு அனுபவித்து, பிள்ளையாரின் அருளால், மக்களுக்கு அருள்வாக்கும் கூறுவாராம். ஒருவேளை துளசியம்மாவின் பின்னர் இவர் வாழ்ந்திருக்கக்கூடும்.

அக்காலத்திலேயே பிள்ளையாரின் அயலவரான பொறளை நாகலிங்கம் என்னும் பிரபல வர்த்தகர், இக்கோவிலுக்கு போதிய நல்லாதரவு வழங்கி அசையாமணி அமைத்து சிறு கோவிலில் வழிபட்டு வந்தார்கள். இது 1925ஆம் ஆண்டு என்பதை இன்றும் அசையாமணியைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். திரு. நாகலிங்கம் தனது குடும்பத்தினர் உறவினருடன் பிரயாணம் செய்த படகு, விபத்தில் சிக்கி நடுக்கடலில் மூழ்கியதால், குடும்பத்தினர் அனைவரும் உயிரிழந்து போய்விட, தான் மட்டும் உயிர்தப்பிக் கரையேறினார். இதனால் தீராத கவலையுடன் வாழ்ந்திருக்கையில், விநாயகப் பெருமான் அவருக்கு கனவிலே தரிசனம் தந்து, நடப்பவை எல்லாம் விதிப்படியே என்றும், தருமம் மட்டுந்தான் உன்கூடவே வரும் என்பதையும் உணர்த்தினார். அதன்பின் அவர் சற்று மனம் தெளிந்து, தனது பெருஞ் செல்வத்தை செலவிட்டு கலட்டியம்பதி வாழும் பிள்ளையார் கோவிலை, சாஸ்திர விதிப்படி சுண்ணாம்புக் கல்லினால் திருக்கோவில் அமைத்தார். சிவாகம விதிப்படி விநாயகர், முருகப்பெருமான் ஆகியோருக்கும் பரிவார ஆலயத்தை அமைத்தார். கொன்றை மரத்தடி வைரவப் பெருமானை அவர் உத்தரவுப்படியே கொன்றை மரத்தடியிலேயே கும்பாபிஷேகம் நிகழ்த்தி, நித்திய பூசைகளை சரிவர நடாத்த நிரந்தர வருமானம் வரும் வகையில் ஒழுங்குகளை ஏற்படுத்தினார். இவரது பரிபாலனக் காலகட்டத்திலேயே கொடிஸ்தம்பம், தேர் ஆகியவற்றை உருவாக்கி பங்குனி உத்தரத் திருநட்சத்திரத்தை அந்தமாகக் கொண்டு பிரம்மோற்சவப் பெருவிழா ஆரம்பிக்கப்பட்டது.



புங்குடுதீவு – கலட்டி வரசித்தி விநாயகர் ஆலயம்



புங்குடுதீவு – பேய்ச்சியம்மன் என வழங்கும்
மனோன்மணி அம்மன் ஆலயம்

இதன்பின்னர் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு சுண்ணாம்புக் கோவில் முழுவதையும் உடைத்து கொழும்பு பிரபல வர்த்தகர்களின் ஆதரவுடன் அராலியிலிருந்து ஆட்களை வரவழைத்து வெள்ளை வைரக்கல் வேலையாகத் திருப்பணி செய்து மகா கும்பாபிஷேகத்தை சிறப்பாக நடாத்திய பெருமை வர்த்தகரும் சமாதான நீதிவானுமாகிய திரு. மதியாபரணம், திரு. திருநாவுக்கரசு, திருமதி இராஜேஸ்வரி திருநாவுக்கரசு ஆகியோரையே சாரும்.

கந்தசஷ்டிப் பெருவிழாவும் சூரசம்ஹாரத் திருவிழாவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்தது. இரத்தின ஐயர் என்றழைக்கப்பட்ட இரத்தினசபாபதிக் குருக்களின் ஆலோசனைப்படி கந்தசஷ்டி நாட்களில் ஆறு அந்தணப் பெருமக்கள் சுற்றிலும் நின்று செய்யும் சண்முகார்ச்சனை வைபவம் மிகவும் அற்புதமானது. மஹா யாகம் பகலும் இரவுமாக மூன்று தினங்களாக நடாத்தப்பட்டது. மஹாயாக பூர்த்தியாகிய மறு தினம் அந்தணப் பெருமக்களும், ஆயிரக்கணக்கான அடியார்களும் ஒன்றிணைந்து கலட்டிப் பிள்ளையார் கோவிலிருந்து யாழ். நகரிலுள்ள கச்சேரிக்காரியாலயம் வரை கால் நடையாக ஊர்வலம் சென்றனர். ஈழத் தமிழரும் தமிழ்மொழியும் தழைத்தோங்கி வாழ அகில இலங்கைக் குருமார் சபை உறுப்பினர்கள் அனைவரும் தமது ஆதரவைத் தெரிவித்தமை உலகம் போற்றும் உயர்ந்த செயலாக அறிஞர்களால் போற்றப்பட்டது.

தமிழகத்திலிருந்து தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஈழத்திற்கு விஜயம் செய்தபோது புலவர் ஈழத்து சிவானந்தன், திரு. திருநாவுக்கரசு மற்றும் பலரும் புங்குடுதீவுக்கு வருமாறு அழைப்பு விடுத்ததன் பேரில், கலட்டிப் பிள்ளையாரை தரிசிக்க வந்திருந்தார். அப்போது தீவகத்தில் முதன் முறையாக தமிழால் மணிவாசகப் பெருமான் அருளிய போற்றித் திரு அகவல் அர்ச்சனையை தவத்திரு குன்றக்குடி அடிகளார் தீந்தமிழால் பாட, சிவஸ்ரீ கைலாசநாதக்குருக்கள் தமது கரங்களால் மலர் கொண்டு ஸ்ரீ வரசித்தி விநாயகருக்கு அர்ச்சனை புரிந்தார். அதனால் தீவகத்தில் முதன்முதலாக தமிழில் அர்ச்சனை செய்த பெருமையும் ஸ்ரீ கலட்டி வரசித்தியானுக்கே உரித்தாகும்.

பரம்பரையாக நித்திய பூசைகளை கிரமமாக நடாத்தி வந்த ஸ்ரீ பஞ்சாட்சர ஐயர் புங்குடுதீவு வாழ் மக்களுக்கு கண்கண்ட கடவுளாகத் தோன்றினார். அவரது ஹாஸ்யமான ஏச்சும் பேச்சும் அவர்களுக்கு நல்லாசியாகத் திகழ்ந்தது. அவரின் கட்டளைப்படியே பலரும் ஆர்வமுடன் ஆலய உபயங்களையும், திருவிழாக்களையும் ஏற்றுச் சிறப்புடன் நடாத்தி வந்தார்கள். பஞ்சாட்சர ஐயர் கும்பாபிஷேகத்தையும் மகோற்சவத்தையும் நடாத்த தனது மனதிற்குகந்த சித்தங்கேணி சிவஸ்ரீ வை. மு. குமாரசாமிக் குருக்களை அழைத்து வந்து நடத்தச்செய்து மகிழ்ந்தார். அவர் மறைந்த பின்னர் அவரது சகோதரர் கோப்பாய் சிவஸ்ரீ வை. மு. பரமசாமிக் குருக்கள் அவர்களை அழைத்து கும்பாபிஷேகம் மஹோற்சவங்களைச் செய்வித்தார். அமரர் சரவணமுத்து சுவாமியாரின் அரிய முயற்சியினால் 1960 முதல் திருக்கேதீஸ்வர குருகுலத்தில் சேர்க்கப்பட்டு முதல் மாணவனாகக் கற்றுத்தேறி பின்பு திருக்கேதீஸ்வரம் தேவஸ்தான பிரதம குருவாக உற்சவ ஆச்சார்யராக விளங்கிய தனது மகன் சிவஸ்ரீ பாலசுப்பிரமணியக் குருக்களை 1985இல் திருக்கேதீஸ்வரத்திலிருந்து அழைத்து நல்லாசி வழங்கி சகல மக்களின் நல்லாதரவுடன் தமது குலதெய்வமாகிய பிள்ளையாருக்கு கொடியேற்றஞ் செய்து கண்ணாரக்கண்டு மகிழ்ந்தார்.

சிங்கப்பூரிலிருந்து நாடு திரும்பிய தனது மூத்த மகன் சிவஸ்ரீ கணேசராஜக் குருக்களை தானும் திரு. மதியாபரணமும் விரும்பி அழைத்து 1991இல் பிள்ளையார் கோவிலில் கொடியேற்று மகோற்சவத்தை நடாத்தி மகிழ்ந்தனர். 2004 பங்குனி மாதத்தில் மஹா கும்பாபிஷேக விழா நடைபெற்றது.

# புங்குடுதீவு 3 ஆம் வட்டாரம்
# குறிகாட்டுவான் ஸ்ரீ மனோன்மணி அம்மன் என வழங்கும்
# அருள்மிகு பேச்சியம்மன் ஆலயம்

குறிகாட்டுவான் பெத்தாளம்புலம் என்னும் பகுதியில் வீற்றிருக்கும் அருள்மிகு மனோன்மணி என வழங்கும் பேய்ச்சியம்மன் ஆலயம் புங்குடுதீவின் பழமை வாய்ந்த ஆலயங்களில் ஒன்றாகும். இது கப்பல் வணிகர்களால் உருவாக்கப்பட்டதென்பர். அக்காலத்தில் ஒரு கல்லை பேய்ச்சியம்மனாக உருவகம் செய்து சிறிய ஆலயத்தில் வைத்து வணங்கி வந்தார்கள். சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு கடல் அலைகளால் கரையேற்றப்பட்ட ஒன்பது அங்குல உயரமான அழகிய அம்மனின் உருவச் சிலை கிடைக்கப் பெற்றது. இக்காலத்தில் அம்மனின் சிறு ஆலயம் பேராலயமாக மாற்றி அமைக்கப்பட்டது. ஆனாலும் பெயர் மாறாமல் பேய்ச்சியம்மனாகவே இருந்து வந்தது. இவ்வாலயம் சுண்ணாம்பு, காட்டுக்கற்கள் ஆகியவை கொண்டு அமைக்கப்பட்டதனால் காலப் போக்கில் சுற்றுச் சுவர்கள் சிதைந்தன. இதன் பின் வெண்ணிறமான கடினமான கற்கள் கொண்டு ஆலயம் புனரமைக்கப்பட்டது. இத்திருப்பணி புங்குடுதீவின் வணிகச் செல்வர்களின் கொடைகளினாலும் குறிகாட்டுவான், நடுவுத்துருத்தி, பெருங்காடு ஆகிய பகுதிகளில் வாழும் பொது மக்களின் "பிடியரிசி" முதலிய சிறு சேமிப்புகளினாலும், ஊர்மக்களின் முழுமையான ஒத்துழைப்பினாலும் நிறைவேற்றப்பட்டு இன்று எழில் மிகு தோற்றத்துடன் ஆலயம் காட்சி தருகின்றது.

1964ஆம் ஆண்டு குடமுழுக்கு விழா நடத்தப்பட்டது. இக்குடமுழுக்கின் போதுதான் சரித்திர காலத்தில் இருந்து பேய்ச்சியம்மன் என்னும் திருநாமத்தினால் வழங்கப்பட்ட அம்மன் "அருள்மிகு மனோன்மணி அம்மன்" எனும் திருநாமம் பூண்டு அழைக்கப்படுகின்றாள். சிற்பக் கலையின் வரைவிலக்கணத்தின்படி நின்ற திருக்கோலத்தில் அருள்புரியும் அம்மன் என்பதனால் இப்பெயர் பெற்றாள் என கூறப்படுகின்றது.

1991ஆம் ஆண்டு ஒக்டோபர் மாதம் 18ஆம் நாள் முதல் இடப்பெயர்வு காரணமாக இவ்வாலயம் பூசையின்றிப் பூட்டப்பட்டிருந்தது. இக்காலத்தில் இராணுவத்தினர், ஆலயத்தின் கிணற்றைத் தாங்கள் குளிப்பதற்கு பயன்படுத்தி வந்தனர். இச்சூழலில் வசித்த பல மக்களும் இடம்பெயர்ந்து வேறிடங்களுக்குச் சென்று விட்டபோதிலும், இடம் பெயராது வாழ்ந்து வந்த அம்மனின் பக்தையான 'குறிகாட்டுவான் மணி' என அழைக்கப்படும் அம்மையார் ஆலய சுற்றாடலிலுள்ள தேங்காய்களை ஆலயப் பாவனைக்கெனச் சேகரித்து வைத்திருந்தார். இத்தேங்காய்களை இராணுவத்தினர் தமது பாவனைக்காக எடுக்க முயன்ற போது இவரால் தடுக்க முடியவில்லை. அப்பொழுது தேங்காய் குவியலிலிருந்து நாகபாம்பு படத்துடன் வெளிப்பட்டதைக் கண்ட இராணுவத்தினர் பயந்து பின்வாங்கி விட்டனர். அதன் பின்பு அத்துமீறி ஆலயத்தினுள் நுழைய முயன்ற வாலிபர்களைக் கொடிமரத்தின் முன்னிலையில் நாகபாம்பு வழிமறித்தது. பல மணி நேரம் அவர்கள் காத்திருந்த போதிலும் அவர்களைப் பாம்பு ஆலயத்தினுள் செல்ல அனுமதிக்கவில்லை. இவ்வாறு பிரத்தியட்சமாக இருந்து அருள்பாலிக்கும் மகிமைபெற்ற அன்னை நம் மனோன்மணி அம்மன். 2003 ஆம் ஆண்டு ஆனி மாதம் 14ம் நாள் ஆலயத்தினை திறந்து ஆடி மாதம் 17 ஆம் நாள் மீண்டும் குடமுழுக்கு நடாத்தப்பட்டுள்ளது.

# புங்குடுதீவு 3 ஆம் வட்டாரம்
# பெருங்காடு கிராஞ்சியம்பதி கந்தசுவாமி கோவில்

புங்குடுதீவு மேற்கில் பெருங்காடு என்னும் பதியில் கோவில்கொண்டு எழுந்தருளி அருள்தரும் ஆறுமுகச் செவ்வேளின் ஆலயத்தை ஊர்மக்கள் கந்தசுவாமி கோவில் என்றே கூறுவார்கள். 1853ஆம் ஆண்டளவில் புங்குடுதீவு காசிநாதர் சின்னத்துரை என்னும் முருக பக்தரால் இவ்வாலயம் உருவாக்கப் பெற்றது. இவருடைய மகனான ஐயாத்துரை அவர்கள் இக்கோவிலைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றார். இவருக்குப் பின்பு இவரது மகனான ஐ.நாகரெத்தினம் (ஆசிரியர் கந்தசாமி) கிராஞ்சியம்பதி முருகன் ஆலயத்தின் முகாமையாளர் ஆனார். யாழ்ப்பாண வாசியான ஆசிரியர் சேனாதிராசாவும் இக்கோவில் முகாமையாளர்களில் ஒருவராவார். காலத்திற்கு காலம் இவ்வாலயம் வளர்ச்சியும் விரிவும் பெற்று வந்தது.

கிராஞ்சியம்பதி வளாகத்திற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. முருகன் கோவிலும், சிவன் கோவிலும் சற்றுத் தள்ளி முத்துமாரியம்மன் ஆலயமும் தீர்த்தக் குளங்களும் அமைந்திருப்பதானது தமிழகத்து தென் மதுரையில் திருப்பரங்குன்றமும், மதுரை மீனாட்சி அம்மனும் , மாரியாத்தா கோவிலும் அமைந்திருக்கும் அழகிற்கு நிகரானது என்று ஈழத்திற்கு வருகைதந்த தவத்திரு குன்றக்குடி அடிகளார் கூறியமை இங்கு நினைவு கூரத்தக்கது. முருகன் கோவிலுக்குப் பக்கத்தில் கல்விக் கூடம் ஒன்றை அமைத்த கல்வித் தந்தை வ. பசுபதிப்பிள்ளை அவர்கள் முருகனின் பெயரையே அதற்குச் சூட்ட வேண்டும் என்று எண்ணி ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாசாலை என்ற பெயரைச் சூட்டினார். சுப்பிரமணிய வித்தியாசாலை முகப்பில் இந்த ஊரிலேயே முதன்முதலாக மொட்டை மாடி அமைத்து அதிலே ஏறி நின்று திருவிழாக் காலங்களில் வெளிவீதி வலம்வரும் முருகப்பெருமானின் அழகை முகாமையாளர் ஐயாத்துரை தரிசித்ததாக ஒரு வரலாறு உண்டு.

முருகன் கோவிலுக்கு மேற்குப் பக்கத்தில் சிவன் கோவிலை அண்மித்து ஒரு குருபூசை மடம் இருந்தது. இந்த மடத்திலேதான் நால்வர் பெருமக்களின் குருபூசைகள் நடைபெறும். இங்கேயே இலங்கையின் முதலாவது சமஸ்கிருத பாடசாலை தோற்றுவிக்கப்பட்டது. கிராஞ்சியம்பதி ஆலய முன்றலிலே தான் அன்று கண்டி தென்னக்கும்பர ஆச்சிரமத்தில் இருந்த சச்சிதானந்த யோகீஸ்வரருக்கும், தவத்திரு குன்றக்குடி அடிகளாருக்கும் சித்தாந்த வேதாந்த கருத்துப் பரிமாற்றம் ஏற்பட்டு ஒரு வகை பட்டிமன்றமே நடைபெற்றது. இவ் வைபவத்தைச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வைபவமாக அன்றைய தினசரிகள் எழுதியிருந்தன. அடிகளாரையும் சச்சிதானந்த யோகீஸ்வரரையும் ஒரே நாளில் அழைத்து அருளுரை நிகழ்ச்சியை நடத்தியவர் அன்றைய இளைஞர் கழகத்தின் தலைவரான வே. க. சோமசுந்தரமாவார்.

கந்தசுவாமி கோவில் உரிமையாளர்களை ஊர் மக்கள் 'காசியர் கூட்டத்தினர்' என்றே குறிப்பிடுவார்கள். ஆண்டு தோறும் வைகாசி மாதத்தில் பத்து நாள் திருவிழா தொடங்கும். காசியர் கூட்டத்தார் நாட்டில் எந்தத் திக்கில் இருந்தாலும் இங்கு வந்து விடுவார்கள். காசியர் கூட்டத்தினரோடு உறவுத் தொடர்புடைய பசுபதிப்பிள்ளை விதானையார் மகன் வழக்கறிஞர் ப. கதிரவேலுவும், இஞ்சினியர் என். ஏ. வைத்திலிங்கம் அவர்களும் இக்கோவில் உரிமையாளர் பட்டியலில் சேர்ந்தவர்களே.

ஒரு அறங்காவலர் சபை உருவாக்கப்பட்டபோது, ப. கதிரவேலு அவர்கள் அதன் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். இக்கோவிலின் தர்மகர்த்தாக்களில் ஊரதீவு-அருணாசலம் , இறுபிட்டி - சின்னத்தம்பி, இராமலிங்கம் கந்தசாமி, பாடகர் பராசு ஆகியோர் முக்கியமானவர்கள். இறுபிட்டி சின்னத்தம்பி என்பவர் சூரன் போர் காலங்களில் கண்ணை முழித்துக் கொண்டு நின்ற காரணத்தால் 'முழியர்' சின்னத்தம்பி என்ற காரணப் பெயரைப் பெற்றார். இவருக்குப் பின்பு சூரன் தலையை ஆட்டும் பணி பாடகர் பராசுவிற்கும் இராமலிங்கர் பசுபதிக்கும் கிடைத்தது.

இக்கோவிலின் பூங்காவனத் திருவிழா விடிய விடிய நடக்கும். ஏறுபடி மேளங்கள், சதிர்க்கச்சேரிகள், கரகாட்டம், மூன்று வாசல் சப்பறம் என்று ஊரைக் கிளப்பி விடும் திருவிழாக்கள் அவை. கந்த புராண படனத்தை நடத்துபவர்களாக சித்தாந்த சாத்திர அறிவிலும், சமய ஞானத்திலும், திருமுறைகளிலும் பாண்டித்தியம் மிகுந்த அறிஞர்கள் உள்ளூரிலேயே இருந்தமை பெரும் வாய்ப்பானது. இவர்களில் உரைகாரர்களாகத் திகழ்ந்தவர்கள் குருமூர்த்தி சாத்திரியார், வைத்திய கலாநிதி சி. கணபதிப்பிள்ளை (சின்னத்தம்பர்) , பேராசான் சி.இ.சதாசிவம் பிள்ளை ( இளையப்பா வாத்தியார்), தில்லையம்பலம் (குமரேசு வாத்தியார்), வித்துவான் பொன். அ. கனகசபை , சிவஸ்ரீ சதாசிவக்குருக்கள், வை. கணபதிப்பிள்ளை, ஆசிரியர் தி, சதாசிவம், க. முத்துலிங்கம் (நொத்தாரிசு) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்..இவர்கள் அனைவரும் கந்தசுவாமி கோவிலின் சுற்றாடலில் வாழ்ந்தவர்களே.

கிழக்கூரில் வித்துவான் சி. ஆறுமுகம், ஆசிரியமணி சி. க. நாகலிங்கம் , ஆசிரியர் எஸ். ஆர்.தம்பு , ஆசிரியர் அம்பலவாணர், ஆசிரியர் த. குணமாலை முதலியோரைக் குறிப்பிடலாம். சூரன் போர் காலங்களில் வாலிபர்களின் தினவெடுத்த தோள்களில் சூரன் வீதி வலம் வரும் காட்சியும் மயில் வாகனத்தில் முருகப்பெருமான் வேலோடு சூரனைத் துரத்தித் துரத்தி சண்டையிட்டுத் தலையை வீழ்த்துவதும், அற்புதமான காட்சிகளாகும். முருகனுக்கும் சூரனுக்கும் இடையில் நாரதர் உலாவுவதும், தூது போவதும் துள்ளிக் குதிப்பதும் குதூகலமானதாக விளங்கும். நாரதராக பெரியதம்பியரும் அவருக்குப் பின்பு சரவணையப்பா மகன் செல்லையாவும் தோன்றிக் குமரக் கோட்டத்தில் பழைய குறிஞ்சிக் காட்சிகளை காட்டுவார்கள். கிராஞ்சி முருகன் கோவில் திருவிழாக் காலங்களில் பிற ஊர்களில் இருந்து கடலை வியாபாரிகளும் மணிக்கடைக்காரர்களும், பாத்திரக் கடைக்காரர்களும் வந்து வியாபாரங்களைச் செய்வார்கள். ஊருக்குள் முதன் முதலாக மின்சார விளக்குகளோடும் ஒலிபெருக்கி அமைப்புகளோடும் திருவிழாக்களும் நடத்திய கோவில் இதுவே.

கிராஞ்சியம்பதி கந்தசுவாமி கோவில் திருவிழா என்றால் ஒரு கார்ணிவலைப் போன்ற கவர்ச்சியும் அலங்காரமும் கலகலப்பும் மிக்கதாயிருக்குமென்று மக்கள் பேசிக் கொள்வார்கள்.இக்கோவிலின் இராஜ கோபுர அமைப்பு வேலை நீண்ட நாட்களாக தொடர்கின்றது.

# புங்குடுதீவு 7 ஆம் வட்டாரம்
# பாணாவிடை சிவன் கோவில்

இது ஒரு பழமை வாய்ந்த தலம் என்பது குறிப்பிடற்பாலது. இங்குள்ள தலவிருட்சம் மாவிலங்கையைச் சேர்ந்த மரமாயினும் அது இனங்காணப்படவில்லை. மிகவும் பழமையானது. பழைய காலத்தில் பாணர் இப்பகுதியில் வாழ்ந்தனர் என்பது இப்பகுதியிலுள்ள பாணாவிடை, பாணாமுடை, பாணர்வினோடை முதலிய இடப்பெயர்களாலும், சில கர்ண பரம்பரைச் செய்திகளாலும் அறியப்படுகின்றது. இவர்கள் மத்தியிலே சிவலிங்க வழிபாடு நிலவிவந்துள்ளதாகக் கருதப்படுகிறது.இங்குள்ள லிங்கம் நீள்சதுர வடிவுடையதாய், உயர்ந்து நிலமட்டத்தின் கீழ் இரு சுவருடையதாக ஆழம் தெரியாத அளவில் கீழ் நோக்கியும் மேல் நோக்கியும் வளர்ந்து கொண்டிருப்பதாகவும் கூறப்படுகிறது. இங்கு நிலவிவரும் மரபுவழிக்கதையின்படி தீவகத்தைப் பூர்வீகமாகக் கொண்டவரும் யாழ்ப்பாண நகரிலுள்ள வண்ணார் பண்ணை தட்டாதெருவில் வசித்து வந்தவருமான தவத்திரு மருதப்பு என்பவர் 1910ஆம் ஆண்டு அளவிலே இராமேஸ்வரம் எனும் திருப்பதிக்கு அடிமை பூண்டு அடைக்கலம் புகுந்தார். ஒரு நாள் இரவு இராமேஸ்வரப் பெருமான் இவருடைய கனவிலே தோன்றி மேற்குறிப்பிட்ட ஆலயத்தின் மூல லிங்கத்தைக் காட்டிப் புங்குடுதீவிலுள்ள என்னைத் தரிசித்து அருள் பெறுவாய் என அசரீரியாகக் கூறி மறைந்தார்.

மருதப்பு சுவாமிகள் 1911ஆம் ஆண்டிலேயே சரியைத் தொண்டினைச் செய்யும் வேளையில் சித்திரைச் சதய தினத்தன்று திருநாவுக்கரசு சுவாமிகளின் பூசையை முதன் முதலாக ஆரம்பித்தார்.ஆ.மாணிக்கம் அவர்கள் மருதப்பு சுவாமிகளுக்கு உறுதுணையாக நின்றார். அவ்விடத்தில் ஆ.மாணிக்கம் தண்ணீர்ப்பந்தல் அமைத்து அச்சேவையைத் தொடங்கினார். அச்சேவை அவரது பிற்சந்ததியினரால் 1991ஆம் ஆண்டு இடப்பெயர்வு வரை நடைபெற்று வந்துள்ளது.

சுவாமிகளின் ஆசீர்வாதத்துடன் ஆலயத்திற்கு முன் உள்ள வளவினை மாணிக்கம் தம்முடைய சகோதரி அன்னபூரணியிடமிருந்து ஆலயத்துக்குத் தர்மசாதனம் செய்வித்தார்.மாணிக்கம் சுவாமிகளின் அனுசரணையுடன் 1930 இலே திருநாவுக்கரசர் பெயரிலே அவ்வூர்ச் சிறுவர்கள் கற்பதற்காக வளவிலே திருநாவுக்கரசு வித்தியாலயத்தைத் தொடங்கினார். அன்னதான மடத்தையும் அமைத்தார். நாவுக்கரசர் குருபூசை மிகச்சிறப்பாக நடைபெற்று வந்தது. யாவற்றையும் மருதப்பு சுவாமிகள் சிறப்பாக வழிநடத்தி வந்தார்.

முதலாவது மகா கும்பாபிஷேகம் அவ்வூர் மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட பரிபாலன சபையால் நடத்தப்பட்டது. இச்சபைக்குத் தலைவராக ஆ.மாணிக்கமும், செயலாளராக மா. ஆறுமுகமும் பொருளாளராக சு.குமாரசுவாமியும் பொதுமக்களால் தெரிவு செய்யப்பட்டனர். மருதப்பு சுவாமிகளின் வழிகாட்டலில் அவர்கள் நன்கு செயற்பட்டனர். மூலஸ்தானம் வெள்ளைச் சலவைக் கற்களால் அமைக்கப்பட்டது. 1980இலே இரண்டாவது மகா கும்பாபிஷேகம் சட்டத்தரணி எஸ்.கே. மகேந்திரனைத் தலைவராகவும், ந.இராசதுரையினை பொருளாளராகவும் கொண்ட பரிபாலன சபையினரால் நன்கு நடத்தப்பட்டது.

1991ஆம் ஆண்டு இக்கோயில் அதிகம் பாதிக்கப்படவில்லை. இங்கிருந்த மக்கள் கோயிலையும் கவனித்து வந்தனர். இதற்கேற்ற ஒரு சிறந்த பரிபாலன தர்மகர்த்தா சபை டாக்டர் ஆ. பேரின்பநாதனைத் தலைவராகவும், பொ.வயிரமுத்துவைச் செயலாளராகவும், ந.இராசதுரையைப் பொருளாளராகவும், எஸ்.கே. சண்முகலிங்கத்தைப் பொதுப்பிரதி நிதியாகவும் கொண்டு அமைக்கப்பட்டது.

இச்சபைக்குப் போசகராக சிவாகம கலாநிதி சிவஸ்ரீ. வை. பரமசாமிக்குருக்கள் வழிகாட்டி வருகிறார். இத்தகைய பலமுள்ள பரிபாலன சபையினர் சுமார் ஒன்றரைக்கோடி ரூபா செலவிலே சிறந்த கலைக்கோயிலமைப்பு சித்திரத்தேர் நிர்மாணம், மூலஸ்தானம், பரிவாரமூர்த்திகளின் ஆலயங்கள் முதலியவற்றைத் திருத்தியும் புதிதாக ஆகம முறைப்படி அழகுற அமைத்தும் உள்ளனர். இவ்வாலயத்திருப்பணி செய்துவருவோரில் மேற்குறிப்பிட்ட திருமதி அன்னபூரணியின் மகனான செல்லப்பரின் மகன் நாகராஜாவின் தவப்புதல்வன் ஜெயக்குமார் (பாபு) சுவிஸ் நாட்டிலே தானும் நண்பர்களும் சேர்ந்து குறிப்பிடத்தக்க தொகையை ஆலயத்திருப்பணிக்கு வழங்கியுள்ளனர்.

பெருந்தொகையான செலவிலே திருப்பணிகள் நடைபெற்று இவ் ஆலயத்தின் மூன்றாவது திருக்குடமுழுக்கு விழா சப்ததள இராஜகோபுர அத்திவாரமிடலும், அருளமுதம் வெளியீடும் (24.03.2002) அன்று நடைபெற்றது. மேலும் இவ்வாலயத்தின் முற்பகுதியிலே பூரண புட்கலை சமேதராகிய ஐயனார் ஆலயமுள்ளது. ஐயனார் வழிபாடும் பழமையானதே. இதனால் மேற்குறிப்பிடட ஆலயம் ஐயனார் கோயில் எனவும் அழைக்கப்படும். ஐயனாருக்குரிய ஆலயம் ஒன்று 1850 அளவிலே கட்டப்பட்டதாக அறியப்படுகிறது.

இப்பணிகளிலே உழைத்த அமரர்களான க.மதியாபரணம், அ.ப.பாலசுப்பிரமணியம், இ.பொன்னம்பலம், ஆசிரியமணி செ.இலகுப்பிள்ளை, நா.இ.அருணாசலம், கா.கந்தசாமி, ம.பாலசிங்கம், இ.பொன்னுத்துரை, பொ,தருமரத்தினம், பொ.கந்தையா, மருதப்பு சுவாமிகள் மரபில் வந்த யாழ். பாலசுப்பிரமணியம், இளையதம்பி அப்பா, செயலாளராகக் கடமையாற்றிய செ.சோமசுந்தரம், பொ.செல்லத்துரை, மாணிக்கம் அருணாசலம், பரநிருபசிங்கம், அம்பலவாணர் நல்லதம்பி, சு.குமாரசாமி, சி.முருகேசு, எஸ்.வி.மகாதேவன் ஆகியோரை நாம் நினைவு கூரவேண்டும்.

இங்கு நடைபெற்ற அன்னதானமும் சிறப்பு வாய்ந்ததாகும். அன்னதான நிகழ்வுகளின் போது சோறு குறையாது ஒரே மாதிரியாயிருக்கும் எனக் கூறப்படுகிறது. காரைநகரில் உள்ள ஈழத்துச் சிதம்பரம் போல இங்கும் சிவன், சக்தி, ஐயனார் வழிபாடுகள் ஒரே ஆலயச் சுற்றாடலில் இடம்பெற்றுள்ளன.

# புங்குடுதீவு 6 ஆம் வட்டாரம்
# இறுபிட்டி பெரியபுலம் பிள்ளையார் ஆலயம்

புங்குடுதீவு ஆறாம் வட்டாரத்தில் இறுபிட்டி பெரியபுலம் பிள்ளையார் ஆலயம் புகழ் பெற்றது. புங்குடுதீவின் முதல் ஆலயம் என்ற பெயர் பெற்றது. 300 ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமை வாய்ந்தது. தீவகத்தில் தனிநாயக முதலி பரம்பரையினரின் நிர்வாகம் நெடுந்தீவிலிருந்து மண்டைதீவு வரை நடந்த காலத்தில் பதினாறு ஆலயங்கள் இவர்களுக்குச் சொந்தமாக இருந்தன. புங்குடுதீவில் இவர்களுக்கு நான்கு ஆலயங்கள் இன்றுவரை சொந்தமாகவுள்ளன. இவற்றுள் ஒன்றுதான் இறுபிட்டி பெரியபுலம் பிள்ளையார் ஆலயம், இக்கோயிலின் மூலமூர்த்தியை தனிநாயக முதலியின் வாரிசான இனங்காத்த முதலி என்பவர் சீந்தல் என்னும் தாவரக்கொடியால் சுற்றி நெடுந்தீவிலிருந்து கொண்டு வந்து பிரதிஷ்டை செய்து இவ்வாலயம் அமைக்கப்பட்டது, இவ்வாலயத்தைச் சுற்றி நன்செய்நிலங்களும் நிறைந்திருந்தன. பனை, தென்னை, விளா, வில்வம், வேம்பு, முதலிய மரங்களும் மாடு, ஆடு, செம்மறி ஆடு, எருமை மந்தைகளும் வளர்க்கப்பட்டன. அவற்றை பாதுகாக்கும் மேய்ப்பர்களும், மந்தைகளை ஓட்டிச்செல்வதற்கென்றே அமைந்த விசாலமான ஒழுங்கைகளும் கேரதீவு, பல்லதீவு போன்ற இடங்களில் பரந்த புல்வெளிகளும் இருந்தன.

இனங்காத்த முதலியின் பேரனான கனகசபை அவர்கள், தல்லையபற்று கதிரவேலு மணியகாரர் அவர்களின் மூத்த மகள் சின்னத்தங்கைச்சிப்பிள்ளை அவர்களை திருமணம் செய்ததன் மூலம் மணியகாரரின் பெரும்பாலான நிலபுலங்கள் இவ்வாலயத்துக்கு தர்மசாதனமாக வழங்கப்பட்டன. கனகசபையின் மூத்தமகன் சிதம்பரநாதன் (சின்னப்பொடியார்) அவர்களின் மூத்தமகன் சி. கந்தையா (அம்பலவாணர் ஆசிரியரின் தந்தை) அடுத்தபிள்ளைகள் இராமநாதர் (சுப்பையா), நாகநாதர் (அப்பாக்குட்டி- கட்டுரை ஆசிரியரின் பூட்டனார்) கதிரவேலு (அப்பச்சியர்), தங்கக்குட்டி பிள்ளை இவர்கள் அனைவரும் 1950களில் அவ்வாலயத்தின் மற்றுமொரு வாரிசான ஏகாம்பரம் என்பவருடன் இணைந்து தனது மூத்த பேரனார் பெரிய நாகநாதரின் குழந்தைகளிடம் இவ்வாலய நிர்வாகத்தை கையளித்துள்ளார். தற்பொழுது பெரிய நாகநாதருடைய வாரிசுகளே கொடியேற்றத் திருவிழாவை செய்து வருவது யாவரும் அறிந்த உண்மையாகும். நிர்வாக சபையால் ஆலயம் மீண்டும் பாலஸ்தாபனம் செய்யப்பட்டு புதுப்பொலிவு பெற்று கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. நித்திய பூசைகள் மகோற்சவங்கள் என்பன முறையாகவும் சிறப்பாகவும் நடைபெற்று வந்தன. இவ்வாலயத்தை ஸ்தாபித்தவர்களும் காணிகளை வழங்கியவர்களும் முதலாந் திருவிழாவாகிய கொடியேற்றத் திருவிழாவை செய்து வந்தார்கள். புங்குடுதீவு இளைஞர்கள், கொழும்பில் வர்த்தகத்துறையில் பிரபலமாக இருந்தவர்கள் எல்லோரும் ஒன்று கூடி ஆலய வளர்ச்சியில் பங்கு கொண்டனர்.

கோயிலுக்கான திருக்குளத் திருப்பணிச் சபையை உருவாக்கினர். இந்த சபையின் மூலமாக ஆலயத்தின் கிழக்குப்புறத்தில் அமைந்துள்ள குளத்தை ஆழமாக்கி சுற்றுச் சுவர் அமைத்தனர். ஆலயம் சுண்ணாம்புக்கற்களாலும் முருகைக்கற்களாலும் அமைக்கப்பட்டிருந்தமையால் அடிக்கடி பழுதடைந்தது. அவ்வாறு பழுதடையாது மீண்டும் பாலஸ்தாபனம் செய்யப்பட்டு கருங்கற்களினால் கட்டப்பட்டது. திருக்குளத்திருச்சபை, அன்னதான சபை ஆகியவற்றை கவனித்து வந்த சபையே இத்திருப்பணியையும் செய்தது.

17 குண்டங்களுடன் கூடிய சிறப்பான கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தது. பின்பு ஒரு பஞ்சமுக விநாயகரை உருவாக்கி அதற்குரிய கும்பாபிஷேகத்தையும் நடத்தியது. தலையாளி முத்தையா என்பவர் வைரவர் மடையை பெருவிழாவாக நடத்துவார். யாழ்நகரிலிருந்து ஏராளமான முக்கனிகளையும் கொண்டு வந்து மிக விசேடமாக இந்த விழாவை செய்து முடிப்பார். இக்கோயிலில் நடராஜர், சிவகாமியம்மன், மணிவாசகர், பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய திருவுருவங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டன. புங்குடுதீவிலேயே இங்குதான் முதன் முதலாக நடராஜர் விக்கிரகம் இருந்ததாக கூறுவர். இவ்விக்கிரகம் 1921ஆம்ஆண்டு பிரதிஷ்டை செய்யப்பட்டதாக வரலாறு உண்டு. இந்நடராஜர் விக்கிரகம் ஆதியானது என்பதால் திருவாதிரை விழாவுக்கு பல பாகங்களிலிருந்தும் அடியார்கள் வந்து திருவாதிரை நட்சத்திரத்தை அந்தமாகக் கொண்ட பத்து நாட்கள் மகோற்சவம் நடைபெறும். விநாயகர் விரத காலங்களில் 21நாட்கள் இலட்சார்ச்சனை, மாதந்தோறும் விநாயகர் சதுர்த்தி, திருவெம்பாவை, நவராத்திரி, சிவராத்திரி என்பன சிறப்பாக நடைபெறும். திண்ணைப் பள்ளிக் கூடங்கள் இருந்த காலத்திலிருந்தே ஸ்ரீ சித்தி விநாயகர் வித்தியாலய மாணவர்களும், ஆசிரியர்களும் வெள்ளிக்கிழமை தோறும் தேவார சிவபுராண பாராயணம் செய்து கொண்டு ஆலய தரிசனம் செய்வார்கள். 2006ஆம் ஆண்டு இவ்வாலயம் திருத்தி அமைக்கப்பட்டு கும்பாபிஷேகம் செய்யப்பட்டது.

## புங்குடுதீவு 6 ஆம் வட்டாரம்
## அரியநாயகன்புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயம்

புங்குடுதீவின் அரியநாயகன்புலம், வான் பார்த்த பூமியாயினும் வளம் பல கொண்ட பகுதி. கிராமத்தவர் எல்லோரும் இராமர் என்பவரின் தலைமையின் கீழ் ஒன்று கூடி 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஓலையால் வேயப்பட்ட சிறு கொட்டகை ஒன்றில் தற்போதைய அரியநாயகன்புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயத்தை ஸ்தாபித்தனர். அன்று வாழ்ந்த சகோதரர்களாகிய சிவஸ்ரீ சின்னத்தம்பி ஐயர், சிவஸ்ரீ சொர்ணலிங்க ஐயர் ஆகியோரின் நித்திய நைமித்திய பூசைகளினால் விநாயகரை வணங்கி வாழ்வும் வளமும் பெற்றனர். தமது குலதெய்வமான அரியநாயகன்புலம் விநாயகரின் வளர்ச்சியிலும் கருத்து வைத்துக் கோவில் புனருத்தாரண வேலைகளுக்காக, முத்துவேலர் சதாசிவம் அவர்களால் சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் பணம் சேகரிக்கப்பட்டு இங்கு அனுப்பி வைக்கப்பட்டது.

அப்பாக்குட்டி அவர்கள் கோவிலின் கட்டுமானப் பணிக்காகச் சுண்ணாம்புச் சூளை வைத்து அதன் மூலம் பெறப்பட்ட சுண்ணாம்பும் கருங்கல்லும் கொண்டு வெளிநாட்டிலிருந்து கிடைக்கப்பெற்ற பணத்தின் உதவியுடன் கிராமத்தவர் சிரமதானப் பணிகளுடனும் ஆலயத்தின் மூலஸ்தானமும் அதன் முன் மண்டபமும் கட்டப்பட்டு ஓலைக்கிடுகுகளால் வேயப்பட்டு, சுற்றிவர மதிலும் கட்டப்பட்டு விநாயகரைப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. அடியார்களின் வரவிற்காக சாமியார் ஆறுமுகம் அவர்களினால் புங்குடுதீவின் அறிஞர்களாகவும் புராண இதிகாசங்களை இசையோடு பாடுவதிலும் பொருள் சொல்வதிலும் வல்லவர்களாக அப்போது விளங்கிய கணபதிப்பிள்ளை (சின்னத்தம்பர்) அவர்கள், தில்லையம்பலம் (குமரேசர்) அவர்கள் நாகமணியர் ஆகியோரை அழைத்துப் பெரிய புராணப் பாடல்களும் உரைவிளக்கமும், கந்தபுராணப் பாடல்களும் உரைவிளக்கமும், விநாயகர் கதையும் உரையும் கூறப்பட்டதனால் விநாயகர் அடியார்கள் பெரும் பயனடைந்தார்கள்.

1956ஆம் ஆண்டளவில் இ. நாகலிங்கம் அவர்களினால் மடப்பள்ளி ஒன்று கட்டிக் கொடுக்கப்பட்டது. இந்தக் கால கட்டங்களிலே கோவிலைக் கூட்டிச் சுத்தம் செய்து புனிதப்படுத்திய திருமதி செல்லம்மா முத்தையா அம்மையார் அவர்களையும், மணியடித்து ஓசை எழுப்பி இறைவனைப் பள்ளி எழுந்தருளச் செய்யும் சரவணமுத்து அவர்களையும் சந்நிதியில் நாளும் பொழுதும் தேவார திருவாசக பாராயணம் செய்யும் ஆறுமுகம் அவர்களையும் இக்கிராமத்து மக்கள் இலகுவில் மறக்கமாட்டார்கள். சிவஸ்ரீ சொர்ணலிங்க ஐயர், சின்னத்தம்பி ஐயர் ஆகியோரைத் தொடர்ந்து ஆலயத்தின் பிரதம குருவாகவும், அர்ச்சகராகவும் சிவஸ்ரீ ஸ்ரீநிவாசக் குருக்கள் இருந்தார். இவரின் பூசை கிரியா கருமங்களினால் ஆலயம் வளர்ச்சியடைந்து நித்திய மாதப் பூசைகள் பன்னிரண்டும், தெரணியகலை கந்தையா, இ. நாகலிங்கம் ஆகியோரின் முன்னிலையில் விரும்பிக் கேட்டவர்களிடமும், அயலில் உள்ளவர்களிடமும் மாதம் இருபது ரூபா வீதம் பகிர்ந்தளிக்கப்பட்டது. முதலாம் பூசை பொதுவாகச் செய்யப்பட்டது. இரண்டாம் பூசை நாகலிங்கம், மா.இராமலிங்கம் அவர்களாலும், 3ஆம் பூசை முத்துவேலு சதாசிவம், அவரைச் சார்ந்த குடும்பத்தாராலும் 4ஆம் பூசை நாகநாதர் சின்னப்பொடி அப்பா ஆகியோராலும், 5ஆம் பூசை நாகமுத்தர் பரம்பரையினர் ஆகியோரினாலும் 6ஆம் பூசை நாகமணியர் பிள்ளைகள் குடும்பத்தினராலும் 7ஆம் பூசை கந்தையா, சண்முகம் சகோதரர்கள் பகுதியினராலும், 8ஆம் பூசை சொக்கம்புலத்து வேலாயுதர் குடும்பத்தினராலும் 9ஆம் பூசை இராமநாதர், முருகேசர், சின்னத்தம்பி ஆகிய குடும்பத்தினராலும், 10ஆம் பூசை கன்னிவாழை வெட்டுகின்ற விஜயதசமி விழாவாக மாதர் பகுதியைச் சேர்ந்த திருவாளர்கள் ஆ. பொன்னையா, இ. விநாசித்தம்பி, சி. பரமலிங்கம், க. முத்துத்தம்பி இவர்களாலும் இவர்களின் சகோதரர்களினாலும் சிறப்பாகச் செய்துவரப்பட்டது. கிராமத்து மக்கள் ஒன்று சேர்ந்து ஆலயத்தின் புனர் நிர்மாணப் பணிகளுக்காக 1970ஆம் ஆண்டளவில் நிர்வாகசபை ஒன்றை அமைத்து அதன் தலைவர், செயலாளர், பொருளாளர்களாக முறையே நடேசு ஆசிரியர், ஆ. பொன்னம்பலம் சாமியார், ஆறுமுகம் ஆகியோரும் மற்றும் சிலரும் நிர்வாக சபை உறுப்பினர்களும் தெரிவு செய்யப்பட்டார்கள். ஆ. பொன்னம்பலம் அவர்களின் மோட்டார் வண்டியின் உதவியுடன் நடேசு ஆசிரியரும் இன்னும் சிலரும் தென்னிலங்கை வரை சென்றும் யாழ்ப்பாண மாவட்டத்திலும் மற்றும் எங்கள் கிராமத்தவர் தொழில் செய்யும் இடங்களிலும் சென்று நிதி சேகரிக்கப்பட்டு கட்டுமான வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன.

இராமநாதர் நாகலிங்கம் அவர்கள் ஆலய மூலஸ்தானத்திற்குரிய முழுச் செலவையும் பொறுப்பேற்றுச் செய்து முடித்தார். கோவிலுக்குரிய மணியை வெற்றிவேலு அவர்களும், மணிக்கூட்டுக் கோபுரப் பணியை பொன்னையா கனகசபையும் அவரது சகோதரியான திருமதி ஆச்சிப்பிள்ளை அவர்களும் செய்தனர். தெற்குப் பக்கத்துக் கொட்டகை போடுவதற்கான செலவை கா. கனகசபை ஆசிரியரும் அ. சுந்தரலிங்கம் அவர்களும் கொடுத்துதவினர். வாகனசாலைக்குரிய பங்களிப்பை திரு. சுந்தரம்பிள்ளை ஏற்றுக்கொண்டார். திருக்குளத் திருப்பணியை திருமதி பொன்னுத்துரை விசாலாட்சி அவர்கள் செய்தார். வி. சத்தியசீலன் அவர்கள் முன்புறக் கொட்டகையின் செலவை ஏற்றுக் கொண்டார். முருகன் ஆலயம் அமைப்பதற்கு சில அன்பர்களின் நிதியுதவியுடன் வே. சின்னையா அவர்களின் மனைவியார் திருமதி பாக்கியம் முன்னின்று செய்து கொடுத்தார். திருப்பணி வேலைகள் யாவும் முடிவுற்று 1973ஆம் ஆண்டளவில் பிரதிஷ்டாபூஷணம் சிவஸ்ரீ ஐ. கைலாச நாதக்குருக்கள் தலைமையில் 33 ஓமகுண்டங்கள் வைத்து கும்பாபிஷேகம் சிறப்பாக நடந்தேறியது.

ஆண்டு தோறும் வரும் முக்கிய பெருநாளான தைப்பூசத்தைத் தீர்த்தத்திருவிழாவாகக் கொண்டு கொடியேற்றத்திருவிழா தொடங்கப்பட்டது. மகோற்சவத்திற்குரிய உபயகாரர்களாக கொடியேற்றம் மாதர் பகுதியைச் சேர்ந்தவர்களும், 2ஆம் திருவிழா நாகலிங்கம் அவர்களும், 3ஆம் திருவிழா பொன்னம்பலம், நடேசு ஆசிரியர் அவர்களும் 4ஆம் திருவிழா சு. வைத்திலிங்கம், க. தங்கவேலு, க. பரமானந்தம்,சி. இராசையா குடும்பத்தவரும், 5ஆம் திருவிழா நாகப்பர் குடும்பத்தைச் சேர்ந்த நல்லதம்பி, தம்பிப்பிள்ளை குடும்பமும், 7ஆம் திருவிழா து. சுந்தரலிங்கம் சகோதரர்களும், 8ஆம் திருவிழா சொக்கம்புலம் வேலாயுதர் அப்பாக்குட்டி குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், 9ஆம் திருவிழாவான தேர்த்திருவிழா திருவாளர்கள் இராமநாதர் நாகலிங்ம், அவரது சகோதர சகோதரிகளும் , சி. கனகசபை சகோதரர்களும் குடும்பத்தைச் சார்ந்தவர்களும், 10ஆம் திருவிழாவான தீர்த்தத்திருவிழா முத்துவேலு குடும்பத்தாரும் அவரது வழித்தோன்றல்களும் முறைப்படி திருவிழாக்கள் செய்தனர். தீர்த்த உற்சவத்தன்று வெகு விமரிசையாக விநாயகப்பெருமானை அலங்கரித்து கழுதைப்பிட்டித் துறைமுகத்துக்கு ஊர்வலமாக எடுத்துச் சென்று நயினை நாகபூஷணி அம்பாளைப் பார்த்தபடி அலங்காரப் பந்தல்கள் போடப்பட்டு சுவாமியை எழுந்தருளச் செய்து கடலிலே இடுப்பளவு நீர் வரை அந்தணர்கள், அடியார்கள், திருவிழா உபயகாரர்கள் கொண்டு சென்று தீர்த்தமாடும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

திருவாளர்கள் இ. சந்திரகுமார், பே. தர்மசீலன், ந. சண்முகநாதன் ஆகியோர் 'ஐங்கரன் இளைஞர் மன்றம்' என்னும் அமைப்பை ஏற்படுத்தி ஆலயத்திற்கு வேண்டிய தொண்டுகளை பொதுமக்களின் உதவியோடு தண்ணீர்ப்பந்தல், அன்னதானம் முதலிய சேவைகளையும் தவறாது செய்து வந்தார்கள். இந்த மன்றத்தைச் சேர்ந்த இளைஞர்கள் வேலைவாய்ப்பைத் தேடி வெளிநாடுகளுக்கு வந்தபின் அவர்களது முயற்சியால் சேகரிக்கப்பட்ட பணத்தைக் கொண்டு அப்போதைய நிர்வாகசபை உறுப்பினராக இருந்த தவராசா ஆசிரியர் பொறுப்பில் அன்னதான மண்டபமும் கட்டப்பட்டது. இந்தக் கால கட்டங்களில் ஆலயப் பிரதம குருவாகிய சிவஸ்ரீ இரகுநாதக் குருக்களும் அவரது பிள்ளைகளும் செயற்பட்டனர். தொடர்ந்து நாட்டின் சூழ்நிலை காரணமாகக் கிராமத்து மக்கள் இடம் பெயர்ந்தனர். துணிவும் வைராக்கியமும் கொண்டு கிராமத்தில் வாழ்ந்து வந்த ஒரு சில அன்பர்களால் ஆலயம் பாதுகாக்கப்பட்டு அன்றாட வழிபாடுகள் நடைபெற்றன. குறிப்பாக ஆ. பொன்னம்பலம், பொ. கனகசபை ஆகியோரும், ஆலயத்தைப் பராமரிப்பதிலும் சுத்தம் செய்து விளக்கேற்றுவதிலும் திருமதி அன்னம்மா துரைச்சாமி அவர்களும் திருமதி ஆச்சிமுத்து தம்பு அவர்களும், திருமதி பரிமளம், திருமதி பவளம் ஆகியோரும் தொடர்ந்து பத்து வருடங்களுக்கு மேலாகத் திருத்தொண்டு செய்து வருகின்றார்கள். ஆலயப் புனருத்தாரண வேலைகள் செய்வதற்காக இப்போதைய நிர்வாக சபையின் முயற்சியின் பயனாக ஆரம்பிக்கப்பட்டு திருப்பணி வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. தற்போதைய நிர்வாக சபையின் உறுப்பினர்களில் போஷகர்களாக பேராசிரியர் கா. குகபாலன் அவர்கள், பொ. கனகசபை ஆகியோரும் தலைவராக ஆ. பொன்னம்பலம், உபதலைவராக ச. தனபாலசிங்கம், செயலாளர் மு.க. திருலோகநாதன், உபசெயலாளர் திராவிடதாசன், பொருளாளர் அ. சுந்தரலிங்கம் ஆகியோரின் செயற்பாட்டில் நிர்வாக சபை உறுப்பினர்கள், கிராமத்து மக்கள் ஆகியோரின் நிதிப்பங்களிப்போடும் திருப்பணி செய்து முடிக்கப்பட்டு 2006ஆம் ஆண்டு கும்பாபிஷேகம் நடைபெற்றது.

# புங்குடுதீவு 4 ஆம் வட்டாரம்
# பிட்டியம்பதி ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி அம்மன் ஆலயம்

புங்குடுதீவு மேற்கு 4 ஆம் வட்டாரத்தில் பிட்டியம்பதி என்னும் பதியில் வீற்றிருந்து அருள் பாலிக்கும் அன்னையாக எழுந்தருளி "காளிகா பரமேஸ்வரி" என்னும் திருநாமத்தோடு அம்பாள் அருளாட்சி புரியும் சிறப்பான தலமாகத் திகழ்ந்து வருவது தான் இவ்வாலயமாகும். இவ்வாலயத்தில் பிள்ளையார், முருகன், வைரவர் ஆகிய தெய்வங்கள் பரிவார மூர்த்திகளாக இருந்து அருள் பாலிக்கின்றனர்.

இவ்வாலயம் தோன்றிய காலம் 200 வருடங்களுக்கு மேல் இருக்கும் என்று கருதப்படுகிறது. சோமசுந்தரக் குருக்கள் இவ்வாலயத்தில் நடக்கும் கைங்கரியங்களை நடத்தி வந்தார். அவரது இயலாமை காரணமாக ஸ்ரீ சின்னத்தம்பிஐயரிடம் 1930 ஆம் ஆண்டு ஒப்படைக்கப்பட்டு அவர் ஆலய கைங்கரியங்களைத் திறம்பட நடத்தி வந்தார். இவ்வாலயம் புளியங்கூடல் மகாமாரியம்மன் ஆலயத்தை ஒத்தது. கிரியைகளும் அப்படியே நடைபெற்று வருகின்றன.

1950 ஆம் ஆண்டு ஸ்ரீ சின்னத்தம்பி ஐயர் தமது முதுமை காரணமாக சிவஸ்ரீ மீனாட்சி சுந்தரக் குருக்களிடம் ஆலய பரிபாலனத்தை ஒப்படைத்தார். அவரது காலத்திலே கோவில் திருத்துவதற்காக பாலஸ்தாபனம் செய்யப்பட்டது. ஆலயம் முழுவதும் உடைக்கப்பட்டு அத்திவாரம் இடப்பட்டு புதிய ஆலயம் அமைக்கப்பட்டு 1669ஆம் ஆண்டு நயினை ஐ. கைலாசநாதக் குருக்களினால், கும்பாபிஷேகம் செய்யப்பட்டுப் பூசைகள், விழாக்கள் என்பன சிறப்பாக நடாத்தப்பட்டு வந்தன. இவ்வாலயச் சூழலில் சிற்பாஸ்திரிகள் என அழைக்கப்படும் விஸ்வப் பிரம்ம குல மக்கள் வாழ்கிறார்கள்.

இவர்கள் கடின உழைப்பும், கைத்திறனும் நிறைந்த மனமும் கொண்டவர்கள். சக்தியையே குல தெய்வமாகக் கொண்டு வழிபட்டு வருபவர்கள். அதனால் மிகப்பழங் காலந்தொட்டே காளி அம்பாளுக்கு ஆலயம் அமைத்து வணங்கி வருபவர்கள். இவ்வாலய நிர்வாகம் விஸ்வப் பிரம்ம குல மக்களாலேயே நடத்தப்பட்டு வருகின்றது. ஒவ்வோர் ஆண்டும் மகா சபையினால் நிர்வாக உறுப்பினர்கள் தெரிவு செய்யப்பட்டு, அவர்களே ஆலயத் திருப்பணி வேலைகளைக் கவனித்து வருகின்றனர்.

1968ஆம் ஆண்டு சிவஸ்ரீ மீனாட்சி சுந்தரக் குருக்கள் தமது இயலாமை காரணமாகத் தமது மருமகன் சிவஸ்ரீ நாகேந்திரக் குருக்கள் அவர்களிடம் ஒப்படைத்தார். இவ்வாலயத்தின் தல விருட்சமாக ஒரு மாவிலங்க மரம் இருப்பதை இன்றும் காணலாம். மரத்தின் அடியில் தான், ஆரம்ப வழிபாடு இருந்ததாகக் கூறுவர். இந்த மரத்திலே ஒரு வைரவர் சூலத்தை வைத்துக் காளியம்மனாகப் பாவனை செய்து பூசைகளும் பொங்கல் வழிபாடும் நடைபெற்று வந்ததாகக் கர்ண பரம்பரைக் கதை வழங்குகின்றது. வயதான பெரியோர்களிடம் இம்மரத்தின் வயது எவ்வளவு இருக்கும் என்று கேட்டால், தாங்கள் சிறு பிள்ளைகளாக இருந்த காலத்திலேயே இந்த மரம் இப்படியே தான் இருந்தது என்று கூறுவார்கள். இம்மரத்தின் விசேட அம்சம் என்னவென்றால் இது பருப்பதுமில்லை. இதன் கிளைகள் படுவதுமில்லை. ஒரே மாதிரியே தான் இருந்து வருகின்றது.

1978ஆம் ஆண்டளவில் திரும்பவும் ஆலயம் பாலஸ்தாபனம் செய்யப்பட்டு கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. சுற்றுப் புறக் கொட்டகை போடப்பட்டு உள்வீதி முழுவதும் சீமெந்து போடப்பட்டது. ஆனி மாதத்தில் வருகின்ற உத்தர நட்சத்திரத்தை அந்தமாகக் கொண்ட பத்து நாட்கள் மகோற்சவம் நடைபெறும்.

உற்சவத்தின் போது புங்குடுதீவின் நாலாபக்கங்களிலும் இருந்து ஆயிரக்கணக்கான அடியார்கள் வருகை தந்து அர்ச்சனை, நூல் கட்டுதல் ஆகியன செய்வித்து தங்கள் இன்னல்களை நீக்கி அம்பாளின் அருளைப் பெற்றுச் செல்வார்கள். தீராத நோயுள்ளவர்கள் பலர் இவ்வாலயத்திலே வந்து தங்கி, மூன்று வேளையும் அபிஷேக தீர்த்தத்தை அருந்தி, ஆலயத்திலேயே பத்துப் பதினைந்து நாட்கள் இருந்து நோய் தீர்த்து திரும்புவார்கள். இலங்கையில் எந்தப் பாகத்தில் இருந்து தொழில் செய்தாலும் இக்காளியம்மனின் பிரதான பக்தர்களாகிய விஸ்வப்பிரம்ம குலத்தைச் சேர்ந்த அடியார்கள் யாவரும் இந்தப் பத்து நாட்களும் ஊருக்குத் திரும்பி வந்து காலை, மாலை நடைபெறும் விழாக்களிலே பங்கு பற்றுவார்கள். தேர்த்திருவிழா என்றால் ஒரு தனிச்சிறப்பு. பிள்ளையார், முருகன், அம்பாள் ஆகிய மூன்று மூர்த்திகளும் தனித்தனி தேர்களில் வீதிவலம் வரும் காட்சி வர்ணிக்க இயலாத ஒன்றாகும்.

முன்வீதியில் தீர்த்தத் தடாகம், பெரிய அரசமரம், ஆலமரம் என்பன கோவிலை அழகு செய்கின்றன. இராஜகோபுரம் அமைக்கப்பட்டு கோவில் திருத்த வேலைகள் நடைபெற்று கோவில் கும்பாபிஷேகமும், இராஜகோபுரக் கும்பாபிஷேகமும் 2005 ஆம் ஆண்டு மார்ச் மாதம் நடைபெற்றது.

## புங்குடுதீவு 7 ஆம் வட்டாரம்
## மடத்துவெளி வயலூர் பாலசுப்பிரமணிய சுவாமி கோவில்

இவ்வாலயத்தின் தொன்மைப் பெயர் இளந்தாரி நாச்சிமார் கோவில் என்பதாகும். இற்றைக்கு நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் வள்ளி நாச்சியார் என்னும் பெண்மணி அயல் கிராமத்திலிருந்து மடத்துவெளிக் கிராமத்தைச் சேர்ந்த ஒருவரைத் திருமணம் செய்து கொண்டார். அக்கால சம்பிரதாயப்படி திருமணத்தின் பின் மணமகள் புகுந்த வீட்டிற்கு அழைத்து வரப்பட்டு மூன்று நாட்கள் தங்க வைக்கப்படுவது வழக்கம். இம்மரபுப்படி வள்ளிநாச்சியாரும் மணமகனின் வீட்டிற்கு அழைத்து வரப்பட்டார். மூன்றாம் நாள் காலையில் வள்ளிநாச்சியார் வீட்டின் முன்புற வயலில் இறங்கியபோது அவ்வயல் சொந்தக்காரர் அவளை வயலில் இறங்கவிடாது தடுத்ததோடு "நீர் புகுந்த வீடு எங்களுடன் சேர்ந்து வாழும் தரமுடையதல்ல" என்று ஏளனமாகப் பேசினார்.

இதனால் மனமுடைந்த வள்ளிநாச்சியார் மனிதர்களிடையே ஏற்றத் தாழ்வுகள் பார்க்கும் இம்மண்ணிற்கு தான் மருமகளாக இருக்கக்கூடாது என்ற வைராக்கியத்துடன் தனது தாலியைக் கழற்றி தான் நின்ற வரம்பில் காணப்பட்ட கல் ஒன்றின்மீது வைத்து ஒரு சிரட்டையால் மூடி விட்டுப் பிறந்தகம் சென்று விட்டர்.



புங்குடுதீவு - பிட்டியம்பதி ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி அம்மன் ஆலயம்



புங்குடுதீவு - வல்லன் இலுப்பைநின்ற நாச்சிமார் என வழங்கும்
ஸ்ரீ பாலசுப்பிரமணிய சுவாமி கோவில்

இதனால் வேதனையுற்ற அவரது கணவர் சாதியெனும் பெயரால் தான் தாழ்த்தி ஒடுக்கப்படும் நிலை தனது மனைவிக்கும் ஏற்படக்கூடாது என்ற வைராக்கியத்தில் அத்தாலி இருந்த கல்லையே நாச்சியாராகப் பாவனை செய்து வழிபட்டு வந்தார். அவர் மறுமணம் செய்யாது நாச்சியாரை வழிபட்டு வந்தமையால் "இளந்தாரி நாச்சிமார் கோவில்" என்ற பெயர் வந்துள்ளது.

இந்த ஆலயம் வயலும் வயல் சார்ந்த இடமுமான மருதநிலத்தில் அமைந்தமையாலும் வள்ளி நாச்சியாரின் இல்லறவாழ்வு அஸ்தமனமாவதற்கு வயலே காரணமாக அமைந்தமையாலும் வயலூர் நாச்சிமார் கோவில் எனவும் பின்னர் வழங்கப்பட்டது. இவ்வாலயம் 1960ஆம் ஆண்டு புனரமைப்புச் செய்யப்பட்டது. இதன் உரித்துடையாளராக வேலுப்பிள்ளை சபாபதிப்பிள்ளை அவர்கள் காணப்படுகின்றார். இக்கிராமத்தைச் சேர்ந்த யாழ். பிரபல வர்த்தகர் வி. அருணாசலம் அவர்கள் முன்வந்து ஆலயத்தைப் புனரமைக்கும் பணியில் ஈடுபட்டார். பழைய ஆலயம் முற்றாக அழிக்கப்பட்டுப் பிரமாண்டமான வகையில் புனரமைக்கப்பட்டது. கருவறையில் முருகப் பெருமானின் வேலாயுதமும் ஆலயத்தின் வடமேற்கு மூலையில் நாச்சிமாரும் பிரதிஷ்டை செய்யப்பட்டனர். இவ்வாலயத்தின் பெயரும் "மடத்துவெளி ஸ்ரீ பாலசுப்பிரமணிய சுவாமி கோவில்" எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இவ்வாலயத்தைச் சிறந்த முறையில் புனரமைத்ததோடு, நேர ஒழுங்கினைக் கொண்ட ஒரு சிறப்பான பூசை முறையினையும் நடைமுறைப்படுத்தியதன் மூலம் ஆலயத்தின் வரலாற்றில் வி. அருணாசலம் அவர்கள் என்றும் நிலைத்து நிற்கின்றார்.

இவ்வாலயத்தின் திருப்பணிகளை முன்னெடுத்துச் சென்றவர்கள் என்ற வகையில் கொழும்பு பிரபல வர்த்தகர் வி. இராமநாதன் அவர்கள், இக்கிராம மக்கள், மடத்துவெளி சனசமூக நிலைய இளைஞர்கள் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இக்காலப் பகுதியில் ஆலயத்திற்கு ஒரு பரிபாலன சபை உருவாக்கப்பட்டது. இதன் தலைவராக ஆசிரியர் இ. குலசேகரம்பிள்ளை அவர்களும் செயலாளராக ஆசிரியர் க. தியாகராசா அவர்களும் பொருளாளராக அ.ப. பாலசுப்பிரமணியம் அவர்களும் நீண்ட காலம் தொடர்ந்து கடமையாற்றியுள்ளனர். இச்சபையின் போஷகராக வி. இராமநாதன் அவர்கள் சேவையாற்றினார். ஆலயத் திருப்பணி வேலைகள் இச்சபையினூடாகத் தொடர்ந்து முன்னெடுக்கப்பட்டன. ஆலயத்தைச் சுற்றி உட்கொட்டகை, சித்திரத் தேர், பூந்தோட்டம் போன்ற பல்வேறு திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

பிரபல வர்த்தகர் அ. மாணிக்கம் அவர்களால் அவரது மனைவியாரின் ஞாபகார்த்தமாக நான்கு புறமும் சுற்றுமதில்களுடனான அன்னதான மடம் அமைத்துக் கொடுக்கப்பட்டது. இம்மடத்தில் 1987ஆம் ஆண்டிலிருந்து மடத்துவெளி சனசமூக நிலையத்தினரால் "அமுத கலசம்" என்ற பெயரில் அன்னதான சபை அமைக்கப்பட்டு திருவிழாக் காலங்களில் பத்து நாட்களும் பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டுள்ளது. கொழும்பு பிரபல வர்த்தகர் பா. பாலசுந்தரம் அவர்கள், அவரது தந்தையாரின் நினைவாகத் தண்ணீர் பந்தல் அமைத்து திருவிழாக்காலங்களில் அடியார்களுக்குத் தாகசாந்தி செய்து வந்துள்ளார். சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் ஆலயத்திற்கு இராஜகோபுரம் ஒன்றை அமைப்பதற்காக போஷகர் அவர்களால் ஆசிரியர் க. தியாகராசா, ஆசிரியர் இ. குலசேகரம் பிள்ளை, வி. இராமநாதன் ஆகியோரை உள்ளடக்கிய "கோபுர திருப்பணிச்சபை" அமைக்கப்பட்டது.

1991ஆம் ஆண்டு இராணுவ நடவடிக்கை காரணமாகப் புங்குடுதீவிலிருந்து பெருமளவு மக்கள் இடம்பெயர்ந்த நிலையில் ஆலயம் நித்திய நைமித்திய பூசைகளின்றிப் பொலிவிழந்தது. இக்கால கட்டத்தில் பரிபாலன சபைத் தலைவராக சோ. சிவலிங்கம் அவர்களும் செயலாளராக கு. கிருபானந்தா அவர்களும் பொருளாளராக திருமதி. கி. சௌந்தரநாயகி அவர்களும் நியமிக்கப்பட்டனர். இராணுவ நடவடிக்கையின் பின்னர் இருபதுக்குக் குறைவான மக்களே ஆலய சுற்றாடலில் இடம் பெயராது தங்கியிருந்துள்ளனர். ஆலயத்திற்கு அருகாமையில் தங்கியிருந்த தம்பிப்பிள்ளை அவர்கள் ஆலயத்தை நாளாந்தம் சுத்தம் செய்து திருவிளக்கேற்றி வந்துள்ளார். 1998ஆம் ஆண்டு இவ்வாலயப் பரிபாலனசபைத் தலைவர் சோ. சிவலிங்கம் அவர்கள் தனது கிராமத்திற்குத் திரும்பும்வரை இவர் இப்பணியைத் தொடர்ந்து செய்துள்ளார்.இக்கோவிலுக்கான கோபுரம் அமைப்பதற்கு 2005ஆம் ஆண்டு மார்ச் மாதம் அத்திவாரக் கல் நாட்டப்பட்டது.

## புங்குடுதீவு 11 ஆம் வட்டாரம்
## தெங்கந்திடல் வீரகத்தி விநாயகர் ஆலயம்

புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தின் கிழக்கு எல்லைக் குடியிருப்புகளின் முடிவை அண்டிய பகுதியில் பரந்து விரிந்த வயல்வெளியையும் பெரிய கிராய்க்குளத்தையும் பார்த்தபடி கிழக்கு நோக்கி அமைந்த அழகிய சிறிய ஆலயமே தெங்கந்திடல் வீரகத்தி விநாயகர் ஆலயமாகும். தென்னை மரங்கள் ஆலயச் சூழலில் மிகுந்து காணப்படுவதால் தெங்கந்திடல் விநாயகர் என்ற காரணப்பெயர் அமையப்பெற்றது எனலாம்.

இவ்வாலயம் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அமையப் பெற்றிருக்கலாம் எனக் கருதக் கிடக்கின்றது. இப்பகுதியில் வாழ்ந்த சுப்புடையார் என்னும் பெரியாரினால் இக்கோவில் தோற்றம் பெற்றதாகக் கூறப்படுகின்றது. ஆரம்ப காலத்தில் சிறு ஓலைக்குடில் அமைத்து விநாயகப் பெருமானை வழிபாடு செய்து வந்தனர். ஆலயச் சூழலில் வாழ்ந்த திருமதி சின்னத்தம்பி என்னும் அம்மையார் திருவிளக்கேற்றி வந்தார். சாதாரண கல்லை வைத்து விநாயகராகப் பாவனை செய்து வழிபட்டு வந்ததாகவும் அப்பகுதி மக்கள் தாமே பொங்கல், படையல், பூசை வழிபாடுகளைச் செய்து வந்ததாகவும் அறியமுடிகின்றது. சிறிது காலம் செல்ல ஓலைக்குடிலாக இருந்த ஆலயத்தை அச்சூழலில் வாழ்ந்த அயலவர்கள் ஒன்று சேர்ந்து காட்டுக்கல்லும் களிமண்ணும் சேர்த்து சுவர் எழுப்பி அதற்குக் கூரையும் அமைத்து அதன்கீழ் விநாயகப் பெருமானை எழுந்தருளச் செய்து வழிபட்டு வந்ததாக இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். மேலும் சிறிது காலம் செல்ல, இவ்வாலயத்தின் அண்மையில் வசித்து வந்த திரு. திருமதி நல்லதம்பி ஆச்சிமுத்து என்பவர்களின் பெருமுயற்சியினால் அயலவர்களின் ஒத்துழைப்புடன் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் பெரிதாகக் கட்டப்பட்டது. இவ்வாலயம் அமைந்திருந்த காணியை ஆலயத்தின் அயலில் வசித்த திருமதி குமாரசுவாமி கனகாம்பிகை என்பவர் மனமுவந்து அன்பளிப்புச் செய்தார். இப்பகுதியில் வசித்த திரு. திருமதி வைத்திலிங்கம் இராசம்மா அவர்கள் இங்கு எழுந்தருளியிருக்கும் விநாயகப் பெருமானின் திருவுருவச் சிலையை செய்வித்து அளிக்கும் பாக்கியத்தைப் பெற்றனர்.

கருவறையுடன் கூடிய அர்த்த மண்டபம், மகா மண்டபம் என்பன அமையப்பெற்ற இவ்வாலயத்தின் முன்றலில் சிறிய மணிகூட்டுக் கோபுரமும் வைரவர் ஆலயம், சண்டேசுவரர் ஆலயம், திருமஞ்சனக் கிணறு, வசந்த மண்டபம், யாகசாலை, மடப்பள்ளி, களஞ்சிய அறை, என்பனவும் அமைக்கப்பட்டு நாற்புறமும் சுற்றுமதில் அமைக்கப்பட்டது. பின்னர் உள்வீதி முழுவதும் கொட்டகை அமைக்கும் முயற்சி தொடங்கப்பட்டது. அம்முயற்சி வசந்த மண்டபம் தொடங்கிக் களஞ்சிய அறை வரையான முன்பக்கம் முழுவதும் முற்றுப்பெற்ற நிலையில் உள்ளது.

இவ்வாலயம் பெரிதாகப் புனரமைக்கப்பட்டதில் இருந்து அயலவர்களின் பெருமுயற்சியினால் பத்துத் தினங்கள் அலங்கார உற்சவம் ஆவணி மாதத்தில் நடைபெற்று வந்தது. விநாயகப் பெருமானின் திருவருளால் துரித வளர்ச்சி கண்ட இவ்வாலயத்தின் அலங்கார உற்சவத்தைக் கொடியேற்றத் திருவிழாவாகச் செய்ய ஆலய நிர்வாகத்தினர் தீர்மானித்தனர். அதன் பேறாக, 1990ஆம் ஆண்டு கொடியேற்றத்திருவிழா தொடங்கப்பட்டது. 1991ஆம் ஆண்டு இரண்டாவது முறையாகக் கொடியேற்றித் தேர்த்திருவிழாவும் இடம் பெற்றது. துரதிர்ஷ்டவசமாக அவ்வருடத்திலேயே மக்கள் இடம் பெயரவேண்டிய நிலை ஏற்பட்டது. இவ்வாலயத்தின் நித்திய பூசைகளை ஆரம்பகாலத்தில் சிவஸ்ரீ சின்னப்பொடி ஐயர் அவர்கள் செய்து வந்ததாக அறிய முடிகின்றது. பிற்காலத்தில் ஆலயத்தின் அண்மையில் வசித்து வந்த சிவஸ்ரீ பஞ்சாட்சரக் குருக்கள் அவர்களும் அவரது வழிவந்தோரும் மேற்கொண்டு வந்தனர்.

இவ்வாலயத்தின் அயலில் வாழ்ந்து வந்த மக்கள் சிறுவர் முதல் பெரியோர்வரை இக்கோவிலைத் தமது வீட்டின் ஒரு பகுதி போலவே நினைத்து விநாயகப் பெருமான் மீது அளவிலா அன்பும் பக்தியும் கொண்டு வழிபாடியற்றி வந்தனர். பசுக்களில் பால் கறந்ததும் தமது தேவைக்கு முன்னதாக விநாயகப் பெருமானுக்கு என எடுத்து வைத்த பின்னரே தமது தேவைக்குப் பயன்படுத்துவர்.

திருமதி நாகம்மாவும், திருமதி அன்னப்பிள்ளையும் ஆலயத்தின் அருகில் இருந்து கவனிக்கிறார்கள். நாதனும் அவர்களுக்கு உதவி செய்கிறார். இவ்வாலயத்தின் கருவறையில் அமையப் பெற்றிருக்கும் மூலமூர்த்தி விநாயகர் மிகவும் சக்தி வாய்ந்தவராக விளங்கி வருவது பலராலும் அனுபவமூலம் கண்ட உண்மையாகும். உண்மையன்புடன் வழிபடுவோர்க்கு எளிதில் தோன்றி வழி நடாத்தும் அருட்சிறப்பு மிக்கவர், இவ்விநாயகப் பெருமான் தம்மை வழிநடாத்துவதாகக் கூறுவதைச் சர்வசாதாரணமாகக் கேட்கலாம்.

2005 ஆம் ஆண்டு இவ்வாலயத்துக்கான நிர்வாகசபை கொழும்பில் அமைக்கப்பட்டது. தலைவராக இ.வைத்தியலிங்கமும் செயலாளராக நகுலனும் பொருளாளராக தம்பிஜயா தேவதாஸும் தெரிவு செய்யப்பட்டனர். வே. சிவசாமி போசகராகவும் எல் ஸ்ரீகாந்தன் உபதலைவராகவும் இ. இலட்சுமணன் உபசெயலாளராகவும் தெரிவு செய்யப்பட்டார்கள். வெளிநாடுகளில் வாழும் இக்கோவிலின் அடியார்களின் வேண்டு கோளின்படி இங்குள்ள நிர்வாகசபையினர் கோவிலை புனருத்தாரணம் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.

# புங்குடுதீவு 9 ஆம் வட்டாரம்
# வல்லன் இலுப்பை நின்ற நாச்சிமார் என வழங்கும்
# அருள்மிகு ஸ்ரீ பாலசுப்பிரமணிய சுவாமி கோவில்

இக்கோவில் புங்குடுதீவு 9 ஆம் வட்டாரத்தின் வல்லனில் அமைந்திருக்கிறது. 400 வருடங்கள் பழமை வாய்ந்த கோவில் இது. மூர்த்தி, தலம், தீர்த்தம், விருட்சம் யாவும் ஒருங்கமைந்து சிறப்புப் பெற்றது. விருட்சம் புளியமரம். தீர்த்தம் பெரிய கிராய்க்குளம். வள்ளியம்மை நாச்சியார் என்னும் பெண் மடத்துவெளியிலுள்ள ஒருவரைத் திருமணம் முடித்து மூன்று நாட்களுடன் மணவாழ்க்கையில் இருந்து விடுபட்டுத் தனது கிராமத்திற்கு வந்தார். வழியில் நந்தவனத்தின் ஒரு பகுதியில் கொட்டில் அமைத்து தமது குலதெய்வமான வைரவரையும் நாச்சிமாரையும் வைத்து விளக்கேற்றி வழிபட்டார். வள்ளியம்மை என்னும் நாமம் வள்ளிநாச்சியார் என வழங்கப்படலாயிற்று. காலப்போக்கில் தமது 91ஆவது வயதில் கார்த்திகை தினத்தின்று இவர் சமாதி அடைந்தார். நாச்சிமார் இருந்த இடத்தில் வள்ளிநாச்சியாரைச் சமாதி வைத்து சுண்ணாம்புக்கற்களால் மண்டபம் அமைத்து ஒன்றரை அடி நீள அகலமுள்ள கற்பீடம் அமைத்து இதன் மேல் நாச்சிமாரை வைத்து வழிபட்டார்கள்.

சுப்பிரமணியம் என்பவர் யாசகம் செய்ய வந்த இடத்தில் நாச்சிமார் கோவில் நந்தவனத்தில் தங்கி விட்டார். இவர் வள்ளி நாச்சியாரின் குடும்ப உறவினருடன் இணைந்து முருகன் கோவில், மடப்பள்ளி, மணிக்கூட்டுக் கோபுரம் என்பன அமைத்து மூல மூர்த்தியாக வேல் முருகனைப் பிரதிஷ்டை செய்து மகா கும்பாபிஷேகம் நடத்தினர்.

இரண்டாவது கும்பாபிஷேகம் வள்ளி நாச்சியார் வழி வந்த திருமதி சின்னத்தங்கச்சி மூத்ததம்பி குடும்பத்தினரால் செய்விக்கப்பட்டது. மூன்றாவது கும்பாபிஷேகம் மார்க்கண்டு சோதிநாதர், வை. இராமலிங்கம், வை. இளையதம்பி சகோதரர்கள், வைத்தியர் மு. தில்லையம்பலம், குமாரர், சின்னத்தம்பி சகோதரர்கள் ஆகியோரால் செய்விக்கப்பட்டது. நான்காவது கும்பாபிஷேகம் சின்னத்தம்பி, கனகசபை, மருதப்பு, சோ. சின்னத்தம்பி, கு.இராசலிங்கம், சி.ஆறுமுகம், ஊரதீவு மக்கள் ஆகியோரால் செய்விக்கப்பட்டது.

இந்த ஆலயத்தின் அந்தணர் குடும்பம் ஸ்ரீ பஞ்சாட்சர ஐயரின் தந்தை வழியினராகும். இக்கோவிலின் மணிக் கூட்டுக்கோபுரத் திருப்பணி அண்ணாமலை கணபதிப்பிள்ளை என்பவரால் செய்விக்கப்பட்டது. கோவிலுக்கான உற்சவ மூர்த்திகளான வள்ளி தெய்வானை சமேத பாலசுப்பிரமணியர், வைரவமூர்த்தி, சூலம், திருவாசி, பூசைக்குரிய உபகரணங்கள் ஆகியவற்றை சி. கனகசபை, மருதப்பு ஆகியோர் இந்தியா சென்று 1949ஆம் ஆண்டு கொண்டு வந்தனர். இதன்பின் ஐப்பசி மாதத்தில் 9 நாட்கள் அலங்காரத் திருவிழா நடைபெற்று, 1970ஆம் ஆண்டு பரிபாலன சபை ஒன்று அமைக்கப்பட்டது. தலைவர் ஆசிரியர் மு. நடராசா (கோபாலபிள்ளை), செயலாளர் சி. கனகசபை, பொருளாளர் சோ. க .ஐயம்பிள்ளை, சி. கோபாலபிள்ளை, கு. இராசலிங்கம், கு. நடராசா, திருமதி புவனம்மா குணரத்தினம் ஆகியோர் பரிபாலன சபை அங்கத்தவர்களாக நியமிக்கப்பட்டனர்.

1978ஆம் ஆண்டில் ஆலய பரிபாலன சபை மீளமைக்கப்பட்டது. அதன் தலைவர் சி. கனகசபை, செயலாளர் க.சிவசம்பு, பொருளாளர் சி. கோபாலபிள்ளை, நிர்வாக சபை உறுப்பினர்கள் சோ.க. ஐயம்பிள்ளை, கு. இராசலிங்கம், ம. தியாகராசா சி. முருகானந்தவேல், தா. சிவலிங்கம், மருதப்பு ஆகியோர் சபை உறுப்பினர்களாகத் தெரிவு செய்யப்பட்டார்கள். மட்டக்களப்பு கார்த்திகேசு அவர்களால் விநாயகர் ஆலயம், சி. கோபாலபிள்ளை அவர்களால் ஆறுமுகசுவாமி சந்நிதானம், வைரவர் கோவில் ஆகியனவும் அமைக்கப்பட்டன. கு. கைலைமலைநாதன் அவர்கள் நாச்சிமார் ஆலயத்தைப் புதுப்பித்தார். மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்பட்டு சுன்னாகம் சிவஸ்ரீ சோமாஸ்கந்தக் குருக்கள் தமது சகோதரரான சிவஸ்ரீ சர்வேஸ்வரக் குருக்களின் உதவியுடன் மகா கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்தினார். இத்தருணத்தில் இருந்து இலுப்பண்டை நாச்சிமார் என ஆரம்பித்து வல்லன்பதி முருகன் என வழங்கி வந்த நாமம் வல்லன்பதி அருள்மிகு பாலசுப்பிரமணியர் என வழங்குவதாயிற்று.

ஆலயத்தின் நித்திய பூசகர்களான சிவஸ்ரீ நா. சின்னத்துரைக் குருக்களும் பிள்ளைகளும் பூசைகளை நடத்தி வந்தார்கள். ஆண்டுதோறும் வரும் கும்பாபிஷேக தினத்தன்று விசேட அலங்காரத் திருவிழா நடைபெறும். கதிர்காமம் முருகன், செல்வச்சந்நிதி முருகன் தீர்த்தத் திருவிழாவன்று இவ்வாலயத்தில் குமாரர் இராசலிங்கம், சின்னத்தம்பி ஆறுமுகம், அவர்களது பிள்ளைகள் ஆகியோரால் வேல்விழா கொண்டாடப்படுகிறது.

திருக்கார்த்திகை விழாவன்று வள்ளி நாச்சியார் நினைவாகத் தீபவிழா நடைபெறும். அன்று பகல் முருகனுக்கு 108 சங்குகளினால் கும்பாபிஷேகம் இடம்பெறும். மாலை 5 மணிக்கு மூலமூர்த்தி, பரிபாலக மூர்த்திகளுக்கு ஸ்தாபன அபிஷேகம் அஷ்டோத்திர சகஸ்ரநாம அர்ச்சனை, மாவிளக்கு, 1008 சிட்டிகளில் ஓம் என்ற அட்சர வடிவில் தீபம் ஏற்றுதல், பெண்கள் திருவிளக்குப் பூசை, சுவாமி வீதிவலம் வருதல், சொக்கப்பானை எரித்தல், நான்கு வீதிகளிலும் பெரிய சட்டிகளில் தீபமேற்றுதல், வாணவேடிக்கை ஆகியன நடைபெறும்.

தைப்பூச விழாவன்று பகல் 108 அதிவிசேட சங்காபிஷேகம், அஷ்டோத்திர சகஸ்ரநாம அர்ச்சனை, அன்னதானம் என்பன நடைபெறும். இரவு சுவாமி அலங்காரச் சப்பறத்தில் வல்லன் மாவுதிடல் வீதி வழியாக கண்ணகி அம்மன் கோவில், கலட்டி வரசித்தி விநாயகர் கோவில் ஆகியவற்றைத் தரிசித்து ஆலடிச்சந்தி, குறிச்சிக்காடு வழியாக ஆலயத்தை வந்தடைவார். இவ்வூர்வலத்தில் தமிழ்நாட்டின் வேதாரணியத்தைச் சேர்ந்த நாகமுத்து என்பவரும் அவரது இனத்தவர்களும் கூடிப் பால்காவடி, ஆட்டக்காவடி, செடில் காவடி, கற்பூரச் சட்டி, சிலம்படி, தீப்பந்த விளையாட்டு ஆகிய நிகழ்ச்சிகளைப் பக்திபூர்வமாக நிகழ்த்துவர்.

இக்கோவிலின் நித்திய இறைத் தொண்டர்களாக அயலிலுள்ள திருமதி. நாகமுத்து சின்னத்தம்பி, திருமதி கற்பகம் சுந்தரம்பிள்ளை, திருமதி பத்மாவதி நடராசா, திருமதி நகுலம் இராசலிங்கம், மருதப்பு என்பவரின் மகள் பவா ஆகியோரைக் குறிப்பிடலாம். இக்கோவிலின் வளர்ச்சியில் உறுதுணையாக இருந்தோர் வள்ளியம்மை, பர்வதம், சிவகாமி, கண்மணி, சின்னத்தங்கச்சி, நாகமுத்து, கோபாலபிள்ளை ஆகியோரே அவர்கள். விமலாதேவி முக்கியமானவர். இக்கோவிலின் கும்பாபிஷேகம் 23.04.2006ஆம் ஆண்டு நடைபெற்றது. குணரெத்தினம் நாதன் அதை சிறப்பாக நடத்தி முடித்தார்.

# புங்குடுதீவு I ஆம் வட்டாரம்
# கோயில் வயல் ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலயம்

புங்குடுதீவின் மத்தியில் ஊர் மக்கள் குறை தீர்க்க, ஒளிர்ந்து, அங்கு மிளிர்ந்து முத்துமாரியம்மன் வீற்றிருக்கின்றாள்.பெருங்காடு எனப் பெயர் பெற்ற பெரும்பகுதியில் மான்கள் நிறைந்து வாழ்ந்த மானெழுவம் பகுதியில் அம்பாள் அழகிய நெல் வயல்களின் மத்தியில் வீற்றிருப்பதால் அந்த இடம் "கோயில்வயல்" எனப் பெயர் பெற்றது. புங்குடுதீவு மக்கள் மத்தியில் சிவன் வழிபாடு, முருகன் வழிபாடு, விநாயகர் வழிபாடு மற்றும் வைரவர் வழிபாடுகளுடன் அம்மன் வழிபாடும் ஓங்கி நிற்கின்றது, மாரி அம்மன், கண்ணகியம்மன், பேய்ச்சியம்மன், காளியம்மன், பட்டையார் அம்மன் எனப் பல அம்மன் கோவில்கள் எமது ஊரில் காணப்படுகின்றன. பெருங்காடு மாரியம்மன் ஆலயம், அந்நியர் ஆட்சிக்காலத்தில் அழிக்கப்பட்ட வரலாறு நமது மூதாதையர்களால் கூறப்படுகின்றது. புங்குடுதீவில் காணப்படும் புராதன பழமை வாய்ந்த ஆலயங்களில் மாரியம்மன் ஆலயமும் ஒன்றாகும்.

பக்தர் ஒருவரின் வேண்டுதலின் பேரில் ஆலயத்தின் மேற்குப் புறமாக காணப்பட்ட கிணற்றில் இருந்து அம்பாளின் மூல விக்கிரகம் கண்டெடுக்கப்பட்டுத் தற்போது ஆலயம் அமைந்திருக்கும் பகுதியில் உள்ள வேப்பமரத்தடியில் வைத்து அம்பாளை வழிபாடு செய்து வந்தனர். இக்காலத்தில் புங்குடுதீவு இரண்டாம் வட்டாரம் அமரர் இராமநாதன் அம்பலவாணர் அவர்களின் விருப்பத்திற்கிணங்க அவர்களின் வயற்காணிகளில் அம்பாளுக்கு ஆலயம் அமைக்கப்பட்டது. அவரது விருப்பத்தின் பேரில் பொது மக்களின் பேராதரவுடன் அம்பாள் ஆலயம் 1947ம் ஆண்டு பொதுமக்களால் நிர்வகிக்கப்படும் ஆலயமாக்கப்பட்டு பெருவளர்ச்சியடைந்தது. ஆரம்ப காலத் தலைவராக அமரர் சு. வில்வரத்தினம் ஆசிரியர் அவர்களும், அவரைத் தொடர்ந்து அமரர் நா. சோமசுந்தரம் ஆசிரியர் அவர்களும், பின்னர் சி. மாணிக்கம் ஆசிரியர் அவர்கள் தலைமையிலும் ஆலயம் வளர்ச்சி பெற்று இன்று உயர்ச்சி பெற்று நிற்கின்றது. இவ்வாலயச் சட்ட விதிமுறைகள் பலராலும் பாராட்டப்பட்டது. ஒரு தடவை யாழ். நீதிமன்றத்தினால் வேறொரு ஆலய சட்ட விவகாரத்திற்கு பயன்படுத்தப்பட்டது பாராட்டத்தக்கதாகும்.

மாசித்திங்கள் மதி நிறைந்த நன்னாளில் அம்பாள் வீதி வலம் வந்து அடியார்களின் கொடிய வினைகளைத் தீர்த்தருளும் நாட்கள் எமது நெஞ்சத்தை விட்டகலாதவையாகும். ஆலய வாசலின் நேரே அழகிய தாமரை மலர்கள் நிறைந்த திருக்குளம் அமைந்திருப்பதும், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவை ஒருங்கே அமையப்பெற்ற சிறப்பும் குறிப்பிடத்தக்கன.

அழகிய இராஜ கோபுரம் தேவியின் கருணையை எங்கும் எடுத்தியம்பி நிற்கின்றது. அடியார்கள் ஆறி அமர்ந்திருக்க பெரும் நிழல் மரங்கள் சூழவே அமைந்திருப்பது இன்னொரு சிறப்பாகும். நீண்ட நாட்களாக அம்பாளுக்கு அடியார்கள் நேர்த்திக்கடனாக ஆடு, மாடு, கோழிகள் போன்ற உயிரினங்களைக் காணிக்கையாகக் கொடுத்து வந்தனர். இதன் பின் விளைவுகள் கருதி உயிரினங்களைக் காணிக்கையாகப் பெறுவது நிறுத்தப்பட்டது. இவ்விடயம் இலங்கையில் முதன் முதலாக புங்குடுதீவு மாரியம்மன் ஆலய நிர்வாகத்தினரால் மேற்கொள்ளப்பட்டதைப் பாராட்டி வீரகேசரிப் பத்திரிகை ஆசிரியத் தலையங்கம் எழுதியிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.



புங்குடுதீவு கோயில் வயல் ஸ்ரீ முத்தமாரி அம்பாள் ஆலயம்



புங்குடுதீவு கோயில் வயல் ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலயத்துக்கு
முன்னே உள்ள நாகதம்பிரான் ஆலயம் (பழைய தோற்றம்)

ஆலயத்தின் அருகாமையிலுள்ள பாடசாலையில் தொண்டர் ஆசிரியர்களாகக் கல்வி கற்பித்த ஆசிரியர்களுக்கு மாதச் சம்பளம் வழங்கி முன்னுதாரணமாக இவ்வாலயம் விளங்கியது. இறுதியாக அண்மையில் இலங்கை இந்து கலாசார அமைச்சினால் சிறந்த நிர்வாகக் கட்டமைப்புடைய ஆலயம் என இந்த புங்குடுதீவு ஆலயமும் தெரிவு செய்யப்பட்டிருக்கின்றது. அன்னையின் சிறப்புகளை அறியாத எமது ஊர்மக்கள் யாரும் இருக்க முடியாது. ஆலயம் புதுப்பொலிவுடன் அமையப்பெற்று மகா கும்பாபிஷேகப் பெருவிழா 2006 ஜூலை மாதம் நடைபெற்றது.

## புங்குடுதீவு 12 ஆம் வட்டாரம்
## தல்லையபற்று சங்கரமூர்த்தி முருகமூர்த்தி கோவில்

12ஆம் வட்டாரத்தினைத் தல்லையபற்று என்று முன்னோர் அழைத்தனர். தல்லை என்ற சொல்லுக்கு இளம்பெண் என்பது பொருள். இவ்வட்டாரத்தில் செந்தமிழர் குலத் தெய்வமாகிய முருகனுக்கு ஓர் ஆலயம் அமைத்தவர் பெருமகனார் இராமநாத உடையார் அவர்கள். புராணபடனம் ஒழுங்காக நடத்துவதற்காக அமைந்தவை மடாலயங்கள். இம்மடாலயத்தின் மூலஸ்தானத்தில் வேற்பெருமான் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தார். வழிபாடு நடைபெற்று வரும் நாளில் இடையில் கவனிப்பாரின்றி அழியும் நிலையில் ஆலயம் இருந்தது. எனினும் பொதுமக்கள் விசேட தினங்களில் கோவிலைத் திறந்து வழிபட்டு வந்தனர். இக்கோவிலுக்கு இருநூறு பரப்புக்கு மேல் நெற்காணியும் இருநூறு பரப்புக்கு மேல் பனங்காணியும் இராமநாத உடையாராலும் வேறு சிலராலும் தருமசாதனஞ் செய்யப்பட்டுள்ளன. கோவிலைக் கவனிப்பார் இல்லாமற் போகவே காணிகளும் உரிமை கோருபவர்களால் கைப்பற்றப்பட்டன.

கோவிலைப் பொதுக்கோவிலாக்கிப் பஞ்சாயத்தில் விடுவதென தீர்மானிக்கப்பட்டு பரிபாலன நிருவாகசபையும் பஞ்சாயமும் அமைக்கப்பட்டன. கோவில் பழுதுபார்க்கப்பட்டது. புராணபடனமும் நிறைவேறியது. கிராமத்தில் புத்துணர்ச்சியும் எழுச்சியும் உண்டாயின. ஆயினும் 1948ஆம் ஆண்டு ஆவணி மாதத்தில் பஞ்சாயத்தில்ஒருவராகிய வை. சின்னத்தம்பி மறைந்ததும் மீண்டும் குழப்பம் ஏற்பட்டது. பரிபாலன சபையும் பஞ்சாயமும் தளர்ச்சியுற்றன. 1949ஆம் ஆண்டில் க. அம்பலவாணர் ஆசிரியரும் நல்லையா ஆசிரியரும் ஒருங்கு சேர்ந்து சைவத்தொண்டர் இ.க. கந்தையா அவர்களிடம் சென்று ஆலயத்தைக் கையேற்றுப் புதிய கோவில் ஒன்று கட்டிப் பணிபுரியுமாறு வேண்டுகோள் விடுக்கப்பட்டது. கண்ணகியம்மன் கோவிலையே கனவிலும் நனவிலும் நினைத்துக் கொண்டிருந்த அவர், ஒருவாறு உடன்பட்டார். நல்லகாலம் பிறந்தது! பழைய கோவில் மறைந்தது. வெள்ளைக் கல் கொண்டு புதுக்கோவில் எழுந்தது. கேணியும் அமைக்கப்பட்டது. ஐயர் வளவும் க.அப்பாக்குட்டி அவர்களால் கோவிலுக்கு தருமசாதனம் செய்யப்பட்டது.

1957ஆம் ஆண்டு மூலஸ்தானத்தில் விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. முதற் கும்பாபிஷேகம் ஆரம்பித்த நாட்களிலேயே யாழ். உயர்நீதிமன்றில் நீதிபதி ஸ்ரீஸ்கந்தராசா அவர்கள் முன்னிலையில் கோவில் உரிமைகோரி வழக்கு ஒன்றுந் தொடுக்கப்பட்டது. அவ்வழக்கிலே கோவில் பொதுமக்களுடையது என்ற தீர்ப்புக் கிடைத்தது.

1959ஆம் ஆண்டில் இ.க. கந்தையா அவர்களும் மறைந்தார். பின்னர் ஒரு பஞ்சாயம் அமைக்கப்பட்டது. இடையில் சில ஆண்டுகள் தளர்வு ஏற்பட்டது. ஆயினும் மீண்டும் க. அப்பாக்குட்டி அவர்களின் மைந்தர் அ. இலங்கைநேசன் அவர்களின் துணைகொண்டும் கோவிலை உருவாக்க முயற்சி எடுக்கப்பட்டது.1972ஆம் ஆண்டிலும் 1975ஆம் ஆண்டிலும் மகாகும்பாபிஷேகங்கள் நிகழ்ந்தன. குமாரசாமிக் குருக்களின் தம்பியாரான குருசாமிக்குருக்கள் கும்பாபிஷேகமும் கொடியேற்றமும் நடாத்தினார். 1976ஆம் ஆண்டில் முதன் முதலில் மாசி மகத்தைத் தீர்த்தமாகக் கொண்டு 10 நாள் விழா எடுக்கப்பட்டது. முதற்கொடியேற்றம் விமர்சையாக நடந்தது. சிவஸ்ரீ நா. சின்னத்துரைக் குருக்களும் மக்களும் பூசை புரிந்து வந்தனர். மின்சார விளக்கேற்றிய பெரியார் பெ. தில்லைநாதனும் (கொழும்பு) சகோதரர்களுமாவர். நிரந்தர தர்ம கர்த்தாவாக விளங்கியவர் ஆறுமுகம் அம்பலவாணர் (ஐயா) ஆவார். இப்பொழுது அவர் மகன் அ. செல்வராஜா தர்மகர்த்தாவாக விளங்குகிறார்.

## புங்குடுதீவு 6 ஆம் வட்டாரம்
## இறுபிட்டி அருள்மிகு நாச்சிமார் ஆலயம்

ஆண்டிவயல் என்னும் தோட்டக்காணியின் உரிமையாளரின் கனவில் நாச்சிமார்த் தாயார் தோன்றி என்னை ஆதரிப்பார் யாருமில்லையே என்று அழுதார். பின்னர் அந்த வயலை அவர்கள் உழுதபோது விநோத அமைப்புக் கொண்ட ஒரு கல்லைக் கண்டெடுத்தனர். அதனையே அதன் தோற்றம் கருதி நாச்சிமாராகப் பாவனை செய்து ஒரு குடில் அ மைத்து வழிபடத் தொடங்கினர். நாச்சிமார் ஆச்சி என பக்தியோடும் அன்போடும் அழைக்கப்படும் இத்தாயார் தன் சுற்றாடலில் வசிக்கும் மக்களையும் அவர்களது கமம், ஆடு, மாடு போன்றவற்றையும் காக்கும் தெய்வமாகவே கருதப்பட்டு வருகின்றாள். இக்கோவிலின் தல விருட்சமாக மருது ,அரசு ஆகியன இருக்கின்றன. இவ்வரசமரத்தில் நாகபாம்புகள் வசித்து வருகின்றன. ஆலயத்திற்கு வரும் அடியார்கள், குருக்கள் ஆகியோர் பலமுறை பாம்புகள் மூலமூர்த்தியான கல்லின் மீதும் முன்வாசலிலும் படுத்திருப்பதையும் ஆளரவம் அறிந்து தானாகவே ஊர்ந்து சென்று விடுவதையும் கண்ணாரக் கண்டு உள்ளம் நெகிழ்ந்திருக்கின்றார்கள். மாலையில் ஐயர் வந்து ஆயத்தமணி அடித்ததுமே கைவேலைகளை அப்படியே போட்டுவிட்டு பக்தர்கள் அம்பாளைத் தரிசிக்க ஓடி வருவார்கள். நடந்து செல்லும் வழித்தடங்களில் கூடப் பாம்புகள் ஓடும். ஆனால் அவை ஒருபோதும் கெடுதல் செய்ததில்லை. பல சந்தர்ப்பங்களில் தூய வெண்ணிற ஆடை உடுத்திய வயோதிப மாது ஒருவர் நடமாடுவது போலவும், வயல் வரப்புகளில் நடந்து செல்வது போலவும், களை பிடுங்குவது போலவும் அம்பாள் காட்சி கொடுத்திருக்கின்றாள் என்று பலரும் சொல்வர். ஆலயம் புனரமைக்கப்பட்டு 1984ஆம் ஆண்டளவில் கும்பாபிஷேகம் செய்யப்பட்டு பூசைகள் நடைபெற்று வருகின்றன. முன்பு கல் வடிவிலிருந்த நாச்சிமார்த் தாயாருக்குத் துணையாக வந்த வைரவப் பெருமானுக்கு கோவிலின் வட கிழக்கு மூலையில் சந்நிதானமும், நாகபாம்புகள் பள்ளிகொள்ளும் அரசமரத்தின் கீழ் நாகதம்பிரானுக்கான சந்நிதானமும் அமைக்கப்பட்டுள்ளன. இக் கோவிலின் திருக்குளமும் மடப்பளிக்கு அடுத்தாற்போல் அமைந்துள்ளது. இத்திருக்குளத்தின் உள்ளே சிறிதாக ஒரு கிணறும் பிற்காலத்தில் தோண்டப்பட்டுச் சுற்றுச்சுவருடன் இருக்கின்றது. கடும் வரட்சிக் காலத்தில் மக்கள் இக்கிணற்றில் குளிப்பதுடன், மாடு ஆடுகளுக்கும் தண்ணீர் கிடைக்கக் கூடியதாக உள்ளது.

சித்திராபௌர்ணமி அன்று நடைபெறும் சித்திரைக் கஞ்சிப் பெருவிழா விவரிக்க முடியாத சிறப்புக் கொண்டது. ஆலய வளர்ச்சியிலும் புனரமைப்பிலும் பெரிதும் ஈடுபட்டவர்களாக பலர் இருந்த போதிலும் அண்மைக்காலத்தில் திருவாளர்கள் கணபதிப்பிள்ளை, சதாசிவம், சின்னத்தம்பி என வழங்கும் பரராஜசிங்கம், ஆ. பொன்னம்பலம், மயில்வாகனம், சுப்பிரமணியம், சோமசுந்தரம், பொன்னையா, அம்பிகாபதி, சிவபாதசுந்தரம் ஆகியோரும் அப்போது இளைஞர்களாக இருந்து சிரமதானப் பணிகளில் ஈடுபட்ட திருவாளர்கள் கோகிலதாசன், து. கணேசலிங்கம், பிரபாகரன் (பாபு), சிவநாதன் ஆகியோரும் நினைவில் உள்ளனர்.

நாட்டுச்சூழல் காரணமாகப் பலரும் இடம்பெயர்ந்து விட்ட நிலையில் மற்றைய கோவில்களைப் போல நாச்சிமார் தனித்துவிடப்படவில்லை. இவ்வாலயத்தின் அயலில் இடம்பெயராமல் வாழ்ந்து வந்த தம்பிப்பிள்ளை சிவபாதசுந்தரமும் அவரின் பின், அவரது ஒன்று விட்ட சகோதரர்களும், நாகமணி நல்லதம்பி அவர்களின் பிள்ளைகளுமான திருமதி முத்தம்மா, விஸ்வலிங்கம் ஆகியோரும் காலை மாலை கோவிலைத் துப்பரவு செய்து, விளக்கேற்றி வருகின்றனர். திருமதி. முத்தம்மா தமது சொந்தச் செலவில் எண்ணெய் வாங்கி இருபத்துநான்கு மணிநேரமும் ஆலயத்தில் திருவிளக்கு எரியுமாறு கவனித்து வருகின்றார். ஓரளவு நாட்டு நிலை சீரடைந்து மக்கள் பிரயாணம் செய்யும் நிலைமை வந்தபின் ஊர்மக்கள் சென்று அம்பாளைத் தரிசித்து வருவதுடன் எதிர்காலத்தில் செய்யப்படவேண்டிய பணிகள் பற்றியும் ஆலோசித்து வருகின்றனர்.

இறுபிட்டிக் கிராமத்திலுள்ள அனைத்து மக்களும் திரண்டு வந்து விழா வேளைகளில் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஈடுபட்டனர். பூசைகளைக் கவனித்து வந்தவர் சிவஸ்ரீ ஸ்ரீநிவாசக் குருக்களின் பேரனும் சிவஸ்ரீ ஸ்ரீநிவாச நாகேந்திரக் குருக்களின் மகனுமான ஸ்ரீ அருணோதய சர்மா ஆவார்.

## புங்குடுதீவு 4 ஆம் வட்டாரம்
## மூத்த நயினார்புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயம்

புங்குடுதீவிலே இன்றுள்ள சைவ ஆலயங்களிலே காலத்தால் முந்திய திருக்கோவில்களில் இதுவும் ஒன்றாகும். 1890ஆம் ஆண்டு அரச ஆதரவிலே பதிவு செய்யப்பட்ட யாழ்ப்பாண மாவட்ட இந்துக் கோவில்கள் பற்றிய பதிவேட்டின் படி இவ்வாலயம் 1820ஆம் ஆண்டு நிறுவப்பட்டதென அறிய முடிகின்றது. இதனை நிறுவியவர் நாகப்பர் வயிரவநாதர் எனவும் மனேச்சர் அருணாசலம் நாகப்பர் எனவும் கூறப்படுகின்றது. இவ்வாலயம் மண்சுவர் கொண்டிருந்ததாகவும் 1820ஆம் ஆண்டு வைகாசி மாதம் 15ஆம் திகதி கும்பாபிஷேகம் நடைபெற்றதாகவும் வரலாறு கூறுகின்றது.பெரியபுலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலய வரலாற்றில் குறிப்பிடப்பட்டது போல, இனங்காத்த முதலியார் என்பவருக்குரிய நிலத்திலே இது நிறுவப் பட்டதெனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேற்குறிப்பட்ட நிறுவுநர், மனேச்சர் இருவரும் நெருங்கிய உறவினர்கள். இவர்களின் வழி வந்தவர்கள் இன்று வரை இந்த ஆலயத்திற்குப் பல பணிகள் செய்து வழிபட்டு வந்துள்ளனர். இவர்களின் வழிவந்த ஒருவர் "சைவக்காரி" எனச் சிறப்பாக அழைக்கப்பட்ட திருமதி அன்னபூரணி தம்பு ஆவார்.

இவர் ஆலயத்தின் தெற்கு வீதியிலிருந்து, ஆலயத்தை நன்கு பராமரித்து வந்தார். இவருக்கு உதவியாக நெருங்கிய உறவினர்களான சட்டம்பியார் சின்னத்தம்பி மகன் குருமூர்த்தி சாஸ்திரியார், கந்தப்பு சுப்பிரமணியம், கந்தப்பு கணபதிப்பிள்ளை, இலங்கையர் செல்லையா (இலகுப்பிள்ளை ஆசிரியரின் தந்தையார்) முதலியோர் இருந்தனர். இக்காலப் பகுதியில் சுண்ணாம்புச் சாந்துச் சுவர்கள் பிரதான கோவிலுக்குக் கட்டப்பட்டு மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. இக்கைங்கரியத்தை செய்து முடித்தவர் குருமூர்த்தி சாஸ்திரியாரே. இவர் இடையிடையே மலேசியா சென்று திரும்பி வரும் காலங்களில் திருப்பணி செய்து வந்தார். 1946ஆம் ஆண்டு தொடக்கம் 1960ஆம் ஆண்டு வரை ஆலய அன்றாட முக்கிய பணிகள் சிலவற்றை திரு. கு. விநாயகமூர்த்தி (பேராசிரியர் வி. சிவசாமியின் தந்தையார்) கவனித்து வந்தார். இவர் காலத்தில் ஐந்து பேர் கொண்ட பஞ்சாயத்துக் குழு கோவில் காணிகளைக் குத்தகைக்குக் கொடுத்து ஆலயத்தின் பொது நிர்வாகம் முதலியவற்றைக் கவனித்தது. 1952ஆம் ஆண்டளவில் கோவிலின் பிரதான கட்டிடக்கூரை திருத்தப்பட்டு ஓடுகளினால் வேயப்பட்டது.

விநாயகரின் எழுந்தருளி விக்கிரகமும் உருவாக்கப்பட்டு மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. மேற்குறிப்பிட்ட திருப்பணிகளும் பெருமளவு குருமூர்த்தி சாஸ்திரியாரினாலேயே செய்விக்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது. எழுந்தருளி மூர்த்தி வந்தபின் ஆவணிச் சதுர்த்தி போன்ற சில முக்கியமான தினங்களில் சுவாமி வீதிவலம் வர மூஷிக வாகனம் அவசியமாயிற்று. எனவே கு. விநாயகமூர்த்தி 1958ஆம் ஆண்டு இவ்வாகனத்தைச் செய்வித்து அளித்தார். இவ்வாலயத்தில் இக்காலப் பகுதியில் நடைபெற்ற சிறப்புக்களில் கந்தபுராண படனம் நீண்ட காலமாக நடைபெற்று வந்தது. இதற்கு முன்னோடியாக இருந்தவர் இலங்கை - மலேசியா புகழ் அறிவானந்த ஞானகுரு தீபம் ஆசிரியர் சைவத்திரு. குருமூர்த்தி சாஸ்திரியாரே. இவர் காலத்தில் அப்பாப்பிள்ளை, தில்லையம்பலம் (குமரேசு ஆசிரியர்), நாகமணி (கோபாலபிள்ளை ஆசிரியரின் தந்தையார்) ஆகியோர் கந்தபுராண படனத்திற்குப் பலன் சொல்வதில் சிறப்பாகச் செயற்பட்டவர்களாவர். இவர்களின் பின் தேவார நாயகன் எனப் புகழ்பெற்ற கு. விநாயகமூர்த்தி, வைத்தியர் வி. க. குணரத்தினசிங்கம், இராமநாதன் (செல்லப்பர்), விதானையார் பாலசிங்கம் போன்றோர் செயற்பட்டார்கள்.

1960ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுக் கூட்டமொன்றில் ஆலய பரிபாலன சபை தெரிவு செய்யப்பட்டது. பிரபல வர்த்தகர் என்.கே. மயில்வாகனம் அவர்கள் தலைவராக ஏகமனதாகத் தெரிவானார். இவர் காலத்தில் மூலஸ்தானமும் முன் மண்டபமும் கருங்கல்லினால் அமைக்கப்பட்டமை குறிப்பிடத் தக்கது. தம்ப மண்டபம், வசந்த மண்டபம், வைரவர் ஆலயம், கிருஷ்ணர் ஆலயம், பத்திரகாளி ஆலயம், சண்டேசுரர் ஆலயம், யாகசாலை, அர்த்த மண்டபம், தரிசன மண்டபம், கூரைத் திருத்த வேலைகள், சிறந்த சித்திரத் தேர், கொடித்தம்பம் இவற்றையெல்லாம் அமைத்தார். சுப்பிரமணியர்கோவிலும் திருவுருவங்களும் பொரளை வர்த்தகர் க. ஐயாத்துரை குடும்பத்தினரின் உபயமாகும். 1965ஆம் ஆண்டு மகா கும்பாபிஷேகம் நடைபெற்று 1991ஆம் ஆண்டு வரை மகோற்சவம் சிறப்பாக நடைபெற்று வந்துள்ளது. இவ்வாலயத்தின் சிறப்பு சித்திரை வருடப் பிறப்பன்று தேரோடும் கோவில் என்னும் பெயர் பெற்றமையேயாகும். கோவில் திருவூஞ்சல் திருப் பாடல்களைச் சைவ சித்தாந்த செம்மல் வித்துவான் பொன். கனகசபை அவர்கள் இயற்றி உதவினார்கள். 1974ஆம் ஆண்டும் மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது.



அழகிய கடற்கரைச் சூழலில் அமைந்துள்ள கண்ணகை அம்மன் கோவில்



புங்குடுதீவு 11ஆம் வட்டாரம் போக்கத்தை மாரியம்மன் கோவில் மூலஸ்த்தானம்

கோவிலின் தெற்கு வீதியிலே வசித்து வந்த அன்னபூரணி தம்பு அம்மையார் தமது வீட்டிற்கு முன்பும் தெற்குப் புறமும் மேற்குப் புறமும் பூஞ்சோலைகளையும், மற்றும் வடக்கு வீதியில் தென்னஞ்சோலையையும் அமைத்து அரும்பணி செய்து வந்தார். இவற்றிற்கு நீர் இறைக்கத் திருக்குளமும் இருந்தது. கோவிலைச் சுற்றி வேம்பு, அரசு புளி போன்ற மரங்களையும் நாட்டி பராமரித்து வந்தார். பூந்தோட்டத்தின் தேவை மீண்டும் உணரப்பட்டதால் 1989ஆம் ஆண்டு தற்போதைய ஆலய பரிபாலன சபைத் தலைவர் பேராசிரியர் சிவசாமி அவர்கள் ஆலய தெற்கு வீதியில் சில தென்னங் கன்றுகளையும், மலைவேம்புகளையும், பூஞ்செடிகளையும் வைத்துப் பராமரித்து வந்தார்.

1991ஆம் ஆண்டு இடப்பெயர்வின் பின் 1999ஆம் ஆண்டு க. சிவப்பிரகாசம் அவர்களினதும் வேறு சில அன்பர்களினதும் முயற்சியாலும் மீண்டும் பூசை நடைபெறத் தொடங்கி புதிய பரிபாலன சபை தெரிவு செய்யப்பட்டுள்ளது. இன்று குறிப்பாக வெளி நாடுகளிலுள்ள விநாயகர் அடியார்களின் நிதி உதவியுடன் திருப்பணி வேலைகள் தொடங்கப்பட்டு புனருத்தாரண வேலைகள் நடைபெற்று வருகின்றன.

## புங்குடுதீவு I ஆம் வட்டாரம்

## பெருங்காடு மூத்த நயினார்புலம் ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயம்

புங்குடுதீவின் மத்தியில் அமைந்துள்ள இவ்வாலயத்தில் அமரர் சிவஸ்ரீ சீ. செல்லையாக் குருக்கள் பூசகராகப் பணியாற்றியதைத் தொடர்ந்து இவரது தம்பியார் அமரர் சிவஸ்ரீ சுப்பிரமணியக் குருக்கள் ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றியுள்ளார். இவரைத் தொடர்ந்து இவரது மருமகனார் அமரர் சிவஸ்ரீ கெங்காதரக் குருக்களும் அதன் பின் அவரது மருமகனும் கனடாவிலுள்ள ஸ்ரீ முத்துமாரி அம்பாள் தேவஸ்தானப் பிரதம குருவுமான சிவஸ்ரீ சுவாமி சோமேஸ்வரக் குருக்களும் பூசகர்களாகச் சிறப்பாகப் பணியாற்றினார்கள். அதன் பின்,அமரர் சிவஸ்ரீ சுப்பிரமணியக் குருக்களின் பேரன் சிவஸ்ரீ வேணுகோபால் சர்மா ஆலயத்தின் பூசை வழிபாடுகளைக் கவனித்து வந்தார்.

1936ம் ஆண்டளவில் புனருத்தாரணம் செய்யப்பட்டு மகா கும்பாபிஷேகம் நடாத்தப்பட்டது. இப்போது மூலஸ்தானம், பலிபீடம், வைரவப் பெருமான் ஆலயம், மடப்பள்ளி என்பன அமைக்கப்பட்டிருந்தன. இவ்வாலயத்தில் மிக நீண்ட காலமாகவே ஒரு நேரப் பூசை நடைபெற்று வந்தது. அத்துடன் இவ்வாலயத்தில் வேட்டையாடுவதற்காக , ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலயம், சிவன் கோவில், கந்தசுவாமி கோவில் ஆகியவற்றில் இருந்து மூர்த்திகள் எழுந்தருளுவது வழக்கமாக இருந்தது.

1969 ஆம் ஆண்டு அமரர் பி.வே.சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் ஒரு பரிபாலன சபை தெரிவு செய்யப்பட்டது. இக்கூட்டத்தில் நயினை சிவஸ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்களும் கலந்து கொண்டு செய்ய வேண்டிய பணிகள் குறித்துப் பேசினார். இப்பரிபாலன சபையின் செயலாளராக அமரர்வே.க. ஏரம்பு அவர்களும், பொருளாளராக அமரர் திரு. வே. சி. அம்பிகைபாகன் , அமரர் சு. தனிநாயகம், அமரர் கா. ஆறுமுகம், அமரர் சி.க. நாகேசு , மா.பொ. முருகேசம்பிள்ளை, முத்தையா ஆகியோரும் அங்கம் வகித்தனர்.

இவர்கள் பொதுமக்களின் ஒத்துழைப்புடன் திருப்பணி வேலைகளில் ஈடுபட்டிருக்கையில் 1971 ஆம் ஆண்டு நாட்டில் ஏற்பட்ட ஆயுதக்கிளர்ச்சி காரணமாக (சேகுவேரா) திருப்பணி வேலைகள் தடைப்பட்டன. 1976 ஐப்பசி மாதம் அமரர் மா. குமாரசாமி அவர்கள் தலைமையில் புதிய பரிபாலனசபை தெரிவு செய்யப்பட்டது. செயலாளராக அமரர் வே.க. ஏரம்பு அவர்களும், பொருளாளராகச் சு. கருணாகரன் அவர்களும், நிர்வாக சபை அங்கத்தவர்களாக அமரர்களான வே. சி. அம்பிகைபாகன் , சு. தனிநாயகம், கா. ஆறுமுகம், சி.க. நாகேசு, ஆ. காராளபிள்ளை ஆகியோரும், மா.பொ. முருகேசம்பிள்ளை, செ. தனபாலசிங்கம், ஆ. வல்லிபுரம் ஆகியோரும் தெரிவு செய்யப்பட்டார்கள். இப்பகுதி இளைஞர்களை ஒன்று திரட்டி , ஆலயத் திருப்பணியிலும் சமய வழிபாடுகளிலும் ஈடுபடுத்தும் நோக்கத்துடன் சு. கருணாகரன் அவர்களினால் சைவ இளைஞர் மன்றம் ஒன்று உருவாக்கப்பட்டது. இதன் தலைவராக இ. தியாகலிங்கமும், செயலாளராக த.இரவிக்குமாரனும் தெரிவு செய்யப்பட்டார்கள். 1977ம் ஆண்டு மீண்டும் ஆரம்பிக்கப்பட்ட சைவ இளைஞர் மன்றத்தினர், ஆலயத்தில் சிரமதானப் பணிகளில் ஈடுபட்டதோடு, புங்குடுதீவிலும், கொழும்பிலும் நாடகவிழாக்கள் நடாத்தியும் நிதி சேகரித்தனர்.

திருப்பணி வேலைகள் பூர்த்தியடைந்ததும், 1979ம் ஆண்டு தை மாதம் 19ம் நாள் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. இப்பெருவிழாவைச் சுன்னாகம் சிவன் ஆலயப் பிரதம குரு சிவஸ்ரீ நா. சோமாஸ்கந்தக் குருக்கள் தலைமை ஏற்று நடத்தினார். தைப்பூசத்தைத் தீர்த்தத்திருவிழாவாகக் கொண்ட பத்து நாட்கள் வருடாந்த மகோற்சவம் நடைபெற்று வந்தது. 1980 ஆம் ஆண்டு ஆலய நிர்வாகத்திற்கென உபவிதிகள் தயாரிக்கப்பட்டு ஆண்டு தோறும் புதிய நிர்வாகத்தினர் தெரிவு செய்யப்பட்டு வந்தார்கள். 1990ஆம் ஆண்டு மக்கள் இடம் பெயரும் வரை ஒழுங்காக நடைபெற்று வந்த பூசை வழிபாட்டு முறைகள் மக்கள் இடம் பெயர்ந்ததனால் நின்று விட்டது. கடந்த 14 ஆண்டுகளாகக் கவனிப்பாரற்று இருந்த இவ்வாலயத்தை மீண்டும் புதிய பொலிவுடன் நித்திய, நைமித்திய பூசைகள் நடைபெறும் ஆலயமாக மாற்றி, இங்கு வதியும் வரசித்தி விநாயகரின் மகத்துவத்தை சகலரும் அறியச் செய்வதற்கு இவ்வாலயச் சூழலில் வாழ்ந்த மக்கள் முன் வந்திருக்கிறார்கள்.

## புங்குடுதீவு 5 ஆம் வட்டாரம்
## பட்டையக்கார அம்மன் ஆலயம்

முற்காலத்தில் பெரும் முக்கியத்துவம் பெற்றிருந்த புளியடித் துறைமுகத்தின் அணித்தாக வீற்றிருந்து அருள் பாலித்துக் கொண்டு ஒரு சிறப்புப் பெயரைத் தாங்கி விளங்கும் அம்மன் ஆலயம் பதி கொண்டுள்ள இடம் இதுவாகும். பட்டையம் என்பது சாசனம். ஒல்லாந்தர் காலத்தில் சாசனம் பெற்றிருந்ததாயின் இதன் தோற்றமும் வளர்ச்சியும் அதற்கு ஒரு சில நூற்றாண்டுகளாயினும் முந்தியதாகவே இருக்க வேண்டும். இவ்வாலயத்தின் அருகாமையில் வசித்த ‘கார்க்காரத் தர்மர்’ என அன்போடு அழைக்கப்பட்ட தர்மலிங்கம் அவர்கள் இக்கோவிலின் உறுதியைக் கச்சேரியில் தேடியும் கிடைக்காமல் போகவே அம்பாள் அவர் கனவில் தோன்றிச் “சத்திர இணங்கன்” என்ற பெயரில் கச்சேரியில் போய்த் தேடும்படி பணிக்கவே மறுநாட்காலையில் கச்சேரிக்குச் சென்று தேடியதில் அந்தப் பெயரில் இருந்த உறுதி அகப்பட்டது.



புங்குடுதீவு – பெருங்காடு மூத்த நயினார்புலம்
ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயம்



புங்குடுதீவு – மடத்துவெளி துறைமுக வாசல் வீரகத்தி விநாயகர் ஆலயம்

ஒல்லாந்தர் காலத்தில் இதனை இடித்து அழிக்க முற்பட்டபோது இடிப்பதற்கு ஓங்கிய கை அப்படியே அசைக்க முடியாது நின்று விட்டதாகவும் இதனைக் கண்டு பயந்த அதிகாரிகள் இடிக்கும் முயற்சியைக் கைவிட்டதாகவும், பின்னர் இனிமேல் எக்காலத்திலும் இவ்வாலயத்தை யாரும் அழிக்க முயலக்கூடாது என்று பட்டயம் எழுதி வைத்ததாகவும் வரலாறு கூறுகின்றது. அதனாலேயே பட்டயக்கார அம்மன் என்னும் சிறப்புப் பெயர் ஏற்பட்டது. இப்பெயர் திரிபடைந்து பட்டையாரம்மன் எனவும் வழங்குகின்றது. மாவிலங்கு மரத்தின் கீழ் ஒரு கையில் இரத்தச்சட்டியை ஏந்தியபடி வீற்றிருக்கும் இவ்வம்மனின் ஆலயத்தில் வேறு விக்கிரங்கள் வைத்தால் காணாமல் போவது வழமையாக இருந்தது என்பர்.

தன்னைப் பக்தியோடு வணங்காதவர்களை வழிமறிப்பதும் உள்ளன்போடு வழிபடுவோரைக் காக்கும் இயல்புடையவளுமான இக்காவல் தெய்வம் வரலாற்று பெருமையும் அபூர்வ சக்தியும் கொண்டவள் என்று அக் கிராமத்தவர் கூறுவர். இதன் அயலில் செம்மறி, கழுதை, மாடுகள் போன்ற மந்தைகளும் ஏராளமாகக் காணப்பட்டன. இதனால், இக்கோவிலில் உயிரினங்களைப் பலியிடும் வழக்கமும் இருந்ததாகவும் காலப்போக்கில் இச்செயல் கைவிடப்பட்டு சாதாரணமான பூசை நடைமுறைகள் பின்பற்றப்பட்டதாகவும் கூறுவர். அயலிலுள்ள குடிமக்கள் ஆலயத்தைப் பெருக்கிச் சுத்தம் செய்து விளக்கேற்றி வழிபட்டு வந்ததோடு இறுபிட்டிக் கிராமத்தில் வாழ்ந்த சிவஸ்ரீ ஸ்ரீநிவாசக் குருக்களும் அவர் வழிவந்தோரும் இக்கோவில் பூசகர்களாக இருந்து பூசைகளைச் செய்து வந்தனர். வருடம் முழுவதிலும் இக்கோவிலின் அயலில் உள்ள மக்களால் விஷேட தினங்களில் பொங்கல், குளிர்த்தி முதலியனவும் செய்யப்படும்.

## புங்குடுதீவு 7 ஆம் வட்டாரம்
## மடத்துவெளி ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயம்

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இவ்வாலயம் கடற்கரையை நோக்கிய திசையில்முன் வாசலைக் கொண்டு அமைந்திருந்தது. வாணர் பாலம் அமைப்பதற்கு முற்பட்ட காலத்தில் படகுகள் மூலம் பயணம் செய்வதற்கு இவ்வூர் மக்கள் பிள்ளையார் கோவிலடிக்கு வந்து விநாயகரை வணங்கி, தங்கள் பயணம் வெற்றி பெற வேண்டும் என்றும் தங்கள் குடும்பங்களைக் காக்கும் படியும் வரம் பெற்று, அங்கிருந்து படகுகள் மூலம் வெளியூர்ப் பயணங்களை மேற்கொண்டனர். பின்னர் வாணர்பாலம் அமைக்கப்பட்டு வீதி வழியாக போக்குவரத்து ஆரம்பித்த பின்னர் ஆலயத்தை தற்போது உள்ளவாறு மேற்குப் பக்கமாகக் குடியிருப்புகளை நோக்கித் திருப்பி வீதி வழியாகச் செல்லும்போது விநாயகரைத் தரிசித்துச் செல்லக்கூடியதாக அமைக்கப்பட்டது. இங்கு மக்கள் தமது அன்றாட வாழ்க்கையின் ஷேமத்திற்கும் பாதுகாப்பிற்கும் பிரார்த்தனை செய்து பொங்கலிடுவது வழக்கம் .

இவ்வாலயத்தின் அயலில் வாழ்ந்து வந்த அமரர் சிவஸ்ரீ சின்னத்துரைக் குருக்களின் பரம்பரையினரே இங்கு நித்திய நைமித்திய பூசைகளைச் செய்து வந்தனர். ஆலய வளர்ச்சியும் குருக்கள் குடும்பத்தினரின் வாழ்க்கையும் ஒன்றாகக் கலந்ததாகவே இருந்தது. இக்கோவிலின் உரிமைக்காரர்களாக நாகமுத்து, சின்னத்தம்பி சகோதரர்களும் அவர்களது வழிவந்த நாகராசா அவர்களும் குடும்பத்தினரும் இருந்துள்ளனர்.

இக்கோவிலின் தொன்மைக்குச் சான்றாக, பழமை வாய்ந்த விக்கிரகங்கள், அன்றையகாலச் சுண்ணாம்புக் கட்டிடங்கள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். 1980ஆம் ஆண்டளவில் கோவிலைப் புனரமைக்க விரும்பிய அறங்காவலர் சபையினர் இக்கோவிலை இடித்தனர். அப்போது ஏற்பட்ட நாட்டுச் சூழ்நிலைகளால் தடங்கல்கள் எற்பட்டு அவர்கள் தங்கள் முயற்சியைக் கைவிட்டனர். சில வருடங்களாகக் கோவில் புனரமைக்கப்படாமல் இருப்பதை உணர்ந்த மடத்துவெளி சனசமூக நிலையத்தினர் 1985 இல் புதிய நிர்வாக சபையை அமைத்துக் கோவில் புனருத்தாரணப் பணியை ஒப்படைத்தனர். நிர்வாக சபைத் தலைவராக சமய ஆர்வலர் கந்தையா அம்பலவாணர் அவர்களும் உறுப்பினர்களாக எஸ்.எம். தனபாலன், நா. இராசகுமார், பொ. அமிர்தலிங்கம், கருணாகரன், ஊரைதீவு முத்துலிங்கம் ஆகியோரும் பொறுப்பேற்று இப்பணியை மூன்று வருடங்களுக்குள் நிறைவேற்றி 1988இல் கும்பாபிஷேகத்தை நடத்தினர்.

நீண்டகாலமாக இக்கோவிலில் நாகபாம்பு குடியிருந்ததைப் பலரும் கண்டிருக்கிறார்கள். ஆனால் அது யாருக்கும் எவ்வித தீங்கும் செய்தது கிடையாது. சமூகம் சார்ந்த சமய வாழ்வு என்பதற்கு வீரகத்தி விநாயகர் ஆலயத்தை ஒரு சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். இக்கோவிலின் முன்புறம் குளம், சற்றுத் தள்ளி மடத்துவெளி கமலாம்பிகை வித்தியாலயம், சனசமூக நிலையம், பாலர் பாடசாலை, விளையாட்டு மைதானம் என்பவற்றால் சூழப்பட்டு சிறந்த சமூக வாழ்வையும் சமயப் பற்றையும் உருவாக்கி மக்கள் வாழ்ந்தனர்.

## புங்குடுதீவு 9 ஆம் வட்டாரம்

## வல்லன்பதி ஹரிஹர புத்திர ஐயனார் ஆலயம்

ஐயனார் இறங்குதுறைமுகத்திற்கு நேர் எதிரே இவ்வாலயம் அமைந்துள்ளது. இது 250 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகும். திருமதி அமராவதி என்பவரின் மகன் கந்தையா அவர்களின் வளவில் பரந்த வேப்பமரத்தின் கீழ் காவல் தெய்வமான ஐயனார் அமர்ந்து அருள்பாலித்து வருகின்றார். புங்குடுதீவில் உள்ள நான்கு ஐயனார் ஆலயங்களில் இதுவும் ஒன்றாகும்.

1902ஆம் ஆண்டு பொது மக்களின் உதவியுடன் மா. சோதிநாதர், முத்துத்தம்பி அவர்களின் பிள்ளைகளான சின்னையா, வைத்தியர், தில்லையம்பலம், வேலுப்பிள்ளை, திருமதி கதிராசி, கந்தையாவின் பிள்ளைகளான நாகமுத்து, தில்லையம்பலம், அம்பலவாணர் ஆகியோர் வேப்பமரத்தின் கீழ் வீற்றிருந்த ஐயனாருக்குக் கட்டிடக் கோவில் அமைத்து பூரணை புற்கலை சமேத ஸ்ரீ ஹரிஹர புத்திர ஐயனாரை மூலமூர்த்தியாகப் பிரதிஷ்டை செய்து, வைரவருக்கும் கோவில் கட்டி வைரவரைப் பரிபாலக மூர்த்தியாகப் பிரதிஷ்டை செய்து, மணிக்கூட்டுக் கோபுரம், மடப்பள்ளி ஆகியன அமைத்து கோப்பாய் சிவஸ்ரீ வைரவநாதக் குருக்களினால் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. 1980ஆம் ஆண்டு பொதுமக்களின் உதவியுடன் குழந்தைவேல் வீரசுப்பிரமணியத்தின் தலைமையில் ஐயனார் கோவிலைப் புதுப்பித்து, பிள்ளையார் கோவில்,நடேசர், சிவகாம சுந்தரி, சமயகுரவர் நால்வர் (திரு. தில்லையம்பலம் நடராசா உபயம்), நவக்கிரகங்கள், வைரவர், மணிக்கூடு, மடப்பள்ளி, அந்தணர் குடியிருப்பிற்கு வீடு, எழுந்தருளி மூர்த்திகள் சண்டேஸ்வரர் ஆகியன அமைத்து, சுன்னாகம் சிவஸ்ரீ சர்வேஸ்வரக் குருக்கள் தலைமையில் மகா கும்பாபிஷேகம் இனிதே நடைபெற்றது.



புங்குடுதீவு – 9 ஆம் வட்டாரம் ஹரி ஹர புத்திர ஐயனார் ஆலயம்



புங்குடுதீவு – 10ஆம் வட்டாரம் கோரியாவடி நாயன்மார் கோவில்

## புங்குடுதீவு 4 ஆம் வட்டாரம்
## இறுபிட்டி ஞான வைரவர் ஆலயம்

புங்குடுதீவிலே நான்காம் வட்டாரம் குருமூர்த்தி சாஸ்திரியார் தம்பி சுப்பையா அவர்களது வளவில் ஓர் உயர்ந்த அரசமரம் இருந்தது. அவ்விடத்து வைரவர் என்னும் தமிழ்த் தெய்வம் உறைவதாக எல்லோர் வாயிலிருந்தும் வந்தது. வீட்டில் பயனற்று வீசிய விளக்கு ஒன்று தீண்டுவாரின்றிக் கிடந்தது. அதை எடுத்துச் சென்று அந்த அரசமர வேரில் அறைந்தார்கள் அத்தெய்வத்தின் திருக்கோவிலில் என்றும் விளக்கு எரிந்தது.

அச்சூழலில் வாழும் மக்கள் அங்கே அலங்காரம் செய்து அழகாகப் பூசைகள் நடத்திக் கொண்டு வருகின்றார்கள். தற்போது இவ்வாலயத்தின் பூசகராக, புங்குடுதீவு மீனாட்சி சுந்தரேஸ்வர சோமசுந்தரப் பெருமான் தேவஸ்தானப் பிரதம குருக்களான சின்னமணி ஐயா என்று அழைக்கப்படும் சிவஸ்ரீ நாகேந்திரக் குருக்களின் செல்வப் புத்திரன் அருணன் ஐயா பக்திபூர்வமாக நித்திய பூசைகளை நடத்தி அரசடி ஞான வைரவப்பெருமானின் அருள் யாவர்க்கும் கிடைக்கும் வண்ணம் பரிபாலித்து வருகின்றார்.

## புங்குடுதீவு 7 ஆம் வட்டாரம்
## ஊரைதீவு காளியம்மன் ஆலயம்

ஊரைதீவில் ஐயனார், காளியம்மன் ஆகிய தெய்வங்களின் கோவில்கள் மட்டுமன்றி, வைரவர், முருகன், கிருஷ்ணன் ஆகிய தெய்வங்களின் ஆலயங்களும் அமைந்துள்ளன. அருகாமையில் வயலூர் முருகன் என வழங்கும் பாலசுப்பிரமணியர் ஆலயமும் உள்ளது. இங்குள்ள முருகன் கோவில் பெத்தப்பர் கோவில் என வழங்கப்பட்டு பிற்காலத்தில் முருகன் ஆலயமாக மாறியுள்ளது. இவை தவிர, வாசிகசாலை அம்மன், தம்பாப்பிள்ளை அவர்கள் அமைத்த மாரியம்மன், ஆ. சுப்பையா அவர்கள் பராமரித்த வைரவர், சின்னத்தம்பியர் பராமரித்த வைரவர், இன்னும் பல வளவுகளின் காணிச் சொந்தக்காரர்களினால் வைத்து வணங்கப்பட்ட வைரவர் ஆலயங்களும் இங்கு காணப்படுகின்றன.

ஊரைதீவின் அருகே அமைந்துள்ள சிறுபற்றைக் காட்டின் நடுவே பெருவெளி ஒன்றுண்டு. அங்கே ஓர் அடர்ந்த திருக்கொன்றை மரத்தின் கீழ் மாயக் கண்ணன் என்று அழைக்கப்படும் கிருஷ்ணன் பள்ளி கொண்டு அருள்பாலிக்கும் கண்ணபிரான் கோவிலும் உள்ளது. இயற்கை அழகு கொழிக்கும் இப்பிரதேசத்தில் கண்ணபிரான் கோவில் கொண்டிருப்பது பிருந்தாவனத்தின் நடுவே யாதவகுல நண்பர்களுடன் அவன் ஓடியாடி விளையாடிய காட்சிகளை நினைவிற்குக் கொண்டுவரும்.

## புங்குடுதீவு 9 ஆம் வட்டாரம்
## மாவுதிடல் மலையடி நாச்சிமார் கோவில்

200 ஆண்டுகளுக்கு முன்பு மாவுதிடல் மலையடியில் பூவரசமரத்தின் கீழ் நாச்சிமார் என்று பாவனை செய்து ஒரு கல் வைத்து வணங்கினார்கள். 1885ஆம் ஆண்டு வள்ளியம்மை சோதிநாதர் என்பவரும் அவரது தங்கை நாகமுத்து வேலுப்பிள்ளை என்பவரும் சிறுகொட்டில் அமைத்து நாச்சிமாரை வழிபட்டார்கள். அவர்களுக்குப் பெண்குழந்தை இல்லாத குறையைப் போக்க வேண்டுதல் செய்து வழிபாடு செய்தனர். காலை மாலை நாச்சிமாருக்கு விளக்கு வைப்பர். வழித்துணையாக வாக்கர் பொன்னம்பலம் என்ற தம் உறவினரைக் கூட்டிச் செல்வார்கள். இவர்களுக்குப் பின் வள்ளியம்மையின் அண்ணன் மகள் திருமதி செல்லமுத்து சின்னையா இக்கோவில் திருப்பணியைச் செய்வித்து சீமெந்துக் கட்டிடமாக மாற்றி வைரவர் கோயில், மணிக்கூட்டுக் கோபுரம், மடைப்பள்ளி ஆகியன அமைத்து கும்பாபிஷேகம் நடத்தி நித்திய பூசைகள், தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, வைகாசி விசாகப் பொங்கல், ஆடி அமாவாசை ஆகிய விழாக்கள் சிறப்பாக நடைபெறச் செய்தார்.

ஆடி அமாவாசை தினத்தன்று அதிகாலையில் ஸ்தாபன அபிஷேகம் நடைபெற்று, சோமசுந்தரேஸ்வரி சமேத சோமசுந்தரப் பெருமான் எழுந்தருளி கடலில் தீர்த்தமாடி, விரதகாரர்களுக்குத் தர்ப்பணம் செய்து அடியார்களுக்கு அன்னதானம் வழங்கப்படும். இவ்விழாவினைப் பொதுமக்களின் உதவியுடன் சின்னத்தம்பி ஆறுமுகம் முன்னின்று செய்வார்.

ஆலயத்தின் தெற்குப் பக்கத்தில் சின்னத்தம்பி முருகேசுவின் ஞாபகார்த்தமாக அந்தியேட்டி மடம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இத் திருப்பணிகள் 1988ஆம் ஆண்டு சின்னையா பஞ்சாட்சரம் அவர்களால் மேற்கொள்ளப்பட்டுப் பூரணப்படுத்தப்பட்டது. அயலில் உள்ள மக்களினால் பொங்கலும் நித்திய தீபமேற்றுதலும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

## புங்குடுதீவு 9 ஆம் வட்டாரம்
## மாவுதிடல் வீரபத்திரர் ஆலயம்

புங்குடுதீவு 9ஆம் வட்டாரம், கிழக்குக் கடற்பகுதியில் இவ்வாலயம் அமைந்துள்ளது. பனை மரத்தைச் சுற்றி வளர்ந்த ஆலமரமும் இத்தி மரமும் அமைந்த இடத்தில் ஒரு கல்லை வைத்து ஆரம்பத்தில் வணங்கி வந்தார்கள். பிற்காலத்தில் இது சிறு கட்டிடமாக அமைக்கப்பட்டு, மூலமூர்த்தியாக வீரபத்திரரைப் பிரஸ்தாபித்துப் பொதுமக்களின் உதவியுடன் திருமதி சின்னையா சிவக்கொழுந்து, திருமதி செல்லையா பாக்கியம், ஆசிரியர் மு. நடராசா, ஆறுமுகம் குழந்தை ஆகியோர் முன்னின்று நடத்தினார்கள். நித்திய பூசையுடன் தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, சித்திராபௌர்ணமி, வைகாசி விசாகம், கந்தசஷ்டி, திருக்கார்த்திகை விழா, மார்கழி திருவெம்பாவை ஆகிய விழாக்கள் இனிது நடைபெறும்.



புங்குடுதீவு – 8ஆம் வட்டாரம் நாகதம்பிரான் ஆலயம்



புங்குடுதீவு – கேரதீவு ஐயனார் ஆலயம்

## புங்குடுதீவு 10 ஆம் வட்டாரம்
## மாவுதிடல் கோரியாவழ அலைகடல் நாயன்மார் கோவில்

இது மூர்த்தி, தலம், தீர்த்தம், விருட்சம் ஆகியன ஒருங்கமைந்த கோவில் ஆகும். இதன் விருட்சம் புன்னை மரம் ஆகும். கண்ணகி அம்மன் சிலையுடன் கூடிய பெட்டி வந்தடைந்த கடற்பகுதி இதுவாகும். நாயன்மார்க்காடு மிகவும் பழமைவாய்ந்த கோவில் ஆகும். இங்கு வீற்றிருக்கும் மூலமூர்த்தி சிவன் ஆவார். தீராத நோய் தீர்க்கும் வைத்தீஸ்வரன் அம்மை தையல்நாயகித் தாயாருடன் இங்கு எழுந்தருளி இருந்து அருள்பாலித்து வருகின்றார். புன்னைமரத்தின் அடியில் வைரவசுவாமி அமர்ந்து அருள்கின்றார்.

ஆனி உத்தரத்தை ஒட்டிய 9 நாட்கள் திருவிழாக் காலத்தில் காலையில் ஸ்தாபன அபிஷேகம், அஸ்டோத்திர சகஸ்ரநாம அர்ச்சனை, அன்னதானம் என்பன நடைபெறும். இரவில் வசந்தத்திருவிழாவில் சுவாமி வீதிவலம் வருவார். புங்குடுதீவில் வைத்தீஸ்வரனாக வீற்றிருக்கும் இறைவனுக்கு 9ஆம் திருவிழாவன்று 108 சங்காபிஷேகம், பாலாபிஷேகம், பஞ்சாமிர்த அபிஷேகம், பன்னீர் அபிஷேகம் ஆகியன நடைபெற்று அஷ்டோத்திர சகஸ்ர நாம அர்ச்சனை நடைபெறும்.

பக்தர்களுக்கு இலையில் பஞ்சாமிர்தம் அன்னதானம் போல வழங்கப்படும். இதனால் இவ்விறைவன் பஞ்சாமிர்த ஈசன் என வழங்கப்படுவார். இரவில் விசேட மேளக்கச்சேரியுடன் அலங்கார சப்பறத்தில் சுவாமி வீதி வலம் வருவார். இத்திருவிழா உபயகாரர் கொழும்பு வெண்கலக்கடை வர்த்தகர் திரு. கு. நல்லதம்பி குடும்பத்தினர் ஆவர்.

## புங்குடுதீவு 8 ஆம் வட்டாரம்
## வல்லன்பதி கண்டிப் பிள்ளையார் ஆலயம்

புங்குடுதீவு 8ஆம் வட்டாரம் கிழக்குக் கடற்பகுதியை அண்டிய பகுதியில் இவ்வாலயம் அமைந்துள்ளது. இக்கோவில் 100 ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழைமை வாய்ந்தது. இக்கோவிலை மீன்பிடித் தொழிலாளர்கள் பரிபாலித்து வழிபட்டு வந்தனர். பின்னர் இவர்கள் இடம் பெயர்ந்து விட்டனர். சிலகாலம் நித்திய கருமங்கள் நடைபெறாமல் இருந்த இவ்வாலயத்தைப் பொதுமக்கள் உதவியுடன் தங்கம்மா ஆச்சி, சாமி பொன்னம்பலம், கந்தப்பு நாகேந்திரன், திருமதி சொர்ணம் தம்பிப்பிள்ளை ஆகியோர் புனருத்தாரணம் செய்து கட்டிடம் அமைத்துக் கண்டிப் பிள்ளையார் என்ற பெயரால் வழிபாடுகள் தொடரச் செய்தனர்.

இவ்வாலயத்தில் நித்திய பூசைகளுடன் தைப்பொங்கல், சித்திரைப் பொங்கல், சித்திராபௌர்ணமி, 12 மாதகாலமும் விநாயக சதுர்த்தி, திருக்கார்த்திகை விழா, மார்கழித் திருவெம்பாவை முதலிய விழாக்களும் நடைபெற்று வந்தன.

## புங்குடுதீவு 10 ஆம் வட்டாரம்
## மாவுதிடல் துர்க்கை அம்மன் ஆலயம்

10ஆம் வட்டாரத்தின் கள்ளிக்காடு பகுதி ஆலமரத்தின் கீழ் பன்னெடுங்காலமாக வைரவர் கோவில் ஒன்று அக்கிராம மக்களால் பரிபாலிக்கப்பட்டு வந்தது. பின்பு 1980ஆம் ஆண்டு ஒரு பக்தையின் கனவில் துர்க்கை அம்மன் தோன்றித் தன்னை எழுந்தருளச் செய்யும்படி ஆணை வழங்கவே இங்கு துர்க்கையம்மன் பிரதிஷ்டை செய்யப்பட்டார்.

வைரவர் மூலமூர்த்தியாகவும், தென்திசை பார்க்கும் வகையில் துர்க்காதேவி பரிவார மூர்த்தியாகவும் எழுந்தருளியிருந்து அருள்பாலித்து வரும் இவ்வாலயத்தில் பிரதம குருக்களாக இருந்த சிவஸ்ரீ கிருஷ்ணராசக் குருக்களினால் சுன்னாகம் சிவஸ்ரீ சோமஸ்கந்தக் குருக்களின் ஆலோசனையின் பிரகாரம் இம்மாற்றம் செய்யப்பட்டு கும்பாபிஷேகம் இனிதே நடைபெற்றது.

துர்க்காதேவி அம்பாளின் அருட்கடாட்சம் பெற்ற முழுநேர பக்தையான திருமதி மங்கையர்க்கரசி கணேஸ் (டாக்டர் கணேஸ் அவர்களின் துணைவியார்) அவர்களின் அருள்வாக்கின் பலிதம் பலர் வெளிநாடுகளுக்கு எளிதில் சென்று செல்வம் திரட்டித் துர்க்கையம்மனுக்கு சிறப்பாகக் கும்பாபிஷேகம் செய்வித்தார்கள்.

## புங்குடுதீவு 9 ஆம் வட்டாரம்
## மாவுதிடல் காத்தவராயர் கோவில்

இவ்வாலயம் ஆரம்ப காலத்தில் பனையும் இத்தியும் ஆலும் சூழ்ந்து வளர்ந்திருந்த இடத்தில் சூல வடிவில் வைரவர் வைத்து வணங்கப்பட்டு வந்தது. நாளடைவில் இத்திக்காடு செல்லப்பா என்பவரது மனைவி திருமதி செல்லாச்சி பொதுமக்களின் உதவியுடன் கோவில் அமைத்து மூலமூர்த்தியாகக் காத்தவராயரைப் பிரதிஷ்டை செய்து நித்திய பூசை செய்து வணங்கத் தொடங்கினார்கள். இங்கு நித்திய பூசைகளுடன் தைப்பொங்கல், சித்திரை புதுவருடப் பொங்கல், சித்திராபௌர்ணமி, சித்திரைக் கஞ்சி, கார்த்திகைத் தீபம், திருவெம்பாவை தினத்தன்று ஒருநாள் அலங்காரத் திருவிழா என்பன சிறப்பாக நடைபெறும்.

திருமதி. செல்லாச்சியின் பின் அவரது மகன் செல்லப்பா நடராசா இவ்வாலயத்தைப் பரிபாலித்து வந்தார். அவர் இத்தெய்வத்தின் மீது கொண்ட பக்தியினால் தனது மகனுக்குக் காத்தான் என்றே பெயரிட்டார். தற்போது போர்க்காலச் சூழலினால் ஏற்பட்ட இடையூறுகளினால் பொதுமக்கள் திருவிளக்கு மட்டும் ஏற்றி வழிபட்டு வருகின்றனர். தற்போதைய தர்மகர்த்தாக்கள் செ. நடராசா இரத்தினசங்கம், நடேசபிள்ளை சரஸ், தேசிங்குராசா ஆகியோராவர்.

இவ்வாலயத்தை விஸ்வலிங்கம் அமைத்தார். முதலாவது கும்பாபிஷேகத்தை 1957ஆம் ஆண்டு சி. நடேசபிள்ளை நடத்தினார்.

## புங்குடுதீவு I ஆம் வட்டாரம் சட்டம்பியார் வளவு வயிரவர் கோவில்

புங்குடுதீவில் முதலாம் வட்டாரத்தில் சட்டம்பியார் வளவின் ஆலமரத்தின் கீழ் உருவான வயிரவர் ஆலயம் இது. 1949ம் ஆண்டு பசுபதிப்பிள்ளை அவர்களும் அதன் பின் தம்பாப்பிள்ளை அவர்களும் கொட்டகையாக அமைத்து வழிபாடு செய்து வந்தனர். இவர்களோடு தம்பியையா, தம்பிப்பிள்ளை மாஸ்ரர் ஆகியோரும் இதன் வளர்ச்சிக்கு உதவி வந்ததோடு 1958ஆம் ஆண்டு வி. எம். தம்பிஜயா அவர்களினால் ஆலயம் கட்டப்பட்டது. புலம் பெயர்ந்து சென்ற கிராமத்து மக்கள் திரும்ப வந்து ஆலய சுற்றாடலில் தங்கி தற்போது வசித்து வருவதோடு காலை மாலை விளக்கேற்றி வழிபாடு செய்கின்றனர். இவ்வாலயம் ஆண்டுகள் பல கடந்தும் எதுவிதமான பழுதுகளுமின்றி காட்சி தருவது ஒரு புதுமையாகும்.

## புங்குடுதீவு 4ஆம் வட்டாரம் ஆஞ்சநேயர் ஆலயம்

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு புங்குடுதீவு மேற்கு இறுபிட்டி நான்காம் வட்டாரத்தில் மூத்த நயினார் புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயத்திற்கு கிழக்கே 150 யார் தூரத்திலும் ஸ்ரீ காளிகா பரமேஸ்வரி அம்பாள் ஆலயத்திற்கு வடக்கே 150 யார் தூரத்திலும் இவ்வாஞ்சநேயர் ஆலயம் அமையப் பெற்றது. வைத்தியர் மருதன் என்பவர் இந்தியா சென்று வைத்தியக் கலையையும் சோதிடக் கலையையும் கற்றுத் தேர்ச்சி பெற்று இலங்கை திரும்பும்போது அவரின் குருவினால் ஆசீர்வதிக்கப்பட்டுத் தல விருட்சமாக ஓர் இலுப்பங்கன்றும், அனுமார் சூலமும் வெள்ளை ஆசனக்கல் ஒன்றும் அவருக்குக் கொடுக்கப்பட்டது. அவற்றைக் கொண்டு வந்து இன்று ஆலயம் அமைந்துள்ள இடத்தில் ஸ்தாபித்ததாக வரலாறு கூறுகிறது அவ்வாசனக் கல்லிலே ஆஞ்சநேயரின் உருவத்தை வரைந்தார். மறுநாள் பார்த்தபோது அவ்வுருவம் வரைந்த சுவடே தெரியாமல் மறைந்திருந்தது. ஐயமும் வியப்பும் அடைந்த அவர் மீண்டும் அதே இடத்தில் அனுமனின் உருவினை வரைந்தார். அடுத்த நாளும் அது மறைந்து விட்டது. இவ்வாறு அவர் வரைவதும் உருவம் மறைவதுமாகப் பல நாட்கள் சென்றன. இறுதியாக ஓடிப்போகும் அனுமாரை நிறுத்தி வைக்க அவர் அனுமாரை ஓர் இயந்திரத்திற்குள் நிறுத்தி அந்த சதுர வடிவமான ஆசனக் கல்லின் கீழ் வைத்துப் பூசித்து வந்தாராம். அதன்பின் மூலஸ்தானத்தோடு கூடிய ஆலயம் அமைக்கப்பட்டது. அவ்வாலயத்தின் கர்ப்பக் கிரகத்தில் இயந்திரம் மூலமூர்த்தியாக பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. பத்ம தளத்தோடு கூடிய ஒரு சதுரத்தின் நடுவே அறு கோணம் கொண்ட ஐம்பொன்னாலான இயந்திரத்தின் மத்தியில் எழுந்தருளியிருக்கும் ஆஞ்சநேயரின் உயரம் மூன்றடியாகும். கும்பிட்டவாறு காணப்படும் கைகளில் ஜெப மாலையும் மோதிரமும் ஏந்தியுள்ளார். இடையில் மேகலையும் வாலில் மணியும் அணிந்துள்ளார். இவ்வாலயத்தில் பல வருடங்களாக இரண்டு காலப்பூசைகள் தொடர்ந்து நடைபெற்று வந்தன. மார்கழியில் பத்து நாட்கள் திருவெம்பாவை, சித்திரா பௌர்ணமி தினத்தன்று சித்திர புத்திரனார் கதை படிக்கப்பட்டுப் பயன் கூறுதல், சித்திரைக் கஞ்சி வார்த்தல் ஆகியன சிறப்பாக நடைபெறும். இவ்வாலயத்தின் பூசகராக சிவஸ்ரீ ஸ்ரீநிவாசக் குருக்களும் அவர் வழிவந்தோரும் பூசைகளை நடாத்தி வந்துள்ளனர். இலங்கையின் முதலாவது ஆஞ்சநேயர் ஆலயம் சீதா எலிய என்ற இடத்தில் அமைந்துள்ளது. அடுத்து எழுந்த இரண்டாவது ஆஞ்சநேயர் ஆலயம் இறுபிட்டி நான்காம் வட்டாரத்தில் அமைந்துள்ள இந்த ஆலயமே என்பது சிறப்புத்தரும் வரலாறாகும். இவ்வாலயத்தை அனுமார் கோவில் என்றும் ஆஞ்சநேயர் கோவில் என்றும் வழங்கி வருகின்றனர்.

## புங்குடுதீவு 2 ஆம் வட்டாரம்
## அரசடி ஆதி வைரவர் ஆலயம்

புங்குடுதீவு 2ஆம் வட்டாரத்தில் அரசினர் வைத்தியசாலை வீதியை முகப்பாகக் கொண்டு இவ்வாலயம் அமைந்துள்ளது. புங்குடுதீவின் மற்றைய வைரவர் ஆலயங்களை விட பழமை வாய்ந்தது.

மானிப்பாயிலிருந்து வைரவன் என்னும் வைத்திய சித்தர் ஒருவர் புங்குடுதீவுக்கு வந்து இவ்வாலய தலவிருட்சமான அரசமரத்தடியில் மந்திர அட்சர தகடொன்றை ஸ்தாபித்து வழிபட்டு வந்தார். சில நாட்களின் பின் மீண்டும் அத்தட்டை பெற முயற்சித்த போது இயலாமல் போகவே அவ்விடத்தையே ஆலயமாக அமைத்து வழிபட்டு வந்தார். வைரவன் என்ற பெயர் தொண்டைமண்டலத்து மேல்நாட்டு முதலிகளின் பெயராக இருப்பது நோக்குதற்குரியது. இவ்வைத்திய சித்தர் பரம்பரையினரே இந்த ஆலயத்தை நிருவகித்து வந்துதோடு ஆலயக் காணியின் உரிமையாளரும் ஆகினர். அதில் முக்கியமாக குறிப்பிட வேண்டியவர்கள் சின்னத்தம்பியும் அவரின் வழித்தோன்றல்களுமாவர். அவர்வழி வந்த சி. தம்பையாவும் அவரின் புத்திரரான குமாரவேல் என்னும் பூர்வீகப் பெயர் கொண்ட சுவாமி சதானந்த ஜி அவர்களும் ஆலயம் அமைந்துள்ள காணியை தருமசாதனம் செய்துள்ளனர்.

ஓலைக்குடிலாக மாறிய இவ்வாலயம் பல வருடங்களின் பின் மடாலயமாக மாறியது. 1977 இல் கடற்கரையில் கிடந்த காளி சிலையை நாகநாதி கிருஷ்ணன் கண்டெடுத்து வைரவருக்கருகே பிரதிஷ்டை செய்தார். சுப்பையா ஐயர் தனது குருத்துவ தொழிலை இவ்வைரவர் சந்நிதானத்திலேயே ஆரம்பித்தார்.

1983 ஆண்டு அறங்காவல் சபை உருவாக்கப்பட்டது. போர்ச்சூழலின் பின்பு மீண்டும் அறங்காவலர்களின் முயற்சியால் திருப்பணி வேலைகள் தொடங்கப்பட்டுள்ளன. இவ்வாலய வளர்ச்சியில் செல்லையா, நடேசபிள்ளை, திருவிளங்கம், கிருஷ்ணபிள்ளை, சபாரெத்தினம், சண்முகநாதன், கனகசபை, சுந்தரராஜன், திருச்செல்வம், சிவனேசன், சுப்பையா, உலகநாதன ஆகியோர் பாடுபட்டனர். இவ்வாலய உருவாக்கத்தில் ஓய்வு பெற்ற கிராம சேவையாளர். த. வடிவேலு முக்கியமானவர் இவரது மகன் வடிவேலு ஞானகாந்தன் இவ்வாலய வரலாறு பற்றி ஒரு புத்தகமே எழுதியிருக்கிறார்.

## புங்குடுதீவு 10 ஆம் வட்டாரம்
## வீரமலை முருகமூர்த்தி ஆலயம்

புங்குடுதீவு 10ஆம் வட்டாரத்தில் பெரியகிராய்க் குளத்தின் தெற்குப்புறத்தே வயல் வெளிகளின் நடுவே இவ்வாலயம் அமைந்திருக்கின்றது. பழமையான இவ்வாலயத்தில் ஒரு நாள் அலங்கார உற்சவம் சிறப்பாக நடைபெறும். வேல் ஒன்றை உற்சவமூர்த்தியாக கொண்டு வீதி வலம் வரும் காட்சி பக்திபூர்வமாக அமையும். மார்க்கண்டர் மாதுங்கர் பகுதியினரால் இவ்வாலயம் ஆரம்பிக்கப்பட்டது. பொன்னையர் பகுதியினர் பூசை செய்தனர். செட்டியார் பகுதியினர் கோயிலை பெரிதாகக் கட்டினர்.

மா.க. வைத்தியநாதன், இவ்வாலயத்தின் தர்மகர்த்தாசபையின் தலைவராக கடமையாற்றி இவ்வாலயத்தின் வளர்ச்சிக்கு பெரிதும் பாடுபட்டவர். கம்பஹா கிருஷ்ணசாமி, எஸ். துரைச்சாமி ஆகியோர் இவ்வாலய வளர்ச்சியில் ஆர்வம் காட்டினர். 2005 ஆம் ஆண்டு இவ்வாலயம் புனருத்தாரணம் செய்யப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்றது. மார்க்கண்டு லிங்கநாதன் இவ்வாலய வளர்ச்சிக்கு பெரிதும் உதவியிருக்கிறார்.

## புங்குடுதீவு 10 ஆம் வட்டாரம்
## ஆழ்கடல் வைரவர் ஆலயம்

இவ்வாலயம் ஆஸ்பத்திரியடிக்குத் தெற்கே கடற்பகுதியில் சிறுதீவு போன்ற பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது. ப. கந்தையர் என்பவர் இவ்வாலயத்தை அமைத்தார். கட்டிடக் கலைஞர் செல்லையாவும் இவருக்கு உதவியாக இருந்தார். ஆடி அமாவாசை தினங்களில் அதிகமான மக்கள் இக்கடற்பகுதியில் நீராடி, இவ்வாலயத்தை வணங்குவர்.

பலர் பொங்கல் செய்து வைரவருக்கும் படைப்பர். ஆஸ்பத்திரியடி, அம்மன்கோவிலடி மக்கள் இக்கோவிலின் திருவிழாவில் கலந்து கொள்ளவர். மீன் பிடிக்கச் செல்வோர் இவ்வாலயத்தை வணங்கிச் செல்வர்.

## புங்குடுதீவு 11 ஆம் வட்டாரம்
## போக்கத்தை மாரியம்மன் கோவில்

புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் பிரதான வீதியில் ஆலடிச்சந்திக்கும் அம்மாகடைச் சந்திக்கும் இடையில் போக்கத்தையில் கோணேஸ்வரி வளவில் இவ்வாலயம் அமைந்திருக்கிறது.

திருமதி. நா. கோணேஸ்வரியின் தந்தையாரின் பெயர் அம்பலவாணர். அம்பலவாணரின் தந்தையின் பெயர் வேலுப்பிள்ளை. இந்த வேலுப்பிள்ளையரே இந்த ஆலயத்தை உருவாக்கினார். அரசமரமும், வேப்பமரமும் சேர்ந்து இருக்கும் இடத்தில் ஆரம்பத்தில் கொட்டிலாக இருந்து பின்பு கல்லால் ஆன கட்டிடமாக உருவாக்கப்பட்டது. பொங்கல் போன்றவை விசேடமாக நடைபெற்றன.

வருடத்துக்கு ஒரு முறை திருவிழா நடைபெறும். போர்ச்சூழலின் போதும் பின்பும் நாதனே இந்தக் கோவிலைப்பராமரிக்கிறார். ஐயர் வந்து பூசை செய்வதில்லை. நா. கோணேஸ்வரியின் மகள் மணி என்று அழைக்கப்படும் சந்தான லெட்சுமி இப்பொழுது இந்தக் கோவிலைப் பராமரித்து வருகிறார்.

# புங்குடுதீவு II ஆம் வட்டாரம்

## பெத்தப்பா கோயில்

அம்மாகடைச் சந்தியின் மேற்குவீதியை சாளம்பாய் வீதி என்பார்கள். அந்த வீதியிலேயே பெத்தப்பா கோயில் இருக்கிறது. கண்ணகை அம்மன் கோவிலின் 4ஆம் திருவிழாவை புங்குடுதீவின் தாழ்த்தப்பட்ட மக்கள் செய்வார்கள். இவர்களை உயர்சாதியினர் கோயிலுக்குள் செல்ல விடமாட்டார்கள். இதனால் இப்பகுதியினரால் அமைக்கப்பட்டதே இந்த பெத்தப்பா ஆலயம் ஆகும். இவ்வாலயத்தில் படைப்புகள் படைத்து பறை அடித்து பெரியவிழாவாகச் செய்வார்கள். ஆரம்பத்தில் இவ்வாலயம் ஆலமரத்தைச் சுற்றி ஒரு கொட்டிலாக காட்சியளித்தது.

அந்த ஆலமரத்தைச் சுற்றியே பூசை வழிபாடுகள் நடைபெற்றன. இவ்வாறான பெத்தப்பா கோயில்கள் நடுவுத்துருத்தியிலும் ஊரை தீவிலும் இருக்கின்றன.

## புங்குடுதீவின் சமாதிக் கோவில்கள்

ஆதியும் அந்தமுமாகி எங்கும் நிறைந்து குறைவிலா நிறைவுமாகியிருக்கும் பரப்பிரம்மத்தோடு சமாதியில் இருப்பவர் ஐக்கியமாகி விட்டார் என்பதையே சமாதியின் மேலுள்ள சிவலிங்கம் குறிக்கின்றது.

தமிழ் நாட்டிலே பெரும்பாலும் மடாதிபதிகளுக்கே சமாதி வைத்தல் உண்டு. புங்குடுதீவில் உடலோடு வைக்கப்பட்ட சமாதிகள் நான்காகும். இறந்த பின்பு தகனம் செய்து அஸ்தியை வைத்த சமாதிகள் உண்டு. இவை சதாசிவக்குருக்களுடையதும் சந்தையடி பொன்னையருடையதுமாகும். இவற்றிலே காலத்தால் மூத்த சமாதி ஊரதீவு கிராமத்திலே பத்திவேலன் பிட்டியில் ஐயனார் கோவிலுக்கு அண்மித்த மலைப்பாங்கான இடத்தில் இருக்கின்றது. இச் சமாதியில் உறைபவர் மருதப்பு சுவாமிகள் என்ற ஓர் ஆன்மீகராவார். இவர் திருமணம் செய்யாத பிரமச்சாரியாகவே வாழ்ந்தவர். திருநாவுக்கரசு நாயனாரிடத்தில் மிகுந்த பக்திமை உடையவர். பாணாவிடை சிவன் எனத் தற்போது வழங்கும் ஐயனார் கோவிலில் நடைபெறும் திருநாவுக்கரசு நாயனாரின் குருபூசை அந்தக் காலத்தில் மிகவும் பிரசித்தமானது. புங்குடுதீவின் 12 வட்டார மக்களும் சித்திரை மாத சதய நட்சத்திரத்தில் வரும் இக்குருபூசை தினத்தைக் குறித்து வைத்திருந்து சென்று பங்கு கொள்வார்கள். இக் குருபூசைச் சோற்றின் சுவை பற்றி இன்றும் பேசிக் கொள்வார்கள். இக்குருபூசையை ஆரம்பித்து வைத்தவர் இங்கு சமாதி கொண்டிருக்கும் மருதப்பு சுவாமிகள் ஆவர்.

மருதப்பு சுவாமிகளே ஊரதீவு ஐயனார் கோவிலின் ஆரம்ப கர்த்தாவும் ஆவார். இக்கோவில் தொடக்கத்தில் சிறிய கோவிலாக இருந்தது. ஊர்மக்களின் வழிபாட்டிற்கு உதவிய இக்கோவில் பெரிதாக வரவேண்டுமென்ற பிரார்த்தனை பிழை போகவில்லை. கோவிலின் வடபுறத்து மலையை அண்டிய கடலில் பலர் குளிப்பதுண்டு. மருதப்பு சுவாமிகளுக்கும் ஸ்நான நிலைத் தீர்த்தமாகிய அக்கடலில் அவர் ஒரு நாள் குளித்துக் கொண்டிருக்கும் போது அவர் கைக்குள் ஒரு சிவலிங்கம் அகப்பட்டது. அதனை எடுத்து வந்த சுவாமிகள் ஐயனார் கோவிலில் பிரதிஷ்டை செய்தார். நாளுக்கு நாள் வளர்ச்சியுற்று வரும் ஐயனார் 'தான்தோன்றீஸ்வரர்' என்னும் திருநாமத்தோடு வழிபடப்படுகின்றார்.

மருதப்பு சுவாமிகள் தம் பூதவுடலைத் துறந்த போது, அவருடைய விருப்பப்படி மலையிலே சமாதி வைக்கப்பட்டது. 1950ஆம் ஆண்டில் வைக்கப்பட்ட இச்சமாதியே புங்குடுதீவின் முதல் சமாதிக் கோவில் ஆகும். மருதப்பு சுவாமிகள் மேற்கொண்டு வந்த திருநாவுக்கரசு நாயனார் குருபூசையை அவருடைய சகோதரரான சின்னப்பொடியர் ஆறுமுகம் அவர்கள் பொறுப்பேற்றுப் பல அன்பர்களுடன் சேர்ந்து செய்து வருகின்றார். புங்குடுதீவு மேற்கில் குறிகாட்டுவான் என்னும் இடத்தில் வாழ்ந்தவர் சுப்பிரமணியம் என்னும் சுவாமியார். இவரைச் 'சாதுசாமி' என்றும் 'குறிகாட்டுவான் சாமியார்' என்றும் ஊர் மக்கள் அழைத்தனர். இவருடைய சமாதியே புங்குடுதீவின் இரண்டாவது சமாதியாகக் கருதப்படுகின்றது. 1973ஆம் ஆண்டளவில் குறிகாட்டுவானில் இச்சமாதி வைக்கப்பட்டுள்ளது. இச்சமாதி வைப்பதில் சிவானந்தனும் தம்புச்சுவாமி என்று அழைக்கப்பட்ட யோகர் சுவாமிகளின் சீடரும், குறிகாட்டுவான் சுவாமியாரின் மகனான திரு. விசுவலிங்கமும் கலந்தாலோசனை செய்து கருமமாற்றினார்கள். குறிகாட்டுவான் சுவாமியாரும் தென் இந்திய, வட இந்திய யாத்திரை செய்த புண்ணியசீலரே. தனியே புறப்பட்டு ஊர் ஊராய் நடந்து கோவில்களிலும் மடங்களிலும் தங்கித் தியான நிலையில் மணிக்கணக்காக இருந்து சிவயோக பாவனையில் மூழ்கிவிடுவார். 'தனித்திரு, பசித்திரு, விழித்திரு' என்னும் இவரது போதனையைப் பலர் அறிவர். கோவில் திருவிழாக்களின் போது அக் கோவிலின் வளாகத்தில் உள்ள தனிமையான இடத்தில் இவர் தியானத்தில் இருப்பது பழைய ரிஷிகளை நினைவூட்டும். ஓங்கி வளர்ந்த உருவம். உருவத்திற்கு ஏற்ற பருமன். உடம்பெங்கும் திருநீறு பூசிய கோலம். சடாமுடி. நீண்ட வெண்தாடி. கழுத்தில் உருத்திராக்க மாலை. சிவமுத்திரை காட்டிய கை. இவையெல்லாம் சுவாமிகளின் ரிஷிக்கோலத்திற்கு அணி செய்தன. அதிகமாகப் பழங்களையே சாப்பிடுவார். குறிகாட்டுவான்சுவாமிகள் இறைபதம் அடைந்ததும் கோணிப்பையில் விபூதி நிறைந்து விளைகற்பூரம் போட்டு அவர் உடலை உள்ளே வைத்து முடிச்சிட்டு புனிதக் குழியுள் இட்டுச் சமாதி கட்டிச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

குறிகாட்டுவான் பகுதியில் அமைந்துள்ள புங்குடுதீவின் மூன்றாவது சமாதி வைத்திய கலாநிதி கணபதிப்பிள்ளை அவர்களுடையது. 1976ஆம் ஆண்டு இச் சமாதி வைக்கப்பட்டது. இவர் சித்த வைத்தியராகவும் சைவ சித்தாந்தவாதியாகவும் வாழ்ந்தவர். தென் இந்திய, வட இந்திய யாத்திரைகள் செய்தவர். மலேசியா, சிங்கப்பூரிலும் சித்தாந்த அரங்குகளில் கருத்துரை வழங்கியவர். புராண படலங்களுக்குப் பயன் சொல்லிய உரைகாரர். புராணிகர். இலங்கையின் முதலாவது சமஸ்கிருத பாடசாலையான புங்குடுதீவு வேதாகம பாடசாலையில் 1950ஆம் ஆண்டளவில் பிராமணர்களுக்குச் சைவ சித்தாந்த போதகராய் விளங்கியவர். அத்தோடு இந்தியாவிலுள்ள திருக்கோவிலூர் என்னுமிடத்தில் 1958ஆம் ஆண்டு நடந்த சிவாச்சாரியார்களுடைய அர்ச்சகர் மாநாட்டில் பிரதிஷ்டாபூஷணம் ஐ. கைலாசநாதக்குருக்கள், திருமலை பூரணாநந்தேஸ்வரக் குருக்கள், (கனடாவில் வாழும் பூரணாநந்த தியாகராஜக்குருக்களுடைய தந்தையார்) ஆகியோருடன் இலங்கைப் பிரதிநிதியாகக் கலந்து கொண்டவர். இவர் நித்திய பூஜாதுரந்தரர்.இவருடைய சைவ சித்தாந்த புலமையையும் சிவபூசைக் கிரமங்களையும் திருக்கேதீஸ்வரம் திருவாசக மடத்தில் கண்ட காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீன முதல்வர் சிவத்திரு ஞானப்பிரகாச தேசிகர் இவருக்கு யாழ்ப்பாணம் சிவதொண்டர் நிலையத்திற்கு முன்னுள்ள பசுபதிச் செட்டியார் இல்லத்தில் வைத்து நிர்வாண தீட்சை அளித்தார். 'ஈசான சிவன்' என்னும் நாமத்தையும் சூட்டினார். இவரைச் சமாதி வைக்க வேண்டும் என்று இவரது மகன்மாரான சிவராமலிங்கனாருக்கும் சிவானந்தனுக்கும் தேசிகர் பணிப்புரை செய்தார். இதனாலேயே இவர் சமாதி வைக்கப்பட்டார்.

புங்குடுதீவின் தெற்குப் பகுதியின் வைத்தியசாலையின் அருகாமையில் கடலோரத்தில் காட்சி தருகிறது சதானந்த சுவாமிகளின் சமாதி. 1983ஆம் ஆண்டில் வைக்கப்பட்ட இந்தச் சமாதி இன்று தென்பெருந்துறைச் சிவன் ஆலயமாக வளர்ச்சியடைந்த நிலையில் உள்ளது. சதானந்த சுவாமிகள் கண்டி தென்னக்கும்பரயில் அமைந்துள்ள சச்சிதானந்த தபோவனத்தில் சேர்ந்து தியான யோகங்களில் பதமானவர். வட இந்திய , தென் இந்திய யாத்திரைகள் செய்து சாது சங்கமங்களோடு கலந்துரையாடியவர். ரிஷிகேசம் சிவானந்த சரஸ்வதிகளிடம் சந்நியாசம் பெற்றவர். கொழும்பு இராமகிருஷ்ண மிஷனில் சில காலம் தங்கித் தொண்டாற்றியவர். கதிர்காமம் தெய்வயானை அம்மன் ஆலயத்தில் பூசை செய்த புண்ணிய சீலர். மேற்குறித்த நான்கு சமாதியுடையார்களும் பிரம்மச்சரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் ஆகிய நான்கு நிலைகளிலும் நின்றவர்களே. இவர்களுள் சதானந்த சுவாமிகள் சந்நியாச நிலை அடைந்து காவி உடை தரித்து சிவம், சிவகோஸ்டி, சிவநெறி என்று ஒரு துறவியாக வாழ்ந்தவர். மருதப்பு சுவாமிகள் காவியுடை தரித்ததாக செய்திகள் இல்லை. குறிகாட்டுவான் சுவாமிகளும் வேட்டி சால்வையோடுதான் உலாவியவர். சித்தாந்தவாதியான வைத்தியர் கணபதிப்பிள்ளை சுவாமிகளும் கதர் வேட்டி சட்டையுடனேயே உலாவினார். சதானந்த சுவாமிகள் மட்டுமே சிவானந்த சரஸ்வதியிடம் சந்நியாசம் பெற்றமையினால் காவியுடை தரிக்க வேண்டும் என்ற விதியைக் கடைப்பிடித்தார். இவருடைய மகன்மார்களான அமரர்கள் சண்முகநாதன், கிருஷ்ணபிள்ளை, மற்றும் சபாரத்தினம் ஆகியோரின் முயற்சியினால் தென்பெருந் துறைச் சிவனாலயம் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. ஆலய பரிபாலனத்திற்கென்று ஒரு சபையையும் உருவாக்கியுள்ளார். நல்லூர் பாதயாத்திரை செய்வோர் இவ்வாலயத்தில் இரவு தங்கி, மறுநாள் காலை நீராடி , சதானந்த சிவன் ஆலயத்தில் பாராயணம் செய்து, யாத்திரையைத் தொடரக் கூடிய வசதிகளும் இங்குண்டு. சமாதிக் கோவில் தரிசனம் அதிக சக்தி வாய்ந்தது எனக் கற்றோர் கூறுவர். இக்கோவில்களின் அருள் அலைகளின் வீச்சால் நமது ஊரான புங்குடுதீவு பழைய சிறப்புகளைப் பெற்று மீண்டும் தளைத்தோங்க வேண்டும்.

## புங்குடுதீவு 2 ஆம் வட்டாரம்
## புனித பிரான்சிஸ் சவேரியார் தேவாலயம்

புங்குடுதீவு நான்கு பக்கமும் கடலால் சூழப்பட்ட கிராமமாகும். இப்புண்ணிய பூமியில் புனித தலமாகிய புனித பிரான்சிஸ் சவேரியார் தேவாலயம் அமையப் பெற்றுள்ளது. பெருங்காடு என அழைக்கப்படும் இடத்தில் இது அமைந்துள்ளது. இத் தேவாலயம் சுமார் 125 வருடங்களுக்கு மேல் பழமையும் பெருமையும் வாய்ந்தது. தென்னிந்தியாவிலிருந்து குடிபெயர்ந்து கடல் வழியாக வந்து புங்குடுதீவு 'கோரியா" என்று அழைக்கப்படும் இடத்தில் இறங்கிய பரதவகுல மக்கள் அவ்விடத்தில் கடற்றொழில் செய்து வாழ்ந்து வந்தார்கள். கால நகர்வினால் இடம்பெயர்ந்து புங்குடுதீவு மத்திய பகுதியாகிய பெருங்காட்டுப் பகுதியில் சிறு குடிசைகள், பள்ளிக்கூடம் என்பன அமைத்து வாழ்ந்தனர். அக்காலப்பகுதியில் தான் தென்கடலிலே ஒரு பேழை மிதந்து வந்தது. அதனை இந்தப் பரதகுல மக்கள் கண்டெடுத்துத் திறக்க முயற்சி செய்தனர். முடியவில்லை. பின்பு அப்பேழையை மத்திய பகுதியான பெருங்காடு சந்தையடி எனத் தற்போது வழங்கப்படும் இடத்திற்கு எடுத்து வந்து அங்கிருந்த ஆலமரத்தடியில் வைத்துத் திறந்தனர். அப்பேழை திறக்கப்பட்டது. அதற்குள் இருந்ததே புனித பிரான்சிஸ் சவேரியார் திருச்சொரூபமாகும். இச்சொரூபத்தை அவ்விடத்தில் இருந்து மீண்டும் எடுக்க முடியவில்லை. எனவே தான் அவ்விடத்தில் ஆலயம் அமைக்கப்பட்டு, பூசை வழிபாடுகள் செய்து வந்தார்கள்.

மக்களின் ஒத்துழைப்பினால் 1905ஆம் ஆண்டில் பெரிய தேவாலயமாகக் கட்டப்பட்டது. இத்திருத்தலத்தின் பூசைகள், சமய வழிபாடுகளைச் செய்வதற்காக அயல் நகரமாகிய யாழ்ப்பாணத்தில் இருந்து துறவிகள் எனப்படும் குருமார் கடல்வழிப் பயணம் செய்து வந்தனர். இவர்கள் போதனைகள், சமூகப் பணிகள் போன்றவற்றையும் செய்து வந்தனர். கல்வி, பொருளாதார வளர்ச்சி பெற்ற இம்மக்கள் கடற்றொழிலோடு மட்டும் நில்லாது வியாபாரம், கட்டிடக் கலை, உத்தியோகம் முதலியவற்றிலும் ஈடுபட்டு வாழ்க்கையை நடாத்தி வருகின்றார்கள்.

இவ்வாலயத்தில் கத்தோலிக்க இளைஞர் யுவதிகள் சேர்ந்து மணிக்கூட்டுக் கோபுரத்திற்கு அருகாமையில் 120 அடி நீளமும் 60 அடி ஆழமும் கொண்ட தொட்டி சபையின் அனுமதியுடன் சிரமதான முறையில் கட்டினர். இத்தொட்டி குடிநீர் தேவைக்கும் மரங்கள், பூஞ்செடிகளின் நீர்த்தேவைக்கும் மிகவும் உதவியாக உள்ளது.

புனித பிரான்சிஸ் சவேரியார் திருநாமத்தைக் குறித்து வைகாசி மாதம் 11ஆம் நாள் கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி ஒன்பது நாட்கள் நடைபெறும் பெருவிழா சிறப்புப் பெறுகின்றது. இவ்விழாவினைக் கொண்டாட பல இடங்களிலிருந்தும் இனமத பேதமின்றி மக்கள் வருவது வழக்கம். வைகாசி மாதம் 20 ஆம் நாள் பல குருமார் சேர்ந்து கூட்டுத் திருப்பலிப் பூசை செய்வதுடன், திருச்சொரூப பவனியும் நடைபெறும். அவ்வேளை எல்லா மக்களும் இன மத குல பேதமின்றி இறை சந்நிதானத்தில் ஆசீர்வாதம் பெற்று உள்ளம் மகிழ்ந்து நிற்பர்.கோவில் வளவில் இருக்கும் கடைகளில் பல பொருட்களையும் கோவில் திருப்பணிப் பொருட்களையும் வாங்கிச் செல்வர்.

இப்புனித பிரான்சிஸ் சவேரியார் தேவாலய வளர்ச்சிக்குப் பல பெரியோர்கள் ஊன்றுகோலாய் இருந்திருக்கின்றார்கள். தாவீது தோமஸ், யாக்கோபு என்போர் மூப்பர்களாகத் தொண்டாற்றியுள்ளார்கள். க. திருநாவுக்கரசு அவர்களும் பெரும் தொண்டாற்றியுள்ளார். இன்னும் இப்பொதுப் பணியில் கோவில் அயல் வீடாகிய 'யாக்கோவன்' குடும்பத்தினர் முக்கிய இடம் பெறுகின்றனர். அவரது மகள் சந்தலேனா அம்மாவைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. இவரது அளப்பரிய சேவையினால் 'மத்துரோனா' என அழைக்கப்பட்டார். இப்பெயர் கோவிலால் வழங்கப்பட்ட பெயராகும். இவர் நீண்ட காலம் தொண்டாற்றி 1985ம் ஆண்டு இறையடி சேர்ந்தார். அவரின் பின் அவரது மகளாகிய ஏசுவேணி பிரான்சிஸ்கா இடம்பெயராமல் தமது தாயாரின் வழி நின்று பணிகளைத் தொடர்நது செய்து வருவது போற்றுதற்குரியதாகும்.

அதிகாலை மாலை வேளைகளில் கோவில் மணி அடித்தல், அறிவித்தல் மணி அடித்தல், கோவில் திருப்பணிக் குருக்களுக்கும், கன்னியாஸ்திரிகளுக்கும், துறவியருக்கும் பொதுச் சேவைகள் செய்தல் ஆகியன இவரது பணிகளாக உள்ளன. அடுத்துக் கோவில் மூப்பராக யாக்கோபு தாவீது விளங்குகின்றார். கோவில் திருச்சடங்குகளில் கோவில் நிர்வாகத்துடன் இணைந்து பணியாற்றிய இவர் அண்மையில் இறையடி சேர்ந்தார். ஆனால் இன்னும் புங்குடுதீவு கிறிஸ்தவ மக்களின் மத்தியில் மறைந்தும் மறையாதவராக எல்லோர் உள்ளங்களிலும் வாழ்ந்து வருகின்றார்.

1933ஆம் ஆண்டு இந்து, கிறிஸ்தவ மக்களிடையே சண்டை ஏற்பட்டதாகவும், அவ்வேளை கிறிஸ்தவ மக்கள் கோவிலில் அடைக்கலம் புகுந்தார்கள் என்றும் அறிய முடிகின்றது. அப்போது உணவு, குடிநீர் இல்லாமற் கஷ்டப்பட்டுக் கடவுளை வேண்டியபோது அக்கோவிலைச் சுற்றி மட்டும் பெரிதாக மழை பொழிந்ததாகவும் அங்கு அடைக்கலம் புகுந்திருந்த மக்கள் தாகம் தீர்த்ததாகவும், இன்றும் பலர் கூறுவர்.

எமது நாட்டில் ஏற்பட்ட போர் அனர்த்தங்களின்போது, எம்மண்ணின் கடலில் பெரிய படகுகளில் வந்து குண்டு வீச்சு, ஷெல் தாக்குதல் ஆகிய மோதல்கள் இடம்பெற்ற போது, மக்கள் ஓடிச் சென்று இவ்வாலயத்திலேயே தஞ்சம் புகுந்தமை1990ஆம் ஆண்டு கோட்டை அடிபாட்டின்போது யாழ்ப்பாணம், ஊர்காவற்றுறை ஆகிய இடங்களில் இருந்து அகதிகளாக வந்த மக்கள் ஆலயத்தில் தஞ்சம் புகுந்தமை வரலாற்றில் குறிப்பிட வேண்டிய அம்சமாகும். இவ்வூர் மக்கள் இன்று இடம்பெயர்ந்து உலக நாடுகள் பலவற்றிலும் வாழ்கின்றார்கள். அவர்கள், இவ்வாலயத்தைப் புனர் நிர்மாணம் செய்வதற்கான தீர்மானத்தை மேற்கொண்டுள்ளார்கள்.

## புங்குடுதீவு திருச்சபை

புங்குடுதீவு திருச்சபையின் தோற்றம் 1870ஆம் ஆண்டாகும். ஸ்தாபகர் அமெரிக்க மிஷனரி (பெயர் மாற்றப்பட்டு இப்பொழுது தென்னிந்திய திருச்சபை என வழங்கப்படுகின்றது). இத்திருச்சபையின் நோக்கம் இயேசு கிறிஸ்து உலக இரட்சகர் என்பதை வெளிப்படுத்துவது. அமெரிக்க மிஷனரிமார் இந்த ஆலயத்தையும் அத்தோடு கூட மூன்று அமெரிக்கன் பாடசாலைகளையும் முறையே புங்குடுதீவின் மத்திய பகுதியிலும், இறுபிட்டியிலும், மடத்துவெளியிலும் ஸ்தாபித்தனர். இதனூடாக புங்குடுதீவில் வாழும் பொதுமக்களுடன் தொடர்பு கொண்டு நற்பணியாற்றினர். ஆவிக்குரிய தொழுகை ஆலயத்தில் இருந்தது. பாடசாலைகளில் 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்' என்ற ஔவையாரின் வாசகத்தின்படி கற்கைநெறி நடைபெற்றது. வருடாவருடம் பல நூற்றுக்கணக்கான பிள்ளைகள் படித்துப் பயனடைந்தனர். ஆலயத்திலும் பாடசாலைகளிலும் அவற்றுக்கு அனுசரணையாயிருந்த கிறிஸ்தவக் குடும்பங்களும், மற்றும் நன்மையைப் பெற்றுக் கொண்ட பொது மக்களும் இன்று நல்ல நிலையில் கடவுளின் ஆசீர்வாதத்துடன் உலகம் முழுவதும் பரவியிருக்கின்றனர்.

## அந்தோனியார் ஆலயம்

புங்குடுதீவில் எழுந்த மூன்றாவது கிறிஸ்தவ ஆலயமாக புனித அந்தோனியார் ஆலயம் கருதப்படுகிறது. புங்குடுதீவில் 2ஆம் வட்டாரத்தில் தெற்கு கடற்கரையில் இருக்கும் இவ்வாலயத்தை அமைப்பதில் ஆசிரியர்கள் சு.யோ. பூராசா, சு.யோ. நடராசா ஆகியோர் முன்னின்று உழைத்தனர்.

புங்குடுதீவின் கரந்தலிப்பகுதியில் புனித அன்னை வேளாங்கண்ணி மாதா ஆலயம் அமைந்துள்ளது.

❊❊❊❊❊

13

# புங்குடுதீவின் சமயப் பெரியார்கள்

புங்குடுதீவில் புகழ்பெற்ற சமயப் பெரியார்கள் வாழ்ந்திருக்கிறார்கள். பல சிவாச்சாரியார்கள், தமிழ், சமஸ்கிருதம், சைவசித்தாந்தம் போன்றவற்றில் சிறந்து விளங்கினார்கள். அந்த அந்தணப் பெருமக்கள் உள்ளூரில் மட்டுமன்றி வெளியூர்களிலும் வெளிநாடுகளிலும் பணியாற்றிப்புகழ் பெற்றார்கள். இலங்கையில் முதன் முதலில் சமஸ்கிருதப் பாடசாலை புங்குடுதீவிலேயே ஆரம்பமாகியது. இங்கு பயிற்சி பெற்றவர்கள் உலகம் முழுவதும் பணியாற்றி வருகிறார்கள். புகழ்பெற்ற கிறிஸ்தவக் குருமார்களும் கன்னியாஸ்திரிகளும் புங்குடுதீவில் பிறந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் புங்குடுதீவுக்குப் புகழ்வாங்கித் தந்திருக்கிறார்கள்.

## பிரதிஷ்டா பூஷணம் சிவஸ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்கள்



நயினாதீவு ஆதிக்குருக்கள் பரம்பரையில் வந்தவர்களான நாகலிங்கக் குருக்களின் வழித்தோன்றலான ஐயாத்துரைக் குருக்களுக்கும் காமாட்சி அம்மையாருக்கும் ஏக மைந்தனாக கைலாசநாதக் குருக்கள் 1912ம் ஆண்டு நயினாதீவில் பிறந்தார். இவருடன் இரண்டு சகோதரிகள் பிறந்தனர். தற்போது நாகபூசணி வித்தியாலயமாகத் திகழும் கல்லூரி அன்று தில்லையம்பல வித்தியாலயமாக விளங்கியது. இங்குதான் கைலாசநாதர் அவர்கள் தமது ஆரம்பக் கல்வியைத் தொடங்கினார்.

பதினோராவது வயதில் பூணூல் சடங்கைப் பூர்த்திசெய்து கொண்ட கைலாசநாதர், தமது உயர் கல்விக்காக வண்ணை வைத்தீஸ்வரன் கோவில் குருக்களான பகவதீஸ்வர சாஸ்திரிகளிடத்தில் பாடங் கேட்டார்கள். அக்காலத்தில் தனது தமிழ்ப் புலமையால் கீர்த்திபெற்ற வித்துவான் கணேச ஐயர் அவர்கள் சுன்னாகம் பிராசீன பாடசாலையில் ஆசிரியராக இருந்தார்கள். குருமணி அவர்கள் அப்பாடசாலையில் சேர்ந்து கணேச ஐயர் அவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியப் புலமை பெற்றதோடு அங்கு சமஸ்கிருதப் பண்டிதர்ஒருவரிடம் சமஸ்கிருதம் கற்று அம்மொழியை அட்சர சுத்தியோடு உச்சரிக்கும் திறமையையும் பெற்றார்கள்.

புராண பாடங்களில் வித்தகராய் விளங்கிய வேலணை தம்பு உபாத்தியாயரிடம் புராண பாடங்களைக் கற்றுத்தேர்ந்த பின் மேல் படிப்புக்காக இந்தியா சென்றார். அங்கு திருநெல்வேலியில் வேத சிவாகமங்களை முறைப்படி கற்றுத் தேர்ந்து நாடு திரும்பினார். புங்குடுதீவில் சிவாகமங்களில் சிறந்து விளங்கிய சோமசுந்தரக் குருக்களின் மகனான பஞ்சாட்சரக் குருக்களின் மகள் விசாலாட்சி அம்மையாரைத் தனது வாழ்க்கைத் துணையாக ஏற்று இல்லறத்தில் புகுந்தார். நயினை மண்ணின் வித்தகரை தன் புகழ் பரப்பும் பணிக்காக புங்குடுதீவுத் தாய் காதலி உருவில் அணைத்துக் கொண்டாள்.

யாழ்ப்பாணம் பொன்னம்பலவாணேசர் கோவிலில் இவரது சிறிய தந்தையாரான சாமிநாதக் குருக்களினால் ஆசாரி அபிஷேக விழா நடத்திக் குருப்பட்டமளிக்கப்பட்டது. குருபீடத்தில் ஏறிய குருமணி அப்பீடத்தின் தகைமைகள், திறமைகள் பெற்றதோடு சைவ உலகின் தலைமகனாய் உயரத் தொடங்கினார்.

நீர்கொழும்பில் பிள்ளையார் கோயில், மாரியம்மன் கோயில் ஆகியவற்றில் பன்னிரெண்டு வருடங்களுக்கு மேல் பிரதம குருவாகப் பணியாற்றி அங்கு வாழ்ந்த சைவமக்கள் மத்தியில் சமயநெறியை வளர்த்தார். பின்பு நல்லூர்க் கந்தசுவாமி கோயிலில் ஏழு வருடங்களாக பிரதம குருவாகவிருந்து தனக்கென்று ஓர் இடத்தை யாழ்ப்பாணத் தமிழர்கள் மத்தியில் பெற்றுக் கொண்டார். தகப்பனார் ஐயாத்துரைக் குருக்கள் காலமாகிவிட்டதால் நயினை அம்பாள் ஆலயத்தில் தனது பரம்பரைப் பூசையுரிமையைப் பெற்றதோடு, புங்குடுதீவு கந்தசுவாமி கோவிலில் தனது மாமனார் பஞ்சாட்சரக் குருக்களின் பூசை உரிமையையும் பெற்றுக் கொண்டார். 1955ஆம் ஆண்டு தென் இந்திய அர்ச்சகர் சங்கத்தின் எட்டாவது ஆண்டு விழா கோவிலூரில் நடைபெற்றது. இவ்விழாவில் கலந்துகொண்டு உரையாற்றியதோடு சைவ சிந்தாந்த மாணவர்களுக்கு மூன்று நாள் சித்தாந்த வகுப்பு நடாத்தினார். 1960ஆம் ஆண்டு பழனி திருவாவினன்குடி மகாகும்பாபிஷேகத்தில் பங்குபற்றி ஈழத்தின் சிவாச்சாரியார்களுக்குப் பெருமை பெற்றுத் தந்தார்.

1969 ஆம் ஆண்டு புள்ளிருக்கு வேளூர் வைத்தீஸ்வரன் கோவில் சொர்ண பந்தன மகாகும்பாபிஷேகம் சுவாமிநாத சிவாச்சாரியார் தலைமையில் நடைபெற்றது. கும்பாபிஷேகத்தில் கலந்துகொண்ட குருமணியின் திறமையைக் கண்ட சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் இவரைப் பாராட்டிக் கௌரவித்ததோடு சிறந்த நூல்களையும் பரிசளித்தார்கள். இக்கும்பாபிஷேகத்தை முடித்துக் கொண்டு நாடு திரும்பிய குருமணிக்கு புங்குடுதீவு சைவ கலா சங்கம், பலாலி விமான நிலையத்தில் பிரமாண்டமான வரவேற்பளித்ததோடு அதே தினத்தில் நயினை அம்பாள் ஆலயத்திலிருந்து மிகப்பெரிய ஊர்வலத்தை புங்குடுதீவு ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாசாலை வரை நடாத்தி பாடசாலை மண்டபத்தில் மாபெரும் பாராட்டு விழாவையும் நடாத்தியது.

பிரதிஷ்டா பூஷணம், சிவாகமஞானபானு, சிவஞான சாகரம், சிவஞான பாஸ்கரன் என்னும் பட்டங்களைப் பெற்ற இவர் ஈசான சிவாச்சாரியார்' என்னும் தீட்சா நாமம் பெற்று பிறந்த நாட்டுக்கு பெருமை பெற்றுக் கொடுத்தார். குருமணி அவர்கள் அகில இலங்கை சைவசமயக் குருமார் சங்கத் தலைவராகவும், ஸ்ரீலங்கா குருப்பிரம்ம மகாசபைத் தலைவராகவும் அகில இலங்கை சிவப்பிராமணர் சங்கப் போசகராகவும் புங்குடுதீவு மகாசபைப் போசகராகவும் வீற்றிருந்து சிவாச்சாரிய பரம்பரைக்கு வழிகாட்டி வந்தார்

1961ஆம் ஆண்டு சத்தியாக்கிரக காலத்தில் புங்குடுதீவு கலட்டிப் பிள்ளையார் கோவிலில் நடைபெற்ற கோடி அர்ச்சனையிலும் யாகத்திலும் பொறுப்பாளராகவிருந்து திறம்பட நடாத்தியதோடு கச்சேரி வரை ஊர்வலத்திலும் கலந்து கொண்டு போராட்டம் வெற்றி பெற ஆசீர்வதித்தார்கள்.

கலட்டி ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலய பரம்பரைப் பூசகர்

## சிவஸ்ரீ சொக்கலிங்க ஐயர் பஞ்சாட்சரக் குருக்கள்



இவர் புங்குடுதீவு கிழக்கில் நெடுங்காலம் வாழ்ந்த ஏரம்பு ஐயர் என்றழைக்கப்படும் ஏரம்பநாத ஐயரது புத்திரராகிய சொக்கையர் என்றழைக்கப்பட்ட சொக்கலிங்க ஐயரின் புத்திரராவார். இவர் பெற்றோர்களுக்கு ஒரே ஆண்மகன். சிவஸ்ரீ பஞ்சாட்சரக் குருக்கள். கலட்டிப் பிள்ளையார் கோவில் பாரம்பரியமான பூசகராக விளங்கியவர். இவரது சேவை பிள்ளையார் கோவிலுடன் மட்டுமன்றி புங்குடுதீவு கிழக்குப் பகுதியில் உள்ள தெங்கந்திடல் பிள்ளையார், முருகமூர்த்தி கோவில், துர்க்கையம்மன் கோவில், பெரியதம்பிரான் கோவில் போன்ற சகல ஆலயங்களிலும் தொடர்ந்தது. இவரது மூத்தமகனான கணேசராஜக் குருக்கள் புங்குடுதீவில் மட்டுமன்றி அகில இலங்கையிலும், சிங்கப்பூர், மலேசியா, அவுஸ்திரேலியா ஆகிய நாடுகளிலும் தனது குருத்துவச் சேவையால் பிரபலமானவர். பஞ்சாட்சர ஐயரின் இரண்டாவது புத்திரனாகிய சிவஸ்ரீ பாலசுப்பிரமணியக் குருக்கள் திருக்கேதீஸ்வரம் தேவஸ்தானத்தில் பிரதம குருவாகவும், மஹோற்சவ குருவாகவும் திகழ்ந்துவருகிறார். அண்மையில் நிகழ்ந்த மஹா கும்பாபிஷேக வைபவத்தையும் இவரே பிரதான சிவாச்சாரியாராக தலைமையேற்று நடாத்தி வைத்தமை இவரது பெற்றோராகிய சிவஸ்ரீ பஞ்சாட்சரக் குருக்கள் ஸ்ரீமதி விஜயலட்சுமி அம்மா ஆகியோருக்கு மட்டுமன்றி புங்குடுதீவு வாழ் அனைத்து மக்களுக்கும் பெருமை தரும் ஒன்றாகும். பஞ்சாட்சர ஐயரது மக்களாகிய அமரர் சிவஸ்ரீ கணேசராஜக் குருக்களும், சிவஸ்ரீ பாலசுப்பிரமணியக் குருக்களும் கடந்த காலங்களில் கலட்டி ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோவிலில் கொடியேற்ற விழாவாகிய மஹோற்சவப் பெருவிழாக்களையும் சிறப்புடன் நடாத்தி வந்தனர். இவர்களின் சகோதரன் ராஜன் ஐயா சிறுவயது முதலே தந்தையாருக்கு உதவியாக பூசைகளை நடாத்தியவர். ஐயாமணி ஐயாவும் பெரியதம்பிரான் கோவிலைப் பொறுப்பேற்று நடாத்தி வந்தவர். பஞ்சாட்சர ஐயரின் குடும்பம் பலகாலம் பக்தியுடன் பூப்போட்டு வழிபாடாற்றிய புங்குடுதீவு கலட்டி ஸ்ரீ வரசித்தி விநாயகரின் திருவருளால் தமது மூன்றாவது நான்காவது புத்திரர்களாகிய ராஜன் ஐயா என்றழைக்கப்படும் சிவஸ்ரீ பஞ்சாட்சர கிருஷ்ணராஜக் குருக்கள் (கனடா மிசிஸாகா ஸ்ரீ கணேச துர்க்கா தேவஸ்தான ஸ்தாபகர், முதல்வர், பிரதம குரு) ஐயாமணி ஐயா என்றழைக்கப்படும் சிவஸ்ரீ பஞ்சாட்சர விஜயகுமாரக் குருக்கள் (கனடா ரொறன்ரோ ஸ்ரீ வரசித்தி விநாயகர் தேவஸ்தான ஸ்தாபகர், முதல்வர், பிரதமகுரு) ஆகியோர் புலம் பெயர்ந்து வாழும் மக்களிடையே சைவத்தையும் தமிழையும் நமது பண்டைய சமய கலாசாரத்தையும் வளர்த்து வருவது பெருமைப்படத்தக்கது.பஞ்சாட்சர ஐயரின் மூன்று புத்திரிகளான கருணாகடாட்சி, சரோஜா, விமலாம்பிகை ஆகிய மூவரையும் முறையே ஊரெழு சிவஸ்ரீ முருக தியாகராஜ சர்மா, தபாலதிகாரி (சிலாபம்), காரைநகர் சிவஸ்ரீ பொன் பஞ்சாட்சரக் குருக்கள் (கனடா), மட்டுவில் சிவ சபாநாதக் குருக்கள் (கனடா) ஆகியோருக்குத் திருமண முடித்து மகிழ்ந்தவர். இவர்களது புத்திரர்களாகிய பஞ்சாட்சர ஐயரின் பேரப்பிள்ளைகளும் சைவமும் தமிழும் பேணிவருவது போற்றற்குரியது.

சிவஸ்ரீ பஞ்சாட்சர ஐயர் ஸ்ரீமதி விஜயலட்சுமி அம்மா இருவரும் ஐம்பது வயதினில் பொன் விழா, அறுபது வயதினில் மணிவிழா, எழுபது வயதினில் பவள விழா, எண்பது வயதினில் முத்து விழா

ஆகியவற்றையும் தமது தொண்ணூறாவது வயது கடந்ததும் சதாபிஷேகமாகிய வைரவிழாவினையும் தமது குலதெய்வமாகிய கலட்டி ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயத்தில் கொண்டாடி மகிழ்ந்த பின்னர் தமது முதுமை காரணமாகவும், நாட்டு நிலைமைகள் காரணமாகவும் தமது பிள்ளைகளின் வேண்டுகோளுக்கிணங்கி சில வருடங்கள் கனடாவில் வந்து தங்கியிருந்தபின் தாயகம் திரும்பி அங்கு வாழ்ந்த பஞ்சாட்சர ஐயர் 1997 இல் தமது 96 வது வயதில் அநாயாசமாக இறைபதம் அடைந்தார்.

## சிவஸ்ரீ குமாரசாமி ஐயர் இரத்தினசபாபதிக் குருக்கள்

புங்குடுதீவில் பரம்பரையாக வாழ்ந்த அந்தண சிரேஷ்டர்களில் அக்காலத்தில் பிரபலமாக வாழ்ந்த சபாபதி ஐயர் என்பவருக்கு, செல்லையர், குமாரசாமி ஐயர், சின்னப் பொடி ஐயா ஆகியோர் பிள்ளைகளாவர். இவர்களே கண்ணகை அம்மன் கோவில் பரம்பரைப் பூசையுரிமையுடையவர்கள். இவர்களில் மூத்தவரான செல்லையருக்கு ஒரே மகன் சண்முக ஐயர், நடுவரான குமாரசாமி ஐயரின் மகன் இரத்தின ஐயரும், இன்னொருவரும், இளையவராகிய சின்னப்பொடி ஐயர் என்றழைக்கப்படுபவருக்கு மீனாம்பாள், இரத்தினாம்பாள் என பெண் பிள்ளைகளும் சந்ததியினராவர். இவர்களில் மீனாம்பாள் என்பவரை கலட்டி பிள்ளையார் கோவில் பரம்பரைப் பூசகராகிய சொக்கையர் பஞ்சாட்சர ஐயர் திருமணம் செய்ததுடன் அவரது சகோதரியாகிய கண்ணம்மாவை இரத்தின ஐயருக்குத் திருமணம் செய்து வைத்தனர். கரம்பனில் கண்ணகி பூசைக்காக செல்லையர் கரம்பனில் குடியேறினார். இவரது மனைவி, கரம்பன் கணபதி (ஊர்காவற்றுறை சிவன் கோவில்), சிவகுரு ஐயர் எனப்படும் சிவராமலிங்கக் குருக்கள் (கரம்பன் மேற்கு முருகமூர்த்தி கோவில்) ஆகியோரின் தமக்கையாவார். எனவே இரத்தினையர் கண்ணகை அம்மன் கோவிலில் பூசை செய்ததுடன் கிழக்குப் பகுதியிலுள்ள பல கோவில்களையும் பொறுப்பேற்று பூசைகளைச் சிறப்புடன் நடாத்தி வந்ததார். இவரது காலத்தில் கண்ணகையம்மன் கோவில் விஸ்தாரமாக திருப்பணிகள் செய்யப்பட்டு மஹோற்சவம் நடைபெற்றது. இரத்தின ஐயர் காலமாகிய பின்பு இவரது மகன் நடராஜக்குருக்கள் கோவிற் பணியை மேற்கொண்டு வந்தார். இளவயதியே இவர் அமரத்துவம் அடைந்தபோது இவருடைய மகன் ரவீந்திரன் சிறுபராயமாக இருந்ததனால் கண்ணகையம்மனின் பூசையுரிமையாளர்களில் இன்னொருவரான சண்முக ஐயரின் பேரனாகிய சோமஸ்கந்தக் குருக்கள் பொறுப்பேற்று நடாத்தினார். இவர் குருப்பட்டம் பெறுவதற்கு முன்னர் நயினை கைலாசநாதக் குருக்கள் மஹோற்சவங்களை நிகழ்த்தினார். பின்னர் கொடியேற்று விழா மற்றும் கும்பாபிஷேகம் முதலியவற்றை சண்முக ஐயரின் சிவஸ்ரீ மோமஸ்கந்தக் குருக்கள், அவரது சகோதரர் சிவஸ்ரீ சர்வேஸ்வரக் குருக்கள் ஆகியோர் நடாத்தி வந்தனர்.

சிங்கப்பூர், மலேசியா குருத்துவப் பணிபுரிந்து நாடு திரும்பியவரான இரத்தின ஐயரின் மருமகனும், பஞ்சாட்சர ஐயரின் மகனும், சின்னப்பொடி ஐயரின் பேரனுமாகிய அமரர் பஞ்சாட்சர கணேசராஜக் குருக்கள் கண்ணகையம்மன் கோவில் பூசை உற்சவங்களை சில காலம் நடாத்தி வந்தார். அமரர் நடராஜக் குருக்களின் மகன் குருப்பட்டம் பெற்று தற்போது கண்ணகையம்மன் கோவிலின் பரம்பரைப் பூசகராகக் கடமையாற்றி வரும் ரவி ஐயா என்றழைக்கப்படும் சிவஸ்ரீ இரவீந்திரக் குருக்களாவார். இவரது தாயார் நயினை சிவஸ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்களின் மகள் ஆவார். இவர்களின் பாரம்பரியமான சமய சமூக சேவைகள் புங்குடுதீவில் பாரம்பரியமாக தொடர்கின்றது என்பது புங்குடுத்தீவு சைவ நன்மக்கள் என்றும் பெருமைப்படத்தக்கதொன்றாகும்.

## சிவஸ்ரீ மா. மீனாட்சி சுந்தரக் குருக்கள்

சைவம் வளர்த்த சிவநெறிச் செல்வர்களையும் தனவந்தர்களையும் தன்னகத்தே கொண்டது. புங்குடுதீவு. அந்தணப் பெருந்தகை சிவஸ்ரீ மார்க்கண்டேயர் அவர்களுக்கும் திருஞானசம்பந்தக் குருக்களின் தலைமகளாகிய செல்வநாயகி அம்மாவுக்கும் மகனாகப் பிறந்தவர் சிவஸ்ரீ மீனாட்சி சுந்தரக் குருக்கள் ஆவார். இவரது மனைவியார் பரமேஸ்வரி அம்மா ஆவார். இவர்கள் இருவரும் சிவன் கோவில் வளர்ச்சிக்கு பெரிதும் பங்கு கொண்டு உழைத்தனர். 1977ஆம் ஆண்டு முப்பத்து மூன்று உத்தமோத்தம குடமுழுக்கு நடைபெற்றது. 1982 ஆம் ஆண்டு பங்குனித் திங்கள் சிவன் பஞ்சதள இராசகோபுர குடமுழுக்கு நடைபெற்றது. ஆவி, உடல், உடமையெல்லாவற்றையும் சிவனுக்கே அர்ப்பணித்து, கோயிற் கருமமே கண்ணாக இருந்தவர்கள். சுவாமி கோபுரமும் மீனாட்சி கோபுரமும் இவர்கள் ஆற்றிய இறைபணிக்கு எடுத்துக் காட்டாகும். பிராமணப் பிள்ளைகளுக்காக சிவன் கோயில் குருபூசை மடத்தில் தொடங்கப்பட்ட வேதாகம சாஸ்திரப் பாடசாலையே ஈழத்தில் முதன்முதலாக தோன்றிய வேதாகமப் பாடசாலை என்பது இந்து மக்கள் அறிந்த சரித்திர உண்மை. இப்பாடசாலையில் பயின்றவர்கள் இப்போது சிறந்த சிவாச்சாரியார்களாக குருப்பட்டம் பெற்று உலகெங்கும் கோயில்களில் முறைப்படி பூசை செய்து வருகின்றனர். சிவன் கோயில் அம்மா, ஐயா மறைந்து விட்டாலும் அவர்கள் பணியை, மருகர் சிவஸ்ரீ நாகேந்திரக் குருக்களும் மகள் லோகாவும் பேரனும் செய்து வருகின்றனர்.

## சிவஸ்ரீ நா. ஸ்ரீநிவாசக்குருக்கள்



இணுவில் கந்தசாமி கோவில் ஆதீன பரம்பரைக்குருக்கள் நாகரத்தினக்குருக்கள் பொன்னம்மா தம்பதிகளுக்கு 1916ம் ஆண்டு பங்குனி மாதம் 16 ம் திகதி ஸ்ரீநிவாசக்குருக்கள் பிறந்தார். இணுவில் சைவப்பிரகாச வித்தியாலயத்தில் ஆரம்பக் கல்வியைப் பயின்றார். பின் தமிழ், சமஸ்கிருதம் ஆகியவற்றை சுன்னாகம் சதாசிவ பிராசீன பாடசாலையில் பயின்று இதில் பண்டிதர் பட்டமும் பெற்றார். சிவாகம வைதீக கிரியைகளைச் செய்வதிலும் செய்கின்ற குருமார்களுக்கு ஆலோசனை வழங்குவதிலும் தன்னிகரற்றவர். இவருக்கு துணைவியாராக புங்குடுதீவு வீரகத்தி விநாயகர் ஆலய பரம்பரைப் பூசகராகிய சின்னத்தம்பி ஐயர் லக்ஷ்மி அம்மா தம்பதியரின் ஏகபுத்திரி சாரதாம்பாளை 1940ஆம் ஆண்டு மணமுடித்தார். பெரியபுலம் அரியநாயகன் புலம் மூத்த நயினார் பிள்ளையார், நாச்சிமார் கோவில், பட்டயகார அம்மன், அனுமார் கோவில் ஆகிய கோவில்களில் பூசை செய்தும் பரிபாலித்தும் தன் வாழ்நாளை புங்குடுதீவு மக்களுக்கு அர்ப்பணித்தார். இவர் கந்தபுராணம், பெரியபுராணம், திருவாதவூரர் புராணம், விநாயகர் புராணம் ஆகிய புராணங்களுக்கும் பயன் சொல்வதில் வல்லவர்.

இவருக்கு ஏழு ஆண்குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் உள்ளனர். மூத்த மகன் அரியநாயகன் புலம் பிள்ளையார் பூசகராகவும் இரண்டாவது மகன் பெருங்காடு சிவன் கோவில் ஸ்தாபகர், பூசகர் ஆகிய தாய்மாமன் மீனாட்சி சுந்தரக்குருக்கள் விட்டுச்சென்ற பணியைத் தொடர்ந்து செய்தும் வருகிறார். மற்றைய மக்களும் அவர் தொழிலைப் பின்பற்றுகின்றனர். குருக்கள் அவர்களின் அருமைத் துணைவியார் சாரதாம்பாள் தாயகத்திற்குச் சென்று சில நாட்களில் இறைபதம் அடைந்து கொண்டார்.

## சிவஸ்ரீ இ. கெங்காதரக்குருக்கள்



சிவஸ்ரீ. இ. கெங்காதரக்குருக்கள் அனலைதீவில் பிறந்தவர்.மூன்று வயதுமுதல் புங்குடுதீவையே வாழ்விடமாகக் கொண்டிருந்தார். புங்குடுதீவு சுப்பிரமணிய வித்தியாலயத்திலும், மகாவித்தியாலயத்திலும் கல்வி கற்ற காலத்தில் சைவ சமயம், தமிழ் ஆகிய துறைகளில் சிறந்து விளங்கினார். நயினாதீவு புங்குடுதீவுக்கு இடையிலான கடற்பகுதியினை நீந்திக்கடந்து தங்கப்பதக்கப் பரிசினைப் பெற்றது குறிப்பிடத்தக்கது. பள்ளிப்பருவ காலங்களில் பல நாடகங்களை எழுதித் தயாரித்து நடித்தும் இருக்கிறார். காலஞ்சென்ற சைவப் பெரியார் வ. பசுபதிபிள்ளை அவர்களால் நடத்தப்பட்ட வேதாகமப் பாடசாலையில் சமஸ்கிருத மொழியையும் இதர கோவில் கிரியைகளையும் கற்றுச் சீரிய புலமை பெற்றார். இவர் 1970ஆம் ஆண்டு சித்திரை மாதம் புங்குடுதீவு ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலய அர்ச்சகராகப் பதவி ஏற்றார். கடமையை ஏற்ற சிறிது காலத்திற்குள்ளேயே ஆச்சார்ய அபிஷேகம் செய்யப்பெற்று குருக்கள் பட்டம் பெற்றார். அவரிடத்தில் காணப்பட்ட பக்தி, அட்சரசுத்தியுடன் கூடிய உச்சரிப்பு, சங்கீத ஞானம், பேச்சு வன்மை, அம்பாளை அலங்காரம் செய்யும் திறமை ஆகியனவே வெகு விரைவில் இவரது உயர்வுக்கு காரணமாயின. இவருடைய பக்தியும் எவருடனும் இணைந்து பழகும் பண்பும் அம்பிகைக்கு பூஜை செய்யும் போது தன்னை மறந்த லயத்தில் வேதமந்திரங்களை உச்சரித்த படி புஷ்பங்களால் அர்ச்சிக்கும் அழகும் பார்ப்பவர்களை திருப்தியும் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் கொள்ள வைக்கும்.

புங்குடுதீவு ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலய வரலாற்றில் கெங்காதரக் குருக்கள் அவர்களின் வரலாறு பொன் எழுத்துக்களினால் பொறிக்கப்பட வேண்டியதாகும். ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலயமே இவரது உயர்வுக்கு வழிவகுத்தது. முத்துமாரி அம்பாள் அருள் ஓங்குவதற்கும் காரணமாக விளங்கியவர் குருக்கள் அவர்களேயாவார். அம்பிகையை அபிஷேகித்து அலங்கரித்து பூஜை செய்யும் போது இவர் காட்டும் பக்தி நிலை வணங்குவோரை பரவசத்தில் ஆழ்த்திவிடும். முனீஸ்வரம் சண்டிகா ஹோம விழாவுக்கு சென்று பங்குபற்றிய அனுபவத்தால் முத்துமாரி அம்பாள் ஆலயத்திலும் சண்டிகா ஹோம விழாவினை ஆரம்பித்து தாமே முன்னின்று நடாத்தி பெருமை பெற்றார். வருடம் தோறும் இவ்விழாவுக்குப் பல சிவாச்சாரியார்கள், அறிஞர்களை அழைத்து பங்குகொள்ளச் செய்ததன் மூலம் புங்குடுதீவுக்கு தனிப்பெரும் மதிப்பைப் பெற்றுக் கொடுத்தார்.மாரியம்மன் கோவிலில் மட்டுமல்லாது நாட்டின் பல பகுதிகளிலும் உள்ள கோவில்களில் மாகோற்சவ குருவாகக் கடமையாற்றி பெருமை பெற்றார். ஆலய கட்டட நிதி சேகரிப்பதற்காக நிர்வாக சபையினருடன் தாமும் சேர்ந்து ஒத்துழைப்பு நல்கியதோடு ராஜகோபுர நிதிக்கு பெருந்தொகைப் பணத்தை வழங்கியதன் மூலம் மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினார். சில வருடங்கள் மலேஷியா சென்று குவாந்தன் நகரிலுள்ள ஸ்ரீ முத்துமாரி ஆலய பிரதம குருவாகவும் கடமையாற்றியுள்ளார்.

## சிவஸ்ரீ சின்னத்துரை ஐயர்



கரம்பன் சண்முக ஐயரின் மைத்துனரும் நெடுந்தீவு கறுவர் நாகலிங்கம் ஐயர் என்பவரின் மகனுமாகிய சின்னத்துரை ஐயர் என்றழைக்கப்படும் சமஸ்கிருத பண்டிதர் சிவஸ்ரீ கணேசராஜக் குருக்கள் புங்குடுதீவில் பலவருடங்களாக வாழ்ந்து சமய சமூகக் கிரியைகளை நடாத்திவந்தார். இவரது முயற்சியால் பல ஆலயத் திருப்பணிகள் சிறப்பாக நிறைவேற்றப்பட்டு கும்பாபிஷேகங்கண்டுள்ளன. இவரது சேவை புங்குடுதீவு துறைமுக வாசலிலுள்ள மடத்துவெளிப் பிள்ளையார் கோவில் முதலாக அனைத்துக் கோவில்களிலும் அவ்வப்போது தேவைக்கேற்ப தன்னால் முடிந்தவரை தயங்காது பணிபுரிந்து அனைவரது நன்மதிப்பையும் பெற்று வாழ்ந்தவர். இவரது மூத்தமகன் சிவஸ்ரீ குகதாஸக் குருக்கள், தந்தையார். பார்த்து வந்த தல்லையப்பற்று முருகமூர்த்தி கோவிலின் நித்திய பூசைப்பொறுப்புகளுடன் கொடியேற்ற விழா முதலான பெருவிழாக்களையும் இன்றளவும் வேறு உதவிக் குருமாரையும் நியமித்துக் குறைவின்றி நடாத்தி வருவது போற்றுதலுக்குரியதாகும். ஊரதீவு ஐயனார் எனப் பெயர் கொண்டு விளங்கும் புங்குடுதீவு பாணாவிடைச் சிவன் என்னும் தான்தோன்றீஸ்வரர் தேவஸ்தானமும் இவரது பொறுப்பிலேயே நடைபெற்றுவருவது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

சின்னத்துரை ஐயரின் இரண்டாவது மகன் சிவஸ்ரீ சண்முகதாஸக் குருக்கள் லண்டனிலும், மூன்றாவது மகன் சிவஸ்ரீ சிவபாலக்குருக்கள் கொழும்பு மாநகரிலும், நான்காவது மகன் சிவஸ்ரீ சுந்தரேஸ்வரக் குருக்கள் சுவிற்சர்லாந்திலும், ஐந்தாவது மகன் சிவஸ்ரீ சுவாமிநாதக் குருக்கள் ஜேர்மனியிலும், அடுத்தவர் சிவஸ்ரீ சிவகுமாரக் குருக்கள் கண்டிநகரிலும், இளையவர் சிவஸ்ரீ சிவசுதக் குருக்கள் பிரான்ஸிலும் நம்மவர்களுக்கு சமயசேவை ஆற்றிவருகின்றனர். சின்னத்துரை ஐயரின் பெண் மக்களை மணந்தவர்களாகிய சிவஸ்ரீ மகேஸ்வரக் குருக்கள், சிவஸ்ரீ பாலசுப்பிரமணியக் குருக்கள், சிவஸ்ரீ ஆனந்தக் குருக்கள் ஆகியோர் தாயகத்திலும் அவ்வப்போது வெளிநாடுகளிலும் புலம்பெயர்ந்து வாழும் புங்குடுதீவு மக்களுக்கு சமயக் கிரியைகளை நடாத்திப் புகழுடன் வாழ்கின்றமை அனைவருக்கும் பெருமை தருவதாகும்.

## சிவஸ்ரீ சீ. சுப்பிரமணியக்குருக்கள் (சுப்பையாக்குருக்கள்)

சிவஸ்ரீ சீ.சுப்பிரமணியக்குருக்கள் புங்குடுதீவைத் தமது பிறப்பிடமாகவும் வாழ்விடமாகவும் கொண்டவர். இவர் தனது இளமைக்காலத்தில் தமிழ்நாட்டிலும் பின்னர் முன்னேஸ்வரம் ஆலயத்தோடு அமைந்திருந்த வேதாகம பள்ளியிலும் குருகுலவாசம் செய்து சமஸ்கிருதம், தமிழ் ஆகியவற்றை பயின்று குருப்பட்டம் தரித்து புங்குடுதீவு ஸ்ரீ முத்துமாரிஅம்பாள் ஆலயத்தில் ஆரம்பகால பூசகராக கடமையாற்றினார். மாரியம்மன் கோவில் சிறுகொட்டகைக் கோயிலாக இருந்த காலத்தில் கோவில் சுற்றாடலில் குடியிருப்புகள் அதிகம் இல்லாத நேரத்தில் மாரிகாலத்தில் வெள்ளக்காடாகவும், கோடைகாலத்தில் பாம்புகள் உலாவும் இடமாகவும் இருந்த நேரம், மாரியம்மன் கோவிலுக்கு போவது என்றாலே மனதில் ஒருவித பயமும் அந்த பயத்தினாலே வந்த பக்தியுமாக இருக்கும். அந்தக் காலகட்டத்தில் பூஜை புரிந்தவர். அப்போதெல்லாம் மூடப்பட்டிருக்கும் கோவிலை பூஜைக்காக திறக்கின்றபோது அம்பாள் விக்கிரகத்தை பாம்புகள் சுற்றியபடி இருக்குமாம்.

குருக்கள் ஐயா "பூஜைக்கு நேரமாகின்றது விலகிப்போய் பிறகு வாருங்கள்" என்று சொல்ல, பாம்புகள் விலகிச் செல்லுமாம். இதை நேரில் பலதடவை பார்த்தவர்கள் கூறக்கேட்கலாம்.

சுப்பிரமணியக் குருக்களை ஊர் மக்கள் "சுப்பையா ஐயா" என அன்போடு அழைப்பர். இவரது அமைதியான சுபாவமும் ஆடம்பரம் இல்லாத போக்கும் எல்லோருக்கும் பிடிப்பவையாக இருந்தன. இவர் மாரியம்மன் கோவில் மட்டுமல்லாது சந்தையடி பிள்ளையார் கோவில், வைரவர் கோவில் என பல கோவில்களிலும் பூசகராக இருந்தார். இவரது மகளை மணம் முடித்தவர் சிவஸ்ரீ கெங்காதரக் குருக்களாவார்.

## சிவஸ்ரீ தி. சதாசிவக் குருக்கள்



புங்குடுதீவில் புகழ் பூத்த அந்தணப் பெருமகனாக விளங்கியவர் சிவஸ்ரீ தி. சதாசிவக் குருக்கள் ஆவார். அக்காலத்தில் வெள்ளை வேட்டி சால்வையுடன் கழுத்தில் ருத்திராட்சமும் காதுகளில் சிவப்புக் கல் பதித்த கடுக்கன்களும், நெற்றியில் விபூதிக் குறி, சந்தன குங்கும திலகங்களுடன் ஒற்றை மாட்டுத்திருக்கல் வண்டியில் அவர் கோவில்களுக்கும் சைவப்பெருமக்களின் இல்லங்களுக்கும் சென்று சமயப்பணி ஆற்றிவந்தார்.

அவரது காலத்தில் வாழ்ந்த பல சைவப்பெரியார்களும் நல்லறிஞர்களும் இவர் மீது மிகுந்த பக்தி விசுவாசம் கொண்டிருந்தனர். சிவஸ்ரீ சதாசிவக் குருக்களின் புத்திரர்களாகிய சிவஸ்ரீ சிவசுப்பிரமணியக் குருக்கள் (மணி ஐயா) சிவஸ்ரீ பாலசுந்தரக் குருக்கள் (பாலன் ஐயா)ஆகியோர் இன்றளவும் அங்கு தமது சமயப்பணியை ஆற்றி வருகின்றனர்.

**சிவாச்சார்ய மணி**

## சிவஸ்ரீ ஐ. ஜம்புகேஸ்வரக் குருக்கள்

இவர் ஐயாத்துரைக் குருக்களின் மகன் ஆவார். இவர் பல வருடகாலம் கந்தசாமி கோவிலிலும் நயினாதீவு நாகபூஷணியம்மன் கோவிலிலும் வேறு ஆலயங்களிலும் குருத்துவப்பணிகளை நிறைவேற்றி எல்லோருக்கும் பேருதவி புரிந்து வாழ்ந்தவர். அவரது மைந்தன் புவனேஸ்வரியம்மன் கோவில் பிரதம குருவாகவும் விளங்குகின்றார். இவர் தற்போது அகில இலங்கை இந்துசமய பீடாதிபதியாக விளங்குவதும் புங்குடுதீவு சைவமக்களுக்குப் பெருமைதருவதாகும்.

சிவஸ்ரீ ஐ. ஜம்புகேஸ்வரக் குருக்கள் புங்குடுதீவு மக்களுக்காக சமயப் பணிகளில் மட்டுமன்றி சமூகப்பணிகளிலும் முன்னின்று உழைத்தவர்.

## சிவஸ்ரீ கணேச சிவபாலக் குருக்கள்



கொழும்பு கொம்பனித் தெரு சிவசுப்பிரமணிய சுவாமி கோவிலின் பிரதமகுரு சிவஸ்ரீ கணேச சிவபாலக்குருக்கள், 1948 இல் புங்குடுதீவில் பிறந்தவர். சிவஸ்ரீ சின்னத்துரை ஐயர், செல்லம்மா தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்த இவர், புங்குடுதீவு கணேச வித்தியாசாலையில் ஆரம்பக்கல்வியை பெற்றவர். புங்குடுதீவின் வேதாகம பாடசாலையிலும் சுன்னாகம் சிவானந்த குருகுலத்திலும் சமயக்கல்வி கற்றவர். ந. சோமாஸ்கந்த சிவாச்சாரியாரை குருவாகக் கொண்டு கல்விகற்றார்.

ஆரம்பத்தில் புங்குடுதீவு தல்லையபற்று முருகமூர்த்தி ஆலயத்தில் பிரதம குருவாக சேவையாற்றினார், பின்பு நாரந்தனை கந்த சுவாமி கோவிலில் பிரதமகுருவானார். 1991ஆம் ஆண்டு கொம்பனித் தெரு சிவசுப்பிரமணிய சுவாமி கோவில் பிரதமகுருவானார். சமயப்பணியுடன் சமூகப்பணி செய்தமைக்காக இவருக்கு சமாதான நீதிவான் பதவியும் கிடைத்தது. இந்து குருபீடம் இவருக்கு சிவாகம கிரியா பூஷணம் என்ற பட்டத்தை வழங்கியது. யாழ்ப்பாணம் வித்துவசபையால் சிறந்த சமயச் சொற்பொழிவாளர் என்று பாராட்டப்பட்டார். ஜப்பான் நிறுவனம் ஒன்று இவருக்கு அண்மையில் கலாநிதிப்பட்டத்தை வழங்கி கௌரவித்தது.

## பிரம்மஸ்ரீ இராமச்சந்திர ஐயர்

இவர் இந்தியாவிலிருந்து வரவழைக்கப்பட்டு புங்குடுதீவு ஊரதீவு ஐயனார் கோவிலில் பூசைக்கு நியமிக்கப்பட்டார். இவர் இந்தியாவில் சமஸ்கிருத பண்டிதர் பரீட்சையில் தேறியதுடன் வேதபாராயணம் செய்வதிலும் வல்லவராயிருந்ததனால் புங்குடுதீவு அந்தணச் சிறார்கள் பலரும் இவரிடம் வந்து வேதபாடம் கற்று வந்தனர். இவரது புத்திரர்கள் சிவஸ்ரீ முத்துக் குருக்கள். சிவஸ்ரீ உமாக் குருக்கள் ஆகியோரும் தந்தையிடம் கற்றுத் தேர்ந்தனர். இவர்களும் தந்தையுடன் ஊரதீவு ஐயனார் கோவில் பூசை உபயங்களை நன்கு நடாத்தி வந்தனர். இவரது மகளைத் திருமணம் செய்தவராகிய மாசிலாமணி என்றழைக்கப்படும் சிவஸ்ரீ நடராஜக் குருக்களும் இவர்களுடன் இணைந்து ஆலயப்பணிகளையும் மக்களின் வீட்டுக்கிரியைகளையும் சிறப்புற நடாத்தி வந்தனர். இராமச்சந்திர ஐயரின் மூத்த மகன் சிவஸ்ரீ முத்துக் குருக்கள் வரதீவு ஸ்ரீ பாலசுப்பிரமணியர் ஆலயத்தில் சிறப்பாகப் பணியாற்றிப் பாராட்டுப் பெற்றவராவார்.

## சிவஸ்ரீ கணேச ராசக்குருக்கள்



புங்குடுதீவு கலட்டி ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயம் பரம்பரைப் பூசகரான சிவஸ்ரீ சொக்கலிங்க ஐயர் பஞ்சாட்சரக் குருக்களின் மூத்தமகனே கணேசராஜக் குருக்கள் ஆவார். புங்குடுதீவு கலட்டி பிள்ளையார் கோவிலில் மட்டுமன்றி அம்மன் கோவிலின் வளர்ச்சியிலும் உயர்ச்சியிலும் முன்னின்று உழைத்தவர். இவரது சேவை இலங்கைக்குள் மட்டும் நின்று விடவில்லை. சிங்கப்பூர், மலேசியா, அவுஸ்திரேலியா போன்ற நாடுகளிலும் இடம்பெற்றது.

இந்நாடுகளில் இவரது முயற்சியால் பல கோயில்கள் எழுந்தன. எங்கள் ஊர் சிவாசாரியார்கள் வெளிநாடுகளுக்குச் செல்லுமுன்பே வெளிநாடுகளுக்குச் சென்று தனது குருத்துவச் சேவையால் புகழ் பெற்றவர். சிரித்த முகத்துடன் காணப்படும் இவர் பக்தர்களுடன் அன்பாக பழகுவார். நகைச்சுவையுடன் உரையாடுவார். மலேசியாவில் மூவார் ஸ்ரீ மகாமாரியம்மன் கோவிலில் முதன் முதலாக 17 ஓம குண்டங்களுடன் மகாகும்பாபிஷேகம் மற்றும் உற்சவங்களையும் தலைமையேற்று நடத்திப் புகழ்பெற்றவர். 1991ஆம் ஆண்டு கலட்டிப்பிள்ளையாரின் கொடியேற்றத்திருவிழாவை நடத்தி மகிழ்ந்தவர்.

## அருட்திரு பேராயர் டேவிட் ஜெயரட்ணம் அம்பலவாணர்



இவர் புங்குடுதீவில் 28.02.1928 இல் பிறந்தார். ஆரம்பக்கல்வியை வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலும், பின்பு பரியோவான் கல்லூரியிலும் பெற்றார். மிகவும் அறிவு வாய்ந்த இவர் மேற்படிப்பை இந்தியா சேரம்பூர் பல்கலைக்கழகத்திலும் பின்பு இங்கிலாந்து லண்டன் பல்கலைக்கழகத்திலும் கற்றார். பின் பல இடங்களில் போதகராக இறை பணிபுரிந்து 1971 இல் தென் இந்திய திருச்சபையின் இலங்கைப் பேராயராக பதவி ஏற்று 1993 வரை 22 வருடங்கள் மிகவும் சிறப்பாகப் பணிபுரிந்தார். பேராயர் அவர்களது சமூக நோக்கு அவர் தாம் பற்றியிருந்த கிறிஸ்தவ விசுவாசத்தை அடியொத்ததாகக் காணப்பட்டது. இச் சிறியவருள் ஒருவருக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ அதை எனக்கே செய்தீர்கள் என்ற ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் அருள்வாக்கு பேராயர் அவர்களது அகத்தே நிறைந்திருந்தது.

சமூகத்தில் ஏழைகள், எளியவர்கள், அங்கவீனர்கள், உற்றார், உறவினரை இழந்தவர்கள் ஆகிய மக்களின் துயரங்களைத் துடைக்கும் பல திட்டங்களை இவர் வகுத்தார். அவற்றை சிறப்பாக நடைமுறைப்படுத்தியும் மேற்பார்வை செய்தும் தமது சிறந்த மதிநுட்பத்தினால் ஆலோசனைகள் பல வழங்கியும் அவற்றை நடைமுறைப் படுத்தினார். இவரின் சமூக திட்டங்களில் சிறுவர் இல்லங்கள், பகல் பராமரிப்பு நிலையங்கள், தொழிற்பயிற்சி நிலையங்கள், அங்கவீனர் முதியோர் இல்லங்கள் என்பவை குறிப்பிடத்தக்கவை. தாய் தந்தையரை இழந்து சமூக நிலையில் தாழ்ந்திருந்த பிள்ளைகளை அரவணைத்து அவர்கள் உடுக்க உடையும், தங்க இருப்பிடமும், போஷாக்கான ஆகாரமும் அளித்து கல்வி கற்க நற்சூழ்நிலையை ஏற்படுத்திக் கொடுத்தார். இவ்வாய்ப்பினை தக்க நிலையில் பயன்படுத்தியவர்கள் இன்றும் பல்கலைக்கழகங்களில் கற்றுத்தேறி நற்பிரஜைகளாக வாழ்ந்து வருகிறார்கள். இவர் புங்குடுதீவிலும் திருச்சபைக்குப் பக்கத்துக் காணியையும் வீட்டையும் வாரிவழங்கி இங்கே அநாதைப் பிள்ளைகளையும் வளர்த்தார். நெசவு போன்ற பயிற்சிகளையும் வழங்கினார். இன்றும் இவை இயங்கிக்கொண்டு வருகின்றன. தமிழ் மக்கள் ஒடுக்கப்பட்ட இனமக்களாக வாழ்ந்து வருகிறார்கள் என்ற உண்மையையும் அவர்களின் சுதந்திரம் நிலைநாட்டப்பட வேண்டும் என்பதையும் மிகத்துணிச்சலுடன் முழு உலகிற்கும் எடுத்துச்சொன்ன கர்ம வீரர். பேராயர் அம்பலவாணரும் யாழ் கத்தோலிக்க மறைமாவட்ட முன்னாள் ஆயர் அதி. வண. தியோகுப்பிள்ளை ஆண்டகையும் யாழ்ப்பாணத்தில் கரிநாள் சூழ்ந்த ஒருகாலகட்டத்தில் அரசியல் தலைமைத்துவம் இல்லாது தவித்து நின்ற யாழ். குடாநாட்டு மக்களுக்கு தஞ்சம் தந்து அவர்களுக்காக குரல் கொடுத்து வந்தார்கள் என்பது முக்கிய விடயமாகும்.

இவர் 10.10.1997 இல் இறைவனடி சேர்ந்தார்.

**சிவதொண்டர்**

## சி. சரவணமுத்துச் சுவாமிகள்



புங்குடுதீவு கலட்டியில் உள்ள வரசித்தி விநாயகர் ஆலயத்திற்கு அண்மையில் உள்ள பிராமண வளவில் காசிச் செட்டியார் பரம்பரையிற் தோன்றிய சிவநெறிச் செல்வர் திரு சின்னட்டியார் அவர்கள் தனது வாழ்க்கைத்துணைவி இராமாசிப்பிள்ளை அம்மையார் அவர்களுடன் தங்கள் குலதெய்வமாகிய வரசித்தி விநாயகப் பெருமானை வழிபட்டுக்கொண்டு வாழ்ந்து வந்தனர். வரசித்தி விநாயகப் பெருமான் திருவருளால் இருவருக்கும் நான்கு பெண்பிள்ளைகளும் ஒரு ஆண்பிள்ளையும் பிறந்தனர். பெண் பிள்ளைகளில் மூத்தமகள் திருமதி அன்னப்பிள்ளை அவர்கள் திருமணஞ் செய்து இரு வருடங்களுள் கணவனை இழந்து விதவை ஆயினார். அதனால் மனமுடைந்த அம்மையார் அவர்கள் வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்து பேரின்ப வாழ்வைப் பெறுவதற்காக துறவுக் கோலம் கொண்டு வெள்ளை நிற உடை தரித்து தூய வெண்ணீறணிந்த நெற்றியுடன் கழுத்தில் ஒரு உருத்திராக்க மாலையுடன் பற்றிய பற்றத்தனையும் பற்றற விட்டு அருளம்பலப் பற்றே வாழ்ந்து அன்னப்பிள்ளைச் சுவாமியாராயினார்.

நான்காவதாகத் தோன்றிய சரவணமுத்து அவர்கள் இளமையிலேயே தெய்வ பக்தி உடையவராய் மாணிக்கவாசகர், இராமலிங்கர், தாயுமானவர், பட்டினத்தார் பாடிய அருட் பாக்களைப் படிப்பதில் நாட்டமுடையவராய் வாழ்ந்து வந்தார். அல்லற்பட்டு வாழும் இவ்வுலக வாழ்க்கையை வெறுத்து தனது தமக்கையாரைப் போல துறவுக் கோலங்கொண்டு பிரமச்சாரியாய் காந்தீய இலட்சியத்துடன் நாலு முழக் கதர் உடையணிந்து கதர்த் துண்டால் உடம்பை மறைத்துப் போர்த்திக் கொண்டு, நெற்றி மார்பு எங்கும் வெண்ணீற்றுப் பூச்சுடன் ஒரு சிவ தொண்டனாக வாழ ஆரம்பித்து சரவணமுத்துச் சுவாமி ஆனார்.

தாய்ப்பசு தனது கன்றினிடத்து அன்பு பாராட்டுவது போல உள்ளங்கசிந்து மனமுருகி குருலிங்க சங்கம வழிபாட்டில் நாட்டமுடையவராய் திருமதி அன்னப்பிள்ளைச் சுவாமியார் அவர்களும் தம்பியார் சரவணமுத்துச் சுவாமியார் அவர்களும் இலங்கையிலும் இந்தியாவிலுமுள்ள பல திருத்தலங்களுக்கு வருடந்தோறும் யாத்திரை செய்து இறைவனிடத்தில் அன்பு மிக்கவராய் உள்ளங்கசிந்து மனமுருகி வழிபட்டு வந்தனர்.

சரவணமுத்துச் சுவாமியார் இந்தியாவுக்கு யாத்திரை செய்யுங்காலத்தில் காஞ்சி ஏகாம்பரநாதர் சுவாமி கோயில் வாசலில் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் ஸ்தாபித்த தேவாரப் பாடசாலையில் தங்குவது வழக்கம். செட்டியார் அவர்கள் அங்கு வந்து சிவ பூசை செய்தே கோயிலுக்குச் செல்வதையும் சிவ பூசை செய்யும் போது சிவலிங்கமோ வேறு விக்கிரகங்களோ வைத்துப் பூசை செய்யாது திருவாசகப் புத்தகத்தையே வைத்துப் பூசை செய்வதைக் கண்டார். அன்று தொடக்கம் நடராசப் பெருமான் வேறு திருவாசகம் வேறல்ல என்பதை உணர்ந்தார்.

திருவாசகத்தால் தான் பெற்ற இன்பம் ஏனையோரும் பெறச் செய்வதற்கெண்ணி ஒரு திருவாசக மடம் அமைப்பதற்கு ஆர்வம் கொண்டார்.

கொழும்பு தெமட்டக்கொடையில் தனது குடும்பத்தினரின் நல்வாழ்க்கைக்கு உதவி செய்யும் நோக்குடன் ஒரு வர்த்தக நிலையம் அமைத்து உழைத்த பணத்தின் ஒரு பகுதியை தன் குடும்பத்தினருக்கு உதவியும் பெரும் பகுதியைத் தரும வழிகளில் செலவழித்தும் வந்தார்.

1958 இல் இலங்கையில் ஏற்பட்ட இனக்கலவரத்தால் வர்த்தகம் செய்யமுடியாமல் கடையை விற்ற பணத்துடன் சிவனடியார் கூட்டத்தினரின் உதவியுடன் தான் நினைத்தபடி திருக்கேதீஸ்வரர் ஆலயத்தில் தெற்குப்பக்கமாக ஒரு திருவாசக மடம் அமைத்து 1958 தொடக்கம் மடத்திலேயே தங்கியிருந்து கேதீஸ்வரப்பெருமானையும் கௌரி அம்மனையும் தினமும் வழிபட்டு வருவதுடன் சிவனடியார்களுக்கு உதவியும் செய்து வந்தார்.

ஆண்டு தோறும் திருவெம்பாவைக் காலத்தில் பத்து நாட்களும் மகாசிவராத்திரியன்று அங்கு வரும் சிவனடியார்களுடன் சிவபூசை செய்தும், பெரியார்களைக் கொண்டு திருவாசகத்தின் பெருமையைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றுவித்தும் வருவதில் மனநிறைவு அடைபவராய் வாழ்ந்தார். போர்க்காலத்தில் திருக்கேதீஸ்வரம் சீர்குலைந்தது. இவரது திருவாசக மடமும் அழிந்தது. சரவணமுத்து சுவாமியார் கொழும்புக்கு இடம்பெயர்ந்தார். 03.07.2003 அன்று காலமானார். அவர் உறவினர்களான அருளலிங்கம் தம்பதிகள் 2004 இல் திருவாசக மடத்தை புனருத்தாரணம் செய்து சரவணமுத்து சாமியாரின் படத்தை திறந்தார்கள். சாமியார் மறைந்து விட்டார். ஆனால் அவர் அமைத்த மடம் அவருடைய பெயரை கூறிக் கொண்டு சிவப்பணி செய்கிறது.

## ஸ்ரீமான் மார்க்கண்டு சோதிநாதர்



வல்லன் மாவுதிடலில் பிறந்த இப்பெரியார் 106 ஆண்டுகள் வாழ்ந்து தமிழுக்கும் சைவசமயத்திற்கும் சேவை செய்தவர். ஆலய அறங்காவல்சபைத் தலைவர். திருவிழாச்சபைத் தலைவர். தமது நான்கு ஏக்கர் சொந்தக் காணியில் 1925ஆம் ஆண்டு ஸ்ரீ சண்முகநாதன் வித்தியாசாலைக்கென 200 அடி நீள மண்டபம் கட்டி, கிணறு, மலசலகூடம் ஆகியன அமைத்து, மாணவர்கள் விளையாடுவதற்காக மைதானத்திற்கு நிலம் வழங்கி அரும்பணியாற்றினார். திரு. சோதிநாதர் பாடசாலையின் தலைமை ஆசிரியராகவும் பணியாற்றி பிள்ளைகளின் கல்வி முன்னேற்றத்திற்காக உழைத்து, பின் சைவபரிபாலனசபையிடம் கையளித்துப் பெருஞ்சேவை செய்தார்.

நெல்வயல்கள், மரக்கறி, புகையிலைத் தோட்டங்கள், ஆடு, மாடு, செம்மறி, எருமை முதலியவற்றைக் கொண்டிருந்த பண்ணைகள் ஆகியன இவரது முயற்சியினால் செழித்திருந்தன. 10 சோடி எருமை மாடுகளைக் கொண்டு உழவுத்தொழில் செய்வார். கூடாரவண்டியிலேயே பிரயாணம் செய்வார். கடல்வாணிபம், கடற்போக்குவரத்து ஆகியவற்றிலும் இவர் ஈடுபாடு கொண்டிருந்தார். பாய்க்கப்பல் வைத்து மக்கள் போக்குவரத்து செய்வதற்கு உறுதுணையாக இருந்தார்.

இவரது முயற்சியால் வேலணை, சுருவில், மண்டைதீவு, அலுப்பாந்தி, கொழும்புத்துறை, சங்குப்பிட்டி, பூநகரி, மாதோட்டம், பொன்னாவெளி ஆகிய துறைமுகங்களுக்குத் தோணிப்போக்குவரத்து நடைபெற்றது. இவர் ஆண்டுதோறும் கடல் மார்க்கமாக இந்தியாவிலுள்ள சிதம்பரத்திற்கு யாத்திரையும் சென்று வருவார்.

புங்குடுதீவிலிருந்து யாழ்ப்பாணம் ஊடாக முல்லைத்தீவு சென்று வற்றாப்பளை கண்ணகியம்மன் வைகாசி விசாகப் பொங்கல் விழாவிற் பங்கு கொண்டு பாதயாத்திரையைத் தொடர்ந்து திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய இடங்களுக்குச் சென்று காரைதீவு கண்ணகியம்மன், பொத்துவில் வழியாக மூன்று மாத இடைவெளியில் ஆடிமாதம் கதிர்காமத்தையடைந்து கதிர்காம முருகன் கோவில் திருவிழா, வள்ளிமலை செல்லக்கதிர்காமத் தீர்த்தம் ஆகியன முடிந்ததும் கொழும்பு வழியாக முனீஸ்வரம் வடிவாம்பிகை அம்மனைத் தரிசனம் செய்து குருநாகல் வழியாக யாழ்ப்பாணம் திரும்பி புங்குடுதீவு வந்து இடும்பன் பூசைகொடுப்பார். கண்ணகியம்மன் கோவில் திருவிழாச் சபைத் தலைவர். வல்லன் இலுப்பண்டை நாச்சிமார் அருள்மிகு பாலசுப்பிரமணியர் கோவில் அறங்காவல்சபைத் தலைவர், வல்லன்பதி அருள்மிகு ஐயனார் கோவில் தர்மகர்த்தா ஆகிய பதவிகளை வகித்ததுடன் கண்ணகியம்மன் கோவிலில் திருவிழாக்களை முன்னின்று செய்வார். பொங்கல் செய்து திருவிழாப் பந்தல் அமைக்கும் பணிகளை ஆரம்பித்து வைப்பார்

கண்ணகியம்மன் கோவில் இரண்டாம் திருவிழாவில் குருந்த மர நிழலில் அம்பிகை சிவலிங்கத்திற்குப் பூசை செய்யும் காட்சியும் பகல் கைலாசவாகனத்தில் சுவாமி எழுந்தருளி உலாவரும் காட்சியும் இரவு சப்பறத்தில் விநாயகர், வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர், இராஜராஜேஸ்வரி அம்பாள் மூவரும் வீதியுலா வரும் காட்சியும் சிறப்பாக நடைபெறும். அப்பொழுது திரு. சோதிநாதர் பக்தி மிகுதியால் கைகளால் தாளம் போட்டபடி பாடி வலம் வருவார்

## புலவர் அ. திருநாவுக்கரசு



பாடல்பெற்ற திருத்தலம் திருக்கேதீஸ்வரம். இந்த திருக்கேதீஸ்வரத்துடன் புங்குடுதீவுப் பெரியார்கள் பலருக்குத் தொடர்பு இருக்கிறது. அவர்களில் ஒருவர் தான் புலவர் திருநாவுக்கரசு. 1964 முதல் இன்று வரை திருக்கேதீஸ்வர ஆலயத்துடன் தொடர்புடையவராய் இருக்கிறார். இன்று இவ்வாலயத்தின் திருப்பணிச்சபையின் பொதுச்செயலாளராக இருந்து சேவை புரிகிறார். அகில இலங்கை இந்து மாமன்றம், இந்து வெளியீட்டுக்குழு, கொழும்பு தமிழ்ச்சங்க ஆட்சிக்குழு ஆகியவற்றில் உறுப்பினராக இருந்து சேவையாற்றி வருகிறார்.

கொழும்பு தமிழ்ச்சங்கத்தில் பண்டிதர் வகுப்புகளையும் அறிவோர் ஒன்று கூடல்களையும் நடத்தியுள்ளார். தென்னாபிரிக்கா, மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, மாலைதீவு போன்ற நாடுகளில் நடைபெற்ற சைவ இலக்கிய மாநாடுகளில் கலந்து கொண்டுள்ளார். திரு. வி. க. மு. கதிரேசன் செட்டியார், குன்றக்குடி அடிகளார், பண்டிதர் ச. அருளம்பலனார் போன்ற அறிஞர்கள் பலரை ஆய்வு செய்து கட்டுரைகள் எழுதியுள்ளார். திருக்கேதீஸ்வரம் பற்றி ஒரு ஆராய்ச்சிப்புத்தகத்தை எழுதி வருகிறார்.

புங்குடுதீவு 1 ஆம் வட்டாரத்தில் அம்பலவாணர் செல்லம்மா தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்த திருநாவுக்கரசு, புங்குடுதீவு சுப்பிரமணிய வித்தியாசாலையிலும் வேலணை மத்திய மகாவித்தியாலயத்திலும் கல்விகற்றவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பட்டம்பெற்று தருமபுர ஆதீனத்தில் சிறப்புக்கல்வி பெற்றவர். புலவர்பட்டம் பெற்ற இவருக்கு கலாசார அமைச்சு "சிவநெறிப்புலவர்" என்றும் திரு ஆவடுதுறை ஆதீனம் "சிவஞானச்செல்வர்" என்றும் பட்டங்களை வழங்கின.

இவர் சமயப்பணிகளுடன் சமூகப் பணியும் செய்தவர். பெரியநாவற்குளம் கிராமோதய சபையை "திருக்கேதீச்சரம் கிராமோதயசபை" என்று பெயர் மாற்றி அதன் முதல் தலைவராகவும் உறுப்பினராகவும் இருந்து பணியாற்றியவர். திருக்கேதீச்சரம் கிராம அபிவிருத்திச்சங்கம், கிராம முன்னேற்றச்சங்கம், நலன்புரிச்சங்கம், மாந்தை மேற்கு ப.நோ. கூ. சங்கம், மன்னார் மாவட்ட சைவசமூக கலாசார ஒன்றியங்களின் பேரவை, கோப்பாய் வடக்கு கி. மு. சங்கம் ஆகியவற்றின் தலைவராகச் செயற்பட்டுள்ளார். ஆழிப்பேரலை (சுனாமி) ஆதரவு அமைப்பான சிவன் அருள் இல்லச் சிவனடியார் திருக்கூட்டத்தின் துணைச் செயலாளராகவும் கடமையாற்றுகிறார்.

புங்குடுதீவில் பிறந்த இப்பெரியார், ஆற்றும் சமய சமூகப் பணிகளையிட்டு புங்குடுதீவு மக்கள் என்றும் பெருமைப்படலாம்.

# 14

# புங்குடுதீவுப் பாடசாலைகள்

ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு கல்வி முக்கியமானதாகும். சிறந்த கல்வி மான்களைப் பெற்றதன் மூலம் அந்நாடு புகழடைந்திருக்கிறது. கல்வியையே தமது மூலதனமாகக் கொண்டவர்கள் இலங்கைத் தமிழர்கள். இவ்வாறான கல்விமான்களாலேயே புங்குடுதீவின் புகழும் உயர்ந்தது. அப்படி அவர்களை புகழின் உச்சிக்கு உயர்த்திய அவர்களது ஆரம்ப பாடசாலைகள் எப்படி இருந்தன? அங்கே கற்பித்த ஆசிரியர்கள் யார்? ஆரம்ப காலத்தில் புங்குடுதீவுக் கிராமத்திலே பல பகுதிகளிலும் திண்ணைப்பள்ளிகள், நிலாப்பள்ளிகள், கோவிற் பள்ளிகள், பட்டறைப்பள்ளிகள், குருகுலக்கல்விக்கூடங்கள் என்பவை இயங்கியிருக்கின்றன. நல்லமனங்கொண்ட ஆசான்கள் இப்பள்ளிகளை ஆரம்பித்து சமயம், இலக்கியம், பொதுக்கல்வி போன்றவற்றை போதித்தனர் என்று வரலாறு கூறுகிறது.

புங்குடுதீவின் கல்வியானது தென்னிந்தியாவுடனும் ஏனைய தீவுகளுடனும் தொடர்புடையது. சட்டம்பி சேது காவலர் என்பவர் 1750 ஆம் ஆண்டளவில் பெருங்காடு பட்டினிக்குளத்தின் வடகரையில் திண்ணைப்பள்ளியொன்றை நிறுவிக் கல்வி போதித்தார் என்று கூறப்படுகிறது. இவரைப் போலவே குமாரகுருச்சட்டம்பியாரும் பல திண்ணைப்பள்ளிகளை ஆரம்பித்து தமிழ் கற்பித்துள்ளார். புங்குடுதீவு மேற்கில் வாழ்ந்த பரமானந்தச் சட்டம்பியாரும் கல்விப்பணியாற்றியுள்ளார். ஊரைதீவுப்புலவரும் இறுபிட்டிச் சட்டம்பியாரும் புங்குடுதீவில் திண்ணைப்பள்ளிக் கூடங்களை ஆரம்பித்திருக்கிறார்கள். இவ்வாறு புங்குடுதீவின் பல பகுதிகளிலும் திண்ணைப்பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்பட்டதை அறியமுடிகிறது. இக்காலப்பகுதியில் சி. கணபதிப்பிள்ளை, வைத்தியர். வே. கணபதிப்பிள்ளை, ஆறுமுகம் ஆசிரியர், நீ. சேதுபதி ஆசிரியர், நா. தில்லையம்பலம் வாத்தியார், நாகமணியர் ஆகியோர் கல்வியைப் பொறுத்தவரை மக்களால் போற்றப்படுகின்றனர்.

ஆறுமுகநாவலர் பெருமானின் புராண படனம் என்னும் புதுமுறைக்கல்விப் போதனையை கோவில்களிலே பக்திசிரத்தையுடன் செய்து வந்தவர்களில் தில்லையம்பலம் ஆசிரியர் முக்கியமானவர்.

இவர்கள் அனைவரும் ஆரம்பகாலத்தில் புங்குடுதீவு மாணவர்களின் கல்விக் கண்ணைத் திறந்து விட்டனர் என்றே சொல்லிவிடலாம். 1816ஆம் ஆண்டளவில் யாழ்ப்பாணம் வந்த அமெரிக்கன் மிஷனரிமார்கள், புங்குடுதீவுக்கும் வந்தனர். அவர்களால் இங்கு ஓர் தேவாலயமும் மூன்று பாடசாலைகளும் நிறுவப்பட்டன. இவற்றிலே புங்குடுதீவு மேற்கு அமெரிக்கன் மிஷன் த.க. பாடசாலை 1850இல் முதலில் நிறுவப்பட்டது. ஒரு திண்ணைப்பள்ளிக்கூடமாக ஆரம்பிக்கப்பட்ட இப்பாடசாலையை றிச்சட் கணபதிப்பிள்ளை என்பவர் தலைமை தாங்கி நடத்தினார்.

அமெரிக்கன் மிஷனரிமாரினால் இன்னுமொரு பாடசாலை புங்குடுதீவின் வடபகுதியில் தற்போதய கமலாம்பிகை வித்தியாலயத்துக்கு அருகில் அமைக்கப்பட்டது. இப்பாடசாலையின் சுவர்கள் சுண்ணாம்புக் கற்களாலும் கூரை, கிடுகினாலும் வேயப்பட்டது. இப்பாடசாலையின் அதிபராக ஏ. நல்லதம்பி அவர்கள் விளங்கினார். அமெரிக்கன் மிஷனரிமாரால் இக்காலப்பகுதியில் இறுபிட்டியிலும் ஒரு பாடசாலை அமைக்கப்பட்டது. அமரசிங்கம், நாகலிங்கம், நல்லதம்பி, இராமநாதர், பொன்னையா போன்ற ஆசிரியர்களும் சரவணமுத்து உடையார், பசுபதிப்பிள்ளை விதானையார் போன்றோரும் புங்குடுதீவின் கல்வி முயற்சியை முன்னெடுத்து சென்றுள்ளனர். ஆலடிச்சந்தியில் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம் இருந்தது. அதிலே குணரெத்தினம் என்பவர் ஆசிரியராகக் கடமையாற்றினார். கணேசவித்தியாசாலை அமைப்பதற்கு முன்பு ஆலடிச்சந்தியில் உள்ள மாணவர்கள் இங்கு கல்வி கற்றனர். பசுபதிப்பிள்ளை விதானையார் புங்குடுதீவில் பல பாடசாலைகள் உருவாகக் காரணகர்த்தாவாக விளங்கினார். 1910ஆம் ஆண்டில் அம்பலவாணர் அரங்குக்கு முன் வளவான சடையர் வளவில் அரசமரத்தடியில் சிறு கட்டிடத்தில் சடையர் குடும்பத்தினால் அவர்மகன் கணேசன் பெயரில் ஒரு பாடசாலை முதலில் ஆரம்பித்து நடத்தப்பட்டது.

அதன்பின்பு அமரர் பசுபதிப்பிள்ளை விதானையாரால் கதிரவேலு மணியகாரர் குடும்பத்தவரது நிலத்தில் கணேச வித்தியாசாலை ஆரம்பமானது. 1920ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட இந்துப்போட்டின் தலைவராக சேர். வைத்திலிங்கம் துரைசாமியும் செயலாளராக இராசரத்தினமும் செயலாற்றினர். இவர்களது நண்பரான சேதுபதி ஆசிரியரும் தீவகத்தில் இந்துப் பாடசாலைகள் ஆரம்பிப்பதற்கு முன்னோடியாக இருந்தார். புங்குடுதீவில் திருநாவுக்கரசு வித்தியாசாலை, கமலாம்பிகை வித்தியாசாலை (தமையனார் ஆறுமுகம் ஆசிரியரின் மகள் பெயர் கமலாம்பிகையாகும்) சண்முகநாதன் வித்தியாசாலை, ராஜேஸ்வரி வித்தியாசாலை, சுப்பிரமணிய வித்தியாசாலை, சேர். வை. துரைசுவாமி வித்தியாசாலை போன்ற பல பாடசாலைகள் ஆரம்பிக்க மூலகர்த்தாவாக விளங்கினார்.

19ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலப்பகுதிகளில் பேராசிரியர். சி. இ. சதாசிவம்பிள்ளை புங்குடுதீவு மக்களுக்கு கல்வி புகட்டினார். இவரைத் தொடர்ந்து புங்குடுதீவில் தமிழ்ப்புலமை மிக்க பல அறிஞர்கள் தோன்றினார்கள். வித்துவான் சி. ஆறுமுகம், திருப்பூங்குடி வி.க. ஆறுமுகம், வித்துவான் பொன். கனகசபை கு.வி. செல்லத்துரை, க. சிவராமலிங்கம்பிள்ளை, பண்டிதர். மு. ஆறுமுகம், சி.க. நாகலிங்கம் க. அம்பலவாணர், குணமாலை போன்றோரே அவர்கள். கு.வி. செல்லத்துரை 1960களில் அகில இலங்கை தமிழ் ஆசிரியர் சங்கத் தலைவராக இருந்து பலசேவைகள் செய்தார்.

ப. கண்ணையா, ஐ. சிவசாமி, க. செல்வரெத்தினம், சின்னத்துரை, சு.வில்வரெத்தினம், ப. செல்லத்துரை, நா. கார்த்திகேசு என்று கல்விப்பணியாற்றியவர்களின் பட்டியல் நீண்டு கொண்டே போகும். இவர்களைப் போலவே இன்னும் பல ஆசிரியர்கள் கல்விப்பணியாற்றியிருக்கிறார்கள். இக்காலப்பகுதியில் பல ஆசிரியர்கள் கல்விப்பணியை புங்குடுதீவு பாடசாலைகளில் மேற்கொண்டிருந்தார்கள். புங்குடுதீவில் இயங்கிய ஒவ்வொரு பாடசாலையைப் பற்றியும் தனித்தனியாக கட்டுரைகள் இடம்பெறுகின்றன. அந்தக்கட்டுரைகளில் இந்த ஆசிரியர்களின் பணிகள் பற்றி மேலும் விபரமாகக் கூறப்பட்டிருக்கிறது.

அக்காலப் பாடசாலைகளின் அமைப்பு, அங்கே கல்வி கற்ற மாணவர்களின் நிலை போன்றவற்றை அறிந்து கொண்டால் அக்காலக் கல்வி முறை எத்தனை கஷ்டமாக இருந்திருக்கும் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.அப்படிப்பட்ட கஷ்டமான நிலையிலும் பலர் கல்வி பயின்று உயர்ந்திருக்கிறார்கள்.

அக்காலப் பாடசாலைகள் பெரும்பாலும் நாற்புறமும் மண் சுவரால் கட்டப்பட்டிருக்கும். அரைச் சுவர்கள்தான் அங்கு காணப்படும். கூரை தென்னங்கிடுகினால் அல்லது பனையோலையினால் வேயப்பட்டிருக்கும். பெரும்பாலும் மாணவர்கள் சிறுதுண்டைத்தான் வேட்டி போல் கட்டியிருப்பார்கள். மாணவிகள் பாவாடை சட்டை அணிந்திருப்பார்கள். ஆசிரியர்களும் பெரும்பாலும் வேட்டி சால்வையுடனேயே காணப்படுவர். புத்தகங்கள், கொப்பிகள் இல்லை. பனையோலை ஏட்டில் எழுத்தாணியினால் எழுதப்பட்ட எழுத்துகளையே மாணவர்கள் படிக்க வேண்டும். நிலத்திலே மண்ணில் விரலால் எழுதப்பழக்குவார்கள். குறிப்பிட்ட வயதுவரை சிலேற்றும் கற்பென்சிலும் தான் பாவனையில் இருந்தன. வசதியான ஆசிரியர்கள், கோயில் பூசகர்கள், வைத்தியர்கள் போன்றோர் மட்டும் ஒற்றை மாட்டு வண்டியில் பிரயாணம் செய்வர். அந்த ஒற்றை மாட்டு வண்டிக்கு கூடாரம் கட்டப்பட்டிருக்கும்.

1920ஆம் ஆண்டளவில் வகுப்புகளில் மாணவர்களின் எண்ணிக்கையே அதிகமாக இருந்தது. பெண்களைப் பாடசாலைக்கு அனுப்பமாட்டார்கள். காலப்போக்கில் மாணவிகளும் வந்து சேரத்தொடங்கினர். எப்படி என்றாலும் மாணவர்களை விட அரைவாசிப் பேரே மாணவிகளாக இருந்தனர். ஆனால் 10 வருடங்களின் பின் இந்த நிலமை மாறியது. 1930 ஆம் ஆண்டளவில் பாடசாலைகளில் ஆண்களும் பெண்களும் சமனான அளவில் இருந்தனர். பெண்கள் பெரிய பிள்ளையானவுடன் பெரும்பாலும் பாடசாலைக்கு வராமலே நின்று விடுவர். 1924ஆம் ஆண்டு வரை பாடசாலையில் கதிரைகளோ, மேசைகளோ இருந்ததில்லை. மாணவர்கள் நிலத்தில் இருந்தே கல்வி கற்றனர். பாடசாலைகளில் ஏடு தொடக்கல் என்பது ஒரு பெருவிழாவாக கொண்டாடப்படும். வசதிபடைத்த மாணவர்கள் பெற்றோரால் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டு ஏடுதொடக்கப்படும். சரஸ்வதி பூசை மிக விமர்சையாக கொண்டாடப்படும். விஜயதசமியன்று மாணவர்களும் ஆசிரியர்களும் வீடுகள் தோறும் சென்று ஊர்வலமாக தேவாரம் பாடி வருவார்கள்.

இரண்டாம் வகுப்பு வரையும் சிலேட்டில் எழுதிய மாணவர்கள், அதன்பின்பு பயிற்சிப் புத்தகங்களில் எழுதினர். பென்சிலாலும் மை தொட்டு எழுதும் பேனையாலும் எழுதத் தொடங்கினர். கதிரை மேசைகள் வந்தன. உயர் குலத்தைச் சேர்ந்த மாணவர்கள் மட்டும் கதிரைகளில் ஏறி அமர்ந்தனர். ஹரிஜன மாணவர்கள் நிலத்தில் இருந்தே கல்வி கற்றனர். உயர்குல மாணவர்கள் வேட்டியுடன் வந்தனர். ஹரிஜன மாணவர்கள் பெரும்பாலும் கோவணத்துடன்தான் வந்தார்கள். 1956ஆம் அண்டளவில் கூட ஹரிஜன மாணவன் ஒருவன் கோவணத்துடன் பாடசாலைக்கு வந்து போனதை நான் கண்டிருக்கிறேன். பின்பு எல்லோரும் அரைக்காற்சட்டையும் சேட்டும் அணியத் தொடங்கினர். செருப்புகளை சில ஆசிரியர்கள் மட்டுமே அணிந்தனர். மாணவர்கள் எவரும் செருப்பு அணியவில்லை.

காலங்கள் விரைவாக ஓடின. நாகரிகம் வளர்ந்தது. கீழ்வகுப்பு மாணவர்கள் காற்சட்டையும் சேட்டும் அணியத் தொடங்கினர். மேல்வகுப்பு மாணவர்கள் நீளக்காற்சட்டை அணியத் தொடங்கினர்.

மாணவிகள் வெள்ளைச் சீருடை அணியத் தொடங்கினர். எல்லோருமே சப்பாத்து அணியத் தொடங்கினர். மாணவிகள் மட்டுமின்றி மாணவர்களும் கழுத்துப்பட்டி அணியத் தொடங்கினர். பாடசாலைகளின் எண்ணிக்கை உயர்ந்தது. 15 பாடசாலைகள் உருவாகிவிட்டன. 1960ஆம் ஆண்டுப்பகுதியில் புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் படித்து உயர்தரப்பரீட்சை எழுதிய பழனி சுந்தரலிங்கம் என்ற மாணவன் முதன்முதலாக பல்கலைக்கழகத்துக்குத் தெரிவுசெய்யப்பட்டார். இப்பொழுது அவர் முல்லைத்தீவுப் பகுதியில் அரச நிர்வாக அதிகாரியாக கடமையாற்றுகிறார். பாடசாலைகள் வளர்ந்தன. மாணவர்கள் அதிகரித்தனர். அகில இலங்கை விளையாட்டுப் போட்டிகளிலும் புங்குடுதீவு மாணவர்கள் கலந்து கொண்டனர். ஆசிரியர்கள் எல்லோரும் அளவிலாத பணிசெய்தனர்.

1991 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 17ஆம் திகதி என்பது புங்குடுதீவு மக்களால் என்றுமே மறக்கமுடியாத துக்கநாள் . ஊர்காவற்றுறை இராணுவ முகாமிலிருந்து இராணுவத்தினர் வேலணை நோக்கி தமது பரிவாரங்களுடன் புறப்பட்ட நாள். இந்தச் செய்தி கேட்ட புங்குடுதீவு, வேலணை, மண்டைதீவு மக்கள் தமது உடைமைகளை விட்டு விட்டு குழந்தை குட்டிகளுடன் கையில் கிடைத்தவற்றை எடுத்துக்கொண்டு யாழ். நகரை நோக்கி கால் நடையாக இடம் பெயர்ந்த நாள்.

இந்த நிகழ்ச்சிகளின் விளைவாக புங்குடுதீவு, வேலணை, ஊர்காவற்றுறை, மண்டைதீவு ஆகியவற்றிலிருந்து 95 சதவீதமான மக்கள் யாழ்ப்பாண நகருக்குள் நகர்ந்தனர். வயது போன சிலர்மட்டுமே இடம் பெயராது ஊருக்குள் தங்கினர். இதன் விளைவாக இத் தீவுகளிலிருந்த பாடசாலைகளும் கல்விக் கோட்டங்களும் யாழ். நகருக்கு இடம் பெயர்ந்தன. இந்த வகையில் புங்குடுதீவில் கல்விப்பணி ஆற்றிக்கொண்டிருந்த 15 பாடசாலைகளும் யாழ் நகருக்கு இடம் பெயர்ந்தன. யாழ் நகரிலுள்ள நிரந்தர பாடசாலைகளின் கட்டிடங்களில் இந்த நிரந்தமற்ற பாடசாலைகள் மாலை வகுப்புகளாக இயங்கத் தொடங்கின. பின்பு தனியார் கல்வி நிலையங்களில் இவ்வகுப்புக்கள் இயங்கின. 30.10.1995 இல் இராணுவ நடவடிக்கை காரணமாக இப்பாடசாலைகள் மீண்டும் தென்மராட்சிக்கு இடம்பெயர்ந்தன. 19.04.1996 இல் மீண்டும் இப்பாடசாலைகள் யாழ் நகருக்கு திரும்பின. யாழ்ப்பாணம் திரும்பிய புங்குடுதீவு மகாவித்தியாலயம், சுப்பிரமணிய மகளிர் வித்தியாலயம், கமலாம்பிகை வித்தியாலயம் ஆகிய மூன்று பாடசாலைகளும் 5 வருடங்களின் பின்பு புங்குடுதீவுக்குத் திரும்பி தமது சொந்தக் கட்டடங்களில் இயங்கத் தொடங்கின. 1997 இல் கணேச மகா வித்தியாலயமும் 2000இல் சித்திவிநாயகர் வித்தியாலயமும் மீண்டும் புங்குடுதீவில் இயங்கத் தொடங்கின. இந்த ஐந்து பாடசாலைகளைத் தவிர மற்ற 10 பாடசாலைகளும் இயங்கத் தொடங்கவில்லை. இந்தப் பாடசாலைகளின் அருகே வாழ்ந்த மக்களில் பலர் ஊர் திரும்பவில்லை. அதனால் மாணவர்களும் ஊர் திரும்பவில்லை. அதனால் பாடசாலை ஆரம்பிப்பதற்கான முயற்சிகள் எடுத்ததாகத் தெரியவில்லை.

இச்சந்தர்ப்பத்தில் புங்குடுதீவு மக்களின் இடப்பெயர்ச்சி பற்றி கூறுவதன் மூலம் இதை நன்கு விளக்கலாம். 1991ம் ஆண்டு ஐப்பசிமாதம் 17ம் திகதி என்பது புங்குடுதீவு மக்களால் என்றும் மறக்கமுடியாத துக்க நாள் என்றால் மிகையாகாது. காரணம், புங்குடுதீவை சிறிலங்கா இராணுவம் கைப்பற்றிய நாள் இதுவே. ஊர்காவற்றுறை இராணுவ முகாமிலிருந்தும் காரைநகர் கடற்படை முகாமிலிருந்தும் புறப்பட்ட இராணுவம் வேலணை ஊடாக பெரும் எடுப்போடு வந்து புங்குடுதீவை கைப்பற்றியது.

ஆனால் இராணுவத்தின் இந்த ஆக்கிரமிப்புக்கு முன் நிகழ்ந்ததுதான் புங்குடுதீவு மக்களின் யாழ்ப்பாணத்தை நோக்கிய இடப்பெயர்வாகும். இராணுவம் புங்குடுதீவைக் கைப்பற்றப் போவதாக இதற்குமுன்னர் பரப்பப்பட்ட வதந்தியினால் இவர்கள் இரண்டு முறை யாழ்ப்பாணத்தை நோக்கி ஓடிப்போய் அங்கு இரண்டு மூன்று நாட்கள் தங்கிவிட்டுத் திரும்பியதையும் இங்கு சுட்டிக்காட்ட வேண்டும். முன்னர் இருமுறை வதந்திகளைக் கேட்டு ஓடிப்போய் மக்கள் இடர்ப்பட்டதற்கும் மூன்றாம் முறையாக இப்போது நடைபெற்றதற்கும் பாரிய வித்தியாசமுண்டு. காரணம், இது தீவுப்பகுதியை தம் கைக்குள் வைத்திருந்த விடுதலைப் புலிகளின் வேண்டுகோளின் அடிப்படையில் நிகழ்ந்ததாகும். அவர்களே புங்குடுதீவு மக்களுக்கு தமது இருப்பிடங்களைக் கைவிட்டு யாழ்ப்பாணம் போய்க் குடியேறும்படி அறிவித்து, இராணுவம் தீவுப்பகுதிக்குள் நுழையப் போவது பற்றியும் கோடிகாட்டிச் சென்றனர். இவ்வாறு விடுதலைப் புலிகள் அறிவித்ததன் பின்னர் மக்கள் இரண்டு நாட்களுக்கு முன்னரே இடம்பெயரத் தொடங்கிவிட்டனர். இப்படி அரும்பித்த இடப்பெயர்ச்சியானது இராணுவம் (ஐப்பசி 1991) 17ம் திகதி மாலை வேலணைத்துறைக்கு வரும்வரை நடைபெற்றுக் கொண்டிருந்தது. இந்நிலையில் சிலர் தாமதமாகி புங்குடுதீவை விட்டுச் சென்றபோது இடையில் வேலணையில் குறுக்கிட்ட இராணுவத்தினரால் இடைமறிக்கப்பட்டு புங்குடுதீவை நோக்கி திருப்பி அனுப்பப்பட்டனர்.

இராணுவம் உள்நுழைந்தபோது மக்கள் உயிரைக் கையில் பிடித்தவாறே இருந்தனர். பின்னர் தடைகள் போட்டு, மடத்துவெளியில் முகாம் அமைத்து மக்கள் சுதந்திரப் போக்குவரத்து தடைசெய்யப்பட்டது.

இராணுவம் நுழைந்ததும் இராணுவத்தளபதி டென்சில் கோப்பேகடுவவின் கட்டளைப்படி மக்கள் புங்குடுதீவில் மாரியம்மன் கோவிலுக்கு வரும்படி அழைக்கப்பட்டு கணக்கெடுக்கப்பட்டபோது அங்கே 540 மக்கள் பதிவாகினர். (வயதுபோனவர்களும், ஊனமுற்றவர்களும், அங்கு சமுகமளிக்காத சிறுவர் சிறுமிகளும் தவிர்த்து) தங்கியிருந்த மக்கள் தொகைக்கேற்ப, வட்டார ரீதியாக பிரஜைகள் குழுக்கள் தெரிவுசெய்யப்பட்டனர்.

இதன்பின்னர் பூதாகரமாக எழுந்து நின்ற முக்கிய பிரச்சினைகளுள் உடனடித் தீர்வை எதிர்பார்த்தவையாக உணவு, உடை, மருத்துவம், கல்வி ஆகியன விளங்கின.

ஆரம்பத்தில் மக்கள் இலைக்கஞ்சி, கூழ், ஒடியல், பனாட்டு போன்ற உணவு வகைகளில் தங்கியிருக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்குள்ளாகியிருந்தனர். பின்னர் புங்குடுதீவு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் களஞ்சியறை திறக்கப்பட்டு மக்களின் உடனடித் தேவைகள் நிவர்த்திக்கப்பட்டன. பின்னர் உணவுப் பொருட்கள் கொண்டுவருவதற்கு "தாரா" என்ற பெயருடைய கப்பல் ஓடவிடப்பட்டது. மருத்துவ ரீதியாக கொழும்பிலிருந்து இடைக்கிடை ஹெலிமூலம் வைத்தியர்கள் ஏற்றியிறக்கப்பட்டு மக்கள் நலம் கவனிக்கப்பட்டது. மந்திரிமார் பலர், உயர் உத்தியோகத்தர் பலர் மக்களின் தேவைகள் கேட்டறிய வந்து போயினர். புங்குடுதீவில் எஞ்சியிருந்த மக்களின் பிள்ளைகளின் கல்விக்காக புங்குடுதீவு மகாவித்தியாலயம் இயக்கப்பட்டது. மொத்தம் 140 பிள்ளைகள் இங்கு கல்வி பயின்றனர். (ஊர்காவற்றுறை, வேலணை ஆகிய இடங்களிலும் எஞ்சியிருந்தவர்களின் பிள்ளைகள் உட்பட)

இடம்பெயர்ந்த மக்களோடு போகமுடியாது பலவித காரணங்களால் தங்கி நின்றவர்களுள் கல்வியறிவுடையோர் ஆசிரியர்கள் என்பவர்கள் சிலரும் இருந்தனர். அவர்களுள் முக்கியமானவர்களாக ஆசிரியர் சி. மாணிக்கம், நயினாதீவு, கா.சு பொன்னம்பலம், கிராமசேவகர், த.வடிவேலு, ஆசிரியர் செல்லத்துரை, ஆசிரியர் விக்னேஸ்வரன், ஆசிரியர் இரத்தினசபாபதி, ஆசிரியர் மு. பொன்னம்பலம், நயினாதீவிலிருந்து வந்து கடமையாற்றிய ஆசிரியர் பகீரதன் ஆகியோரையும் கல்வியறிவுடைய இளம் வயதினருள் சூரியகுமாரன், பவானி ஆகியோரையும் குறிப்பிடலாம்.

இவர்களுள் முக்கியமான பங்கு வகித்தவர்கள் மு. பொன்னம்பலமும் அவரது துணைவியார் உமாவும் ஆகும். ஏற்கனவே பூரண சர்வோதயத்தின் மூலம் 1968ல் இருந்து மக்களுக்கு தானம் வழங்குதல், பொதுச்சேவை செய்தல் என்பவற்றை மு.தளையசிங்கம், மு.பொன்னம்பலம், சு.வில்வரத்தினம் இன்னும் பல இளைஞர்கள் முன்னெடுத்திருந்தனர். அவற்றில் ஊறிய மு. பொ. போன்றவர்களுக்கு இது வரப்பிரசாதமாகவே அமைந்தது. அவர்கள் இடம் பெயராமல் இருந்ததற்குக் காரணம் திரு. மு. தளையசிங்கம் இருந்தகாலத்தில் (1968ல்) ஆரம்பித்து வைக்கப்பட்ட சர்வமத சங்க ஆச்சிரமத்தில் அதன் ஸ்தாபகர் சுவாமி நந்தகோபாலகிரியின் அஸ்தி இருந்ததே. இந்த அஸ்தியை வேறிடத்திற்குக் கொண்டுபோக முடியாத காரணத்தால் இதைப் பாதுகாக்கும் பொருட்டு இவரும் இவர் குடும்பத்தவரும் புங்குடுதீவில் தங்கியிருந்தனர். சர்வமத சங்க ஆச்சிரமத்தில் கவிஞர் சு. வில்வரெத்தினம் இராணுவம் புங்குடுதீவுக்கு வருவதற்கு ஒருநாள் முன்னர் தனது சொந்தக் காரணமாக யாழ்ப்பாணம் போய் அவரால் திரும்ப ஊருக்கு வரமுடியாமற் போனதால் ஒருவருடகாலம் யாழ்ப்பாணத்தில் இருந்தார். இல்லையெனில் மு.பொ. ஆற்றிய சேவைகளின் போது அவரும் அவரது வலதுகையாக உதவியிருப்பார்.

மந்திரிமார் தீவுப்பகுதிக்கு வரும் ஒவ்வொரு சமயமும் மு. பொன்னம்பலமே அவர்களோடு கதைத்து மக்களின் தேவைகளைக் கூறினார். இலங்கை வங்கி முகாமையாளர் கனகரத்தினம் வந்தபோதும், உணவுக் கட்டுப்பாட்டதிகாரி சி. பற்குணம் (இவரது பல்கலைக்கழக நண்பர்) வந்தபோதும் மக்கள் உணவுக்காகப் படும் துன்பத்தை எடுத்துச் சொல்லி அவர்கள் மூலம் உணவுப் பொருட்களின் விநியோகத்தை விரைவுபடுத்தினார். வடகிழக்கு மாகாணக் கல்வியதிகாரியாக சடாட்சர சண்முகதாஸ் இருந்த காலத்தில் புங்குடுதீவு மக்களுக்கு வழங்கப்பட்ட நிவாரண உணவுப்பொருட்களை குடும்ப அங்கத்தவர்கள் அடிப்படையில் கணக்கிட்டு இவரும் இவரது மனைவியுமே விநியோகித்தனர். நோயுற்றிருந்தவர்களுக்கு இவர்களே உணவுப் பொருட்கள் கொண்டு சென்று வழங்கினர். இன்னும் இறப்பு, பிறப்புப்பதிவாளராகவும், அநாதரவான நிலையில் கைவிடப்பட்ட ஊனமுற்றவர்களை செஞ்சிலுவை சங்கத்தின்மூலம் உரியவர்களிடம் சேர்ப்பிப்பதற்கு உதவியவராகவும், அநாதரவான நிலையில் இறந்தவர்களின் தகனங்கள் நடைபெறுவதற்கு உதவியவராகவும் இவர் இருந்திருக்கிறார். இன்னும் முக்கியமாக க. திருநாவுக்கரசு (சர்வோதய ஆரியரத்னாவுடன் சம்பந்தப்பட்ட அரசியல் காரணங்களால்) தீவை விட்டுப் போயிருந்ததால் அவரது சர்வோதய நிலையத்தை அவரது தங்கை புஷ்பமணியே கவனித்து வந்தார். அவரும் அக்காலங்களில் அவரது நிலையத்தை அண்டியிருந்த ஊனமுற்றவர்களுக்கும் முதியவர்களுக்கும் தன்னால் இயன்ற உதவியைச் செய்து வந்தார்.

இக்காலத்தில் சர்வோதய நிலையத்தை தாம் எடுத்து தம்தேவைகளுக்கு பாவிக்கப்போவதாக இராணுவத்தினரும் அவர்களுக்கு சார்பான இயக்கத்தினரும் கூறியபோது அவர்களின் முக்கியமானவர்களோடு கதைத்து அதைத் தடுத்து நிறுத்தியது மு.பொ.வே. இவரது வேலைகளுக்கு ஆதரவாக இருந்து ஒத்துழைத்தவர்கள் கிராமசேவகர் த. வடிவேலு, கார்க்காரப் பொன்னம்பலம் ஆகியோரும் ஊர்மக்களுமே. இத்தனைக்கும் மு.பொ. பிரஜைகள் குழுவிலோ அல்லது வேறு எந்த அந்தஸ்தைத் தரும் பதவியிலுமோ (ஆசிரியர் பதவியைவிட) இருக்க விரும்பவில்லை.

தற்போது கொழும்பில் வசித்துவரும் மு. பொ.வுடன் உரையாடியபோது அவர் பின்வருமாறு கூறினார். 2000 ஆம் ஆண்டுக்குப்பின்னர் போர் நிறுத்த காலத்தில் ஊருக்குப் போய் சிறுவேலைகள் செய்பவர்கள் (கோயில் திருப்பணி செய்தல், பள்ளிக்கூடத்தில் படிப்பித்தல்) எல்லோரும் சேவையாளர்களாக மதிக்கப்பட்டு பாராட்டும், பொன்னாடை போர்த்தல்களும் நடைபெறும்போது ஆபத்தான காலத்தில் உயிரைக் கையில் பிடித்தபடி மக்களுக்கு உண்மையான சேவையாற்றியவர்கள் பற்றி இவர்கள் என்ன கூறப்போகிறார்கள்? ஒரு வருட காலம் ஊதியமே பெறாமல் மகாவித்தியாலயத்தில் கற்பித்த ஆசிரியர்கள், தம்மை வளப்படுத்திக் கொள்ள வசதிகள் வந்தபோதும் அவற்றைப் புறந்தள்ளி பொது நோக்கே ஒன்றாக சேவை செய்த எம்போன்றவர்கள் பற்றி இவர்களால் நினைத்து பார்க்கவாவது முடிந்ததா? என்று கேட்டு விட்டுச் சிரித்தார்.

புங்குடுதீவு மக்களின் இடப்பெயர்வு பற்றி தகவல்களை அறியவேண்டுமானால் மு.பொ. எழுதிய "கைசெய்யப்பட்ட கிராமம்" என்ற குறுநாவலையும் 'The Song of a Liberated Zone' என்கிற ஆங்கில கவிதை நூலையும் வாசித்துப் பார்க்கவேண்டும்.

## யாழ்/ புங்குடுதீவு மகா வித்தியாலயம்

இலவசக்கல்வியின் தந்தை கல்வியமைச்சர் கௌரவ C.W.W. கன்னங்கரா அவர்களாலும் தீவுப்பகுதிப் பிரதிநிதியாகவும், அரசாங்க சபைத்தலைவராகவும் விளங்கிய சேர்.வைத்திலிங்கம் துரைசுவாமி அவர்களாலும் 17.01.1946 இல் அரசினர் கனிஷ்ட ஆங்கில வித்தியாலயம் (Government Junior English School) என்ற பெயரில் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலையே இன்றைய புங்குடுதீவு மகா வித்தியாலயம். எமது கிராமத்தில் ஆங்கிலப் பாடசாலை ஒன்றை உருவாக்குவதற்காக முன்னின்று உழைத்த உள்ளூர்ப் பிரமுகர்களான அன்றைய கிராம சபைத் தலைவர் திருவாளர்கள் வ. பசுபதிப்பிள்ளை. ஆ.சரவணமுத்து உடையார், க.யோகுப்பிள்ளை, க. அம்பலவாணர் ஆகியோர் காலத்தால் போற்றப்பட வேண்டியவர்கள். இவ்வித்தியாலயம் 17.01.1946 இல் புங்குடுதீவு ஸ்ரீ கணேச வித்தியாலயத்தின் ஒருபகுதிக் கட்டிடத்தில் 150 மாணவர்களுடன் ஆரம்பிக்கப்பட்டது. க. அம்பலவாணர் அவர்கள் புங்குடுதீவின் மத்திய பகுதியில் அமைந்துள்ள தனது காணியை பாடசாலைக்கு அன்பளிப்புச் செய்தார். இக்காணியில் உள்ளூர் மக்களினதும், தனவந்தர்களினதும் நிதி உதவியுடன் இப்பாடசாலைக்கென ஒரு நிரந்தரக் கட்டிடம் அமைக்கப்பட்டு 03.03.1948 இல் புதிய கட்டிடத்திற்கு இடம் மாற்றப்பட்டது. அரசினால் ஆங்கில மொழிக் கல்விக்காக ஆரம்பிக்கப்பட்ட இவ்வித்தியாலயம், பின்னர் அரசின் சுய பாஷைக் கல்வித் திட்டத்திற்கமைய கற்றல் கற்பித்தல் பணியை மேற்கொண்டு வருகின்றது. ஆரம்பகால அதிபராக கே.எம்.தம்பையா அவர்கள் குறிப்பிடப்படுகின்றார்.

15.09.1948 இல் பெற்றோர் ஆசிரியர் சங்கத்தினை ஆரம்பித்தார். இவருக்கு பக்க பலமாக சு. வில்வரெத்தினம், பண்டிதர். மு.ஆறுமுகம், என்.இராசரெத்தினம், ரி.அம்பலவாணர், சி.முத்துக்குமாரசாமி, திருமதி த.யோகாம்பிகை, செல்வி.தி. ஞானபூரணி போன்ற உதவி ஆசிரியர்கள் இருந்துள்ளனர். 1953 இல் முதன் முதலில் சிரேஷ்ட பாடசாலைத் தராதரப் பத்திரப் பரீட்சைக்கு (S.S.C. Examination) இங்கிருந்து மாணவர்கள் தோற்றியுள்ளனர். இப்பரீட்சையில் சித்தியடைந்த முதல் மாணவனாக செல்வன் ஆர்.கனகலிங்கம் குறிப்பிடப்படுகின்றார்.

01.04.1955 இல் சு.வில்வரெத்தினம் அவர்கள் பாடசாலையின் அதிபராக நியமிக்கப்பட்டார். இப்பாடசாலை இரு நேரப்பாடசாலையாக மாற்றப்பட்டது. மகா வித்தியாலயமாக தரம் உயர்த்தப்பட்டது. சைவ மாணவர்களுக்கான வழிபாட்டறை, வகுப்பறைக்கட்டிடம், உட்புறத் திறந்த வெளியரங்கு, கிணறு போன்றன அமைக்கப்பட்டன. இக்காலப்பகுதியில் 419 மாணவர்கள் கல்வி கற்றுள்ள அதேவேளை 15 ஆசிரியர்கள் கல்வி கற்பித்துள்ளனர். 01.01.1963 இல் அதிபராக வி.சோமசுந்தரம் அவர்கள் நியமனம் பெற்றார். இவர் முன்னைய அதிபரின் பணிகளைத் தொடர்ந்து முன்னெடுத்துச் சென்றார். 01.01.1964 இல் சு.வில்வரெத்தினம் அவர்கள் மீண்டும் அதிபராக கடமையேற்றார். இவருடைய காலத்தில் விளையாட்டுத்துறையில் பாரிய சாதனைகள் படைக்கப்பட்டன. இதற்கு பக்கபலமாகத்திகழ்ந்த விளையாட்டுத்துறைப் பொறுப்பாசிரியர் ஜே. செல்லையா அவர்களை என்றும் மறந்து விட முடியாது. 1966 இல் இப்பாடசாலை மாணவனான சி. தனபாலசுந்தரம் யாழ். மாவட்ட மட்டத்தில் 100 மீற்றர், 200 மீற்றர் குறுந்தூர ஓட்டங்களில் முதலாம் இடங்களைப் பெற்றது மட்டுமல்லாமல் மாவட்ட சாதனைகள் படைத்தார். இவர் 1966இல் அநுராதபுரத்தில் நடைபெற்ற அகில இலங்கை மெய்வல்லுநர் போட்டியில் பங்குபற்றி 100 மீற்றர், 200 மீற்றர் குறுந்தூர ஓட்டங்களில் இரண்டாம் இடங்களைப் பெற்று பாடசாலையின் பெயரை அகில இலங்கை ரீதியில் பிரபல்யப்படுத்தினார். இதனால் இவருக்கு அமெரிக்கப் புலமைப்பரிசில் கிடைக்கப் பெற்றமை குறிப்பிடத்தக்கதாகும். இவருடைய காலத்தில் இவருக்குப் பக்கபலமாக அ.க.கந்தையா (கண்ணையா), இ.குலசேகரம்பிள்ளை, சி,மாணிக்கம், .க.தாமோதரம்பிள்ளை, திருமதி சு.யோ.பூராசா, திருமதி ந.இராசரெத்தினம், திருமதி பொ.விஜயரெத்தினம், திருமதி க.வடிவேலு ஆகிய உள்ளூர் ஆசிரியர்கள் இருந்துள்ளனர்.

19.07.1967 இல் இப்பாடசாலை அதிபராக சி.இராசநாயகம் அவர்கள் நியமிக்கப்பட்டார். பாடசாலையில் கல்விப்பொதுத் தராதரப் பத்திர உயர்தர வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டன. பாடசாலை மாணவர்களுக்கு சீருடை அறிமுகப்படுத்தப்பட்டது. பாடசாலைக்காணி மேலும் விரிவு படுத்தப்பட்டது. விளையாட்டுத்துறை புதுமெருகு பெற்றது. யாழ். மாவட்ட மட்ட மெய்வல்லுநர் போட்டியில் சாதனைகள் படைக்கப்பட்டன. இக்காலப்பகுதியில் புங்குடுதீவு கல்வி வளர்ச்சிக் கழகம் இப்பாடசாலையின் கல்வி வளர்ச்சியில் கூடிய கவனம் எடுக்கத் தொடங்கியது. கல்வி வளர்ச்சிக் கழகத்தினால் பாடசாலைக்கு விஞ்ஞான உபகரணங்கள், தளபாடங்கள், வாயுப் பிறப்பாக்கிகள், தட்டச்சுப் பொறிகள், றோணியோ இயந்திரம் போன்றவை அன்பளிப்புச்செய்யப்பட்டன. பாடசாலைக்கு இச்சேவைகளை வழங்கிய கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் க.மதியாபரணம் J.P அவர்களும், செயலாளர் சு.யோ.பூராசா அவர்களும் என்றும் பாராட்டப்பட வேண்டியவர்கள்.

01.08.1968 இல் பாடசாலை அதிபராக இ.சச்சிதானந்தம் அவர்கள் நியமனம் பெற்றார். இவர் வெளியூரைச் சேர்ந்தவராக இருந்த போதிலும் பாடசாலையில் தங்கியிருந்து பாடசாலையின் கல்வி விளையாட்டுத்துறை வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டார்.விளையாட்டு வீரர்களுக்கு பாடசாலை முடிவடைந்த பின்னர் வழங்கப்படும் விசேட பயிற்சிகளில் ஜே.செல்லையா ஆசிரியர் அவர்களுடன் அரைக்காற்சட்டையுடன் மைதானத்தில் இறங்கிப் பயிற்சி அளிப்பது வழமை. இவரே பாடசாலையில் பூ மரங்களை நாட்டி பாடசாலைச் சூழலை அழகு படுத்தியவர். 1969 இல் க.பொ.த. உயர்தர பரீட்சையில் சித்தியடைந்த செல்வன்.ப.சுந்தரலிங்கம் இங்கிருந்து பல்கலைக்கழகம் சென்ற முதல் மாணவனாகத் திகழ்கின்றார். இக்காலப்பகுதியில் உயர்தர வகுப்பில் கல்வி கற்பித்த ஆசிரியர்களில் மு.தளையசிங்கம், வித்துவான் பொன்.கனகசபை, இராஜரத்தினம், செல்வி ந. குழந்தைவேலு ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

01.07.1970இல் கு.வி.செல்லத்துரை அவர்கள் அதிபராக நியமனம்பெற்றார். இவருடைய காலத்திலேயே பாடசாலையின் குடிநீர் பிரச்சினைக்கு நிரந்தர தீர்வு காணப்பட்டது. புங்குடுதீவைச் சேர்ந்த கொழும்பு பிரபல வர்த்தகர் நா.க.மயில்வாகனம் அவர்களின் நிதி உதவி மூலம் புங்குடுதீவு ஸ்ரீ சுப்பிரமணிய மகளிர் வித்தியாலயத்தில் புதிய கிணறு ஒன்று அமைக்கப்பட்டு அங்கிருந்து குழாய் மூலம் குடிநீர் வழங்கல் சேவை ஆரம்பித்து வைக்கப்பட்டது. இப்பாடசாலை மாணவர்களான வே.சத்தியகுமார் (உயரம் பாய்தல்), மு. அரியராசா (200 மீற்றர்) ஆகியோர் காலியில் நடைபெற்ற அகில இலங்கை மெய்வல்லுனர் போட்டியில் பங்குபற்றி உள்ளனர். செல்வன் சதானந்தன் பரிதி வட்டம் எறிதலில் மாவட்ட சாதனையை நிலை நாட்டியதோடு, அகில இலங்கை ரீதியிலான போட்டியில் இரண்டாம் இடத்தையும் பெற்றுள்ளார். இதனால் இவருக்கு அமெரிக்க புலமைப்பரிசில் பெற வாய்ப்புக்கிட்டியது.

மு.இராமலிங்கம் அவர்கள் 02.01.1972 இல் பாடசாலை அதிபராக நியமனம்பெற்றார். இவருடைய காலத்தில் க.பொ.த (உயர்தர) விஞ்ஞான, வர்த்தகப் பிரிவுகள் ஆரம்பிக்கப்பட்டன. விளையாட்டு மைதானத்திற்குரிய பார்வையாளர் அரங்கு அமைக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் 651 மாணவர்களும் 23 ஆசிரியர்களும் இருந்துள்ளனர்.

14.03.1973 இல் க.மயில்வாகனம் அவர்கள் அதிபராக நியமனம் பெற்றார். இவருடைய காலத்திலும் கல்வி, விளையாட்டுத்துறை மேலும் வளர்ச்சி கண்டது. பாடசாலையில் ஏற்பட்ட இட நெருக்கடியை தீர்ப்பதற்காக இருமாடிக்கட்டிடம் ஒன்றை அமைப்பதற்காக அத்திவாரம் இடப்பட்டது.

19.10.1973 இல் பாடசாலை அதிபராக பண்டிதர் வி.வ.நல்லதம்பி அவர்கள் நியமனம் பெற்றார். அத்திவாரம் இடப்பட்டிருந்த இருமாடிக்கட்டிடம் இவருடைய காலத்திலேயே பூர்த்தி செய்யப்பட்டு, 17.03.1975இல் திறந்து வைக்கப்பட்டது. இத்துடன் பாடசாலையின் வெள்ளிவிழா, கோலாகலமாக கொண்டாடப்பட்டு வெள்ளிவிழா மலரும் வெளியிட்டு வைக்கப்பட்டது. பாடசாலைக்கு மின்சார விநியோகம் பெறப்பட்டது. மாணவத் தலைவர்கள் இலச்சினை, 'ரை' அணியும் முறை அறிமுகப்படுத்தப்பட்டது. 1976 இல் வர்த்தகப்பாட அறை அமைக்கப்பட்டது. மலசல கூடங்கள் அமைக்கப்பட்டன. கோழி வளர்ப்பு அறிமுகம் செய்து வைக்கப்பட்டது.

புங்குடுதீவு கல்வி வளர்ச்சிக் கழகத்தினால் அன்பளிப்புச் செய்யப்பட்ட வாயுப்பிறப்பாக்கிகளை வைத்து இயக்குவதற்கு 1978இல் புதிய கட்டிடம் அமைக்கப்பட்டு இயக்கி வைக்கப்பட்டது. கிறிஸ்தவ மாணவர்களின் வழிபாட்டிற்கென பெற்றோர்களின் நிதி உதவியுடன் செபக்கூடம் அமைக்கப்பட்டது. இம் முயற்சியில் திருமதி மே.தி.வசந்தகுமார் ஆசிரியை அதிபருக்கு பக்கபலமாக நின்று உழைத்துள்ளார். இப்பாடசாலையின் மாணவி சின்னத்துரை வசந்தலட்சுமி காலமானபோது அவரின் நினைவாக அவரது தந்தையார் சின்னத்துரை அவர்களால் பிரதான கேற் ஒன்று செய்து கொடுக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் பாடசாலையில் 737 மாணவர்களும், 26 ஆசிரியர்களும் இருந்துள்ளனர். இவர்களுடைய காலத்தில் த.சிவகுரு அவர்கள் பிரதி அதிபராக கடமையாற்றியுள்ளார்.

23.10.1980 இல் மீண்டும் சி.இராசநாயகம் பாடசாலை அதிபராகவும் கொத்தணி அதிபராகவும் நியமிக்கப்பட்டார். இவருடைய காலத்தில் புங்குடுதீவைச் சேர்ந்த கொழும்பு பிரபல வர்த்தகர் பா.பாலசுந்தரம், அவரது தந்தையார் அமரர் பொன்னையா பாலசிங்கம் அவர்களின் ஞாபகார்த்த பரிசளிப்பு நிதியத்திற்காக ரூபா 15,000 புங்குடுதீவு மக்கள் வங்கிக் கிளையில் வைப்புச் செய்யப்பட்டது. 01.03.1983 இல் க.செல்லத்துரை அவர்கள் பாடசாலை அதிபராகவும் கொத்தணி அதிபராகவும் நியமனம் பெற்றார். இவருடைய காலத்தில் மனையியல் கூடம், வகுப்பறைக் கட்டிடம் என்பன கட்டப்பட்டன. புங்குடுதீவு - நயினாதீவு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தினால் பாரிய குடிநீர்த் தொட்டி (2500 கலன்) அமைக்கப்பட்டது. பாடசாலையின் சிரேஷ்ட மாணவர் மன்றத்தினால் இடம்பெயர்ந்த மக்களுக்கு நிதி சேகரிக்கு முகமாக பாடசாலை திறந்த வெளி அரங்கில் மாபெரும் நாடகவிழா நடாத்தப்பட்டு கிடைக்கப்பெற்ற நிதிமூலம் பொருட்கள் வாங்கி வழங்கப்பட்டன. பாடசாலையின் வளர்ச்சியில் இவருக்குப் பக்கபலமாக உள்ளூர் ஆசிரியர்களான ஐ.சண்முகநாதன், ந.தர்மபாலன், த.கருணாகரன், செ.ஈஸ்வரமூர்த்தி, ந.கலைநாதன், ஈ.ஜெயசீலன், திருமதி வே.ம.வசந்தகுமார், திருமதி யோ.பூராசா, திருமதி. தி. கலைநாதன், திருமதி.ம.இராமச்சந்திரன், ஆகியோர் இருந்துள்ளனர்.

15.06.1987 இல் ஏ.சி.நல்லையா அவர்கள் பாடசாலை அதிபராகவும் கொத்தணி அதிபராகவும் நியமனம் பெற்றார். இவருடைய காலத்தில் சத்துணவுத்திட்டம் அரசால் நடைமுறைப்படுத்தப்பட்டது. துவிச்சக்கரவண்டித் தரிப்பிடம் அமைக்கப்பட்டது. புங்குடுதீவு பிரபல வர்த்தகர் சந்திரன் அவர்களால் பாடசாலையின் முன்புறத்தில் 115 அடி நீளத்திற்கு மதில் அமைக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் 637 மாணவர்களும் 23 ஆசிரியர்களும் இருந்துள்ளனர். இவருடைய காலத்தில் பாடசாலையின் பிரதிஅதிபராக ந.தர்மபாலன் அவர்கள் கடமையாற்றியுள்ளார். 26.05.1990 இல் க.பேரம்பலம் அவர்கள் பாடசாலை அதிபராகவும் புங்குடுதீவு கொத்தணி அதிபராகவும் நியமனம் பெற்றார். இவருடைய காலத்திலேயே பாரிய இடப்பெயர்வு இடம்பெற்றது. இடம் பெயர்ந்த புங்குடுதீவுப் பாடசாலைகள் யாவும் சேர்ந்து யாழ். சன்மார்க்க மகா வித்தியாலயத்தில் கொத்தணி அதிபரின் தலைமையில் மாலை நேரப்பாடசாலையாக சில நாட்கள் இயங்கின. பின்னர் இடப்பிரச்சினை காரணமாகப் பெரியபுலம் மகா வித்தியாலயத்தில் சிறிது காலம் இயங்கியுள்ளன. மீண்டும் இடப்பிரச்சினை காரணமாக அதிபர் ஆசிரியர்கள் கந்தர்மடம் யூனிவேர்சல் தனியார் கல்வி நிலைய அதிபர் க.ஐங்கரநேசன் அவர்களை அணுகியதன் மூலம் அவர் தனது கல்வி நிலையத்தின் ஒரு பகுதியில் இப்பாடசாலையைக் காலை நேரப் பாடசாலையாக இயங்குவதற்கு வழி செய்து உதவினார்.

இங்கு இப்பாடசாலை ஒன்றரை வருடங்களுக்கு மேலாக பல்வேறு சிரமங்களுக்கு மத்தியில் இயங்கியது. 14.01.1994 இல் பாடசாலை அதிபராக ந.தர்மபாலன் அவர்கள் நியமனம்பெற்றார். இவருடைய காலத்திலேயே பாடசாலையை தனித்துவமாக அமைப்பதற்குரிய காணி 81ஆம் இலக்கம் பிறவுண் வீதி (நீராவியடி) யில் பாடசாலை சமூகத்தினரால் தெரிவு செய்யப்பட்டது. அன்றைய அரசாங்க அதிபர் சி.மாணிக்கவாசகர் அவர்களை அணுகியதன் விளைவாக 100X20 அடியில் 3 கொட்டகைகளை அமைப்பதற்குரிய நிதியாக 250,000 ரூபாவை ஒதுக்கீடு செய்து உதவினார். யாழ். கல்வித் திணைக்களத்தின் அனுமதியுடன் பிறவுண் வீதியில் தனியார் காணியில் புதிய கட்டிடங்கள் (கொட்டகைகள்) அமைக்கப்பட்டன. பாடசாலைக்குரிய 50 நீள மேசைகளையும், 50 நீள வாங்குகளையும் புங்குடுதீவு - நயினாதீவு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் செய்து உதவியது. அன்றைய சங்கத் தலைவர் ப.கனகலிங்கம், உபதலைவர் ஐ.சண்முகநாதன் ஆகியோர் என்றும் நினைவில் கொள்ளப்பட வேண்டியவர்கள்.

பாடசாலைப் பழைய மாணவர் சங்கத்தால் திரட்டப்பட்ட நிதி மூலம் பாடசாலை வகுப்பறைகள், நூலகம், விஞ்ஞான ஆய்வு கூடம் போன்றவை, மாணவர்களுக்கு கொட்டகையில் இருந்து கற்பது போன்றதோர் உணர்வு ஏற்படாதவாறு அழகுற வடிவமைக்கப்பட்டது. இக்கட்டிடத் தொகுதி யாழ். அரசாங்க அதிபர் சி.மாணிக்கவாசகர் அவர்களால் 01.03.1994 இல் திறந்து வைக்கப்பட்டது. இப்பெரும் முயற்சியில் வைத்திய கலாநிதி. ஆ.பேரின்பநாதன் (தலைவர் பழைய மாணவர் சங்கம்), கிராமசேவையாளர் நா.சுந்தரராசா (செயலாளர் பழைய மாணவர் சங்கம்), சு.கருணாகரன் (செயலாளர். பாடசாலை அபிவிருத்தி சங்கம்) எஸ். தளையசிங்கம் (கிராமசேவையாளர்), க.தர்மகுணசிங்கம் (பிரதி அதிபர்), ந.கலைநாதன் ஆசிரியர், ஐ.சண்முகநாதன் (அதிபர் றோமன்.க.வித்தியாலயம்), சு.யோ.பூராசா (அதிபர், புங்குடுதீவு மேற்கு அ.மி.வித்தியாலயம்), ம.பாலசிங்கம் (காவலாளி) போன்றவர்கள் அதிபருக்கு பக்கபலமாக இருந்து செயற்பட்டுள்ளனர்.

பாடசாலையின் உதைபந்தாட்ட அணிகள் யாழ். குடாநாட்டின் பிரபல கல்லூரிகளின் அணிகளுடன் மோதி பல வெற்றிகளை பெற்றதோடு, பாடசாலையின் பெயரை மாவட்ட மட்டத்தில் பிரபல்யமடையச் செய்தன. யாழ்-பரீஸ் ரெக்ஸ் உரிமையாளரான சோமசுந்தரம் அவர்கள் உதைபந்தாட்ட அணிக்கான சீருடைகளை பாடசாலைக்குரிய நிறத்தில் (பச்சை -மஞ்சள்) செய்து உதவினார். இடம்பெயர்ந்து வசதிக்குறைவான இருப்பிடங்களில் வசித்த மாணவர்களின் நன்மை கருதியும் யாழ் நகரில் காணப்பட்ட எரிபொருட் தட்டுப்பாட்டை கவனத்திற் கொண்டும் மாணவர்கள் இரவு நேரத்தில் வந்து கல்வி கற்பதற்கு பாடசாலையில் ஒளி வசதி செய்து கொடுக்கப்பட்டது. பழைய மாணவர் சங்கத்தின் ஒத்துழைப்புடன் இல்ல விளையாட்டுப்போட்டி, கலைமகள் விழா, தமிழ்த் தினம், ஆங்கில தினம், ஆசிரியர் தினம் போன்றவை சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. இந்த வகையில் தனது கல்விப்பணியைச் சிறப்பாக செய்து கொண்டிருந்த வேளையில் இலங்கை இராணுவத்தினர் பலாலி இராணுவ முகாமிலிருந்து பாரிய இராணுவ நடவடிக்கையில் இறங்கினர்.

இதனால் 30.10.1995 இல் இப்பாடசாலை தென்மராட்சிக்கு இடம் பெயர்ந்தது. தென்மராட்சியில் சாவகச்சேரி - கச்சாய் அரசினர் தமிழ் கலவன் வித்தியாலயத்தில் 1996 ஜனவரியில் இருந்து 1996 ஏப்ரல் வரை மாலை நேரப் பாடசாலையாக நடைபெற்றுள்ளது. தென்மராட்சி, இராணுவத்தின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்ட பின்னர் யாழ்ப்பாணம் திரும்பிய இப் பாடசாலை 17.06.1996 இல் புங்குடுதீவில் தனது சொந்த இடத்திற்கு திரும்பியது. 17.10.1991இல் பாடசாலை சமூகத்தினர் இடம் பெயர்ந்த போது விட்டுச் சென்ற பாடசாலையின் தோற்றத்தை 17.06.1996 இல் திரும்பி வந்தபோது அவர்களால் காணமுடியவில்லை. பாடசாலை வேலிகள் அழிந்திருந்தன. பாடசாலையிலிருந்த தட்டச்சுப் பொறிகள், தொலைக்காட்சிப் பெட்டி போன்றவற்றைக் காணவில்லை. அலுவலகத்திலிருந்த முக்கிய ஆவணங்கள் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. விஞ்ஞான கூடம், மனையியல் கூடம், மேல்மாடி மண்டபம், மரவேலைக் கூடம், ஆசிரியர் அறை, பழைய அலுவலகம் போன்றவை மனித சஞ்சாரமற்ற பகுதி போல் அலங்கோல நிலையில் இருந்தன. 1997இல் வேலணை பிரதேச சபை மூலம் ஒதுக்கீடு செய்யப்பட்ட நிதி மூலம் மாணவர்களுக்கு சத்துணவு வழங்கப்பட்டது. 1997இல் நடைபெற்ற யாழ். மாவட்ட ரீதியான சங்கீத, நடன, நாடகப் போட்டியில் இப்பாடசாலை மாணவர்களது நாட்டுக் கூத்து இரண்டாம் இடத்தைப் பெற்றது. வேலணை பிரதேச சபையினூடாகவும், அரசினூடாகவும் இரண்டு றோணியோ இயந்திரங்களும் விஞ்ஞான உபகரணங்களும் பெறப்பட்டன.

25.03.1998இல் இப்பாடசாலையின் அதிபராக க.தர்மகுணசிங்கம் அவர்கள் நியமனம் பெற்றார். இவருடைய காலப்பகுதியில் ஜேர்மன் தொழில் நுட்ப நிறுவனத்தின் உதவியினால் மலசல கூடங்கள் அமைக்கப்பட்டன. தரம்-1, தரம்-2 இற்கான செயற்பாட்டறை அமைக்கப்பட்டன. கனடா - புங்குடுதீவு பழைய மாணவர் சங்கத்தின் உதவியினால் 2001 இல் சத்துணவும், தொண்டர் ஆசிரியருக்கான வேதனமும் வழங்கப்பட்டது. 2001 இல் சமூகக்கல்வி மன்றத்தினால் "துலக்கம்" என்னும் சஞ்சிகை வெளியிட்டு வைக்கப்பட்டது. தமிழ்த் தினம், சமூகக்கல்வி தினம், ஆசிரியர் தினம், இல்ல விளையாட்டுப் போட்டி, நவராத்திரி விழா, ஒளி விழா போன்ற நிகழ்ச்சிகள் வருடாவருடம் நடைபெற்று வருகின்றன.தற்போது 256 மாணவர்களும், 17 ஆசிரியர்களும் (தொண்டர் ஆசிரியர்கள் உட்பட) உள்ளனர். பிரதி அதிபராக ச.கணேஸ்வரன் அவர்கள் கடமையாற்றி வருகின்றார்.

## யாழ்/ புங்குடுதீவு ஸ்ரீ கணேச மகா வித்தியாலயம்

அமரர் வ.பசுபதிப்பிள்ளை அவர்கள் சைவப் பெருமக்கள் பலரது ஒத்துழைப்புடன் பெரியார் நீ. அம்பலவாணர் (மூத்ததம்பி) அவர்களது வளவில் முதன் முதலாக 1910 ஆம் ஆண்டு பங்குனித் திங்கள் மூன்றாம் நாளில் (03.03.1910) இக் கல்விக் கூடத்தினை உருவாக்கினார். சடையர்வளவில் அரசமரத்தடியில் சிறுகட்டிடத்தில் இது ஆரம்பமாகியது

இயற்கைச் சூழலில் ஆலமர நிழலிலும், அரசமர நிழலிலும், மாணவர் மகிழ்ச்சியுடன் இங்கு கல்வி கற்றனர். இவ் வித்தியாலயம் 1914 ஆம் ஆண்டு வரை அரசினரின் நன்கொடைப் பண உதவி எதுவுமின்றி இயங்கியது. 1914 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 10 ஆம் திகதி அரசினர் உதவி நன்கொடை பெறும் பாடசாலையாக அங்கீகரிக்கப் பெற்றது.

1923 ஆம் ஆண்டு உயர்தர வகுப்புகளைக் கொண்ட மத்திய பாடசாலையாக இது பதிவு பெற்றது. திண்ணைப் பள்ளிக் கூடமாக இயங்கி வந்த இவ்வித்தியாலயம் இவ்வாண்டிலேயே நவீன வசதிகள் கொண்ட புதிய கட்டிடத்திற்கு (தற்பொழுது அமைந்துள்ள இடத்திற்கு) இடம் மாறிற்று. 1936 ஆம் ஆண்டில் இவ்வித்தியாலயம் சிரேஷ்ட உயர் நிலைப் பாடசாலையாக தரம் உயர்த்தப் பெற்றது. 1940 ஆம் ஆண்டு இவ்வித்தியாலயப் பழைய மாணவர் சங்கம் எடுத்த பெருவிழாவில் பிரதம அதிதியாகக் கலந்து கொண்ட வித்தியாதிபதி எல்.எம்.டி றொபின்சன் அவர்களிடம் புங்குடுதீவிற்கு ஆங்கிலப் பாடசாலையொன்று வேண்டுமென வேண்டுகோள் விடுக்கப்பட்டது. அவ்வேண்டுகோளின் பயனாக புங்குடுதீவு மகாவித்தியாலயம் 17.01.1946 இல் இவ்வித்தியாலய மண்டபத்தில் அங்குரார்ப்பணம் செய்து வைக்கப்பட்டது. 1967 இல் கல்விப் பகுதியின் பாடசாலைகள் புனரமைப்பின் காரணமாக இப்பாடசாலை 1972 ஆம் ஆண்டு முதல் கனிஷ்ட வித்தியாலயமாக்கப்பட்டது. பல்லாண்டுகளாக சிரேஷ்ட பாடசாலையாக விளங்கிய இவ்வித்தியாலயம் கல்வித்துறையிலும் மாணவர் தொகையிலும் பெருவளர்ச்சி கண்டது. இதன் காரணமாக மகா வித்தியாலயமாக இதனைத் தரம் உயர்த்த வேண்டுமென பெற்றோர்கள் விடுத்த கோரிக்கையின் பேறாக 05.02.1980 இல் இவ்வித்தியாலயம் கல்வியமைச்சினால் மகாவித்தியாலயமாகத் தரம் உயர்த்தப்பட்டது. க.பொ.த. (உயர்தர) கலைவகுப்புகளை நடத்துவதற்கும் அங்கீகாரம் பெற்றது. துரித வளர்ச்சி கண்ட பாடசாலை 1991 இல் நிகழ்ந்த இடப் பெயர்வினால் 1997 வரை சொந்த இடத்தில் இயங்க முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டது. யாழ் நகரிற்கு இடம்பெயர்ந்தது. ஆரம்பத்தில் கொக்குவில் பெரியபுலம் வித்தியாலயத்தில் இயங்க ஆரம்பித்தது. பின்னர் கந்தர்மடம் யூனிவேர்சல் கல்வி நிறுவனத்தில் சில பாடசாலைகளுடன் இணைந்து இயங்கியது. அங்கும் இட நெருக்கடி காரணமாக சில வசதியீனங்களை எதிர்நோக்க வேண்டியதாயிற்று. முஸ்லிம் கதிஜா மகாவித்தியாலயத்திற்கு இடமாற்றப்பட்டு தனித்து இயங்கத் தொடங்கியது. பழைய மாணவர் சங்கத்தினரதும், மாணவர் அமைப்பினதும் கல்வித்திணைக்களத்தினதும் உதவியினால் ஓரளவு வசதிகளைப் பெற்று புதுமெருகுடன் இயங்கத் தொடங்கியது. 1995 நவம்பரில் யாழ் நகர இடப் பெயர்வோடு வலிகாமத்தில் சிலரும் வன்னியில் சிலருமாகச் சிதறடிக்கப்பட்டனர். மட்டுவில் மகாவித்தியாலயத்தில் சில தினங்கள் புங்குடுதீவுப் பாடசாலைகள் இணைந்து நடந்த பொழுதிலும் சீராக இயங்க முடியவில்லை. 1996 இலிருந்து கணேச மகா வித்தியாலயம் இயங்காதிருந்த பொழுதிலும் பழைய மாணவர் சங்கத்தினரின் பெரு முயற்சியினால் புங்குடுதீவில் மீண்டும் 24.03.1997 இல் இயங்க ஆரம்பித்தது.

அமரர் பசுபதிப்பிள்ளையின் பின்னர் விதானையார் க.மு.சின்னத்துரை அவர்கள் 1957 ஆம் ஆண்டு வரை இவ்வித்தியாலயத்தின் முகாமையாளராகப் பணியாற்றினார் அவரது மறைவின் பின்னர் திருமதி தையல்நாயகி கதிரவேலு முகாமையாளராகப் பணியேற்று வழி நடத்தினார். 1.5.1962 இல் அரசு இவ்வித்தியாலயத்தைக் கையேற்றது. இவ்வித்தியாலயத்தின் முதற் தலைமையாசிரியராக விளங்கியவர் பெரியார் கா.நமசிவாயம்பிள்ளை (நாகலிங்கம்) அவர்களாவார். இப்பெரியாரே தேவாரத் திருமுறைகளைப் பண்ணோடு ஓதும் பழக்கத்தைப் புகுத்தியவர் எனலாம்.

இவரின் பின் தலைமையாசிரியராக விளங்கியவர் பேராசிரியர் சி.இ.சதாசிவம்பிள்ளை (இளையப்பா உபாத்தியாயர்) அவர்கள். பழைய மாணவர் சங்கத்தைத் தோற்றுவித்து, அதன் மூலம் இவ்வித்தியாலயத்துக்கும், புங்குடுதீவிற்கும் புத்தெழுச்சி ஊட்டியவர்.

அன்னாரின் பின் தலைமை ஆசிரியராக விளங்கியவர் அமரர் க.செல்லத்துரை அவர்களாவார்.இவ்வித்தியாலயத்தில் பாலர் களரி ஒன்றைத் தோற்றுவித்த பெருமையும் இவரையே சாரும். ஸ்ரீ கணேச வித்தியாலயமே அவரது உயிர் மூச்சாக விளங்கியது. அன்னாரது அயரா உழைப்பினாலேயே புங்குடுதீவின் தலை சிறந்த கல்விக் கூடமாக இவ்வித்தியாலயம் மிளிர்ந்ததெனலாம்.

இதன் பின்னர் வை.கந்தையா அவர்கள் அதிபரானார். இவரது சேவைக் காலத்தில் இவ்வித்தியாலயத்தின் ஓலைக் கட்டிடம் ஓட்டுக் கட்டிடமாக மாறிற்று. உயர் வகுப்புகள் மீண்டும் ஆரம்பமாயின. 1971 ஜனவரி முதல் நா.கார்த்திகேசு அவர்கள் அதிபரானார். கனிஷ்ட வித்தியாலயமாக விளங்கிய இவ்வித்தியாலயம் மகா வித்தியாலயமாக தரம் உயர்த்தப்பட்டதுடன் மாடிக்கட்டிடம் உட்பட பல புதிய கட்டிடங்கள் நிறுவப்பட்டன. பெற்றோர்களது நிதியுதவியுடன் 8 பரப்புக் காணி இவ்வித்தியாலயத்திற்கெனக் கொள்வனவு செய்யப்பட்டது. நா.கார்த்திகேசு அவர்களைத் தொடர்ந்து சோ.சேனாதிராசா அவர்கள் 31.08.1982 வரை இவ்வித்தியாலயத்தின் அதிபராக பணியாற்றினார்.

1982 செப்டெம்பர் முதல் த.துரைசிங்கம் அவர்கள் இவ்வித்தியாலயத்தின் அதிபராக நியமனம் பெற்றதைத் தொடர்ந்து வித்தியாலயத்தின் வளர்ச்சிக்கான பல்வேறு திட்டங்கள் படிப்படியாகச் செயலுருப்பெற்றன. மாடிக்கட்டிடத்தின் மிகுதி வேலைகள் நிறைவு செய்யப்பட்டன. நூலகம் புதிய கட்டிடத்தில் திறந்து வைக்கப்பட்டது. இவரது சேவையைத் தொடர்ந்து நயினாதீவைச் சேர்ந்த மு.தர்மலிங்கம் அவர்கள் அதிபராக கடமையாற்றினார். இவரின் சீரிய சேவையிற் துலங்கிய வித்தியாலயம் புங்குடுதீவின் இடப்பெயர்வினால் யாழ் நகரிற்கு இடம் பெயர்ந்தது. இவர் 08.06.1992 இல் ஓய்வு பெற்றதை அடுத்து எமது கிராமத்தைச்சேர்ந்த செ.ஈஸ்வரமூர்த்தி அவர்கள் 09.06.92 இல் அதிபராகக் கடமையாற்றினார். பல நெருக்கடி நிறைந்த கால கட்டத்தில் பொறுப்பேற்ற இவர், தனது அயரா உழைப்பினால் வித்தியாலயத்தின் தனித்துவம் பேணப்பட்டது. இடம் பெயர்ந்த நிலையில் கஷ்டப்பட்ட போதும் தமது புத்தி சாதுரியத்தினால் நிரந்தர கட்டிட வசதிகள் நிறைந்த கைவிடப்படட நிலையிற் கிடந்த முஸ்லிம் கதிஜா மகா வித்தியாலயத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு இயங்க ஆரம்பித்த ஒரு மாத கால இடைவெளியில் 30.05.1993 இல் வவுனியாவுக்கு இடமாற்றம் பெற்றுச் சென்றார். அவரைத் தொடர்ந்து வித்தியாலயத்தின் உப அதிபராகக் கடமையாற்றிய ச.சதாசிவம் அதிபராகக் கடமையேற்றார்.

இவரது குறுகிய கால சேவையில் வித்தியாலயத்தின் பழைய மாணவர் சங்கத்தினர் உதவியுடன் வித்தியாலய தளபாடங்கள் உட்பட பல தேவைகள் நிறைவு செய்யப்பட்டன. இவரைத் தொடந்து காலஞ்சென்ற ஆசிரியர் பொ.சபாரெத்தினம் அவர்கள் அதிபராக நியமனம் பெற்று வந்தார். முதல் நாள் சம்பவத்திரட்டுப் புத்தகத்தில் கையெழுத்திட்டுவிட்டு கொழும்பு சென்று திரும்பி வந்ததும் வித்தியாலயத்திற்குச் சமுகமளிப்பதாகக் கூறிச் சென்றார். கொழும்பு புறப்பட்டுச் சென்றவரின் வருகைக்காக யமதர்மராசன் கிளாலிக் கடலின் மறுகரையில் காத்திருந்து அவரை அழைத்துச் சென்றான். பின்னரும் சில காலம் ச.சதாசிவம் அவர்களே அதிபராகக் கடமையாற்றினார். அவரைத் தொடர்ந்து சரவணையைச் சேர்ந்த ச.அமிர்தலிங்கம் அவர்கள் அதிபராகப் பொறுப்பேற்றுக் கடமையாற்றினார். மிகுந்த துடிதுடிப்புடைய இளைஞரான இவரது சேவைக்காலத்தில் இவ்வித்தியாலயம் கல்வித்துறையில் துரித வளர்ச்சி கண்டது.

இந்நிலையில் யாழில் இருந்து இடம் பெயர்ந்தமையினால் 1996 இல் இவ்வித்தியாலயம் இயங்க முடியாது போகவே ச.அமிர்தலிங்கம் அவர்கள் பத்தன கல்விக் கல்லூரி விரிவுரையாளராகப் பதவியேற்றார். அதிபராக இருந்த ச.சதாசிவம் அவர்களும் பதவியினின்றும் இடையிலேயே ஓய்வு பெற்றார். 1997 இல் யாழ் நகர் இராணுவக் கட்டுப்பாட்டிற்குள் வந்த பின்னர் புங்குடுதீவுப் பாடசாலைகள் சில இயங்க ஆரம்பித்தன. 24.03.1997இல் இவ்வித்தியாலயம் மீண்டும் தனது கல்விப்பணியை ஆரம்பித்தது. தற்பொழுது வித்தியாலயத்தின் அதிபராக சு.கு. சண்முகலிங்கம் அவர்கள் கடமையாற்றி வருகின்றார். இலங்கைத் தேசிய சர்வோதய இயக்கத் தலைவர் கலாநிதி ஏ.ரி.ஆரியரத்தினா அவர்களால் 06.03.1973 இல் நூலகம் திறந்து வைக்கப்பட்டது. இந்நூலகம் சிறப்புற இயங்குவதற்குத் தனியான கட்டிடமொன்றை வித்தியாலயத்தின் பழைய மாணவரான நா.சுப்பிரமணியம் அவர்கள் தமது தாயார் சின்னம்மா நாகலிங்கம் அவர்களின் நினைவாக அமைத்து உதவினார். மாணவர்களின் தினசரி வழிபாட்டிற்கு உதவும் வகையில் இவ்வித்தியாலயத்தில் 1956 புரட்டாதியில் ஆலயமொன்று தனியாக அமைக்கப்பட்டது. இவ்வாலயக் கட்டிடம் பழுதானதைத் தொடந்து வித்தியாலய மேடையின் தென்புறத்தில் புதிய ஆலயமொன்று பெரியார் நீ.மு.குமாரசுவாமி அவர்களால் அவரது பாரியார் சின்னம்மாவின் நினைவாக நிறுவப்பட்டுள்ளது.

புங்குடுதீவின் புகழை அகில இலங்கையிலும் நிலைநாட்டிய பெருமைக்குரிய ஸ்ரீ கணேச வித்தியாசாலை பழைய மாணவர் சங்கம் 1925 ஆம் ஆண்டு தை மாதம் 15 ஆம் திகதி ஆரம்பமானது. இதன் முதலாவது விழா 21.04.1925 இல் கொண்டாடப்பட்டது. அன்றைய தினம் கணேசமூர்த்திக்கு அபிஷேக ஆராதனை முதலியன செய்யப்பட்டு வித்தியாலய மண்டபத்தில் ஸ்தாபித்து பூசிக்கப்பட்டது. அப்போது சங்கத்தின் தலைவராக பேராசிரியர் சி.இ.சதாசிவம்பிள்ளையவர்களும், காரியதரிசியாக க.நாகலிங்கம் அவர்களும் விளங்கினர். புங்குடுதீவு மகாசன சபை, புங்குடுதீவு கொழும்பு மகாசன சேவா சங்கம், பழைய மாணவர் கழகம் முதலிய மூன்று சங்கங்களையும் தோற்றுவித்த பெருமை தாய்ச் சங்கத்திற்கே உரியது. புங்குடுதீவு உயரப்புலம் முற்ற வெளியைப் பொது விளையாட்டு மைதானமாக்கிய பெருமையும் இச்சங்கத்தினையே சேரும். இக்கலைத்தாயின் குழந்தைகள் கொழும்பிலும்அதன் கிளைச் சங்கத்தினை நிறுவி காலத்திற்குக் காலம் வித்தியாலயத்தின் தேவைகளை நிறைவேற்றுவதில் வெற்றி கண்டனர். அதற்குக் கொழும்பு வாழ் வர்த்தகப் பெருமக்கள் முன்னின்று உழைத்தமையை யாராலும் மறந்து விட முடியாது.

வித்தியாலயத்தின் பழைய மாணவரும், ஆசிரியருமான ச.சதாசிவம் அவர்கள் சம்பளமற்ற விடுமுறையில் சுவிட்சர்லாந்திற்கு சென்றிருந்த சமயம் தமது அயரா முயற்சியினால் அங்கும் புங்குடுதீவு ஸ்ரீ கணேச மகாவித்தியாலயத்தின் கிளைச் சங்கத்தை நிறுவி வித்தியாலயத்தின் புகழை நிலை நாட்டினார். அங்கு வாழும் எமது கலைத்தாயின் குழந்தைகள் அனைவரினதும் ஒத்துழைப்புடன் 1992 ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் விஜயதசமியன்று எமது கிளைச்சங்கத்தின் பெயரால் மிகப் பிரமாண்டமானதொரு வாணி விழா சூரிச் மாநகரில் நடைபெற்றமை இன்றும் நினைவு கூரத்தக்கது. கலைத்தாயின் வளர்ச்சிக்காக அவள் தம் குழந்தைகளினால் வழங்கப்பட்ட நிதி ரூபா 3,44,760 சுவிட்சர்லாந்துக் கிளையினால் 22.04.1994 இல் வித்தியால பழைய மாணவர் சங்கக் கொழும்புக்கிளை வங்கிக் கணக்கில் நிரந்தர வைப்புச் செய்யப்பட்டுள்ளது. இதேபோல் ஏற்கனவே கொழும்புக்கிளையினாலும் 20.09.1993 இல் ரூபா 30,000 அக்கணக்கில் வைப்புச் செய்யப்பட்டுள்ளது.

இப்பணத்தின் வட்டி மூலம் பாடசாலையின் அவ்வப்போதைய தேவைகள் நிறைவு செய்யப்பட்டு வருகின்றன. இன்று கொழும்புக்கிளைச் சங்கத்தின் தலைவராக சி.முருகானந்தவேலும் , பொருளாளராக தம்பிஜயா தேவதாஸும் கடமை புரிந்து வருவது குறிப்பிடத்தக்கது. இவ்வித்தியாலயத்தில் கா.பொ.த சாதாரணதரப் பரீட்சையில் ஆண்டுதோறும் அதிஉயர்ந்த சித்திகளைப் பெறும் மாணவர்களுக்கு புலமைப்பரிசில் வழங்கி ஊக்குவிக்கும் திட்டத்தினை அதிபராக கடமையாற்றிய த.துரைசிங்கம் அவர்கள் இவ்வித்தியாலயத்தில் கடமையாற்றி அமரத்துவம் அடைந்த அவர்தம் பாரியார் திருமதி.புவனேஸ்வரி துரைசிங்கம் அவர்களின் நினைவாக ஏற்படுத்தினார். அதனைத் தொடர்ந்து இவ்வித்தியாலயத்தின் பழைய மாணவியான அமரத்துவமடைந்த திருமதி நிர்மலா நடேசன் அவர்களின் நினைவாக அவர் தம் கணவர் சு.நடேசன் பத்தாயிரம் இலங்கை ரூபாவை வங்கியில் நிரந்தர வைப்புச் செய்து அதன் வட்டியை பரிசிலாக வழங்கும் திட்டத்தினையும் ஏற்படுத்தினார்.

இவ்வித்தியாலயத்தின் சங்கத்தில் முன்னின்று உழைத்தவர்கள் வரிசையில் திருமதி இ.திருமேனிப்பிள்ளை ஆசிரியை, நா.தில்லைநாதன் J.P, இ.பரமேஸ்வரன், திருமதி யோகம்மா பசுபதிப்பிள்ளை, அமரத்துவமடைந்த ஆசிரியர்களான ஆசிரியமணி சி.க.நாகலிங்கம், ச.கனகரத்தினம், து.வசந்தகுமார்,பொ.சபாரெத்தினம், மற்றும் சி.குழந்தைவேலு, நா.கந்தையா ஆகியோர் குறிப்பிடத்தக்கோர் ஆவர். இவ்வித்தியாலய மாணவியும் ஆசிரியையுமான திருமதி.இ.திருமேனிப்பிள்ளை அவர்களது சேவையை இவ்வித்தியாலயம் எளிதில் மறந்துவிடமுடியாது. பாடசாலை திறப்பு எந்த அதிபர் கடமையாற்றினாலும் அவரிடமே இருக்கும். நேரத்திற்கு வந்து பாடசாலை திறப்பதிலிருந்து பின்னர் பாடசாலை முடிவடைந்து பூட்டிச் செல்வது வரை அவரது கடமையாகவே இருந்தது. அமரரான ச.கனகரத்தினம் ஆசிரியர் அவர்கள் ஐந்தாம் ஆண்டு புலமைப்பரிசில் பரீட்சைக்கு மாணவர்களை தயார்படுத்தி அதிகமான மாணவர்களை வருடந்தோறும் சித்தியடையச் செய்த பெருமைக்குரியவர்.

இப்பொழுது இப்பாடசாலையில் 125 மாணவர்களும் 12 ஆசிரியர்களும் இருக்கின்றனர். இவ்வித்தியாலயத்தில் ஆரம்பக் கல்விபயின்ற எமது வித்தியாலய பழைய மாணவன் செல்வன் அ.இளங்குமரன் 1999 ஆம் ஆண்டு நடைபெற்ற க.பொ.த (உயர்தர) பரீட்சையில் அகில இலங்கை ரீதியில் அதிகூடிய உச்சப்புள்ளிகளைப் பெற்று சித்தியடைந்து எமக்கு பெருமை சேர்த்தார்.1910 ஆம் ஆண்டில் உதயமான இவ்வித்தியாலயம் தனது வெள்ளிவிழா, பொன்விழா, வைரவிழா, பவளவிழா அனைத்தையும் கடந்து நூற்றாண்டு விழாவை எதிர்நோக்கி நிற்கின்றது.

# யாழ் / புங்குடுதீவு

# ஸ்ரீ கமலாம்பிகை கனிஷ்ட மகா வித்தியாலயம்

இவ்வித்தியாலயம் 1935ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 16ஆம் திகதி ஐந்து மாணவர்களுடனும் இரண்டு ஆசிரியர்களுடனும் யாழ்ப்பாணம் சைவ வித்தியா அபிவிருத்திச் சங்கத்தினால் ஆரம்பிக்கப்பட்டது. இவ்வித்தியாலயம் படிப்படியாக வளர்ந்து 1991ஆம் ஆண்டின் இடப்பெயர்வின் போது 428 மாணவர்களையும், 14 ஆசிரியர்களையும் கொண்ட ஒரு கனிஷ்ட மகாவித்தியாலயமாக விளங்கியது.

யாழ்ப்பாணம் சைவ வித்தியா அபிவிருத்திச் சங்கத்தின் மேற்பார்வையின் கீழ் இயங்கி வந்த இப்பாடசாலை, 1962 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதலாம் திகதி அரசுடமையாக்கப்பட்டது.

இதன் அருகே இருந்ததும், ஐரோப்பிய காலனித்துவக் காலத்தில் மிஷனரிமார்களினால் ஸ்தாபிக்கப்பட்டதுமான யா/புங்குடுதீவு வடக்கு அமெரிக்கன் மிஷன் பாடசாலையும் 1962 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் திகதி 1318 ஆம் இலக்க அரச சுவீகரிப்புக் கட்டளைச் சட்டப்படி சுவீகரிக்கப்பட்டது. இவ்விரு பாடசாலைகளும் 1962ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் முதலாம் திகதி ஒன்றிணைக்கப்பட்டு, இவை யா/புங்குடுதீவு கமலாம்பிகை வித்தியாலயம் என்ற பெயருடனேயே இயங்கி வருகிறது.

ஆசிரியர்கள், அதிபர்கள் மாத்திரமன்றி மடத்துவெளி மக்களினதும், இளைஞர்களினதும் ஒத்துழைப்பு என்பன இப்பாடசாலையின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்துள்ளது. 1972ஆம் ஆண்டு இப்பாடசாலை கனிஷ்ட மகா வித்தியாலயமாக தரமுயர்த்தப்பட்டு யாழ்/புங்குடுதீவு ஸ்ரீ கமலாம்பிகை கனிஷ்ட மகாவித்தியாலயம் என்ற பெயரில் தரம் 10 வரை மாணவர்களுக்கு கல்வி போதிக்கும் தரத்தைப் பெற்றுள்ளது.

ஆரம்பத்தில் இரு கட்டிடத் தொகுதிகளில் இயங்கி வந்த இப்பாடசாலை, மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்தமையினாலும், கனிஷ்ட மகாவித்தியாலயமாக தரம் உயர்த்தப்பட்டு கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண) பரீட்சைக்கு தோற்றும் மாணவர்கள் வரை கல்வி போதிக்கும் தேவை ஏற்பட்டமையினாலும் தோன்றிய இடப்பற்றாக்குறையை நிவர்த்தி செய்ய ஊர்காவற்றுறைத் தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினரின் அனுசரணையுடனும், கல்வித் திணைக்களத்தின் உதவியுடனும், விஞ்ஞானகூடம், மலசல கூடம் என்பன விஸ்தரிக்கப்பட்டன. 1983 ஆம்ஆண்டு அழகிய இரண்டு மாடிக் கட்டிடம் ஒன்றையும் கொண்டதாக இவ்வித்தியாலயம் வளர்ந்தது. அத்தோடு புலமைப்பரிசில் பரீட்சையில் தோற்றிய மாணவர்களில் 90 சதவீதத்தினர் சிறந்த பெறுபேற்றைப் பெற்றதன் மூலம் கற்பித்தலிலும் சிறந்து விளங்கியது. விளையாட்டுத்துறை, கலைத் துறைகளோடுப், தொழில்சார் கல்விப் பொருட் காட்சிகளிலும் வட்டார ரீதியாகவும், மாவட்ட ரீதியாகவும் கலந்து பரிசில்களும், சான்றிதழ்களும், பாராட்டுக்களும் பெற்றமை குறிப்பிடத்தக்கது. இவ்வித்தியாலய மாணவர்கள் இன்று வைத்தியர்களாக, பொறியியலாளர்களாக, விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களாக, சட்ட நிபுணர்களாக, அதிபர்களாக, ஆசிரியர்களாக, சிறந்த கலைஞர்களாக, எழுத்தாளர்களாக, பேச்சாளர்களாக உருவாகி இப்பாடசாலையின் பெருமைக்கு சான்றாக இருக்கின்றார்கள்.

1991 ஆம் ஆண்டு புங்குடுதீவு அரச கட்டுப்பாட்டு பகுதியாக மாறிய நிலையில் மக்கள் சொந்த மண்ணை விட்டு இடம் பெயர்ந்தனர். இந்நிலையில் அக்காலத்தில் இவ்வித்தியாலயத்தின் அதிபராக இருந்த மு.மகேந்திரன் அவர்கள் மாணவர்களின் கல்வியை தொடர்ந்து முன்னெடுக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் இவ்வித்தியாலய மாணவர்களை ஒன்றிணைத்து புங்குடுதீவு சித்தி விநாயகர் கனிஷ்ட மகாவித்தியாலயம், குறிகாட்டுவான் அரசினர் தமிழ்க் கலவன் வித்தியாலயம், மற்றும் ஊரதீவு திருநாவுக்கரசு வித்தியாலயம் ஆகியவற்றின் மாணவர்களையும், ஆசிரியர்களையும், அதிபர்களையும் ஒன்றிணைத்து யாழ் ஆனைப்பந்தி உயர்கலைக் கல்லூரி என்ற தனியார் கல்வி நிறுவனத்தில் கல்விச் செல்வத்தை அழியாது பாதுகாத்தார்.

எம் மாணவர்களுக்கு தொடர்ந்து கல்வி அளித்த ஆசிரியர்கள், அதிபர்களின் சேவை காலத்தால் மறக்க முடியாததாகும்.

இவ்வாறு இடப் பெயர்வின் போது புங்குடுதீவுப் பாடசாலைகள் அனைத்தும் ஒன்றிணைந்து கூட்டாக யாழ். சன்மார்க்க வித்தியாலயத்தில் சிறிது காலமும், பின்னர் யாழ்-பெரியபுலம் மகாவித்தியாலயத்தில் சிறிது காலமும், அதன் பின்னர் யாழ் - இந்து மகளிர் கல்லூரியில் சில மாதங்களுமாக நெருக்கடியான கால கட்டத்தில் பல வசதிக் குறைவுகளோடு இயங்கிய பின்னரே கமலாம்பிகை வித்தியாலயம் ஆனைப்பந்தி உயர்கலைக் கல்லூரிக்கு இடம் மாறி 1995ஆம் ஆண்டு அக்டோபர் 30ஆம் திகதி வரை இயன்றளவு சிறப்பாக தொடர்ந்து நடைபெற்றுள்ளது.

மீண்டும் 1995ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 30ஆம் திகதி மேற்கொள்ளப்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக மக்கள் தென்மராட்சியை நோக்கி இடம்பெயர்ந்தனர்.மாணவர்களும் இடம்பெயர்ந்தனர்.

1996 ஆம் ஆண்டு மே மாதம் புங்குடுதீவு கமலாம்பிகை கனிஷ்ட மகாவித்தியாலயத்தின் உப அதிபராக இருந்த ந.இராஜதுரை அவர்கள் மண்பற்றுடன் ஒரு தொகை மாணவர்களோடும் ஆசிரியர்களுடனும் புங்குடுதீவிலுள்ள தமது சொந்தக் கட்டிடத் தொகுதிக்குத் திரும்பி புனர் நிர்மாணம் செய்து பாடசாலையை ஆரம்பித்துள்ளார்.

இப்பொழுது 2006ஆம் ஆண்டு பிறந்து விட்டது. இன்று 212 மாணவர்களும், 9ஆசிரியர்களும், மூன்று தொண்டர் ஆசிரியர்களுமாக மொத்தம் 12 ஆசிரியர்கள் உள்ளனர். இந்தப் பாடசாலையினை புனர் நிர்மாணம் செய்வதற்காக அயராது உழைத்தஅதிபர் ந.இராஜதுரை, உப அதிபர் நா.நாகராஜா மற்றும் ஆசிரியர்கள், பெற்றோர்கள் ஆகியோரின் பெருமுயற்சியால் மீண்டும் பாடசாலை உயர்நிலை அடைந்து கொண்டிருக்கின்றது.




யாழ் / புங்குடுதீவு ஸ்ரீ கமலாம்பிகை கனிஷ்ட மகாவித்தியாலயம்




யாழ் / புங்குடுதீவு ஸ்ரீ சண்முகநாதன் கனிஷ்ட மகாவித்தியாலயம்.

## யாழ் / புங்குடுதீவு

## ஸ்ரீ சண்முகநாதன் கனிஷ்ட மகா வித்தியாலயம்

புங்குடுதீவு வல்லன், மாவுதிடல், பெரியகிராய் மக்களின் கல்வித் தேவையைப் பூர்த்தி செய்யும் நோக்குடன் பெரியார் மார்க்கண்டு சோதிநாதர் அவர்களால் 1925 இல் அவரது சொந்தக் காணியில் உருவாக்கப்பட்டதே புங்குடுதீவு சண்முகநாதன் வித்தியாலயமாகும்.

இப்பாடசாலை பின்னர் சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டது. இப்பாடசாலை 1962 இல் அரசால் பொறுப்பேற்கப்பட்டது. இக்காலப்பகுதியில் இப்பாடசாலையில் திருவாளர்கள் லோறன்ஸ், சேதுபதி, வி.செல்லையா, .வை. கந்தையா, த.கனகரெத்தினம், பொன்னுத்துரை, சு.சீவரெட்னம் போன்றோர் தலைமையாசிரியர்களாக கடமையாற்றியுள்ளனர்.

1970 காலப்பகுதியில் பாடசாலையில் ஏற்பட்ட இடப்பற்றாக்குறை காரணமாக பெற்றோர் கல்விப்பகுதியுடன் தொடர்பு கொண்டு 1972 இல் 80'x20' சதுர அடி கட்டிடத்தைப் பெற்றனர். விஞ்ஞானகூடம் அமைக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் நெசவுசாலை, வாசிகசாலை என்பனவும் இயங்கி வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. பாடசாலையின் பாதுகாப்புக் கருதி பழைய மாணவர் சங்கத்தினரால் பாடசாலையைச் சுற்றி மதில் அமைக்கப்பட்டது. 1925 இல் இருந்து 1971 வரை ஆரம்ப பாடசாலையாக இயங்கி வந்த இப்பாடசாலை 1972 இல் பெற்றோரின் தீவிர முயற்சியினால் கனிஷ்ட மகா வித்தியாலயமாக தரம் உயர்த்தப்பட்டது.

1973 இல் நடைபெற்ற யாழ். பிரதேசப் பாடசாலைகளுக்கான சங்கீத, நடன, நாடகப் போட்டியில் இப்பாடசாலை மாணவர்கள் நடித்த "சாம்ராட் அசோகன்" என்னும் நாடகம் இரண்டாம் இடத்தைப் பெற்றதோடு, 1973 இல் நடைபெற்ற ஊர்காவற்றுறை வட்டார பாடசாலைகளுக்கான மெய்வல்லுநர் போட்டியில் இப்பாடசாலை 13 வயதுக்குட்பட்ட பெண்களுக்கான வெற்றிக் கிண்ணத்தை சுவீகரித்துக் கொண்டமை குறிப்பிடத்தக்கது.

இவ் வித்தியாசாலையின் சமயப்பணிகளில் இந்து இளைஞர் மன்றம் கடமை உணர்ச்சியோடு பணியாற்றி உள்ளது. பழைய மாணவர் சங்கம், பெற்றோர் ஆசிரியர் சங்கம் ஆகியவற்றின் பொருள் உதவியோடு பாடசாலையில் வருடா வருடம் சிவராத்திரி விழா, நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இக்காலப் பகுதியில் மூ.நடராசா (கோபாலபிள்ளை), நாகரெத்தினம் (கந்தசாமி), இ.நடராசா, செ.சண்முகவடிவு ஆகியோர் இப்பாடசாலையின் அதிபர்களாகக் கடமையாற்றி உள்ளனர். 1991.10.17 இல் இராணுவ நடவடிக்கை காரணமாக தென்மராட்சிக்கு இடம்பெயர்ந்தது. இப்பாடசாலை 1992 தொடக்கம் 1996 வரை தனது கல்விப் பணியை இதே இடத்தில் சிறப்பாகச் செய்துள்ளது. இக்காலப்பகுதியில் இப்பாடசாலையின் அதிபரான செ.சண்முகவடிவு அவர்கள் இடப்பெயர்வின் போது கிளாலிக் கடலில் எதிர்பாராத விதமாக மரணமடைந்தமையினால் பாடசாலையின் செயற்பாடுகள் செயலிழந்தன. புங்குடுதீவில் 1991 இல் மூடப்பட்ட இப்பாடசாலை இன்று (2006) வரை மீளத் திறக்கப்படவில்லை.

# யாழ் / புங்குடுதீவு மேற்கு
# அமெரிக்கன் மிஷன் தமிழ் கலவன் வித்தியாலயம்

றிச்சாட் கணபதிப்பிள்ளை அவர்களே இப்பாடசாலையின் முதல் அதிபராகவும், முதல் ஆங்கில ஆசிரியராகவும் இருந்து நல்லூழியம் புரிந்துள்ளார். இவரைத் தொடர்ந்து டானியல் ஞானப்பிரகாசம் (அ.நாகலிங்கம்) அவர்களும் அமரசிங்கம் அவர்களும் இச் சேவையைத் தொடர்ந்துள்ளனர். அடுத்து பதவிக்கு வந்த அதிபரான நா.பொன்னையா அவர்கள் பாடசாலையின் வளர்ச்சியில் அயராது உழைத்து வந்துள்ளார். பல கிறிஸ்தவ ஆசிரியர்கள் இப்பாடசாலையின் தலைமைப் பதவியில் இருந்து பாடசாலையின் வளர்ச்சிக்காக உழைத்துள்ளனர். 1962 இல் இப்பாடசாலை அரசுடமையாக்கப்பட்டது. 1968 இலிருந்து இப்பாடசாலையின் அதிபராக நா.நடராஜா அவர்கள் கடமையாற்றி உள்ளார். இக்காலத்தில் இப்பாடசாலையில் புதிய திருப்பம் ஏற்பட்டது.

இந்து சமய நிகழ்வுகள் பல இடம் பெற்றன. பெற்றோர் ஆசிரியர் சங்கம் உருவாக்கப்பட்டது. பாடசாலையில் ஏற்பட்ட இடநெருக்கடியைத் தீர்ப்பதற்கு பெற்றோர் ஆசிரியர் சங்கத்தால் ஏழரைப் பரப்புக் காணி விலைக்கு வாங்கிக்கொடுக்கப்பட்டது. இவரைத் தொடர்ந்து இவரது மனைவியாரான திருமதி சிவபாக்கியம் நடராஜா அதிபராக நியமிக்கப்பட்டார். 1972 இல் புதிய கல்வித் திட்டத்திற்கமைய அரசால் இவ்வித்தியாலயம் ஓர் ஆரம்பப் பாடசாலையாக தரம் குறைக்கப்பட்டது. இவருடைய காலத்தில் அரச உதவியுடனும் புதியதோர் கட்டிடம் அமைக்கப்பட்டது.14.03.1974 இல் கட்டிடத்திறப்பு விழாவுடன் இப்பாடசாலை தனது நூற்றாண்டை நினைவு கூரும் மலரும் வெளியிட்டு வைக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் இங்கு 217 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர்.

இவரைத் தொடர்ந்து அதிபராக நியமனம் பெற்ற சு.யோ. பூராசா அவர்களின் காலப்பகுதி இப்பாடசாலையின் பொற்காலமாகும். பாடசாலைக்கு புதிய கட்டிடங்கள் அமைக்கப்பட்டன. பாடசாலைக்காணி விஸ்தரிப்புச் செய்யப்பட்டது. மாணவர்கள் வெள்ளிக் கிழமைகளில் அயலிலுள்ள ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயத்திற்கு சென்று சமய வழிபாடுகளில் ஈடுபட்டனர். கல்வித் திணைக்களத்தினூடாக தளபாடங்கள், கற்பித்தல் உபகரணங்கள் பெறப்பட்டன. பாடசாலையில் பாலர் வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் இப்பாடசாலையில் 230 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர். இப்பாடசாலைக்கு அரும்பணியாற்றிய அதிபர் ந. பொன்னையா அவர்களின் சிலை பாடசாலை முன்றலில் அமைந்துள்ளது. 1991இல் இராணுவ நடவடிக்கை காரணமாக இப்பாடசாலை யாழ்நகருக்கு இடம் பெயர்ந்தது. அடுத்து 1995இல் தென்மராட்சிக்கு இடம் பெயர்ந்தது. இக்காலப்பகுதியில் 219 மாணவர்கள் இங்கு கல்வி கற்றுள்ளனர். இப்பாடசாலை 30.10.1995 இல் இலங்கை இராணுவத்தினால் மேற்கொள்ளப்பட்ட பாரிய இராணுவ நடவடிக்கை காரணமாக தென்மராட்சியூடாக வன்னிப் பெருநிலப்பரப்பிற்கு இடம் பெயர்ந்தது. வன்னிப் பெருநிலப்பரப்புக்கு இடம் பெயர்ந்த இப்பாடசாலை, அதிபரின் தீவிர முயற்சியினால் இராமநாதபுரத்தில் மீண்டும் ஆரம்பிக்கப்பட்டு தனது கல்விப்பணியைத் தொடர்ந்தமை இங்கு குறிப்பிடத்தக்கது. இக்காலப்பகுதியில் இப்பாடசாலையின் அதிபராக சு.யோ.பூராசா அவர்கள் கடமையாற்றி உள்ளார். 30.10.1995 இல் வன்னிக்கு இடம்பெயர்ந்த பாடசாலை 2006 வரை புங்குடுதீவில் மீண்டும் ஆரம்பிக்கப்படவில்லை.






யாழ் / புங்குடுதீவு
றோமன் கத்தோலிக்க தமிழ்
கலவன் வித்தியாலயம்





யாழ் / புங்குடுதீவு
இராஜராஜேஸ்வரி
வித்தியாலயம்

## யாழ் / புங்குடுதீவு

## றோமன் கத்தோலிக்க தமிழ் கலவன் வித்தியாலயம்

இவ்வித்தியாலயம் 1833 ஆம் ஆண்டளவில் கத்தோலிக்க மிஷனரி மாரினால் ஸ்தாபிக்கப்பட்டது. சமயம் பரப்பும் நோக்குடன் இப்பாடசாலை உருவாகிய போதும் சகல மத மக்களுக்கும் கல்வி வாய்ப்பளித்த ஒரே பாடசாலையாக இது ஆரம்பத்தில் இயங்கி வந்துள்ளது. இப்பாடசாலை ஸ்தாபிக்கப்பட்ட காலம் தொட்டு 1950 ஆம் ஆண்டு வரை ஆரம்பப் பாடசாலையாகவே இயங்கி வந்தது. 1950 ஆம் ஆண்டு சிரேஷ்ட பாடசாலை என்னும் தரத்திற்கு உயர்த்தப்பட்டு கல்விப் பொதுத் தராதர (சாதாரண) தரம் வரை வகுப்புகள் நடைபெற்றுள்ளன. 1972 இல் கொண்டுவரப்பட்ட கல்விச் சீர்திருத்தத்துக்கு அமைய மீண்டும் தரம் குறைக்கப்பட்டு தரம் 8 வரை வகுப்புகள் நடைபெறுகின்றன. எனினும் 1950 தொடக்கம் 1972 வரை இப்பாடசாலையின் செயற்பாடுகள் உச்சநிலையில் இருந்துள்ளன. இப்பாடசாலைக்கு எதிரே புனித பிரான்சிஸ் சவேரியாரின் ஆலயம், அண்மையில் மகா வித்தியாலயம், வைத்தியசாலை, தபாற்கந்தோர் போன்றவை அமைந்திருப்பதும், பிரயாண வசதியுள்ள இடத்தில் இப்பாடசாலை அமைந்து இருப்பதும் அதற்கு ஒரு தனிச் சிறப்பைத் தருகின்றது.

ஓலையினால் வேயப்பட்ட கூரையையும், மண் சுவர்களையும், குந்துகளையும் கொண்ட இப்பாடசாலை, போதிய இடவசதி, தளபாடவசதிகளைக் கொண்ட ஒரு பெரும் கட்டிடத்துடன் ஒரு பாடசாலையாக தலைநிமிர்ந்து ஒளிவீசும் ஒரு ஸ்தாபனமாகத் திகழ்ந்த பெருமை, பெற்றோரையே சாரும். 1974 இல் பெற்றோர், ஆசிரியர், மாணவர்கள் யாவரும் சேர்ந்து நடாத்திய கலைவிழா ஆசிரியர்களின் விடாமுயற்சியையும், மாணவர்களின் திறமையையும், பெற்றோரின் ஒத்துழைப்பையும் காட்டுவதாக அமைந்தது.

இங்கு கடமையாற்றிய அதிபர்களில் திருவாளர்கள் யோ.சிங்கராயர், மைக்கேல் விஜயரெத்தினம், திருச்செல்வம், சு.யோ.நடராசா, லியொன்சியஸ் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர். 01.03.1990 இல் ஐ.சண்முகநாதன் அவர்கள் பாடசாலை அதிபராக நியமனம் பெற்றார். இவரது காலப் பகுதியில் பாடசாலைக் காணி விஸ்தரிக்கப்பட்டது. மாணவர்களுக்கு சீருடை அறிமுகப்படுத்தப்பட்டது. இக்காலப்பகுதியில் இங்கு 350 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர். இங்கு தரம் 1 இலிருந்து தரம் 8 வரை வகுப்புகள் நடை பெற்றுள்ளன.

17.10.1991 இல் தீவகத்தில் இடம் பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக இப்பாடசாலையும் ஏனைய பாடசாலைகளைப் போன்று யாழ். நகருக்கு இடம் பெயர்ந்தது. இப்பாடசாலையின் வகுப்புகள் புங்குடுதீவு மகா வித்தியாலயத்துடன் இணைந்து யாழ. கந்தர்மடம் யுனிவேர்சல் கல்வி நிலையத்தில் இயங்கியுள்ளது. இக்காலப்பகுதியில் இப்பாடசாலையின் அதிபராக ஐ.சண்முகநாதன் அவர்கள் கடமையாற்றியுள்ளார். இங்கு 24 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர். 1994 இல் புங்குடுதீவு மகா வித்தியாலயம் யாழ். பிறவுண் வீதிக்கு இடம் மாற்றப்பட்டதுடன் இப்பாடசாலையின் செயற்பாடுகள் செயலிழந்தன. 1994 இல் செயலிழந்த இப்பாடசாலை 2006 வரை மீள ஆரம்பிக்கப்படவில்லை.

# யாழ் / புங்குடுதீவு திருநாவுக்கரசு வித்தியாலயம்

இப்பாடசாலை ஊரதீவு என்னும் கிராமத்தில் பாணாவிடை என்ற இடத்தில் அமைந்துள்ளது. மருதப்பு சுவாமி அவர்களும் ஆசிரியர் சி.நல்லதம்பி அவர்களும், மற்றும் பல பெரியார்களும் சைவ வித்தியாபிவிருத்திச் சங்க முகாமையாளர் திரு.சு.இராசரத்தினத்திடம் சென்று, ஊரதீவில் முக்கியமாக ஒரு பாடசாலை அமைக்க வேண்டுமென வாதாடினார்கள். அதன் பிரகாரம் 1935 ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் நவராத்திரி ஆரம்ப தினத்தில் தற்காலிகமாக ஊரதீவு திருநாவுக்கரசு நாயனார் மடத்தில் திருநாவுக்கரசு வித்தியாசாலை என்னும் பெயரில் இப்பாடசாலை சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்தால் நிறுவப்பட்டது. ஸ்தாபகத் தலைமையாசிரியராக நா.சோமசுந்தரம் அவர்களும் உதவி ஆசிரியர்களாக சி. நல்லதம்பியும், திருமதி ந.நல்லதங்கமும் நியமிக்கப்பட்டனர். தற்காலிக மடத்தினை கந்தர் அவர்களிடமிருந்து மருதப்பு சுவாமிகள் பத்து வருடக் குத்தகைக்குப் பெற்று சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்திடம் ஒப்படைத்தார்.

1935 ஆம் ஆண்டு சி.நல்லதம்பி ஆசிரியர் தனது செலவில் பத்துப் பரப்புக் காணியை வை.சின்னையா என்பவரிடம் வாங்கி சைவ வித்தியா விருத்திச் சங்கத்திற்குக் கையளித்தார். அதில் ஒரு கட்டிடத்தினை அன்று தலைமையாசிரியராகக் கடமையாற்றிய நா.சோமசுந்தரம் அவர்கள் தனது செலவில் கட்டிக் கொடுத்தார். 1936 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் புதிய கட்டிடத்திற்கு இப்பாடசாலை மாற்றப்பட்டது.

திருவாளர்கள். நா.சோமசுந்தரம், சு.சபாரெத்தினம், எஸ்.செல்லையா, சி.நாகமுத்து, ஆ.சுப்பிரமணியம், சி.சிவசுப்பிரமணியம், த.சிவகுரு, மூ.நடராசா, க.தருமலிங்கம், சி. இரத்தினசபாபதி, அ.க.கந்தையா, த.சிவகுரு, செ.இலகுப்பிள்ளை, சோ.சேனாதிராசா ஆகியோர் தலைமையாசிரியர்களாக கடமையாற்றினர். இப்பாடசாலைக்கு வித்திட்ட மருதப்பு சுவாமிகள் 1960 ஆம் ஆண்டு சிவபதமடைந்ததும் அவருடைய பணியைத் தொடர்ந்து இக்கிராமத்தைச் சேர்ந்த திருவாளர்கள் பொ.மதியாபரணம், அ.ப.பாலசுப்பிரமணியம், எஸ்.கே.மகேந்திரன் (சட்டத்தரணி) ஆகியோர் செய்து வந்துள்ளனர். இப்பகுதி மக்களின் அயராத முயற்சியினால் இப்பாடசாலை ஊரதீவுக் கிராமத்தின் மத்திய பகுதிக்கு மாற்றப்பட்டது. இப்பாடசாலைக்கான தற்காலிகக் கட்டிடம் ஊரதீவு கிராம முன்னேற்றச் சங்கக் (அறிவகம்) கட்டிடத்திற்கு அருகாமையில் அமைக்கப்பட்டு பாடசாலை இடம் மாற்றப்பட்டது.

பின்னர் அரசின் நிதி உதவியினால் பாடசாலைக்கான நிரந்தரக் கட்டிடம் அமைக்கப்பட்டது. இக்காலப்பகுதியில் இக் கிராமத்தைச் சேர்ந்த செ.இலகுப்பிள்ளை, திருமதி த.தியாகராசா ஆகியோர் அதிபர்களாகக் கடமையாற்றி உள்ளனர். இக்காலப்பகுதியே இப்பாடசாலையின் பொற்காலமாகும். போதியளவு ஆசிரியர்கள் நியமனம் செய்யப்பட்டனர். இக்காலப்பகுதியில் 98 மாணவர்கள் இங்கு கல்வி கற்றுள்ளனர். இலங்கை இராணுவத்தால் தீவுப்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக 17.10.1991 இல் இப்பாடசாலை யாழ் நகருக்கு இடம் பெயர்ந்தது.

மீண்டும் 30.10.1995 இல் ஏற்பட்ட தென்மராட்சி நோக்கிய இடப்பெயர்வுடன் செயலிழந்த இப்பாடசாலை 2006 வரை மீள ஆரம்பிக்கப்படவில்லை.

## யாழ் / புங்குடுதீவு

## அரியநாயகன்புலம் அரசினர் தமிழ் கலவன் வித்தியாலயம்

இப்பாடசாலை கழுதைப்பிட்டித் துறைமுகத்திற்கு அருகாமையிலுள்ள பிரதான வீதியோரத்தில் தற்காலிக கட்டிடம் அமைக்கப்பட்டு 03.05.1948 இல் 125 மாணவர்களுடன் வித்தியாதரிசி சி.முத்தையா அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அரியநாயகன்புலம் அரசினர் தமிழ் கலவன் பாடசாலையின் தோற்றத்திற்கு தலைமை ஆசிரியர் சு.கந்தையா அவர்களின் முயற்சியே பிரதானமான காரணமாகும்.

1917 இல் பிறந்த சு.கந்தையா அவர்கள் தமது இளம் வயதிலேயே புங்குடுதீவு கணேச வித்தியாலயத்தில் ஆசிரியராகப் பணி புரியத் தொடங்கி விட்டார். சேர். வைத்திலிங்கம் துரைசுவாமி அவர்கள் சபாநாயகராக 15.12.1936இல் ஏகமனதாக தெரிவு செய்யப்பட்டார். அவர் தீவுப்பகுதியின் அபிவிருத்தியில் அக்கறை கொண்டவர். சபாநாயகருடைய செல்வாக்கைப் பயன்படுத்திப் பாடசாலையை உருவாக்கலாம் என்ற எண்ணத்துடன் யாழ்ப்பாணத்தில் உள்ள சபாநாயகரது இல்லத்திற்கு பெரிய சோமர் அவர்களையும், மு.சதாசிவம் அவர்களையும் சு.கந்தையா ஆசிரியர் அழைத்துச் சென்றார். வை.துரைசுவாமி அவர்களிடம் பாடசாலை கட்டும் எண்ணத்தை வெளியிட்டதாக சு.கந்தையா அவர்கள் கூறினார். அப்போது தீவுப்பகுதித் தேர்தலில் போட்டியிடுவதற்கு சபாநாயகர் துரைசுவாமி ஆயத்தமாக இருந்ததால் உடனடியாக தொலைபேசி மூலம் அப்போதைய கல்வி மந்திரியாக இருந்த C.W.W.கன்னங்கரா அவர்களுடன் கதைத்து பாடசாலையைத் தொடங்குவதற்கான அனுமதியைப் பெற்றுத் தந்தார். 1948 இல் பாடசாலை தொடங்கப்பட்ட போது அளவெட்டியைச் சேர்ந்த எம்.நாகராசா அவர்கள் தலைமையாசிரியராக நியமிக்கப்பட்டார். இணுவிலைச் சேர்ந்த பேரம்பலம், அவரின் மனைவியார் மற்றும் புங்குடுதீவைச் சேர்ந்த யோகாம்பிகை ஆசிரியை ஆகியோரே அப்பாடசாலையின் ஆரம்ப ஆசிரியர்களாவர். பாடசாலைக்கான காணியை கந்தையா அவர்களே வாங்கிக் கொடுத்ததோடு, அரசாங்கத்தின் பெயரில் அக்காணி எழுதப்பட்டு மண்பறித்து, மேடாக்கி, பனைகள் தறித்து, பெரிய கொட்டகை போட்டு, தென்னை ஓலையால் வேய்ந்தும், சுற்றிவர அடைக்கப்பட்டும் தற்காலிகப் பாடசாலை கட்டிடம் அமைக்கப்பட்டது. இப்பாடசாலை கட்டிட அமைப்பினை முன்னின்று நடத்தியவர் அரியநாயகன்புலத்தில் மிகவும் பிரசித்தமான முத்துவேலு அவர்களின் மகன் மு.சதாசிவம் (சின்னத்தம்பி) அவர்களாவர். அரியநாயகன்புலம் என்ற இடத்தில் இருந்தவர்களில் 80 வீதமானோர் முத்துவேலு அவர்களின் பரம்பரையினரே. 1955 இல் அரசினால் நிரந்தர கட்டிடம் ஒன்றும், சகல வசதிகளும் உள்ளடங்கிய ஆசிரியர் விடுதியும் அமைக்கப்பட்டது. ஆரம்ப வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரை கல்வி போதிக்கப்பட்டு வந்த இப்பாடசாலையில் 1962 இல் இருந்து எட்டாம் வகுப்புவரை வகுப்புகள் நடைபெற்றுள்ளன. 1975 இல் இப்பாடசாலை அரசினால் கனிஷ்ட வித்தியாலயம் ஆக்கப்பட்டு மீண்டும் ஐந்தாம் வகுப்பு வரை மட்டுமே வகுப்புகள் நடைபெற்று உள்ளன. இக்காலப்பகுதியில் சோ.சுப்பிரமணியம் முத்துத்தம்பி, நடராசா, தம்பு, கா.கனகசபை, சு.செல்லத்துரை ஆகியோரும் அதிபர்களாக பணியாற்றி உள்ளனர். இராணுவ நடவடிக்கை காரணமாக இப்பாடசாலை யாழ் நகர் நோக்கி இடம்பெயர்ந்தது. 30.10.1995 வரை இயங்கிய இப்பாடசாலை இராணுவ நடவடிக்கை காரணமாக ஏற்பட்ட தென்மராட்சி நோக்கிய இடப்பெயர்வுடன் செயலிழந்துள்ளது, இன்னும் திறக்கப்படவில்லை.

## யாழ் /புங்குடுதீவு
## இறுபிட்டி அமெரிக்கன் மிஷன் தமிழ் கலவன் வித்தியாலயம்

யாழ்ப்பாணக் குடாநாட்டிற்கு வருகை தந்த அமெரிக்கன் மிஷனரிமார்களால் 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அதாவது 1850 ஆம் ஆண்டளவில் ஆரம்பிக்கப்பட்டதே புங்குடுதீவு இறுபிட்டி அமெரிக்கன் மிஷன் தமிழ் கலவன் வித்தியாலயமாகும்.

நா.பொன்னையா, சி.ஆறுமுகம், மு.நாகலிங்கம், த.சிவகுரு, ந.பசுபதிப்பிள்ளை, தி.சதாசிவம் ஆகியோர் பாடசாலையின் வளர்ச்சிக்காக அரும்பாடு பட்டு உழைத்துள்ளனர். இவர்களைத் தொடர்ந்து ஜே.ஜே.சற்குணராஜா அதிபராகக் கடமையாற்றி உள்ளார்.

ரீ. நடேசு, சு.வீரசிங்கம் ஆகியோரும்அதிபர்களாகக் கடமையாற்றியுள்ளனர். சு.வீரசிங்கம் அவர்கள் அதிபராகக் கடமையாற்றிய காலப்பகுதியில் இப் பாடசாலையின் வளர்ச்சி அதி உன்னத நிலையில் இருந்துள்ளது. இக்காலப்பகுதியில் இப்பாடசாலையில் 143 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர்.

17.10.1991 இல் தீவுப்பகுதியில் இடம் பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக மற்றைய பாடசாலைகளைப் போன்று இப்பாடசாலையும் யாழ். நகருக்கு இடம் பெயர்ந்தது. யாழ். நகரில் ஏனைய புங்குடுதீவுப் பாடசாலைகளுடன் இணைந்து சிறிது காலம் யாழ். பெரியபுலம் மகா வித்தியாலயத்தில் இப்பாடசாலை இயங்கி உள்ளது. பின்பு புங்குடுதீவு பாடசாலைகளின் ஆரம்பப் பிரிவுகள் யாவும் இணைந்து சிறிது காலம் கந்தர்மடம் சைவப்பிரகாச வித்தியாலயத்தில் இயங்கியுள்ளது.

1992 இல் யாழ். இந்து மகளிர் கல்லூரி விடுதியில் இப்பாடசாலையுடன் இணைந்து புங்குடுதீவு இராஜராஜேஸ்வரி வித்தியாலயம், அரியநாயகன்புலம் வித்தியாலயம், சேர்.வை. துரைசுவாமி வித்தியாலயம் ஆகிய பாடசாலைகளும் இயங்கியுள்ளன.

இக்காலப்பகுதியில் இப்பாடசாலையின் அதிபராக சு.வீரசிங்கம் அவர்கள் கடமையாற்றியுள்ளார். 58 மாணவர்கள் இங்கு கல்வி கற்றுள்ளனர். மீண்டும் 30.10.1995 இல் இடம் பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக இப்பாடசாலை தென்மராட்சிக்கு இடம் பெயர்ந்ததுடன் இப்பாடசாலையின் செயற்பாடுகள் செயலிழந்தன. இப்பாடசாலை இன்னும் மீண்டும் திறக்கப்படவில்லை






யாழ் / புங்குடுதீவு
இறுபிட்டி அமெரிக்கன் மிஷன்
த.க. வித்தியாலயம்



யாழ் / புங்குடுதீவு திருநாவுக்கரசு வித்தியாலயம்

## யாழ் / புங்குடுதீவு

## சேர். வை. துரைசுவாமி வித்தியாலயம்

சைவ வித்தியாபிவிருத்திச் சங்கபிரதம நிர்வாகஸ்தர் சு. இராசரெத்தினம் அவர்கள் அக்காலத்திலே பாராளுமன்ற சபாநாயகராக இருந்த சேர்.வை.துரைசுவாமி அவர்களோடும், இவ்வட்டார மக்களோடும் கலந்துரையாடி இப்பாடசாலையைக் கட்டத் தீர்மானித்தார்கள். கட்டிடம் கட்டுவதற்கு முடவன் தோட்டம் என்னும் காணியை சு.செல்லத்துரை ஆசிரியர் பெருமுயற்சி எடுத்துத் தமது தந்தையாரைக் கொண்டு சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்திற்கு 11.09.1939 ஆம் ஆண்டு நன்கொடையாக வழங்குவித்தார். பெற்றோரின் பெருமுயற்சியால் 1400 சதுரஅடி கொண்ட கட்டிடம் கட்டப்பட்டது.

13.11.1939 ஆம் ஆண்டில் சைவ வித்தியாபிவிருத்திச் சங்க முகாமைத்துவத்தின் கீழ் சி.கனகசுந்தரம் அதிபராகவும், தி.சதாசிவம், த.கைலாயபிள்ளை ஆகியோர் உதவி ஆசிரியர்களாகவும் நியமனம் பெற்றுப் பாடசாலையை நடாத்த ஆரம்பித்தார்கள். 1941 ஆம் ஆண்டு வ.கதிரவேலு அவர்களும், 1943 ஆம் ஆண்டு வ.முத்துலிங்கம் அவர்களும் அதிபராக இருந்து சிறப்பாகச் செயற்பட்டுள்ளனர். சு.இராசரெத்தினம் அவர்களின் விடாமுயற்சியாலும், வை.துரைசுவாமி அவர்களின் பேருதவியாலும் 01.09.1943 ஆம் ஆண்டில் இப்பாடசாலை பதிவு செய்யப்பட்ட பாடசாலையாக அரசாங்க வர்த்தமானிப் பிரசுரம் மூலம் வெளிப்படுத்தப்பட்டது. இப்பெருமையால் இப்பாடசாலைக்கு சேர்.வை. துரைசுவாமி வித்தியாசாலை எனப்பெயரும் சூட்டப்பட்டது. 01.01.1944 ஆம் ஆண்டில் ஆ.சுப்பிரமணியம் அவர்கள் அதிபராக நியமனம் பெற்றார். இக்காலத்தில் இப்பாடசாலை ஏழு ஆசிரியர்களைக் கொண்ட முதலாந்தர ஆரம்பப் பாடசாலையாகத் திகழ்ந்தது.

01.09.1952 இல் சு.சபாரெத்தினம் அவர்கள் அதிபராகவும் 01.01.1963 தொடக்கம் வை.குமாரசுவாமி அதிபராகக் கடமையாற்றியுள்ளாகள். இப்பாடசாலை 01.01.1963 இல் அரசாங்கத்தால் கையேற்கப்பட்டது. 19.08.19ஹ64 இல் ம.சி.பொன்னம்பலம் அவர்கள் அதிபராக கடமையாற்றியுள்ளார். 01.01.1965 இலிருந்து யோ.செல்வராசா அவர்களும், 01.01.1966 இலிருந்து வை.குமாரசுவாமி அவர்களும் அதிபர்களாகக் கடமையாற்றியுள்ளனர். இக்காலத்தில் பாராளுமன்ற உறுப்பினராக இருந்த வ.நவரெத்தினம் அவர்கள் 1400 சதுர அடி கொண்ட கட்டிடம் ஒன்றைக் கட்டுவதற்கு உதவியுள்ளார். ஆசிரியர்களின் உதவியுடன் 200 சதுர அடி மேலதிகமாக சேர்த்து இக்கட்டிடம் 1600 சதுர அடிக் கட்டிடமாகக் கட்டப்பட்டது. இக்கட்டிடத்திற்கான அத்திவாரக்கல்லை கிராமசபை உப தலைவரும், வட்டார உறுப்பினருமாகிய பெ.கார்த்திகேசு அவர்கள் நாட்டி வைத்தார். இக்காலத்திலேயே இவ்வித்தியாலயம் கனிஷ்ட வித்தியாலயமாக மாற்றப்பட்டது. 01.01.1968 இல் செ.இலகுப்பிள்ளை அவர்களும்,பின்பு க.தர்மலிங்கம், ஆ.செல்லத்துரை சோ.பொன்னம்பலம் , திருமதி சண்முகலிங்கம் ஆகியோரும் அதிபர்களாக கடமையாற்றியுள்ளார்கள். இக்காலப் பகுதியில் இப்பாடசாலையில் 127 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர்.

இராணுவ நடவடிக்கை காரணமாக 17.10.1991 இல் இப்பாடசாலை யாழ். நகருக்கு இடம் பெயர்ந்தது. 30.10.1995 இல் இராணுவ நடவடிக்கை காரணமாக தென்மராட்சி நோக்கிய இடப்பெயர்வுடன் செயலிழந்த இப்பாடசாலை இன்றுவரை மீண்டும் ஆரம்பிக்கப்படவில்லை.

## யாழ் / புங்குடுதீவு
## ஸ்ரீ பராசக்தி வித்தியாலயம்

இப்பாடசாலை 1910 இல் புங்குடுதீவு குறிகாட்டுவான், நடுவுத்துருத்தி ஆகிய பகுதி மாணவர்களின் கல்விக்காக பெரியார் வ.பசுபதிப்பிள்ளை அவர்களால் குறிகாட்டுவான் மா.நாகலிங்கம் அவர்களின் உதவியுடன் ஆரம்பிக்கப்பட்டது. இப்பாடசாலையை அமைப்பதற்காக அரசின் அனுமதியை வாங்கித்தந்த மு. லோட்டன் அவர்களே இப்பாடசாலையின் முதல் முகாமையாளராகவும் இருந்துள்ளார். அடுத்த முகாமையாளராக பெரியார் வ.பசுபதிப்பிள்ளை அவர்கள் இருந்துள்ளார். இப்பாடசாலையின் முதல் அதிபராக வ.சுப்பிரமணியம் அவர்கள் கடமையாற்றியுள்ளார்.

இப்பாடசாலை 1910 தொடக்கம் 1956 வரை குறிகாட்டுவானில் இயங்கியுள்ளது. வ.சுப்பிரமணியம் அவர்களைத் தொடர்ந்து நா.தில்லையம்பலம், ந.அ.தேவசகாயம், புலவர் இ.இளையப்பாபிள்ளை, ஆ.செல்லத்துரை ஆகியோர் அதிபர்களாக இருந்துள்ளனர். ஆ.செல்லத்துரை அவர்கள் காலத்திலேயே இப்பாடசாலை முனைப்புலத்திற்கு இடம் மாற்றப்பட்டது. 01.01.1957 இல் முனைப்புலத்திற்கு மாற்றப்பட்ட இப்பாடசாலை 31.12.1967 வரை முனைப்புலத்திலேயே இயங்கியுள்ளது. இப்பாடசாலை அரசு சுவீகரிப்புக் கட்டளைச் சட்டப்படி 03.04.1963 இல் அரசுடமையாக்கப்பட்டது. மீண்டும் இப்பாடசாலை புங்குடுதீவு கல்வி வளர்ச்சிக் கழகம், பெற்றோர் ஆசிரியர் சங்கம் ஆகியவற்றின் முயற்சிகளினால் 01.01.1968 இல் சங்கத்தார் கேணியில் அமைக்கப்பட்ட தற்காலிக கட்டிடத்திற்கு இடம் மாற்றப்பட்டது. இம்முயற்சிக்கு முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் வ.நவரெத்தினம் அவர்களும் அன்றைய வட்டாரக கல்வி அதிகாரி எம்.ஜே.சீமான்பிள்ளை அவர்களும் பேருதவி புரிந்தனர். இப்பாடசாலைக்கு 1967 இல் வடமாநில அரசாங்க அதிபர் அவர்களால் 3 றூட் 26 பேர்ச் காணி வழங்கப்பட்டது.

சு.சுப்பிரமணியம், திருமதி.சி.நடராசா, நா.சோமசுந்தரம், சோ.சுப்பிரமணியம் ஆகியோர் அதிபர்களாகக் கடமையாற்றி உள்ளனர். சோ.சுப்பிரமணியம் அவர்களின் காலத்திலேயே ஸ்தாபகர் வ.பசுபதிப்பிள்ளை அவர்களின் நினைவாக அவரது மைந்தன் சட்டத்தரணி ப.கதிரவேலு அவர்கள் வழங்கிய கட்டிடப் பொருட்களினாலும், பொதுமக்களிடம் இருந்து பெறப்பட்ட நிதி உதவியினாலும் பாடசாலைக்கு நிரந்தரக் கட்டிடம் அமைக்கப்பட்டது. இம்முயற்சிக்கு ஒத்துழைப்பு வழங்கிய க.நல்லதம்பி (செயலாளர், பெற்றோர் ஆசிரியர் சங்கம்) க.விசுவலிங்கம் (பொருளாளர், பெ.ஆ.சங்கம்) கு.நாகமுத்து, சு.திருநாவுக்கரசு, வே.க.சுப்பிரமணியம், ச.கந்தப்பிள்ளை, திருமதி ந. மகேஸ்வரி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

1973 இலிருந்து 1976 வரை பாடசாலை அதிபராக சு.யோ.பூராசா அவர்கள் கடமையாற்றி உள்ளார். இவரின் பின்னர் சிவராசசிங்கம், ஐ.சண்முகநாதன், கா.திருநாவுக்கரசு ஆகியோர் அதிபர்களாகக் கடமையாற்றி உள்ளனர். 17.10.1991 இல் தீவகத்தில் மேற்கொள்ளப்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக இடம் பெயர்ந்த இப்பாடசாலை யாழ். நகரில் சிறிது காலம் இயங்கியுள்ளது. அதிபர் 1992 இல் மலையகத்துக்கு இடமாற்றம் பெற்றுச் சென்றதுடன் செயலிழந்த இப்பாடசாலை இன்றுவரை மீளத்திறக்கப்படவில்லை.



யாழ் / புங்குடுதீவு சேர் வைத்திலிங்கம் துரைசுவாமி வித்தியாலயம்




யாழ் / புங்குடுதீவு ஸ்ரீ பராசக்தி வித்தியாலயம்

# யாழ் /புங்குடுதீவு

## குறிகாட்டுவான் அரசினர் தமிழ்க் கலவன் வித்தியாலயம்

1957 ஆம் ஆண்டு விஜயதசமி தினம் குறிகாட்டுவான் மக்களால் என்றும் மறக்க முடியாத பொன்னாள். இந்நன்னாளில் தான் அமரர் வீ.ஏ.கந்தையா அவர்கள் இவ்வித்தியாலயத்தைத் திறந்து வைத்தார்கள். முதுபெரும் தமிழாசிரியர் நா.தில்லையம்பலம் அவர்கள் மாணவர்களுக்கு அன்று வித்தியாரம்பம் செய்து வைத்தார்கள். இதைத் தொடர்ந்து அமரர்.சு.ந.பிரான்சிஸ் சேவியர் அவர்களின் பெருமுயற்சியின் பேறாக சு.யோ.பூராசா, செல்வி மங்கையர்க்கரசி ஆகியோர் ஊதியம் எதுவும் பெறாது இப்பாடசாலையில் மாணவர்களுக்குக் கல்வி போதித்து வந்தனர்.

அமரர்.வீ.ஏ.கந்தையாவின் அயரா முயற்சியினால் 08.10.1958 இல் இவ்வித்தியாலயத்தை அரசு பொறுப்பேற்றுக் கொண்டது. இதன் பின்னர் இப்பாடசாலையின் வளர்ச்சி துரிதமடைந்தது. நா.நடராசா, திருமதி சி.நடராசா ஆகியோர் இவ்வித்தியாலயத்தின் அதிபர்களாகக் கடமையாற்றிய காலத்தில் கல்வித்துறையில் மாணவர்கள் முன்னணியிற் திகழ்ந்துள்ளனர். சோ.சேனாதிராசா அவர்கள் அதிபரானதும் இவ்வித்தியாலயத்தின் வரலாற்றில் புதியதோர் அத்தியாயம் உருவாக்கப்பட்டது. அதாவது இவரது சேவைக் காலத்தில் தான் சுமார் 15,000 ரூபா செலவில் புதிய கட்டிடமொன்று கல்விப் பகுதியினரால் இங்கு அமைக்கப்பட்டது.இவரின் பின்னர் க.காமாட்சிசுந்தரம் அவர்கள் இவ்வித்தியாலயத்தின் அதிபராக இருந்து சிறப்பாகப் பணியாற்றியுள்ளார்.

1975 இல் 53 பிள்ளைகள் இவ்வித்தியாலயத்தில் கல்வி பயின்றுள்ளனர். மாணவர்களிடையே சமய நம்பிக்கையையும் தெய்வ பக்தியையும் வளர்க்கும் வகையில் வெள்ளிக்கிழமைகள் தோறும் மாணவர்கள் இங்கு உள்ள ஸ்ரீ மனோன்மணியம்மன் ஆலயத்திற்குச் சென்று வழிபடுவதற்கான வசதிகள் செய்யப்பட்டன. இவரைத் தொடர்ந்து சி.இரத்தினசபாபதி, த.தவராசா ஆகியோர் அதிபர்களாகக் கடமையாற்றி உள்ளனர். த.தவராசா அவர்கள் அதிபராகக் கடமையாற்றிய காலப்பகுதியில் பாடசாலை சகல துறைகளிலும் வளர்ச்சி கண்டது. பாடசாலை மாணவர்கள் கொத்தணி மட்ட விளையாட்டுப் போட்டிகளிலும், தமிழ்த்தினப் போட்டிகளிலும் பங்குபற்றிச் சான்றிதழ்களைப் பெற்றனர்.

இக்காலப்பகுதியில் இப்பாடசாலையில் 35 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர். 17.10.1991 இல் தீவுப்பகுதியில் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக இப்பாடசாலை யாழ் நகருக்கு இடம் பெயர்ந்தது. 30.10.1995 இல் ஏற்பட்ட தென்மராட்சி நோக்கிய இடப்பெயர்வின் பின்னர் செயலிழந்த இப்பாடசாலை இன்னும் மீண்டும் திறக்கப்படவில்லை.

## யாழ் / புங்குடுதீவு

## இராஜ ராஜேஸ்வரி வித்தியாலயம்

புங்குடுதீவு 10 ஆம் வட்டாரத்தில் ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரி அம்பாள் என வழங்கும் கண்ணகி அம்மன் ஆலயத்தின் அணித்தாய் மக்கள் துயர் துடைத்து கல்விச் சுடரை ஒளிர வைக்கும் உயர் நோக்கம் மக்கள் மனதில் உதயமாயிற்று. திருவாளர்கள் வைத்திலிங்கம், கண்ணையா, சின்னத்தம்பி என்போரின் இடையறா முயற்சியின் பெறுபேறாய் 1937 ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் விஜயதசமி நன்நாளில் நீ.சேதுபதி ஆசிரியர் அவர்களால் புதியதோர் ஓலைக் கட்டிடத்தில் பல மாணவர்களுக்கு ஏடு தொடக்கப்பட்டதுடன் இவ்வித்தியாலயம் உதயமாயிற்று.

சி.சின்னத்துரை ஆசிரியர் அவர்கள் முதலில் ஆசிரியராய் அமர்த்தப்பட்டார். கொழும்பு வாழ் இக்கிராம பொதுமக்களிடம் நிதி உதவி பெற்று அதன் மூலம் மிகுதி அரைவாசிக் கட்டிடத்தையும் தற்காலிகமாக அமைத்துக் கொண்டார். இப்பாடசாலையின் முதல் தலைமையாசிரியராய் அளவெட்டி விசுவநாதன் ஆசிரியர் அவர்கள் நியமனம் பெற, வை.கணபதிப்பிள்ளை அவர்களும் இங்கு சேவையைத் தொடரலானார். சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்தின் பெருமுயற்சியால், 1944 ஆம் ஆண்டில் உதவி நன்கொடை பெறும் பாடசாலையாக அங்கீகாரம் பெற்றது. பின்னர் நீ.சேதுபதி அவர்கள் அதிபராக நீ.ஆறுமுகம், சி.சின்னத்துரை, வை.கணபதிப்பிள்ளை ஆகியோர் உதவி ஆசிரியர்களாயினர். இதன்பின் வை.கணபதிப்பிள்ளை அவர்கள் அதிபரானார். இவ்வித்தியாலயத்திற்கு உரிய காணி முழுவதையும் இவரது தந்தையார் அ.வைத்திலிங்கம் அவர்களே கையளித்துள்ளார். இவ்வித்தியாலயத்தின் மேற்குப் பகுதியில் அமைக்கப்பட்டிருந்த இராஜ ராஜேஸ்வரி சனமூக நிலையக் கட்டிடமும், அதன் காணியும் இவ்வித்தியாலயத்திற்கு கையளிக்கப்பட்டது. 1962 ஆம் ஆண்டில் அரசாங்க உடைமையாக்கப்பட்ட இப்பாடசாலை உயர் வகுப்புகளுடன் இயங்கியது. 1972 இல் இவ்வித்தியாலயம் புனரமைக்கப்பட்ட புதிய கல்வித் திட்டத்திற்கமைய ஒரு ஆரம்பப் பாடசாலையாக தரப்படுத்தப்பட்டது.வை.கணபதிப்பிள்ளை அவர்களைத் தொடர்ந்து நா.நடராசா, .கா.சு.பொன்னம்பலம் ஆகியோர் அதிபர்களாகக் கடமையாற்றி உள்ளனர். 14.09.1986 இல் செ.தனபாலசிங்கம் அவர்கள் அதிபராக நியமனம் பெற்றார். இக்காலப்பகுதியில் இப்பாடசாலை சகல துறைகளிலும் துரித வளர்ச்சி கண்டது. இக்காலப்பகுதியில் 131 மாணவர்கள் கல்வி கற்றுள்ளனர். இப்பாடசாலையில் ஏற்பட்ட இடப்பற்றாக்குறையை நீக்குமுகமாக இக்கிராமத்தைச் சேர்ந்த த.கிருஷ்ணசாமி அவர்களால் காணி வாங்கிக் கொடுக்கப்பட்டது. பின்னர் பெற்றோர்களின் நிதியுதவியினால் பாடசாலையைச் சுற்றி மதில் அமைக்கப்பட்டது. ஆசிரியர் பற்றாக்குறையை நிவர்த்தி செய்யும் நோக்கில் தொண்டர் ஆசிரியர் நியமிக்கப்பட்டு, பெற்றோர் ஆசிரியர் சங்கத்தினால் வேதனம் வழங்கப்பட்டது. பாடசாலை மட்டத்தில் இல்ல மெய் வல்லுநர் போட்டிகள், தமிழ்த் தினம், வாணி விழா போன்றவை சிறப்பாக நடைபெற்றுள்ளன. மாணவர்கள் கொத்தணி மட்ட விளையாட்டுப் போட்டிகளில் பங்குபற்றி வெற்றிக் கிண்ணங்களைப் பெற்றுள்ளனர். இராணுவ நடவடிக்கை காரணமாக 17.10.1991 இல் யாழ் நகருக்கு இடம் பெயர்ந்தது. 30.10.1995 இல் இடம் பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக தென்மராட்சி நோக்கிய இடப்பெயர்வுடன் செயலிழந்த இப்பாடசாலை இன்னும் திறக்கப்படவில்லை.

# 15

# புங்குடுதீவின் கல்வியாளர்கள்

புங்குடுதீவில் 15 பாடசாலைகள் இயங்கின. மத்திய மகாவித்தியாலயம் ஊரின் மத்தியில் அமைந்திருக்கிறது. பதினைந்து பாடசாலைகளிலும் 350 க்கு மேற்பட்ட ஆசிரியர்கள் கடமையாற்றினார்கள். ஆனால் இப்பொழுது 5 பாடசாலைகள் மட்டுமே இயங்குகின்றன.

ஆரம்பத்தில் புங்குடுதீவில் பல திண்ணைப் பள்ளிக் கூடங்கள் இருந்தன. முதலில் ஆலடியிலும், பின்பு அடைப்பனம் வளவிலும் (இப்பொழுது அம்பலவாணர் அரங்கு இருக்கும் இடம்) தொடர்ந்து பெருங்காட்டிலும் திண்ணைப் பள்ளிக் கூடங்கள் தொடங்கப்பட்டன. நாகலிங்கம் ஆசிரியர் என்பவர் சமய பாடங்களை நடாத்தியிருக்கிறார். புங்குடுதீவு மேற்கில் உள்ள அமெரிக்கன் மிஷன் பாடசாலை ஆரம்பத்தில் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடமாகவே இருந்துள்ளது.

ஆரம்பகாலத்தில் கல்வியில் ஆர்வம் கொண்ட அறிஞர்களால் பாடசாலைகள் தொடங்கப்பட்டன. திண்ணைப் பாடசாலைகள் உருவாகின. ஓலைக்கொட்டில்களில் தொடங்கப்பட்ட பாடசாலைகளும் நாளடைவில் சீமெந்துக் கட்டிடங்களாகவும் ஓட்டுக் கூரைகள் கொண்டதாகவும் மாறின. 19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இங்கு மூன்று அமெரிக்கன் மிஷன் பாடசாலைகளும் பின்னர் பல சைவப் பாடசாலைகளும் உரோமன் கத்தோலிக்கப் பாடசாலையும்அமைக்கப்பட்டன.

1946 ஆம் ஆண்டு அரசினர் கனிஷ்ட ஆங்கிலப் பாடசாலை தொடங்கப்பட்டது. அதுதான் இன்று புங்குடுதீவு மகாவித்தியாலயமாக விளங்குகிறது. புங்குடுதீவின் கல்வி வளர்ச்சி 1910 ஆம் ஆண்டிலேயே பாடசாலை ரீதியாக ஆரம்பமாகியது. 12ஆம் வட்டாரத்தில் சடையர்வளவில் (அம்பலவாணர் அரங்கிற்கு எதிரே தற்போதைய ஐஸ்வரி ஆசிரியை வளவு) அரச மரத்தடியில் அமைந்திருந்த சிறு கட்டடத்தில் ஒரு பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. சடையர் குடும்பத்தினர் அவர் மகன் கணேசன் பெயரில் பாடசாலை முதலில் ஆரம்பித்து நடத்தப்பட்டது.

இதன் பின்பு அமரர் வ.பசுபதிப்பிள்ளை விதானையாரால் கதிரவேலுமணியகாரர் குடும்பத்துக்கு சொந்தமான நிலத்தில் தற்போதைய கணேச மகாவித்தியாலயம் ஆரம்பமானது. 1920ஆம் ஆண்டுமுதல் இந்து போட் ஆரம்பிக்கப்பட்டு அதன் தலைவராக சேர்.வை.துரைசுவாமியும் செயலாளராக இராஜரத்தினமும் செயற்பட்டனர். இவர்களின் நெருங்கிய நண்பர் தான் புங்குடுதீவு சேதுபதி ஆசிரியராவார். தீவகத்தில் இந்துப் போட் பாடசாலைகளை ஆரம்பிக்க முன்னோடியாக இருந்தவர்களில் இந்த சேதுபதி ஆசிரியரும் ஒருவர். புங்குடுதீவில் திருநாவுக்கரசு வித்தியாசாலை, கமலாம்பிகை வித்தியாசாலை, சண்முகநாதன் வித்தியாசாலை, இராஜராஜேஸ்வரி வித்தியாசாலை, சுப்பிரமணிய வித்தியாசாலை, சேர்.வை.துரைசுவாமி வித்தியாசாலை போன்ற பாடசாலைகள் உருவாவதற்கு சேதுபதி ஆசிரியர் முக்கியமானவராக விளங்கினார்.

ஒரு கிராமத்தின் முன்னேற்றத்தில் அக்கிராமத்தின் கல்வியாளர்களும் பிரதான இடத்தைப் பெறுகிறார்கள். புங்குடுதீவின் கல்வி வளர்ச்சிக்கு வழிகாட்டிய பல அறிஞர்கள் இருக்கிறார்கள். ஆரம்பகாலத்தில் திருவாளர்கள் கணபதிப்பிள்ளை, வைத்தியர் வே. கணபதிப்பிள்ளை, நி.சேதுபதி ஆசிரியர், க. ஆறுமுகவாத்தியார், நா. தில்லையம்பலம் வாத்தியார், ராசமணியர் போன்ற அறிஞர்கள் கல்வி வளர்ச்சிக்கு வழிகாட்டினார்கள். இக்காலப்பகுதியிலேயே நல்லதம்பிவாத்தியார், சரவணமுத்து உடையார், பசுபதிப்பிள்ளை விதானையார், இளையப்பா வாத்தியார் போன்றோரும் புங்குடுதீவின் கல்வி வளர்ச்சிக்கு வழிகாட்டினர். புங்குடுதீவுக் கிராமம் புலமை மிக்க பல அறிஞர்களைப் பெற்றிருக்கிறது. வித்துவான் சி.ஆறுமுகம், வித்துவான் பொன்.கனகசபை, திருப்பூங்குடி வீ.கே. ஆறுமுகம், க.செல்லத்துரை, அம்பலவாணர், குணமாலை, சு.சபாரெத்தினம், சு.வில்வரெத்தினம், கு.வி. செல்லத்துரை, நா.சோமசுந்தரம், மு.ஆறுமுகம், சி.க.நாகலிங்கம், க.சிவராமலிங்கம்பிள்ளை, சோ. சேனாதிராசா போன்றோர் இவர்களிற் சிலர். இப்பொழுது பல பேராசிரியர்களும் விரிவுரையாளர்களும் புங்குடுதீவுக்கு புகழ்வாங்கித் தந்திருக்கிறார்கள்.

**பேராசிரியர் வி. சிவசாமி**



புங்குடுதீவுக்குப் பெயர் வாங்கித்தந்த பெரியார்களில் முக்கியமானவர். அடக்கமும் அமைதியும் கொண்ட பேரறிஞர். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் சமஸ்கிருதத்துறைத் தலைவராக இருந்து பல்லாயிரக்கணக்கான மாணவர்களுக்கு வழிகாட்டியவர். பல்வேறு ஆய்வுகளை மேற்கொண்டு அளவிலா ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் பல்வேறு நூல்களையும் எழுதியவர். ஆரியர் வரலாறு, தமிழர் வரலாறு சம்பந்தமான பலநூல்களை எழுதியுள்ளார்.

பேராசிரியர் விநாயகமூர்த்தி சிவசாமி, புங்குடுதீவிலே தமிழ், சைவம், சமஸ்கிருதம், இசை, வைத்தியம் சோதிடம் முதலியவற்றில் பேர்போன குடும்பமொன்றிலே பிறந்தார். ஆரம்பக்கல்வியை இறுபிட்டி அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலும் சுப்பிரமணிய வித்தியாசாலையிலும் கற்றார். 1946ஆம் ஆண்டு நிறுவப்பட்ட புங்குடுதீவு கனிஷ்ட ஆங்கில வித்தியாலயத்திலும் வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலும் உயர்கல்வி கற்ற இவருக்கு 1955ஆம் ஆண்டு இலங்கைப் பல்கலைக்கழகத்துக்கு நேரடிப்பிரவேசம் செய்யும் வாய்ப்புக் கிடைத்தது. யாழ்ப்பாணக் கல்லூரியில் படிக்கும் போதே எழுத்தில் இவருக்கு ஆர்வம் ஏற்பட்டுவிட்டது. அக்கல்லூரியின் "இளஞாயிறு" சஞ்சிகையில் எழுதத் தொடங்கி விட்டார். இப்பத்திரிகையின் ஆசிரியர் குழுவிலும் இடம் கிடைத்தது. இக்கல்லூரியிலே தமிழ், வரலாறு, சமஸ்கிருதம் போன்ற பாடங்களில் ஆண்டுதோறும் பரிசு பெற்றார். அக்காலத்தில் கல்லூரியில் மேடையேறிய ஒரே ஒரு நாடகத்தில் பண்டிதராக நடித்தார். அந்த நாடகம்தான் காலஞ்சென்ற நீதிபதியான கே. எஸ் மகேஸன் தயாரித்த "சந்தை விற்பனைப் பொருட்கள்" என்னும் நாடகமாகும்.

பேராதனைப் பல்கலைக்கழகத்தில் தமிழ், சமஸ்கிருதம், வரலாறு ஆகியவற்றை நன்கு கற்றுத்தேறினார். பல்கலைக்கழகத்தின் "இளங்கதிர்" இந்தியாவின் "பாரதி" ஆகிய சஞ்சிகைகளில் கட்டுரைகள் எழுதினார். 1958இல் பொதுக்கலைமாணிப்பட்டத்தேர்விலே சித்திபெற்றார். தான் கல்விகற்ற யாழ்ப்பாணக் கல்லூரிக்குத் திரும்பி பட்டதாரி திணைக்களத்தில் விரிவுரையாளராக நியமனம் பெற்றார். தமிழ், சமஸ்கிருதப்பாடங்களைக் கற்பித்தார். 1981இல் லண்டன் பல்கலைக்கழகம் நடத்திய சமஸ்கிருதச் சிறப்புத்தேர்வில் இரண்டாம் வகுப்பு மேற்பிரிவிலே சித்தியடைந்தார். இவ்வாறு சித்தியடைந்த ஒரேயொரு இலங்கைத் தமிழர் இவரேயாவார்.

இலங்கைப்பல்கலைக் கழகத்தில் வரலாற்றினை தமிழில் கற்பிப்பதற்காக இவர் (1962 - 1965) வரலாற்று உதவி விரிவுரையாளராக விசேட ஒப்பந்த அடிப்படையில் அங்கு நியமிக்கப்பட்டார். நெப்போலியன் காலந்தொடக்கமுள்ள ஐரோப்பிய வரலாறு பற்றி டேவிட் தொம்சன் எழுதிய நூலின் ஒரு பகுதியை இவரால் தமிழில் மொழிபெயர்க்க முடிந்தது. 1966இல் மீண்டும் யாழ்ப்பாணக் கல்லூரிக்கு திரும்பி வந்து இலங்கைப் பல்கலைக்கழக வெளிவாரிப் பட்டப்படிப்பு மாணவர்களுக்கு சமஸ்கிருதம், வரலாறு கற்பித்து வந்தார். 1967இல் இலங்கைப் பல்கலைக்கழகம் நடத்திய சமஸ்கிருத முதுகலைமாணித் தேர்விலே சித்தியடைந்தார். யாழ்ப்பாணக் கல்லூரிப் பட்டதாரித் திணைக்கள மாணவர் மன்றமாகிய "கலைக்கொத்தின்" போஷகராக இருந்து பல்வேறு போட்டிகளை நடத்தினார்.

1969இல் கொழும்பில் நடைபெற்ற ஆசிய தொல்பொருளியல் மகாநாடு, 1974இல் யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற 4வது உலகத் தமிழாராய்ச்சி மகா நாடு, 1982 இல் மதுரையில் நடைபெற்ற 5வது அனைத்துலக தமிழாராய்ச்சி மகாநாடு முதலியவற்றில் பங்குபற்றினார். 1973ஆம் ஆண்டு "திராவிடர் ஆதி வரலாறும் பண்பாடும்" என்ற இவரது முதலாவது நூல் வெளியானது. இதைத் தொடர்ந்து தொல்லியல், நாணயவியல் பற்றிய நூல்களை எழுதி வெளியிட்டார். 1976இல் "ஆரியர் ஆதி வரலாறும் பண்பாடும்" என்ற நூலை வெளியிட்டார். 1974ஆம் ஆண்டு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்ட போது, இவர் அங்கு தொல்லியல் வரலாறு மற்றும் சமஸ்கிருத விரிவுரையாளராக நியமனம் பெற்றார். 1998இல் சமஸ்கிருதத் துறைத் தலைவராக உயர்ந்தார். 1975இல் இப்பல்கலைக் கழகத்தின் ஒரு பிரிவான இராமநாதன் நுண்கலைப்பிரிவிலே இசை, நடனம் கற்கும் மாணவர்களுக்கு சமஸ்கிருதம் கற்பிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இதனால் பரதநாட்டியம் பற்றிய நூல்களையும் எழுத முடிந்தது. கலைகள் தொடர்பான சில ஆங்கிலக் கட்டுரைகளைத் தமிழில் மொழிபெயர்த்தார். இராமநாதன் கலைப்பிரிவு மன்றம் இசை நடனம் பற்றிய இவருடைய கட்டுரைகளை "கலாமஞ்சரி" என்னும் தலைப்பிலே 1983இல் வெளியிட்டது. இவரது கல்விப்பணியின் 25 ஆண்டுகள் நிறைவு பெற்ற இக்காலத்தில் இச்சிறு நூல் முக்கியத்துவம் பெற்றது. 1987இல் 'பரதக்கலை' என்னும் நூலைவெளியிட்டார். வரலாறு, இந்து நாகரிகத்துறையிலே பல ஆண்டுகள் விரிவுரையாற்றி வந்துள்ளார். சமஸ்கிருதம், இந்து நாகரிகம், வரலாறு, நுண்கலை, முதுகலை, முதுத்தத்துவ மாணவர்களுக்கு ஆலோசகராகவும் பணி புரிந்துள்ளார்.இவர் எழுதிய நூல்களில் "சமஸ்கிருத இலக்கியச் சிந்தனைகள்" "தென்னாசிய சாஸ்திரிய நடனங்கள் ஒரு வரலாற்று நோக்கு" "தமிழும் தமிழரும்" "இந்துப் பண்பாடு அன்றும் இன்றும்" 'Some aspects of south Asian epigraphy" Concise Sanskrit - Tamil Dictionary" ஆகிய நூல்கள் முக்கியமானவை.

இவருடைய ஆய்வுக் கட்டுரைகள், நூல்கள், பல நேரடியாகச் சமஸ்கிருதத்தில் இல்லாதவை போன்று தோன்றினாலும் அவற்றில் இவரின் சமஸ்கிருதப்புலமை, வரலாற்றுத்தன்மை உள்ளமை குறிப்பிடத்தக்கது. இவருடைய ஆய்வுக்கட்டுரைகள் சில வெளிநாட்டுச் சஞ்சிகைகளிலும் வெளிவந்துள்ளன. இவருக்கு ஆங்கிலத்திலும் நன்கு எழுதும் ஆற்றல் இருப்பினும் தமிழ் மாணவர்களின் சமூகநலன் கருதி கூடுதலாக தமிழிலேயே எழுதியுள்ளார்.

இவர் எழுதிய "சமஸ்கிருத இலக்கிய சிந்தனைகள்" என்னும் நூலுக்கு இலங்கை சாகித்திய மண்டலப் பரிசு கிடைத்தது. ஆய்வுப் பணிகளின் அடிப்படையில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் இவரை 1989இல் சமஸ்கிருத இணைப் பேராசிரியராகவும் 1996 இல் சமஸ்கிருத பேராசிரியராகவும் நியமித்தது. இவர் ஓய்வு பெற்ற பின் இப்பல்கலைக்கழகம், 1999 இல் நடைபெற்ற வெள்ளி விழாப்பட்டமளிப்பு விழாவில் இவருக்கு கௌரவ இலக்கிய கலாநிதிப்பட்டம் வழங்கிக் கௌரவித்தது.

## பேராசிரியர் சோமசுந்தரம் செல்வநாயகம்

புங்குடுதீவு பெற்றெடுத்த கல்வியாளர்களில் பேராசிரியர் சோமசுந்தரம் செல்வநாயகம் முக்கியமானவர். ஆரம்பக் கல்வியைப் புங்குடுதீவிலும் உயர்கல்வியை யாழ். இந்துக்கல்லூரியிலும் பெற்றவர். பேராதனைப் பல்கலைக்கழகத்துக்குத் தெரிவு செய்யப்பட்டு புவியியல் சிறப்புப் பட்டதாரியாக வெளியேறித் தான் படித்த பல்கலைக்கழகத்திலேயே விரிவுரையாளராகக் கடமையாற்றினார். சிலகாலம் நைஜீரியா அகமது பெல்லோ பல்கலைக்கழகத்திலும் பணியாற்றினார். 1977ஆம் ஆண்டு யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் முதலாவது புவியியற்துறைப் பேராசிரியராகவும் பின்பு தலைவராகவும் விளங்கி அப்பல்கலைக் கழக வளர்ச்சியில் பெரும் பங்காற்றினார். யாழ். மாவட்ட அபிவிருத்திப் பணிகளிலும் ஈடுபட்ட இவர் தென்மராட்சி தென்னை அபிவிருத்திப் பணிகளுக்கு புவியியற்றுறை ஆலோசகராக விளங்கினார். தென்மராட்சிப் பகுதியில் சமூக பொருளாதார ஆய்வொன்றினை மேற்கொண்டு அவர் எழுதிய பூர்வாங்க அறிக்கை எமது மக்களுக்குப் பயனுள்ள ஒன்றாகும். சைவம், தமிழ் இரண்டினதும் வளர்ச்சியில் அவர் எடுத்துக் கொண்ட ஆர்வமும் அக்கறையும் அவரது பணிகளில் முக்கியமானவை. யாழ். பல்கலைக் கழக மன்றங்கள் மூலம் அவர் தமிழுக்கும் சைவத்துக்கும் தம்மாலான பணிகளைச் செய்துள்ளார்.

தம் மனைவி தயாநிதியுடன் சேர்ந்து பல்கலைக்கழக மாணவர்களுக்கு பல வழிகளிலும் உதவி செய்தார். தான் பிறந்த கிராமத்தின் மீது பற்றுக் கொண்ட இவர், புங்குடுதீவின் அபிவிருத்திப் பணிகளிலும் ஈடுபட்டார். "பெரியசோமர்" என அழைக்கப்பட்ட இவரது தந்தையார். புங்குடுதீவு 6ஆம் வட்டாரத்தின் கிராம அபிவிருத்திச் சங்கம், சித்தி விநாயகர் வித்தியாசாலை அபிவிருத்திச் சங்கம் ஆகியவற்றில் அங்கத்தவராக இருந்து பணியாற்றினார். 1979ஆம் ஆண்டு கார் விபத்தில் காலமான பேராசிரியருக்கு நிரஞ்சன், நிர்மலன், நிகிந்தன் ஆகிய மூன்று புதல்வர்களும் நிருத்திகா என்ற புதல்வியும் இருக்கின்றனர். மூத்த புதல்வர்கள் இருவரும் வைத்திய நிபுணர்களாகக் கடமையாற்றுகின்றனர்.

**பேராசிரியர் கா. குகபாலன்**



புங்குடுதீவில் பிறந்த புவியியல் அறிஞர்களில் முக்கியமானவர். குடிசனத் தொகையுடன் தொடர்புபட்ட பல ஆய்வுகள் செய்து பல்வேறு ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். இத்துறையுடன் தொடர்புடைய பலநூல்களையும் தீவுப்பகுதி சம்பந்தமான பல அரிய நூல்களையும் எழுதியுள்ளார். யாழ்ப்பாணப் பல்கலைக்கழக புவியியற்துறைத் தலைவராக இருந்து கொண்டு பல்லாயிரக்கணக்கான மாணவர்களுக்கு வழிகாட்டி வருகிறார். நுவரெலியா பிரபல வர்த்தகர் சண்முகம் கார்த்திகேசு பொன்னம்மா தம்பதியருக்கு மகனாக 24.02.1948 இல் புங்குடுதீவு ஆறாம் வட்டாரத்தில் பிறந்த பேராசிரியர் குகபாலன், ஆரம்பக் கல்வியை புங்குடுதீவு சித்தி விநாயகர் வித்தியாலயம், நுவரெலியா திரித்துவக் கல்லூரி ஆகியவற்றில் பயின்றார்.

யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் உயர்கல்வி பயின்ற இவர், பேராதனைப் பல்கலைக் கழகத்துக்கு தெரிவு செய்யப்பட்டு 1971 ஆம் ஆண்டு புவியியற் சிறப்புக் கலைமாணிப் பட்டதாரியாக வெளியேறினார். அடுத்த ஆண்டு அதாவது 1972 ஆம் ஆண்டுமுதல் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக தொழிலை ஆரம்பித்தார். முதுமாணிப்பட்டத்தை யாழ்ப்பாணப்பல்கலைக்கழகத்தில் பெற்றார். 1979ஆம் ஆண்டு முதல் யாழ்ப்பாணப்பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக கடமையாற்றினார்.

குடிசனத் தொகைக் கல்வியில் ஆர்வம் கொண்ட இவர், கலாநிதிப்பட்டத்தையும் முதுமாணிப் பட்டத்தின் பின் டிப்ளோமா பட்டத்தையும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பெற்றார். 1997ஆம் ஆண்டு முதல் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் புவியியற்துறைப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். அடுத்த ஆண்டு முதல் புவிவியற்துறைத் தலைவராக தெரிவு செய்யப்பட்டார். அத்துடன் யாழ். பல்கலைக்கழகத்தின் பட்டப்பின் படிப்புகள் பீட குடித் தொகைப்பிரிவு அலகின் இணைப்பாளராகவும் தெரிவு செய்யப்பட்டார்.

பேராசிரியர் கா. குகபாலன், இதுவரை 50க்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். இவை தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்டன. 50க்கு மேற்பட்ட அறிவைப்பரப்பும் கட்டுரைகள், சஞ்சிகைகளிலும் பத்திரிகைகளிலும் வெளிவந்தன. யாழ்ப்பாணப் பல்கலைக்கழக கலைப்பீட ஆராய்விதழான "சிந்தனை" என்ற இதழின் ஆசிரியராக 1999ஆம் ஆண்டு முதல் 2005 வரை செயற்பட்டார். இவர் இதுவரை பத்துக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியிருக்கிறார். 1994இல் 'தீவகம் வளமும் வாழ்வும்' என்ற நூலை முதலில் எழுதினார். தனது தாயாரின் நினைவாக வெளியிட்ட இந்நூலுக்கு சாகித்திய மண்டலப் பரிசும் வடகிழக்கு மாகாண சாகித்தியப் பரிசும் கிடைத்தன.

தீவகப் பிரதேசத்தின் பொருளாதார சமூக பண்பாட்டுக்கோலங்களின் வரலாற்றையும் அவற்றின் எதிர்கால விருத்தியின் அவசியத்தையும் இந்நூல் மூலம் எடுத்துக் கூறினார். "யாழ்ப்பாண இடப்பெயர்வு" என்ற நூலை 1996 ஆம் ஆண்டு எழுதி வெளியிட்டார். 1995 இல் நிகழ்ந்த மக்கள் இடப்பெயர்வு பற்றி எழுதப்பட்ட இந்நூல், யாழ்ப்பாண இடப்பெயர்வு பற்றி குடிப்புள்ளியியல் ரீதியாக மட்டுமன்றி சமூகவியல் கண்ணோட்டத்திலும் ஆய்வு செய்த நூலாகத் திகழ்கிறது.

10 நாட்களுக்குள் இடம் பெற்ற இவ்விடப் பெயர்வு 5,25,000 மக்களது பாரிய இடப் பெயர்வையும் மக்கள் அனுபவித்த சமூக பொருளாதார கலாசாரப் பிரச்சினைகளையும் கூறுவதாக அமைந்துள்ளது. இந்நூலுக்கு வட கிழக்கு மாகாண சாகித்தியப் பரிசு கிடைத்தது. 2000ஆம் ஆண்டு "இலங்கையில் பழங்குடிகள் வனக்குறவர் வாழ்வியல் ஆய்வு" என்னும் நூலை வெளியிட்டார். இது இலங்கையின் வடமத்திய மாகாணத்திலும் கிழக்கு மாகாணத்திலும் வாழும் 5,500 வனக்குறவரின் வாழ்வியல் ஆய்வாகும். இந்நூலுக்கும் வடகிழக்கு மாகாண சாகித்தியப் பரிசு கிடைத்தது. பட்டப்படிப்பு மாணவர்களுக்காக "குடித்தொகையியல்" என்ற நூலை எழுதினார். 2000 ஆம் ஆண்டு "புங்குடுதீவுக்கிராமம் அன்றும் இன்றும்" என்ற நூலை எழுதினார். புங்குடுதீவின் பழைய வரலாற்றையும் தற்போதைய நிலைபற்றியும் இந்நூலில் விபரித்தார். தீவகம் பற்றி பல ஆய்வு நூல்களை எழுதிய ஆசிரியர், தான் பிறந்த புங்குடுதீவு பற்றியும் அதன் எதிர்காலம் பற்றியும் சிந்தித்ததன் விளைவே இந்நூல் என்று அவர் கூறுகிறார். இந்நூலை அடுத்து "வடகிழக்கு மாகாண குடித்தொகை மாற்றங்கள்" என்ற நூலையும் எழுதினார்.

2003 ஆம் ஆண்டு "தீவகம் பல்துறை நோக்கு" என்ற தொகுப்பு நூலை வெளியிட்டார். இந்நூலை தனது தந்தையார் "சண்முகம் கார்த்திகேசு" அவர்களின் நினைவாக வெளியிட்டார். புங்குடுதீவு அரியநாயகன்புலம் வீரகத்திவிநாயகர் ஆலயத்தின் கும்பாபிஷேக மலர்கள் மூன்றை தொகுத்திருக்கிறார். யாழ் இந்துக்கல்லூரி நூற்றாண்டு விழாமலருக்கு ஆசிரியராகவும், ஆத்ம ஜோதி முத்தையா மலருக்கு இணையாசிரியராகவும் விளங்கினார். பேராசிரியர் கா. குகபாலன், யாழ்ப்பாண அரிமாக்கழகத்தின் தலைவராக, வலயத்தலைவராக, பிராந்தியத்தலைவராக, மாவட்டத்தலைவராக பல வருடங்கள் கடமையாற்றினார். இலங்கை செஞ்சிலுவை சங்கத்தின் செயலாளராக, ஆளுநர் சபை உறுப்பினராக, 1995 முதல் இன்றுவரை கடமையாற்றி வருகிறார். யாழ். இந்து மகளிர் கல்லூரி அபிவிருத்திச்சங்கம், இந்துக் கல்லூரியின் பழைய மாணவர்சங்கம், யாழ்ப்பாணம் இந்து சமயப்பேரவை ஆகியவற்றின் செயலாளராக கடமையாற்றியிருக்கின்றார். புங்குடுதீவு அரியநாயகன்புலம் வீரகத்தி விநாயகர் ஆலய திருப்பணிச் சபைத்தலைவராகவும் கடமையாற்றி வருகின்றார்.

பேராசிரியர் கா. குகபாலன், கல்விப்பணியுடன் சமூகப்பணியும் செய்து வந்தது போல் அவரது மகள் அமரர் திருமதி திருமகள் கார்த்திகேயனும் நூலகவியல்துறையில் புகழ் பெற்றவர். அவர் நூலகத்துறையில் எம்.எஸ். சி. பட்டம் பெற்றவர். யாழ்ப்பாணக்கல்வியியற் கல்லூரியில் விரிவுரையாளராக கடமையாற்றியவர். இலங்கை நூலக விஞ்ஞான சபையிலும் விரிவுரையாளராக கடமையாற்றினார். நூலகத்துறையில் சிறந்த அறிவு பெற்றிருந்தார். அத்துறைக்கு பல்வேறு பங்களிப்புகளைச் செய்தவர்.1974ஆம் ஆண்டு பிறந்த திருமகள், யாழ் இந்து மகளிர் கல்லூரியில் பயின்றவர். சென்னை பல்கலைக்கழகத்தில் பீ.எஸ்சீ. படித்த அவர் நூலகவியல் தகவல் விஞ்ஞானத்தில் எம். எஸ்சீ. பட்டம் பெற்றவர். தனது இளவயதில் (2005) காலமான அவர் உயிருடன் இருந்திருந்தால் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் நூலகராக உயர்ந்திருப்பார்.

### விரிவுரையாளர் ந.பேரின்பநாதன்



புங்குடுதீவில் பிறந்த புகழ்பெற்ற பொருளியற்துறை அறிஞர். பொருளியற்துறை சார்ந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதிப்புகழ் பெற்றவர். பொருளியற்துறை சார்ந்த பல நூல்களை எழுதியுள்ளார். "கேள்வியும் நிரம்பலும்", "நெகிழ்ச்சிக்கோட்பாட்டின் முக்கியத்துவம்", "வர்த்தகமாற்று வீதம்", "கோட்பாடும் நடைமுறையும்", "இலங்கைப் பொருளாதார வரலாறு", "இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு", "ஜேர்மன் பொருளாதார வரலாறு", "ரஷ்யாவின் பொருளாதார வரலாறு", "பிரான்ஸின் பொருளாதார வரலாறு", ஆகிய நூல்கள் புகழ் பெற்றவை. பொருளியல் துறையில் குறிப்பிடத்தக்க சிருஷ்டி கர்த்தா எனப் பெயர் பெற்றவர். "பொருளியலாளன்" என்ற சஞ்சிகையை நீண்ட காலம் நடத்தி வந்தார். கனடாவிலிருந்து வெளிவரும் "பூவரசம் பொழுது" என்ற ஆண்டு மலரில் இவர் எழுதிய மிகவும் பிரயோசனமான கட்டுரையொன்று இடம்பெறுகிறது. "புங்குடுதீவின் பொருளாதாரம் வரலாற்று ரீதியான நோக்கு", என்ற அந்தக்கட்டுரையே ஆசிரியரின் ஊர் அபிமானத்தை எடுத்துக் காட்டுகிறது.

### சட்ட அறிஞர்
### வி.ரி. தமிழ்மாறன்



இவர் சட்டத்துறையில் கீர்த்தி மிக்கவராக இருக்கும் அதே நேரத்தில் இலக்கியத்துறையிலும் புகழ் பெற்றவர். இவர் எழுதிய அரசியல் ஆய்வுக் கட்டுரைகள் போற்றத்தக்க படைப்புகளாகும். "தமிழ்மாறன் கட்டுரைகள்" "தேசிய இனங்களின் போராட்டங்கள்" "ஒப்பீட்டுச்சட்டம்" என்பன இவரது புகழ் பெற்ற நூல்களாகும். கொழும்பு பல்கலைக்கழக சட்ட பீடத்தில் விரிவுரையாளராக கடமையாற்றுகிறார். கொழும்பு - புங்குடுதீவு அபிவிருத்தி சங்கத்தின் தலைவரும் இவரே. "திருப்பம்" "சட்டம் " என்னும் சஞ்சிகைகளை நடத்தி வந்தவர். புங்குடுதீவு பெற்றெடுத்த எழுத்தாளர், சட்ட விரிவுரையாளர், அரசியல் விமர்சகர். இவர் எழுதிய "சர்வதேசியம் சமகால சிந்தனைகள் கருத்தும் நடப்பும்" என்ற நூலை 1993இல் மதுரை கவிதாபதிப்பகம் வெளிட்டது.இவர் எழுதிய "தமிழ்மாறன் கட்டுரைகள்" என்ற நூலை 1985இல் தர்சனா பிரசுரம் கொழும்பில் வெளியிட்டது. சர்வதேச அளவில் சட்ட, மனித உரிமைகள் பற்றிய சிந்தனைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. வி. ரி. தமிழ்மாறன் எழுதிய "தேசிய இனங்களின் விடுதலைப் போராட்டங்களும் மோதல்களும் தீர்வுகளும்" என்னும் நூல் 1996ஆம் ஆண்டு கார்த்திகேயன் வெளியீடாக கொழும்பில் வெளியிடப்பட்டது.

பல்வேறு நாடுகளில் தேசிய இனங்களின் விடுதலைப் போராட்டங்கள் பற்றிய 12கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். "நீதி" என்ற சஞ்சிகையை நீண்டகாலம் நடத்தியவர். 2001ஆம் ஆண்டு வி. ரி. தமிழ்மாறன் எழுதி வெளியிட்ட இன்னுமொரு நூலின் பெயர் "21ஆம் நூற்றாண்டில் அரசுகளுக்கான சவால்கள்" என்பதாகும். பத்திரிகையாளர் நிமலராஜனின் முதலாவது ஆண்டுப் பேருரையாக, மனித உரிமை தினத்தில் இவர் ஆற்றிய உரையின் நூல் வடிவமே இது. இலண்டன் ஐ.பி.சி வானொலியின் உதவியுடன் இது வெளியிடப்பட்டது.

உலகமயமாக்கலில் பல சவால்களை உலக ஒழுங்கமைப்பானது எதிர் கொள்ள வேண்டி ஏற்படும். பொருளாதார வளர்ச்சியின் ஒரு திசைப்பயணம், அதனால் ஏற்படும் போட்டியின் விளைவுகள், பலமான அரச கட்டமைவுக்கான கோட்பாட்டு அடித்தளங்கள், பலவீன முறுகல் என்பன மேலும் பல மோதல்களைத் தோற்றுவிக்கவே செய்யும் என்பன போன்ற விடயங்கள் இந்நூலில் எதிர்வு கூறப்படுகின்றன. வி.ரி. தமிழ்மாறன் எழுதிய இன்னுமொரு நூலின் பெயர் "இனப்பிரச்சினைத்தீர்வுகள் இதுவோர் உலகவலம்" என்பதாகும். இது பாரீஸ் ரஜனி பதிப்பாக 1993இல் வெளி வந்தது. உலகச் சிறுபான்மையினரின் பிரச்சினைகளை ஒப்பீட்டு அடிப்படையில் புரியவைக்கும் ஒரு முயற்சியாக இந்நூலிலுள்ள ஐந்து அரசியல் கட்டுரைகளும் அமைகின்றன. பன்னாட்டு அரசுகளும் தமது சிறுபான்மை இனப்பிரச்சினைகளுக்கு எவ்வாறு முகங்கொடுத்துள்ளனவென்றும் அவ்வரலாற்றிலிருந்து நாம் பெறத்தக்க பாடங்கள் எவை என்பன பற்றியும் இந்நூல் ஆராய்கிறது. இவ்வாறான புத்தகங்களை எழுதியதன் மூலம் உலகப்புகழ் பெற்ற அரசியல் ஆராய்ச்சியாளராக புகழ்பெறுகிறார்.

## அமரர் வே. இ. பாக்கியநாதன்

யாழ்ப்பாண நகரத்தின் நூலகம் நீண்ட வரலாற்றைக் கொண்டது. அச்சுவேலி க. மு. செல்லப்பா தொடக்கம் யாழ்ப்பாணவரலாறு எழுதிய முதலியார் சி. இராசநாயகம், இராசரத்தினம், பி.ஜி ஜோர்ச், மணியம் தோட்டம் ஆர். சுப்பிரமணியம், புத்தூர் மழவராயர் குடும்பம்வரை உதவியவர்கள் ஊக்குவித்தவர்கள் என்று பட்டியல் நீளுகிறது. இந்த நூலகத்திற்கு நூலகராகத் தெரிவான திரு. பாக்கியநாதன், தகைமைவாய்ந்த நூலகக்கலையில் தேர்ச்சி பெற்ற பட்டதாரி ஆவார். இவருடைய தகைமையை மதித்து ஏற்கனவே நூலகராகக் கடமை புரிந்த திரு. நவரத்தினம், பாக்கியநாதனுக்கு உதவியாளராகப் பணிபுரிய ஒப்புக்கொண்ட பெருந்தன்மையாளராவார். நூலகராக திரு. பாக்கியநாதன் பதவி ஏற்றபின்பு நூலகம் புதுமலர்ச்சி பெற்றது. நூலகம் பிராந்திய மட்டத்திற்கு அப்பால் தேசிய சர்வதேசிய கனதியைப் பெற்றுவிளங்கியது. யாழ். இலக்கியவட்ட முயற்சிகளுக்கும் திரு. பாக்கியநாதன் பேராதரவு அளித்தார். ஈழத்து எழுத்தாளரை ஊக்குவிக்கும் வகையில் அவர்களின் நூல்களையும் தமது நூலகத்திற்கு வாங்கி உதவினார். திரு. பாக்கியநாதன் யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி முகாமையாளர் சபையில் முன்னைநாள் எழுதுவினைஞராக விளங்கிய புங்குடுதீவு வே. இளையதம்பியின் மகனாவார். கல்கத்தா பல்கலைக்கழகத்துப் பொறியியல் பட்டதாரி. கொழும்பில் வெஸ்லிக்கல்லூரியில் ஆசிரியராக இருந்த காலத்தில் "புல்பிறைற்" புலமைப்பரிசில் பெற்று மேற்படிப்புக்காக அமெரிக்கா சென்றவர். அங்கு அட்லான்றா பல்கலைக்கழகத்தில் நூலகத்துறையில் M.Sc. பட்டம் பெற்றதோடு கலிபோர்னியாவிலுள்ள சந்தியாகோ நூலகத்தின் சிறுவர் பகுதியில் ஒருவருடம் பயின்று சிறுவர் நூலகங்களை நிர்வகிக்கும் திறமையையும் பெற்றவர்.

யாழ். நூலகத்தின் தரத்தை தன் திறமையாலும் முயற்சியினாலும்உயர்த்தி உலகக் கண்களுக்கு வியப்பூட்டிய பாக்கியநாதன், சேர் இராமநாதன் கனிஷ்ட பல்கலைக்கழகத்தின் விரிவுரையாளராகவும் கடமையாற்றியவர். இவர் புலம்பெயர்ந்து அவுஸ்திரேலியாவுக்குச் சென்றபோது, மிகவும் கவனமாக பாதுகாத்து எடுத்துச் சென்ற மூதறிஞர் க.சி. குலரத்தினம் அவர்களின் யாழ்ப்பாண நூல்நிலையம் பற்றிய கட்டுரைகளை எழுத்தாளர் எஸ். பொன்னுத்துரையின் உதவியுடன் சென்னை மித்திரா வெளியீடு மூலம் நூலாக்கம் செய்த பணி மிகப்பெரிய சேவையாகும்.

### பேராசான் க. சிவராமலிங்கம் பிள்ளை



இவர் மூத்த கல்விமானும் நாடறிந்த பேராசானும் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியின் முன்னாள் உப அதிபரும் சிறந்த சொற்பொழிவாளருமாவார். அவர் பல தலைமுறைகளால் அறியப்பட்டு பேராசானாக விளங்கியவர். சைவத்தமிழ் வித்தகரான இவர், சுமார் நாற்பது ஆண்டு கால ஆசிரியப் பணிமூலம் நன்மாணாக்கர் பலரை உருவாக்கியவர். அவரிடம் பயின்ற மாணவர்கள் பலர் உலகெங்கும் பரந்து வாழ்கிறார்கள். புங்குடுதீவைச் சேர்ந்த பிரபல ஆயுர்வேத வைத்தியர் கணபதிப்பிள்ளையின் மகனாக 16.09.1925இல் பிறந்தவர் சிவராமலிங்கம். புங்குடுதீவு ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாலயத்தில் ஆரம்பக் கல்வியைப் பயின்ற இவர், உயர் கல்வியை யாழ். இந்துக் கல்லூரியில் கற்றார். யாழ். இந்துக் கல்லூரியின் சிரேஷ்ட மாணவ முதல்வராக விளங்கிய இவர், 1943 ஆம் ஆண்டில் அங்கு ஆசிரியராகப் பொறுப்பேற்றார். அன்றிலிருந்து நாற்பது வருடங்கள் இந்துக் கல்லூரியின் ஆசிரியராகவும் உபஅதிபராகவும் இருந்து ஓய்வு பெற்றார். 1946ஆம் ஆண்டு சென்னை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் கல்வி பயின்று பின்னர் சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் கலைமாணிப் பட்டம் பெற்றார். அகில இலங்கை சேக்கிழார் மன்ற ஸ்தாபகர். ஆரம்ப கால உறுப்பினராக இருந்து, இந்திய அறிஞர்களை அழைத்து யாழ். இந்துக் கல்லூரியில் சேக்கிழார் விழாவை நடத்தினார். 1980ஆம் ஆண்டு அகில இலங்கை கம்பன் கழகத்தை ஸ்தாபித்து அதன் காப்பாளராக இருந்து வழிநடத்தினார்.

இலண்டனில் வாழும் இவரது மாணவர்கள் 2006ஆம் ஆண்டு இவரது நினைவாக சிறந்த மலர் ஒன்றை வெளியிட்டனர். இந்தியப் பேரறிஞர் தே.பொ. மீனாட்சி சுந்தரத்தின் மாணவனான இவர், இந்தியாவில் நடந்த தமிழ் விழாக்களில் பங்கு பற்றி உரையாற்றியுள்ளார். தர்மபுர ஆதீனம் 1970களில் இவரைக் கௌரவித்து விருது வழங்கியது. அகில இலங்கை கம்பன் கழகம் இவருக்கு 'கம்ப காவலர்' என்ற விருதை வழங்கியது.2004ஆம் வருடம் யாழ். இந்துக் கல்லூரியின் பழைய மாணவர்கள் இவரை லண்டனுக்கு அழைத்து பாராட்டு விழா நடத்தினார்கள். 2005ஆம் ஆண்டு கோப்பாய் ஆசிரியர் கலாசாலை 'மூத்த ஆசிரியப் பெருந்தகை' என்ற கௌரவப் பட்டத்தை வழங்கியது. யாழ். பல்கலைக்கழகத்தால் வழங்கப்படும் கௌரவ கலாநிதிப் பட்டத்துக்கென இந்த முறை பரிந்துரைக்கப்பட்டவர்களில் சிவராமலிங்கமும் ஒருவர். இவர் 25.08.2005இல் 80 வயதில் காலமானார்.

### வித்துவான் பொன். அ. கனகசபை



புங்குடுதீவு பெற்றெடுத்த தவப்புதல்வர்களில் இவரும் ஒருவர். எங்கெல்லாம் தமிழ் ஓசை கேட்கிறதோ அங்கெல்லாம் வித்துவானின் ஓசையும் கேட்கும் என்னும் வாசகம் யாழ். குடாநாட்டிலே சுமார் அரை நூற்றாண்டுக்கு மேலாக ஒலித்துக் கொண்டிருந்தது என்றால் மிகையாகாது. சிறப்பாக சைவம், தமிழ் ஆகியவற்றுக்குப்பணியாற்றிய பெருந்தகை. சிறந்த பேச்சாளராக எழுத்தாளராக பேராசிரியராக பல்லாயிரக்கணக்கான நன்மாணாக்கர்களை உருவாக்கியவர்.

யாழ்ப்பாணக் குடாநாட்டிலே இவர் பங்குபற்றாத விழாக்கள் இல்லை. இலக்கிய விழா, சைவத் தமிழ் விழாக்கள், மகா நாடுகள், பட்டிமன்ற விழாக்கள் இவை எதுவாக இருந்தாலும் வித்துவான் அலங்கரிக்காத மேடைகள் இல்லை என்று சொல்லலாம். 50 களின் முற்பகுதியில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தால் உருவாக்கப்பட்ட மூவர் யாழ்ப்பாணத்துப் பாடசாலைகளுக்குப் புதுமெருகூட்டினர். அம்மூவரும் புங்குடுதீவின் மைந்தர்கள். க. சிவராமலிங்கம் அவர்கள், இந்துக்கல்லூரி தமிழ் ஆங்கிலப் பேராசானாய் விளங்கியவர். வித்துவான் சி. ஆறுமுகம், ஸ்கந்தவரோதயாக் கல்லூரி, தமிழ்ப் பேராசானாய் விளங்கியவர்.வித்துவான் பொன். கனகசபை. வைத்தீஸ்வராக் கல்லூரித் தமிழ் பேராசானாய் விளங்கியவர். சங்ககால இலக்கிய விமர்சகர். சைவசித்தாந்தச் செம்மல், இலக்கிய வித்தகர் என்று புகழ் பெற்றவர். பிறந்த மண்ணில் சேவையாற்ற வேண்டும் என்ற பெரு விருப்பத்தினால் 65இல் புங்குடுதீவு மத்திய மகாவித்தியாலய தமிழ் பேராசானாய் விளங்கி தமிழ், இலக்கியம், சமயம் போன்ற பாடங்களைக் கற்பித்து வந்தார். இவரிடம் கல்வி கற்ற மாணவர்கள் சிறந்த பெறுபேறுகளை எடுத்துச் சிறந்து விளங்கினார்கள். மாணவர்களை சிறந்த ஒழுக்க சீலர்களாக்கி நற்பிரசைகளாக்க அரும்பாடுபட்டவர். சைவத் தமிழ் மரபிலே தோன்றிய இவர் புங்குடுதீவு பெருங்காடு சிவன் கோவில், கிராஞ்சியம்பதி கந்தசுவாமி கோவில் உற்சவ காலங்களில் சிறந்த சமயப் பேச்சாளராகவும் பிரபல சைவத்திருமுறை புராண உரைகாரராகவும் விளங்கியவர். கந்தபுராணத்திற்கு உரை சொல்வதில் சிறந்து விளங்கினார்.

புங்குடுதீவு நலன்புரிச் சங்கம், புங்குடுதீவு இளைஞர் கழகம், மகா வித்தியாலய பெற்றோர் ஆசிரிய சங்கம், இலங்கை இளைஞர் சங்கம், கிராமோதய சபை, யாழ்ப்பாணம் சிவதொண்டர் நிலையம், இலங்கை இந்து மாமன்றம், இலங்கை இந்து விஷ்வ பரிசத் சங்கம் முதலிய மன்றங்களில் சிறப்பாக சேவையாற்றியவர். ஆசிரிய சேவையிலிருந்து ஓய்வு பெற்றபின் மாணவர்களுக்கு இலவச வகுப்புகளை நடத்தி வந்தார். புங்குடுதீவு இளைஞர் கழகத்தில் தனியார் கல்வி நிறுவனத்தை நிறுவி அதன் பணிப்பாளராக இருந்து சிறந்த கல்விச் சேவையாற்றினார். 1974 ஆம் ஆண்டு இக்கல்வி நிறுவனத்தில் கல்வி கற்ற மாணவர்களில் 80 வீதமான மாணவர்கள் கல்விப் பொதுச் சாதாரண பரீட்சையில் சித்தி பெற்றிருந்தார்கள். இவரின் முன்மாதிரியான சிறந்த சேவையை பலரும் வியந்து பாராட்டினார்கள். இவ்வாறு சிறந்த சைவத் தமிழ் பொதுப்பணி, கல்விப்பணி, சமூகசேவைப் பணி, இறைபணியாற்றிச் சிறந்து விளங்கினார்.

### கலாநிதி க. சோமசுந்தரேஸ்வரன்



புங்குடுதீவில் பிறந்த கல்விமான்களில் பொறியியல்துறையில் புகழ்பெற்று விளங்குபவர் கலாநிதி க. சோமசுந்தரேஸ்வரன். இவர் நயினாதீவை பிறப்பிடமாகவும் புங்குடுதீவு -5ஆம் வட்டாரத்தை வதிவிடமாகவும் கொண்ட ஆசிரியர் அமரர் ஐயாத்துரை கதிர்காமலிங்கம் அவர்களின் மகனாவார். புங்குடுதீவு இறுபிட்டி ஸ்ரீ சித்தி விநாயகர் வித்தியாசாலையில் ஆரம்பக்கல்வியையும், யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் உயர்கல்வியையும் கற்றார். தொடர்ந்து பேராதனைப் பல்கலைக்கழகத்தில் பொறியியற் கல்வியைப் பயின்று B.Sc. (Hons) Eng. பட்டத்தை குடிசார் பொறியியற்துறையில் (Civil Engineering) பெற்றார். சிறிது காலம் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் போதித்த இவர், ஜேர்மனி நாட்டினால் வழங்கப்பட்ட

DAAD Scholarship ஐப் பெற்று தாய்லாந்தில் அமைந்துள்ள Asian Institute of Techologyல் மேற்படிப்பை மேற்கொண்டு Master of Engineering பட்டத்தை பெற்றார். தொடர்ந்து அங்கு ஆராய்ச்சியாளராக வேலை செய்த வேளையில் புங்குடுதீவு -10ம் வட்டாரத்தைச் சேர்ந்த பிரபல வர்த்தகர் அமரர் க. தியாகராஜாவின் மூத்த மகள் கிருஸ்ணலதாவை திருமணம் செய்தார்.

ஜப்பான் நாட்டினால் வழங்கப்பட்ட Monbashu scholarship ஐப் பெற்று ஜப்பான் சென்ற இவர், Yokohama National University இல் ஆராய்ச்சியில் ஈடுபட்டு கலாநிதிப்பட்டத்தை பெற்றார். இவரது மேற்படிப்புகள் அனைத்தும் Full scholarships மூலமாகவே மேற்கொள்ளப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

தற்சமயம் உறுகுணு பல்கலைக்கழகத்தின் பொறியியற் பீடத்தில் சிரேஷ்ட விரிவுரையாளராக பணியாற்றும் இவர், பொறியியலில் புதிய பாடத்திட்டங்களை வகுப்பது முதல், பீட அபிவிருத்தி சம்பந்தமான சகல விடயங்களிலும் முக்கிய பங்களிப்பைச் செய்தார். இவரது தலைமைத்துவத்திலேயே குடிசார் பொறியியற் பகுதி பாரிய முன்னேற்றமடைந்தது. தொடர்ந்து இவர் போக்குவரத்து, நகர உட்கட்டமைப்பு அபிவிருத்தி சம்பந்தமான விரிவுரைகளை நடத்துவதுடன் பல ஆராய்ச்சிகளிலும் ஈடுபட்டுள்ளார். இவரது ஆராய்ச்சிகளில் "நகர உட்கட்டமைப்பும் அபிவிருத்தியும்" "அதிவேக நெடும் சாலைகள் நிர்மாணம்" "வாகன விபத்துகளை தவிர்த்தல்", "நகர சமிக்ஞை விளக்குகள் அமைத்தலும் பராமரித்தலும்", "விமானங்கள் நிர்வாக முகாமைத்துவ அபிவிருத்தி" போன்றவை குறிப்பிடத்தக்கவை.

பல நாடுகளில் நடைபெற்ற பொறியியல் சார் மகாநாடுகளில் கலந்து கொண்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளை சமர்ப்பித்திருக்கும் இவருக்கு, 2004ஆம் ஆண்டு இலங்கை ஜனாதிபதியின் பரிசு கிடைத்தமையும் குறிப்பிடத்தக்கது. 2005ம் ஆண்டில் United Kingdomஇல் உள்ள University College of London இவரை Senior Research fellow ஆக அழைத்திருந்தமையும், அதே ஆண்டில் கனடாவில் உள்ள University of Calgary இவரை பொறியியற்துறையில் Visiting Scholar ஆக அழைத்திருந்தமையும் குறிப்பிடத்தக்கது.

American Society of civil Engineers in USA, Institution of Engineers in Sri Lanka, International Institute for Infrastructure Renewal and Reconstruction in Canada போன்றவற்றின் செயற்பாடுகளில் ஈடுபடும் இவர், யாழ். செல்லும் சந்தர்ப்பங்களில் யாழ். பல்கலைக்கழகத்திலும் கருத்தரங்குகளை நடத்த தவறியதில்லை. யாழ்.பல்கலைகழகத்தால் ஆரம்பிக்கப்படவுள்ள பொறியியற் பீடத்திற்கும் உரிய திட்டங்களையும், ஆலோசனைகளையும் வழங்கி வருகிறார். பொறியியற்துறை மாணவர்களை நல்வழி காட்டி வரும் கலாநிதி க. சோமசுந்தரேஸ்வரன், தான் பிறந்த புங்குடுதீவு கிராமத்தில் அளவு கடந்த அக்கறை கொண்டவர். கொழும்பு - புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கத்தின் வளர்ச்சிக்கு முன்னின்று உழைப்பவர். அச்சங்கத்தின் செயற்பாடுகளுக்கும், புங்குடுதீவு அரசினர் வைத்தியசாலையின் புனர் நிர்மாணப் பணிகளுக்கும் தனது மேலான ஆலோசனைகளை வழங்கி வருபவர்.

### சுப்பிரமணியம் சர்வானந்தன்



அரச எழுது வினைஞராகவும் நிதி உதவியாளராகவும் நாட்டின் பல பகுதிகளிலும் கடைமையாற்றியவர். ஈழநாடு, தினகரன், சுதந்திரன் போன்ற பத்திரிகைகளில் கவிதை, கதை, கட்டுரைகள் எழுதியவர். யாழ்ப்பாணம், கிளிநொச்சி, மட்டக்களப்பு, மன்னார் போன்ற இடங்களில் அரசதிணைக்களங்களில் நிதி உதவியாளராகக் கடமையாற்றியவர். இவரும் புலேந்திரனும் சேர்ந்து வேலணைக் கோட்டக்கல்வியகம் தீவுப்பகுதியில் உருவாக வழிவகுத்தனர். புங்குடுதீவின் பல்வேறு வளர்ச்சிகளில் முன்னின்று உழைத்தவர்.

### கல்விப்பணிப்பாளர்
### க. புலேந்திரன்

உதவிக்கல்வி அதிகாரி, கல்வி அதிகாரி, ஆசிரியகல்லூரி அதிபர், கல்விப்பணிப்பாளர் போன்ற பதவிகளை வகித்தவர். வேலணைக் கோட்டக்கல்வி அலுவலகம் இவரது பெருமுயற்சியாலே தீவுப்பகுதிக்கு வந்தது. இவர் கடமையாற்றிய இடங்களில் எல்லாம் கல்வியானது உயர்ச்சி அடைந்தது. இவரது கல்விப்பணியால் தீவுப்பகுதியின் கல்வி வளர்ச்சியும் உயர்ந்தது. புங்குடுதீவின் உயர்ச்சியிலும் முன்னின்று உழைப்பவர். திருகோணமலையில் கல்விப்பணிப்பாளராகக் கடமையாற்றி ஓய்வு பெற்றார். க. புலேந்திரன் அவர்களது சகோதரர் க. கோணேஸ்வரனும் சிறந்த கல்வியாளர். இவர் விவசாயத்துறையில் சிறந்த அறிஞராக விளங்குறார். தற்பொழுது விவசாயத்துறை விரிவுரையாளராக கடமையாற்றுகிறார்.

### கல்விப்பணிப்பாளர்
### த. துரைசிங்கம்



புங்குடுதீவில் பிறந்த சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர் த. துரைசிங்கம். சிறுவர் இலக்கியம் சார்ந்த கவிதை, கதை, நாடகம், கட்டுரை என முப்பதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியிருக்கிறார். அவற்றிலே நான்கு நூல்களுக்கு இலங்கை சாகித்திய மண்டலத்தின் பரிசுகள் கிடைத்துள்ளன. நூற்றுக்கு மேற்பட்ட பாடநூல்களை எழுதியுள்ளார். “அபிராமி அந்தாதி உரை”, “ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாறு”, “பாடம் புகட்டும் பழமொழிகள்”, “பைந்தமிழ் வளர்த்த ஈழத்துப்பாவலர்கள்”, தமிழ் இலக்கிய இலக்கணக் களஞ்சியம் என்பன அவற்றில் சிலவாகும். புங்குடுதீவு கணேசவித்தியாசாலை அதிபராக இருந்த பொழுது பாடசாலையின் வளர்ச்சிக்கு பாடுபட்டார்.

புங்குடுதீவில் 1937ஆம் ஆண்டு வைத்தியர் தம்பிராசா சிவபாக்கியம் தம்பதியருக்கு புதல்வனாகப் பிறந்த துரைசிங்கம், புங்குடுதீவு மேற்கு அ.மி. த.க. பாடசாலையிலும், சுப்பிரமணிய வித்தியாசாலையிலும் கல்வி கற்றவர். நல்லூர் ஆசிரிய கலாசாலையில் கல்விபயின்று 1959இல் பயிற்றப்பட்ட ஆசிரியராக வெளியேறினார்.

பத்திரிகை நிருபராக தனது வாழ்க்கையை ஆரம்பித்த த. துரைசிங்கம், உதவி ஆசிரியராக, கொத்தணி அதிபராக, கோட்டக்கல்வி பணிப்பாளராக அதிபராக, கல்விப்பணிப்பாளராக உயர்வு பெற்று 03.08.1997இல் ஓய்வு பெற்றார்.1954இல் கொழும்பு விவேகானந்த சபை நடத்திய ஆறுமுகநாவலர் நினைவுக் கட்டுரைப் போட்டியில் முதற்பரிசு பெற்றமையை தொடர்ந்து எழுத்துத் துறையில் ஈடுபடத் தொடங்கினார். கல்வித்துறை, எழுத்துத்துறை மட்டுமன்றி புங்குடுதீவின் வளர்ச்சிக்கும் சேவையாற்றினார். புங்குடுதீவு அபிவிருத்திச் சபைச் செயலாளராக நீண்டகாலம் பணியாற்றினார். ஓய்வு பெற்ற பின்பு பல நூல்களை எழுதிக் கொண்டிருக்கிறார்.

## சு. வில்வரெத்தினம் (அதிபர்)

இப்பெரியார் நீண்டகாலமாகப் புங்குடுதீவு மகாவித்தியாலய அதிபராக இருந்து கல்வி மேம்பாட்டிற்காக அயராது உழைத்தார். 1955இல் தலைமைப் பதவியைப் பொறுப்பேற்றார். அப்பொழுது மாணவர்தொகை 127 ஆகும். இவர் கடமையேற்றதும் பாடசாலையின் கல்வித்தரத்தை உயர்த்த வேண்டும் என்று கருதி முன்னோடியாக 04.04.1955 தொடக்கம் இருநேரப் பாடசாலையாக இயங்க வைத்தார். இவர் காலத்தில் சமய ஆராதனைக்கு மண்டபம் அமைக்கப்பட்டு வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. புதிய வகுப்பறை மண்டபம் ஒன்றும், தற்காலிக வகுப்பறைக் கட்டிடமும், பாடசாலையின் உட்புறத்திறந்த வெளியரங்கும் பாடசாலைக் கிணறும் இவர் காலத்தில் கட்டப்பட்டன. இவை இவரை ஞாபகப்படுத்தும் சின்னங்களாகும். இவர் காலத்தில் பாடசாலைக் காணி மேலும் விஸ்தரிக்கப்பட்டது. 1960 ஆம் ஆண்டு 8 மாணவர்கள் க. பொ. த. சாதாரணதரப் பரீட்சையில் சித்தி பெற்றனர். இவ்வித்தியாலயம் 1958ஆம் வருடம் மகாவித்தியாலயமாக தரம் உயர்த்தப்பட்டது. புங்குடுதீவு வயலூர் முத்துமாரி அம்மன் கோவில் தொண்டராய் இருந்து பெரிய ஆலயமாகக் கட்டி உருவாக்கிய பெருமைக்குரிய அடியவராவார். பெருங்காடு கிராஞ்சியம்பதி கந்தசுவாமி கோவில் நிர்வாக சபை உறுப்பினராக அரை நூற்றாண்டுக்கு மேலாகச் சிறப்பாகப் பணியாற்றியவர். இவ் ஆலய வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடுடையவரான இவர், பூங்காவனத் திருவிழாவை மிகவும் சிறப்பாகச் செய்து முடித்து பலரின் பாராட்டைப் பெற்றுக் கொண்டவர். புங்குடுதீவு மேற்கு இறுப்பிட்டி மூத்த நயினார்புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயம், இறுபிட்டி பெரியபுலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலய வளர்ச்சியிலும் ஈடுபாடு உடையவராக விளங்கினார். பொதுப்பணி சமூகப்பணி, சைவப்பணிகளில் சிறப்பாக சேவையாற்றியவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## பண்டிதர் சி. சரவணனார்

1908 ஆம் ஆண்டு வேலணைக் கிராமத்தில் பிறந்த இவர், புங்குடுதீவில் திருமணம் செய்து கொண்டாலும் வெளியிடங்களிலேயே தன் வாழ்நாளைக் கழித்தார். சைவசமயப் பற்றுள்ள அறநெறியாளர். மகாத்மா காந்தியின் அகிம்சைப் போராட்டத்தில் பங்குபற்றியதுடன் காங்கிரஸ் கட்சியிலும் உறுப்பினராக இருந்தார். 20 வருட காலம் காந்தியத் தொண்டராக இருந்த காலத்தில் இலங்கைக்கு வந்து மரண தண்டனை விதிக்கப்பட்ட சிறைக் கைதிகளுக்கு கடைசி நேரத்தில் நற்சிந்தனைகளைப் போதித்து ஆன்ம ஈடேற்றத்துக்கு ஆசீர்வதித்தவர். எதுவித ஊதியமும் பெறாது 20 வருடகாலம் தொண்டாற்றிய பெருமைக்குரியவர்.

மட்டக்களப்பில் குமாரசாமி முதலியார் அவர்களின் முழுச் சொத்துக்கும் பொறுப்பாளராக இருந்து கணக்காளராய் கடமை புரிந்த காலத்தில் பல மேடைகளில் ஆன்மீகச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியவர். யோகர் சுவாமிகள், தாளையன் பாபா ஆகியோரை குருவாக ஏற்றுக் கொண்டவர். இவர் தனது கடைசிக் காலத்தை புங்குடுதீவில் உள்ள வட இலங்கை சர்வோதயத்தில் கழித்தார்.

இவர் சர்வோதயத்துக்கு ஒரு தூண்போல் பக்கபலமாகவும், ஆலோசகராகவும் விளங்கினார். இவரால் உருவாகிய சிவலிங்கபூசை வழிபாடு இன்னும் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. சிவனையும் மீனாட்சியம்மையையும் ஒருகணமேனும் மறவாத பெரும் சிவபக்தராவார். 40 ஆண்டுகள் சிவலிங்கத்தைத் தன்னுடன் பிள்ளைபோல் வைத்துப் பூசித்து வந்தவர். சோதிடக்கலையில் விற்பன்னராக இருந்ததோடு, கைரேகை சாஸ்திரம், வாஸ்து சாஸ்திரம் போன்றவற்றில் தேர்ச்சியும் பெற்றவர். இலங்கை, இந்தியா போன்ற நாடுகளில் வாழ்ந்த ஆன்மீகவாதிகளின் நன்மதிப்பைப் பெற்றவர். இந்தியாவில் ரமணமகரிஷியின் ஆச்சிரமத்தில் தங்கியிருந்து ஆச்சிரம வாழ்க்கை வாழ்ந்தவர். "பண்டிதர் ஐயா" என எல்லோராலும் அன்பாக அழைக்கப்பட்ட பெரியார் ஆவார்.

## தமிழறிஞர் கு. வி. செல்லத்துரை



புங்குடுதீவைப் பிறப்பிடமாகக் கொண்டவரும், கொழும்பு விவேகானந்தா வித்தியாலயம், புதுக்குடியிருப்பு மகா வித்தியாலயம், புங்குடுதீவு மகாவித்தியாலயம் ஆகிய கல்லூரிகளில் தனது அருஞ்சேவைகளால் அழியாத பணிகள் ஆற்றியவர், கு. வி. செல்லத்துரை அவர்கள். இவர் அகில இலங்கைத் தமிழாசிரியர் சங்கத்தின் தலைவராக இருந்து ஆசிரிய உலகின் சேவைக்குத் தனியான ஒரு கௌரவத்தை ஏற்படுத்தினார். புங்குடுதீவு மக்கள் சேவா சங்கத்தின் தலைவராகவிருந்து நயினை அம்பாள் தேர்த்திருவிழாவுக்கு வரும் ஆயிரக்கணக்கான அடியார்களுக்கு ஆண்டுதோறும் தண்ணீர்ப் பந்தல் சேவை அளித்தார். கூட்டுறவு புனரமைப்புக்கு முன் புங்குடுதீவு மேற்கு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் தலைவராகவிருந்து கூட்டுறவு அமைப்பை எல்லா மக்களும் பயன்படுத்த வழிசமைத்தார். புங்குடுதீவு பனம்பொருள் கூட்டுறவுச் சங்கத்தின் உபதலைவராகவிருந்து பனம் பொருள் உற்பத்திக்கு உலகசந்தையில் இடந்தேட வேண்டுமென அயராது உழைத்தார். 1960ஆம் ஆண்டு தமிழரசுக் கட்சியின் புங்குடுதீவுக் கிளைத் தலைவராகக் கடமையாற்றி சத்தியாக்கிரகப் போராட்டத்திற்குப் பூரண ஆதரவு தந்து இளைஞர்களை வழிநடத்தினார். புங்குடுதீவு இளைஞர் கழகத்தின் பத்தொன்பது தொண்டர்கள் மட்டக்களப்பு, திருகோணமலை ஆகிய நகரங்களில் நடைபெற்ற மறியல் இயக்கங்களில் கலந்துகொள்ளச் சென்றபோது அதற்குத் தலைமை தாங்கிச் சென்றதோடு யாழப்பாணத்தில் சத்தியாக்கிரகிகள் இராணுவத்தால் தாக்கப்பட்ட அன்று விடியற்காலை கச்சேரி எல்லைக்குள் நுழைய முயன்ற கழகத் தொண்டர்களை இராணுவம் தாக்கியபொழுது கு. வி. அவர்களும் தாக்கப்பட்டார்கள். அமரர் கு. வி. பல அரிய பாடநூல்களை எழுதியதோடு ஞானசுரபி புத்தகக் கம்பனியை நிறுவி அநேக நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டார். தலைசிறந்த பேச்சாளராகவும் விளங்கி இலங்கையின் எல்லா மாகாணத்தவர்களுக்கும் அறிமுகமான பெரியாராகவும் விளங்கினார். இவர் 07.02.1973 இல் காலமானார். அவர் மறைந்தாலும் அவர் பணிகளை எவரும் மறக்கமாட்டார்கள்.

## அதிபர் தி. சதாசிவம்

ஆறுமுக நாவலர் பெருமானின் புராணபடனம் என்னும் புதுமுறைக் கல்விப் போதனையைத் திருக்கோயில்களிலே பக்திசிரத்தையுடன் செய்து வந்த சைவப் பெரியார்களில் ஒருவரான தில்லையம்பலம் ஆசிரியரின் மூத்த மகனே சதாசிவம் அவர்கள். இவர் திருநெல்வேலி ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையில் பயிற்றப்பட்ட ஆசிரியராகத் தேறி புங்குடுதீவு இராஜராஜேஸ்வரி வித்தியாசாலையில் 18 ஆண்டுகள் ஆசிரியராகக் கடமையாற்றியவர். இருபிட்டி சித்திவிநாயகர் வித்தியாசாலையிலும், இருபிட்டி அமெரிக்கன் மிஷனிலும் அதிபராகக் கடமையாற்றி ஓய்வு பெற்றவர். கல்வி, சமய, சமூகப் பணிகளில் ஈடுபாடு கொண்ட இவர் புங்குடுதீவு இணக்கசபைத் தலைவராகத் தெரிவாகிப் பல சிக்கல் நிறைந்த குடும்பப்பிரச்சினைகளை சமாதானத்தோடும் நீதியோடும் தீர்த்து வைத்தவர்.நயினாதீவு புங்குடுதீவு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத் தலைவராக விளங்கிப் பல பணிகளைச் செய்தவர். மண் மீதும் மக்கள் மீதும் தமிழ் தேசியத்தின் மீதும் அக்கறைமிக்க இவர் தந்தையாரைப் போலவே புராண படனங்களுக்குப் பயன் சொல்வதிலும் வித்தகராய் விளங்கியவர். சோதிட ஞானத்தில் தெளிவுடையவராகத் திகழ்ந்த இவர் நவக்கிரக நகர்வுகளுக்கும் பரம்பொருளின் திருவருளுக்கும் இடையே உள்ள தாற்பரியங்களை இலக்கணச் சுத்தத்தோடும் சாஸ்திர நுணுக்கங்களோடும் சொல்லுவதில் வல்லவர்.

## பண்டிதர் வீ. வ. நல்லதம்பி



புங்குடுதீவு பெற்றெடுத்த தவப்புதல்வர்களில் ஒருவர் பண்டிதர் வீ. வ. நல்லதம்பி ஆவார். கல்விப்பணி, சமுதாயப்பணி, சமூகசேவைப்பணி, பொதுப்பணி, தமிழ் சைவப்பணி போன்றவற்றை தனது உயிர் மூச்சு உள்ள வரையும் செய்து அமரத்துவமானவர். புங்குடுதீவு ஸ்ரீ கணேச மகாவித்தியாலயத்தின் பழைய மாணவ சங்கத்தின் வெள்ளி விழாக் காரியதரிசியாக இருந்து பல பிரமுகர்களை அழைத்துச் சங்கத்தைத் திறம்பட நடாத்தியவர். 1953ஆம் ஆண்டு பன்னிரெண்டாம் வட்டார உள்ளூர் ஆட்சி மன்ற அங்கத்தவராகவும் புங்குடுதீவு கிராமாட்சி மன்றத் தலைவராகவும் தனது முப்பதாவது வயதில் ஏற்றுப் பல உள்ளூர் பணிகளைத் திறம்படச் செய்தார்.

1954ஆம் ஆண்டு யாழ். மாவட்ட கிராமாட்சி மன்ற சமாசத் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டு கிராம அபிவிருத்திப் பணிகளைத் திறம்பட நடாத்தினார். யாழ். மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாச உபதலைவராக இருந்து கிராம சனசமூக நிலையங்களில் வாசிப்பதனால் மனிதன் பூரண முழுப்பயன் அடைகிறான் என்பதை உணர்ந்து சமூகப் பணி மூலம்வாசிப்பதை ஊக்குவித்தார். தீவுப்பகுதி பிரயாணிகள் சங்கக் காரியதரிசியாக இருந்து வேலணை, பண்ணை, ஊர்காவற்துறை, புங்குடுதீவு போக்குவரத்துச் சேவையை சிறப்பாக நடத்தினார். இவர் 1960 ஆம் ஆண்டு ஊர்காவற்றுறைத் தொகுதியில் இலங்கை சமசமாஜக் கட்சி வேட்பாளராகப் போட்டியிட்டார். இவற்றுக்கு மேலாக தீவுப்பகுதி தமிழாசிரிய சங்கத் தலைவராக, ஐக்கிய மேற்பார்வைச் சங்கத்தலைவராக, அகில இலங்கைப் பெற்றோர் ஆசிரிய சங்க சம்மேளனத் தலைவராக, வட இலங்கை தமிழ் ஆசிரிய சங்க சம்மேளனத் தலைவராக, வடமாகாண விஞ்ஞான - விவசாய ஆசிரிய சங்கத் தலைவராக இருந்து சிறப்பான கல்விப்பணியாற்றியவர்.

1973 ஆம் ஆண்டு புங்குடுதீவு மகாவித்தியாலய அதிபராகப் பதவியேற்ற இவர் ஆறாம் வகுப்புத் தொடக்கம் பன்னிரண்டாம் வகுப்பு வரை கலை, வர்த்தகம், விஞ்ஞானம் கல்விப் பொதுத்தராதர (உயர்தர) விஞ்ஞான வகுப்புகளை ஆரம்பித்தார். அத்துடன் அல்லாமல் இருபத்திநான்கு ஆசிரியர்களைக் கொண்ட கல்வி நிலையத்தை நாற்பது ஆசிரியர்களைக் கொண்ட பாடசாலையாக்கி இருமாடிக் கட்டடங்களைக் கட்டி முடித்து வித்தியாலயத்தின் வெற்றி விழாவைச் சிறப்பாக நடாத்தி முடித்தவர். இவரால் உருவாக்கப்பட்ட வெள்ளிவிழா மலரை இன்றும் பலர் பெருமையாகப் பேசிக்கொள்கிறார்கள் என்றால், இவரின் ஆளுமையின் தனிச் சிறப்பை அறிந்து கொள்ளலாம்.

இறுதியாகப் புலம்பெயர்ந்து கனடா நாட்டிலும் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"என்ற உயர்ந்த நோக்கத்தோடு தான் கற்றறிந்த தமிழையும் உலகறியச் செய்த உத்தமர். கனடா இந்து மாமன்றத்தின் தோற்றுநராகவும் தலைவராகவும் பத்திராதிபராகவும் ஈற்றில் காப்பாளராகவும் பல ஆக்க பூர்வமான சேவைகளையாற்றியவர். பல தமிழ் சைவ கவின் கலைப் பாடசாலைகளை நிறுவினார். பெற்றோர் ஆசிரிய சங்கங்களை ஏற்படுத்தி மாணவர்களுக்கு கலை விழாக்களையும் பேச்சுப் பண்ணிசைப் போட்டிகளையும் நடத்தினார். கனடா நாட்டில் "சைவநீதி" என்னும் அரும்பெரும் மலரை தமிழ் நெஞ்சங்களுக்கு அள்ளித் தந்தார்.

1997ஆம் ஆண்டு ஸ்காபரோ கலாசார விருது விழாவில் இலக்கியத்திற்கான விருதினைப் பெற்றுக் கொண்டார். இதுவே, கனடா நாட்டில் இலங்கைத் தமிழர் ஒருவர் பெற்ற முதல் விருது ஆகும். 2001 ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் மொரிசியசில் நடைபெற்ற எட்டாவது உலக சைவ மகாநாட்டில் அவரின் சைவத் தமிழ்த் தொண்டுகளைப் பாராட்டிச் சைவ சித்தாந்தக் கலாநிதி என்னும் சிறப்புப் பட்டத்தை உலக சைவப் பேரவை வழங்கி கௌரவித்தது.

## அதிபர் க. செல்லத்துரை



செல்லத்துரை வாத்தியார் என்று ஊர்மக்களால் அன்புடன் அழைக்கப்பட்ட அதிபர் க. செல்லத்துரை அவர்கள் புங்குடுதீவு கணேச மகாவித்தியாலயத்தில் தலைமை அதிபராய் நீண்டகாலம் பணியாற்றியவர். இவர் புங்குடுதீவு கிராமச் சங்கத்தின் முதல் தலைவரான வ. பசுபதிப்பிள்ளை விதானையாரின் மருமகனாவார்.

இவர் ஆசிரிய கலாசாலைப் பயிற்சிகளை முடித்த உடனேயே ஸ்ரீ கணேச வித்தியாலயத்தில் அதிபர் கடமையை ஏற்றவர். ஒரே இடத்தில் இருந்து தன் இருப்பின் வலிமையால் அவ்வித்தியாலயத்தைப் பிரகாசிக்கச் செய்தவர். தமது தாய் மாமனாரான வ. பசுபதிப்பிள்ளை அவர்களின் வழித்தடத்திலேயே சைவம், தமிழ் என்ற இரு வழிப்பாதையிலும் நடைபோட்டவர். நீண்ட காலமாக அதிபர் பணியில் இருந்த இவருடைய நித்தியகடமைகள் பலராலும் கணிக்கப்பட்டவையாகும். காலை எழுந்து குளித்துச் சிவபூசை முடித்து வெள்ளை உடை அணிந்து, வாழ்ந்த இடமான பெருங் காட்டிலிருந்து இரண்டு மைல் தூரமுள்ள கணேச வித்தியாலயத்துக்குச் சாப்பாட்டுத் தூக்குச் சட்டியைத் தூக்கிக்கொண்டு நடந்தே சென்றவர்.

இதனை "வெள்ளை உடையணிந்து வேகநடைபோட்டு தமிழ் விதைத்த வெள்ளை உள்ள நல்லபிள்ளை செல்லத்துரைப்பெரியோன்" என வேலணையூர் பண்டிதர் மருதையினார் கவிதையால் விபரித்துள்ளார். அதிபர் க. செ. அவர்கள் தமது வித்தியாலயப் பணிக்குப்பின்பு ஓய்வு நிலையிலும் ஓயாது தமிழ் சைவ வளர்ச்சிக்குப் பணியாற்றியவர். தனது இல்லத்திற்குப் "பசுபதிவாசம்" என்ற பெயரைச் சூட்டியவர். பசு, ஆன்மா, பதி, சிவன், ஆன்மாவும் சிவனும் வாசம் செய்யும் இடம் என்றும் தனது மாமனார் பசுபதிப்பிள்ளையை நினைவுகூரும் வீடு என்றும் விளக்கம் சொன்ன இப்பெரியார், புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் வீதியில் நடந்த சிலப்பதிகார விழாக் குழுவில் துணைத்தலைவராகக் கடமையாற்றியவர். பெருங்காடு கிராஞ்சியம் பதியில் 1965 ஆம் ஆண்டில் நடந்த சைவ மாநாட்டின் தலைவராய் விளங்கியதோடு அதன் ஆதார சுருதியாயும் அமைந்தவர்.

புங்குடுதீவு கிராமச் சங்கத் தலைவராய் இருந்தபோது, இவ்வூரின் பன்னிரண்டு வட்டாரங்களுக்கும் அடிக்கடி சென்று அங்கத்தவர்களைச் சந்தித்து அரியகாரியங்களுக்கு அடிகோலியவர். பெருங்காடு கிராம முன்னேற்றச் சங்கம், ஐக்கிய நாணய சங்கம் முதலியவற்றின் தலைவராய் இருந்து பணிகள் பல செய்தவர்.

### அதிபர் சு. சபாரத்தினம்

இவர் புங்குடுதீவு ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாலயத்தில் அதிபராகக் கடமையாற்றிய காலத்தில் பிள்ளைகளுக்கு நல்ல கல்வியை வளர்த்ததோடு சிறந்த உடற்பயிற்சியையும் அளித்தார். வித்தியாலயத்தை உயர் நிலைக்குக் கொண்டு வருவதற்கு அயராது பாடுபட்டவர். கல்வி உலகிலே "நல்லாசிரியன்" என்ற பாராட்டைப் பெற்றவர். சமாதான நீதவானாகவும், கிராமச் சங்கத் தலைவராகவும் இருந்த காலங்களில் பொது நல சேவையாளராக இரவு பகல் பாராது உழைத்தவர்.

குடிதண்ணீர், மின்சார விநியோக வேலைகளைத் துரிதப்படுத்தி நடாத்தியவர். பொதுவாக தீவக மக்களின் முன்னேற்றத்துக்கு அயராது உழைத்தவர். இதனால் எல்லா மக்களின் நன்மதிப்பைப் பெற்ற பெரியார் ஆவார். "பெரிய சபா" வாத்தியார் என எல்லோராலும் அன்பாக அழைக்கப்பட்டவர். ஆசிரிய அதிபர் பணியில் மிகுந்த கடமை உணர்வோடு கல்விப் பணியினை தெய்வப் பணியாகக் கருதிவாழ்ந்தவர். அதிபர் மறைந்தாலும் அவர் வாழ்ந்து மறைந்த இல்லம் பெருங்காடு கிராஞ்சியம்பதி அருகில் இன்றும் உயர்ந்து காட்சி தருகின்றது. அமரரின் பெயரும் நிலைத்து நிற்கின்றது.

### கலைஞர் செல்வம் இ. க. செல்வரெத்தினம்



ஆசிரியர் இ. க. செல்வரெத்தினம் அவர்கள் ஒரு சிறந்த ஆசிரியராக, கல்லூரி அதிபராக,சிறந்த குணச்சித்திர நடிகராக, சிறந்த நாடக இயக்குநராக விளங்கியவர். அவர் இலக்கியம் பேசுகையில் இனிய தேன்சொட்டும், அறியாமையைச் சாடுகையில் அனல்கொட்டும், மக்களின் பிற்போக்குத் தனங்களைச் சுட்டிக் காட்டும்போது அவர் பேனாமுனை எரிமலையின் குழம்பிலே தோய்த்தெடுத்த எழுத்தாணியாகிவிடும். சோதிடக் கலையின் சொற்றிறம்பாமைக்கு உதாரண புருஷராக விளங்கியவர்.

புங்குடுதீவு மேற்கில் கனகசபை நாகம்மா தம்பதியரின் மூத்த மகனாகப் பிறந்த இவர், தனது கல்லூரிப் படிப்பை சாவகச்சேரி "டிறிபேக் கல்லூரி" யில் பயின்றார். 1957 ஆம் ஆண்டுகாலப் பகுதியில் அத்தனை புங்குடுதீவு மக்களின் கடைகளின் வானொலிப் பெட்டிகளும் ஏதோ ஒரு நிகழ்வினை எதிர்நோக்கிக் காத்திருந்தன. ஆம் அதுதான் தங்கள் கிராமத்து மைந்தன் இலங்கையிலேயே சிறந்த பேச்சாளனாக வெற்றியீட்டியதோடு மட்டுமல்லாது, அந்தப் பேச்சினை இலங்கை வானொலி ஒலிபரப்புச் செய்யவுள்ளது என்பதேயாகும். அந்தச் சிறுவன்தான் இந்த இ. க. செல்வரெத்தினம் என்பதை பின்னால் யாரும் மறந்து விடமுடியாது. அன்றே தான் பிறந்த தாய்க்கிராமத்தின் புகழ்க்கொடியை தலைநகரில் நிலைநாட்டிய பெருமைக்குரியவர்.

படிப்பினை முடித்து வேலைவாய்ப்பிற்காகக் காத்திருந்த காலத்தில் கிராமத்தில் கலைவிழாக்கள், நாடகங்கள் போன்ற பொது நிகழ்வுகளை முன்னின்று நடத்தியவர். அவர் பல நாடகங்களைப் புங்குடுதீவில் மட்டுமல்ல, யாழ்ப்பாணம், சாவகச்சேரி, கொழும்பு போன்ற இடங்களில் எல்லாம். புகழ்க்கொடி நாட்டியதோடு மறைந்த சாவகச்சேரிப் பாராளுமன்ற உறுப்பினர் வீ. என். நவரெத்தினம் அவர்களும் அந்த நாடகத்தில் முக்கிய பங்கேற்று நடிக்க வாய்ப்பளித்தார். அந்த நாடகத்தை நேரடியாகப் பார்வையிட்ட தந்தை செல்வா அவர்கள் "கலைஞர் செல்வம்" என்ற பட்டத்தினை ஆசிரியர் செல்வரெத்தினம் அவர்களுக்கு வழங்கிக் கௌரவித்தார்.

திரு. செல்வரெத்தினம் 1963ஆம் ஆண்டு காலத்தில் பூங்குடுதீவு ஸ்ரீ கணேசவித்தியாலயத்தில் ஆசிரியராக கடமையாற்றிய போது நான் அவரிடம் ஆங்கிலம் படித்ததை பெரும் பேறாகக் கருதுகிறேன். தான் சேவையாற்றிய அனைத்துப் பாடசாலைகளிலும் நாடகம், மேடைப்பேச்சு, மற்றும் இலக்கியத் திறன் ஆகியவற்றில் மாணவர்களின் மனதைக் கொள்ளைகொண்ட ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். அவரது இறுதிக் காலத்தில்கூட வடமாகாண நாடகப் போட்டியில் புங்குடுதீவு மகாவித்தியாலய மாணவ, மாணவியர் நடித்த நாடகமும், சுப்பிரமணிய மகளிர் மகாவித்தியாலய மாணவியரின் நாடகமும் ஒன்றை ஒன்று விஞ்சும் வண்ணம் விளங்கியது ஓர் சிறப்புமிக்க நிகழ்வாகும். (காரணம் அங்கு சேவையாற்றிக்கொண்டிருந்தவர் அவரது தங்கை.) தான் சென்று பணியாற்றிய அத்தனை பாடசாலைகளிலும் தனக்கென ஓர் முத்திரையைப் பதித்து அந்தப் பாடசாலையின் மாணவர்களின் மனத்திலும், அவர்களின் பெற்றோர்களின் இதயங்களிலும் அழியாக் குடிகொண்டுவிட்டவர். சைவப் பாடசாலைகளை நிறுவி எம்மவர்களை கிறிஸ்தவர்களாக மதமாற்றம் செய்யப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் சைவப் பெரியார்களில் ஒருவரான அதிபர் சிவகுரு இலங்கையரின் தந்தை வழிப் பேரன் தான் இவர். ஈழத்தில் முதன் முதலில் ஆஞ்சநேயர் ஆலயத்தைப் புங்குடுதீவில் ஆரம்பித்ததோடு, ஆஞ்சநேய வழிபாட்டினைக் கொண்டு வந்த சித்த - ஆயுர்வேத வைத்திய நிபுணர் மருதநாயகம் அவர்களின் தாய்வழிப் பூட்டனும் இவர்தான் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவர் மறைந்து விட்டாலும், இவர் விட்டுச்சென்ற வேர்களும் விழுதுகளும் இவர் விட்டுச்சென்ற பணிகளைத் தொட்டுச் செல்வதை இன்றும் நாம் காணக்கூடியதாகவும், பெருமைப்படக்கூடியதாகவும் உள்ளது.

## அதிபர் மு. நடேசு

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர், நடேசு ஆசிரியர் என்றால் அது மிகையாகாது. அன்னார் வேலணையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். ஆசிரியராகக் கடமையாற்றும் காலத்தில் புங்குடுதீவு 6ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த கனகசபை ஆசிரியர் தம்பதியரின் மூத்த மகளைத் திருமணம் செய்து செல்வச்சிறப்புடன் வாழ்ந்தார். அக்காலத்தில் இறுபிட்டித் துறைமுகம் வழியாக நயினாதீவு செல்லக்கூடியதாக இருந்தது. எனவே போக்குவரத்து சங்கத்தை அரியநாயகன் பாடசாலைக்கு அருகாமையில் அமைக்க வேண்டுமென்றார்கள். எனவே செல்லத்துரை ஆசிரியர் ஒருபரப்புக் காணி நன்கொடையாகக் கொடுத்தார். அங்கு படிப்பகம் அமைக்கப்பட்டு கு. வி. செல்லத்துரை ஆசிரியர் தலைவராகவும் நடேசு காரியதரிசி ஆகவும் இருந்து நயினாதீவு திருவிழாக் காலங்களில் தாகசாந்தி, அன்னதானம் கொடுத்தும் பிரயாணத்திற்கு வேண்டிய மோட்டார் படகுகளையும் ஒழுங்கு செய்தும் வந்தார்கள். இவர்களுடன் திரு. பொன்னம்பலமும் பக்கபலமாக நின்றார்.

அரியநாயகன் புலம் வீரகத்தி விநாயகர் ஆலயத்தைப் புனருத்தாரணம் செய்ய வேண்டுமென்று கிராம மக்கள் ஆர்வம் கொண்டனர். அப்பொழுது திருவாளர் நாகலிங்கம், பொன்னம்பலம், சாமி ஆறுமுகம், ஆ. சரவணமுத்து ஆகியோருடன் திரு. நடேசுவும் இணைந்து காரியதரிசியாக இருந்து கோவிலைப் புதுப்பித்து 1972 ஆம் ஆண்டு கும்பாபிஷேகப் பெருஞ்சாந்தி செய்தார்கள். அத்தோடு அவரின் முயற்சியினால் "பஞ்சமூர்த்தி விநாயகர்" திரு. மகாலிங்கம் என்ற வணிகரால் ஆலயத்தில் வைக்கப்பட்டுள்ளது. அத்தோடு நின்றுவிடாமல் கோவிலுக்குரிய ரதத்தையும் முன்னின்று செய்தார்.

புட்டிவயல் சந்நிதியில் இருந்த மின்விநியோகத்தை அரியநாயகன் வீதி, புலவர் வீதிக்கு விஸ்தரிப்புச் செய்வதற்கு முன்னின்று பாடுபட்டுச் செயற்படுத்தினார். நல்ல ஒழுக்கம், நல்ல பண்பு இனிய மொழி ஆசிரியருக்குரிய உடை இவைகளைக் கொண்ட நல்லாசிரியனாக விளங்கினார். இவர் இறைவனடி சேரும்போது சேர். வை. துரைசுவாமி வித்தியாசாலை அதிபராகக் கடமையாற்றினார்.

## வித்துவான் சி. ஆறுமுகம்



சி.ஆறுமுகம் புங்குடுதீவில் பிறந்த தமிழறிஞர்களில் ஒருவர். ஐம்பதுகளின் முற்பகுதியில் யாழ்ப்பாணப் பாடசாலைகளுக்கு புதுமெருகூட்டியவர்களில் வித்துவான் ஆறுமுகமும் ஒருவராவார். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் உருவாக்கிய இவரை, சுன்னாகம் ஸ்கந்தவரோதயாக் கல்லூரி அதிபர் ஒறேற்றர் சுப்பிரமணியம் நிறுத்துப் பார்த்து எடுத்தவர். இக்கல்லூரியின் கல்வி வளர்ச்சியிலும் அபிவிருத்திப் பணிகளிலும் அரும்பாடுபட்டு உழைத்து நன்மதிப்புப் பெற்றவர்.

புங்குடுதீவு தல்லையபற்று முருகமூர்த்தி ஆலயத்தின் பரிபாலனசபைத் தலைவராக இருந்து சமயப் பணியாற்றி சேவை செய்தவர். இவரிடம் நிறைந்த கவிப்புலமையும் திருமுறைகளைப் பாடும் வல்லமையும் காணப்பட்டது. தமிழ்த்துறைப் பேராசிரியராக விளங்கிய இவர் எழுபதுகளின் பிற்பகுதியில் யாழ். இந்துக் கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசானாக விளங்கியவர்.

“நல்லூரான் நாற்பது” எனும் கவிதை நூலால் கவிதை உலகில் பாராட்டப்பட்டவர். மாதகல் வ. கந்தசாமியோடு இணைந்து “கலைமதி” என்னும் இலக்கியச் சஞ்சிகையை நடாத்தியவர். தனது ஆசிரியர், பேராசிரியர் சி. இ. சதாசிவம்பிள்ளையின் “திருக்கேதீஸ்வரம் கௌரிநாயகி பிள்ளைத்தமிழ்” என்னும் பிரபந்த நூலை வெளிக்கொணர்வதில் அயராது உழைத்தவர். புலவர் ஈழத்துச் சிவானந்தனின் “ஈழத்துச் சொற்செல்வர்கள்” என்னும் நூலில் சிறந்த சொற்பொழிவாளராகக் குறிப்பிடப்பட்டவர். ஆசிரியை விசாலாட்சியின் அன்புக்கணவர். இவரது மூத்த மகன் காந்தி ஒரு வைத்தியர். இளையமகன் வள்ளுவன் ஒரு பொறியியலாளர்.

## ஆசிரியை திருமதி விசாலாட்சி ஆறுமுகம்



புங்குடுதீவு மாணவர் பலருக்கு நீண்ட காலம் கல்வியை கருணையுடன் கற்பித்தவர். முதன் முதலில் பாடசாலைக்கு சென்ற எனக்கு விரலைப்பிடித்து சிலேட்டில் எழுத்துச் சொல்லித் தந்த அன்பான ஆசிரியை அவர். கருணையே வடிவானவர். ஒவ்வொரு மாணவனினதும் குடும்பப்பின்னணியை அறிந்து கொண்டு அவருக்கு ஏற்றாற் போல கல்வி கற்பிப்பார். 1925ஆம் ஆண்டு புங்குடுதீவில் பிறந்த இவர் கணேச மகாவித்தியாலயத்தில் ஆசிரியையானார். சாதி, பேதம் காட்டக் கூடாது என்ற தத்துவத்தை பலவருடங்களுக்கு முன்பே தனது வகுப்பறையினுள் நடத்திக் காட்டியவர். இவரைப்போலவே இவரது குடும்பமும் புகழ்பெற்றது. இவரது கணவர் வித்துவான் சி. ஆறுமுகம் புகழ்பெற்ற கவிஞர். நீண்ட காலம் சுன்னாகம் ஸ்கந்தவரோதயாக்கல்லூரியில் ஆசிரியாக பணியாற்றியவர். மூத்த மகன் காந்தி ஒரு வைத்தியர். இரண்டாவது மகன் வள்ளுவன் ஒரு பொறியியலாளர் ஆவார்கள். ஆசிரியை 2005ஆம் ஆண்டு தனது 80வது வயதில் காலமானார். ஆசிரியை விசாலாட்சி மறைந்து விட்டார். ஆனால் மாணவர்கள் அவரை என்றும் நினைத்தவாறு இருப்பர்.

## ஆசிரியமணி சி. க. நாகலிங்கம்



புங்குடுதீவின் மூத்த தமிழறிஞரும் கல்வியுலகக் காவலருமான ஆசிரியமணி சி. க. நாகலிங்கம் வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தவர். ஆயிரக்கணக்கானோருக்கு கல்வியூட்டி அங்ஙனமே வாழ்வாங்கு வாழவும் வழிகாட்டிய உத்தமப் பெருந்தகை. எத்துறையிலேற்படும் எந்தவொரு சந்தேகத்தையும் தீர்த்து வைப்பதானால் நாகலிங்கம் மாஸ்டரிடந்தான் போக வேண்டும் என்றொரு நியதி புங்குடுதீவில் இருந்தது. கர்வமென்றால் என்னவென்றே அறியாத காட்சிக்கு எளியவராய் அதேவேளை சகலகலா வல்லவனாகவும் திகழ்ந்து புங்குடுதீவின் மாட்சிக்கு வழிசமைத்த வரலாறு அன்னாருக்குரியது. புங்குடுதீவைப் பொறுத்தவரையில் உண்மையில் “என்ன தவம் செய்தனை; என்று வியந்து மற்றோர் ஏத்தும்” அளவுக்கு ஆயகலைகளிலும் எம்மை ஆறத்தோய்த்து எடுத்த ஆசான்களில் முன்வரிசைக்குரிய மூதறிஞர். புங்குடுதீவு ஸ்ரீ கணேச வித்தியாசாலையில் தனது ஆசிரியப் பணியைத் தொடங்கி இளைப்பாறும் வரை அங்கேயே சேவையாற்றி அப்பாடசாலையின் வாழ்விலும் தாழ்விலும் தன்னை இரண்டற இணைத்துக் கொண்டு இறைபணியாகவே ஆசிரியத் தொழிலை நடத்தியவர்.

அவரின் அளப்பருஞ் சேவைக்காகவே அவருக்கு ஆசிரியமணி என்ற பட்டம் புங்குடுதீவு இந்து இளைஞர் சங்கத்தினால் வழங்கப்பட்டது. ஆசிரியர் சி.க. நாகலிங்கம் அவர்கள் 1960களில் கணேச வித்தியாசாலையில் கற்பித்த போது நானும் அவரிடம் கல்விகற்றதை பெருமையாகக் கருதுகிறேன். ஆசிரியமணி அவர்கள் கற்றுத் துறைபோகாத துறை என்று எதைத்தான் கூறமுடியும்? மரபு வழி இலக்கியங்களில் அவருக்கிருந்த ஆழ்ந்த அறிவை எந்தப் பேராசிரியரும் எட்டியேனுந்தொட்டுவிட முடியும் என்பது சந்தேகமே. சைவ சித்தாந்த நுணுக்கங்களைப் பற்றி விளங்கிக் கொள்ளவேண்டுமானால் தத்துவாசிரியர்கள் அவரிடம் கைகட்டிப் பாடங்கேட்க வேண்டும். எழுந்தமானத்தில் மரபுக் கவிதைகளை கடல்மடை திறந்தாற்போல் அவரைப் போல் பொழிவதற்கு கவியரசுகள் இனிமேல் தான் பிறந்துவர வேண்டும். பாரம்பரியக் கலைகளான சுதேச வைத்தியம், சோதிடம், வானசாஸ்திரம், ஏன் விவசாய நுட்பங்களில் கூட அவர் ஒரு நடமாடும் பல்கலைக்கழகமாகவே திகழ்ந்தார்.

இறைவனை இயற்கையிலே தரிசித்து அந்த இயற்கையை மிக நேசித்து அதே இயற்கையோடு இயைந்த வாழ்வினை மேற்கொண்ட ஆசிரியமணி எல்லா வழிகளிலும் இறைவனால் ஆசீர்வதிக்கப்பட்டவராகப் பெருவாழ்வு வாழ்ந்தார். அவரது குடும்பத்தினர் இன்று பல துறைகளிலும் முன்னோடியாக உலகின் பல்வேறு பாகங்களிலும் பெரும்புகழோடு வாழ்கின்றனர். பல்வேறு சமூகப் பணிகளில் அவரது குடும்பத்தினர் இன்றும் காட்டிவரும் முன்மாதிரி குறள் கூறும் அறத்தின் வழி அவரது வாழ்வு அமைந்திருந்தது என்பதற்கே நற்சான்று பகர்கின்றது. ஆசிரியமணி சி. க. நாகலிங்கம் 2002 ஆம் ஆண்டு காலமானார்.

**நாட்டுப்பற்றாளன்**

**வே.க. ஏரம்பு**

புங்குடுதீவு பெருங்காட்டில் வாழ்ந்து ஆசிரியப் பணிசெய்தவர் அமரர் வே. க. ஏரம்பு அவர்கள். ஆசிரியத் தொழிலை பதுளையில் ஆரம்பித்து மட்டக்களப்பு, திருமலை, வன்னி, யாழ்ப்பாணம் ஆகியவற்றில் கல்விப்பணியாற்றிவிட்டு இறுதியில் புங்குடுதீவில் பணியாற்றினார். புங்குடுதீவு ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாசாலையில் ஆசிரியராக பணியாற்றினார். இவரது மனைவி திருமதி சின்னம்மா ஏரம்புவும் இதே பாடசாலையில் ஆசிரியையாக பணியாற்றியவர். ஏரம்பு அவர்கள் அங்கு ஆசிரியராகக் கடமையாற்றியபோது கிராம முன்னேற்றச்சங்கம், சனசமூகநிலையம் இளைஞர்கழகம் ஆகியவற்றிலும் சேர்ந்து எமது ஊரின் உயர்வுக்கு உழைத்தார். சிவந்த நிறமும் உறுதியான உடல் கட்டும் மிக்க ஆசிரியர் ஊயர்வு மிக்க மேடைப் பேச்சாளராக விளங்கினார். புங்குடுதீவு ஸ்ரீ சித்திவிநாயகர் வித்தியாலயத்தில் அதிபராக பணியாற்றிய பின் ஓய்வு பெற்றார். இவருக்கு ஸ்ரீதரன், பாலச்சந்திரன் என இரண்டு புத்திரர்களும் அருணா, மதிவதனி என இரு புதல்விகளும் பிறந்தனர். மதிவதனி தேசியத்தலைவர் வே. பிரபாகரனை மணந்து எமது தீவகத்துக்கு பெருமை சேர்த்தார். 23.02.2005 இல் காலமான ஏரம்பு ஆசிரியருக்கு அவர் செய்த பணிகளுக்காக நாட்டுப்பற்றாளன் என்ற கௌரவம் வழங்கப்பட்டது. அது எமது தீவகத்துக்கு கிடைத்த பெருமையாகும்.

## அமரர் கணபதிப்பிள்ளை கந்தையா
## (அ. க. கண்ணையா மாஸ்டர்)



கண்ணையா ஆசிரியர் அவர்கள் புங்குடுதீவு குறிகாட்டுவானில் உள்ள பேய்ச்சி அம்மன் என வழங்கும் மனோன்மணி அம்பாள் கோவில் நிர்வாகஸ்தரும் சிறந்த அன்னதானம் செய்து வந்தவருமான அருணாசலத்தின் பரம்பரையிற் தோன்றியவர். திடகாத்திரமான உடம்பும், நிமிர்ந்த நடையும், புன்சிரிப்பும், இன்சொல்லும், எவரையும் அன்புடன் வரவேற்று உபசரிக்கும் குணமும், துன்பப்படுவோர்களைக் கண்டால் மனமுவந்து வேண்டிய உதவிகளைச் செய்யும் கள்ளம் கபடமற்ற வெள்ளை உள்ளமும் ஒருங்கே அமைந்தவரே ஆசிரியர் கண்ணையா ஆவார். ஆரம்ப காலத்தில் இலங்கை அரசாங்கத்தில் பொலிஸ் பிரிவிற் சேர்ந்து ஏழு ஆண்டுகள் கடமை செய்த பின்னர் ஆசிரியராகவேண்டுமென்று விரும்பி யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் நடத்திய பாலபண்டித பரீட்சையில் சித்தியெய்தி யாழ்ப்பாணம் நல்லூர் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையில் சேர்ந்து பயிற்சி பெற்ற ஆசிரியராகி நயினாதீவு மகாவித்தியாலயம், புங்குடுதீவு மகா வித்தியாலயம், மடத்துவெளி அமெரிக்கன் மிசன் பாடசாலை, தேவிபுரம் அரசினர் வித்தியாசாலை, ஆகியவற்றில் கல்வி கற்பித்து பல்லாயிரக்கணக்கான மாணவர்களின் நல்வாழ்க்கைக்கு அத்திவாரமிட்டார். நயினை நாகபூசணி அம்மன் கோவிற் திருவிழாக் காலங்களில் தன்னிடம் படித்த சாரணர் இயக்கத் தொண்டர்களைச் சேர்த்து துறைமுகங்களின் இரு கரைகளிலும் நின்று பிரயாணம் செய்பவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தவர்.

ஒருமுறை நயினாதீவு நாகபூசணி அம்மன் திருவிழாவிற்குச் சென்றவர்களின் படகு ஒன்று கவிழ்ந்து அதிலிருந்தவர்கள் உயிருக்காகப் போராடிக் கொண்டிருப்பதை கண்டதும் தன் உயிரையும் மதியாது உடனே கடலில் குதித்து நீந்திச் சென்று கடலில் தத்தளித்த 30 இற்கும் மேற்பட்டவர்களை காப்பாற்றிய தொண்டன். ஆசிரியர், தனது மாமனார் -வேலுப்பிள்ளை புவனேஸ்வரி தம்பதியரின் புதல்வி செல்வி சற்குணம் ஆசிரியையை 1949 ஆம் ஆண்டு திருமணம் செய்து தேவமனோகரன், வாசுகிதேவி, பிரபாகரன், அருந்ததிதேவி, ஜானகிதேவி, கருணாகரன் என்னும் மக்களைப் பெற்று உயர்கல்வி கற்பித்துப் பண்புள்ளவர்களாக வளர்த்தவர். புலம் பெயர்ந்து இந்தியா, பாரிஸ் முதலிய நாடுகளுக்குச்சென்று, பின்னர் கனடாவில் 1990இல் வசித்து வந்தனர்.

1995இல் கனடா, கிப்ளிங் வடக்கு இலங்கைத் தமிழ் முதியோர் சங்கத்தில் இருவரும் சேர்ந்து சங்கம் நடாத்தும் சுற்றுலா, கலைவிழா, கலைமகள் விழா முதலியவற்றில் பங்குபற்றித் தோத்திரம் பாடி, பாலர்களுக்கு இலவசமாக வித்தியாரம்பஞ் செய்து வைத்தபோது ஆசிரியருக்கு குரு தட்சணையாகக் கிடைக்கும் பணம் முழுவதையும் சங்க வளர்ச்சிக்காகவே கொடுத்து வந்த உத்தமர். திருக்கேதீஸ்வரத்தில் திருவாசக மடத்தை ஸ்தாபித்த புங்குடுதீவு சி. சரவணமுத்துச் சுவாமிகள் நினைவாக 'திருவாசகங்கள்' சிலவற்றைத் தொகுத்து திருவாசகத்தேன் என்ற நூலை வெளியிட முன்னின்று துணை புரிந்தவர்.

ஆசிரியர் இரங்கற்பாக்கள் இயற்றுவதில் திறமை மிக்கவராயிருந்தார்.

## சங்கீதபூஷணம் கதிர்காமர் தாமோதரம்பிள்ளை



புங்குடுதீவு கிழக்கு கதிர்காமர் வள்ளியம்மை தம்பதியர்க்கு குடும்பத்தில் மூன்றாவது மகனாக 1921 ஆம் ஆண்டு பிறந்தார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இசைபயின்று சங்கீதபூஷணமாய் 1948ஆம் ஆண்டு முள்ளியவளை தமிழ் வித்தியாலயத்திலும் 1956 ஆம் ஆண்டு தொடக்கம் புங்குடுதீவு மகாவித்தியாலயத்திலும் 25 ஆண்டுகளாகச் சங்கீத ஆசிரியராகக் கடமையாற்றி அவ்வித்தியாலய வளர்ச்சிக்கும் மாணவர் முன்னேற்றத்திற்கும் அயராது உழைத்தவர். வித்தியாலய இருமாடிக் கட்டிடத்திற்கு அத்திவாரமிட்டவர்.

புங்குடுதீவு கண்ணகையம்மன் ஆலயத்தை மு. முத்தையா பிள்ளை அவர்கள் புனருத்தாரணம் செய்து வைத்த காலத்திலிருந்து ஆசிரியர் அக்கோவில் நிர்வாக சபையில் பொருளாளராய், செயலாளராய் விளங்கி பல தொண்டுகளுக்குத் தூண்டுகோலாயும் துணையாயும் இருந்து பணியாற்றியவர். கோபுர அமைப்பு புதிய தேர்த்திருப்பணி நடைபெற்ற காலங்களில் அத்திருப்பணிகளுக்காக முன்னின்று உழைத்தவர்களுக்குச் சிறந்த ஆலோசகராய் விளங்கியவர். அத்துடன் இவர் ஒரு சிறந்த விடா முயற்சியுடைய விவசாயியும் ஆவார்.

## தலைமையாசிரியர் கந்தையா முத்துத்தம்பி



புங்குடுதீவு 2ஆம் வட்டாரத்தில் பிறந்தார். இவரின் தந்தையார் சிறுவயதிலேயே இறந்துவிட்டார். ஆயினும் இவரின் தாயார் இவருக்கு வேண்டிய கல்வியைப் புகட்டுவிப்பதற்கு முன்னின்றதன் மூலம் பிற்காலத்தில் நல்லாசிரியராக வரமுடிந்தது. ஆசிரியர் ஈழநாட்டின் பலபாகங்களிலும் தன் சேவையைத் திறம்படச் செய்ததன் மூலம் நல்லாசிரியர் எனும் பெயரைத் தட்டிக் கொண்டார். பிற்காலத்தில் தன் சேவை தான் பிறந்த மண்ணுக்குத் தேவையெனக் கருதி புங்குடுதீவுக் கிராமத்தின் ஓர் பாடசாலைக்குத் தலைமை ஆசிரியரானார். இக்கிராமத்தின் பொதுத் தொண்டுகளிலும் தன்னை ஈடுபடுத்தி மக்கள் நாளாந்தம் பிரயாணம் செய்வதற்கு பிரயாணச் சேவைகள் திறம்பட இயங்க வேண்டுமென்ற நன்நோக்கத்தில் இதற்காக இடைவிடாது உழைத்தார். இவர் சமாதான நீதிவானாகப் பட்டம் பெற்று, இதன் மூலம் மக்களுக்கு சேவை செய்தார். இக்கிராமத்தில் நடைபெறும் மங்கல, அமங்கல வைபவங்கள் எதிலும் முன்னின்று தன்வீட்டுக் கடமை போல் நினைந்து செயலாற்றியதை இக்கிராம மக்கள் என்றென்றும் மறக்க மாட்டார்கள். புங்குடுதீவு விளைபொருள் உற்பத்திச் சங்கம் என்ற அமைப்பினை உருவாக்கி வெங்காயக் கூடை இழைக்கும் பயிற்சியை மக்களுக்களித்து குடிசைக் கைத்தொழிலில் ஒரு புரட்சியை ஏற்படுத்தியமைக்குக் காரணமானவர். இறுபிட்டி கிராம முன்னேற்றச் சங்கத்தினை நிறுவியும் கூட்டுறவுத் துறையில் மிகுந்த ஆர்வம் கொண்டு கூட்டுறவுச் சட்டங்கள், விதிகள், பிரமாணங்கள் ஆகியவற்றிலும் கணக்குவைக்கும் முறையிலும் கை தேர்ந்தவராகவும் விளங்கி ப. நோ. கூ. சங்கம் மூலம் செய்த சேவைகள் மதிநலம் மிக்க மந்திரி போல் சரியான பாதையில் நிர்வாகம் செய்வதற்கு வழிசமைத்ததுடன் நிறைவுகளைப்

பெருமைப்படுத்தியும் கடும் உழைப்பாளிகளை ஊக்கப்படுத்தியும் கூட்டுறவை வளர்ப்பதில் முன்னின்று உழைத்தவர். புங்குடுதீவு ஸ்ரீ முத்துமாரி அம்பாள் ஆலய நிர்வாக சபை உறுப்பினராகவும் பல வருடங்கள் கணக்காய்வாளராகவும் கடமைபுரிந்தவர்.

## ஆசிரியப் பெருந்தகை வை. குமாரசுவாமி



தியாகு வாத்தியார் என்ற வை. குமாரசுவாமி அவர்கள் சாவகச்சேரியில் பிறந்து சாவகச்சேரி டிறிபேக் கல்லூரியில் கற்று பயிற்றப்பட்ட ஓர் ஆசிரியராகவும் இருந்து தன் தாய் தந்தை வாழ்ந்த கிராமத்துக்கே தன் சேவை தொடர வேண்டும் என்பதில் குறியாக இருந்தவர். அவரின் அந்திம காலம் வரை புங்குடுதீவில் சேவை புரிந்தவர். தான் கல்வியறிவிற் சிறந்து ஆசிரியராகவும் அதிபராகவும் விளங்கியதோடு மட்டுமன்றி, பிறந்த ஊர், சமயம், சமூகம் பற்றி நாளும் பொழுதும் சிந்தித்தவர். தமிழ் இன உணர்வு மிக்க இவரின் எழுச்சிக் கோலங்களை அன்று அடிக்கடி நடந்த அரசியல் ஊர்வலங்களில் கேட்கக் கூடியதாக இருந்தது. ஆரம்பத்தில் தமிழ் இன விடுதலை இயக்கங்களுக்குப் பேராதரவு நல்கி தமிழின அகிம்சைப் போராட்டங்களில் எல்லாம் பங்கு கொண்டவர். பெரியசபா அதிபர், முத்துலிங்கம் ஆசிரியர், குணரத்தினம் ஆசிரியர், செல்வராசா (சாளி மாஸ்டர்), கோபாலபிள்ளை, கு. வி. செல்லத்துரை அதிபர், பொன்னுத்துரை. செல்வரெத்தினம் ஆசிரியர்கள் போன்றோருடன் அடிக்கடி கூடிப்பேசிச் செயற்பட்ட செயற்திறன் மிக்கவர்.

1950 இல் இறுபிட்டி சனசமூக நிலையத்தை உருவாக்கி அன்றாட பத்திரிகைகளையும் பிரமாத வார நூல்களையும் தருவித்து வழங்கியதுடன் அதற்குத் தலைவராகவும் இருந்து நீண்ட நாள் சேவையாற்றினார். கிராம அபிவிருத்திச் சங்கத்தின் செயலாளராகவும், இறுபிட்டி ஐக்கிய நாணய சங்கத்தின் செயலாளராகவும் தலைவராகவும் நீண்டகாலம் சேவையாற்றினார். இவர் இறுபிட்டி மூத்த நயினார்புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயச் செயலாளராக இருந்து ஆலய வளர்ச்சியில் பெரிதும் ஈடுபட்டவர்.

தொண்டர் திருநாவுக்கரசு அவர்கள் வீதிகள் அமைக்கும் காலத்து தானும் தன் குடும்ப அங்கத்தவர்களுடன் மட்டுமல்லாது சுற்றாடல் மக்களையும் இணைத்து வீதிகளை விசாலமாக அமைப்பதற்கு தன்னால் இயன்றவரை, உதவிகளை வழங்கினார். சேர். வைத்திலிங்கம் துரைசுவாமி வித்தியாசாலைக்கு அரசினிடம் பலமுறை வாதாடி 1400 ச. அ. கட்டிடம் அமைக்க அனுமதி பெற்றார். அத்தோடு அதிபர் அலுவலகம் அமையுமாறு 1600 ச. அடியில் அக்கட்டிடத்தை அமைத்து மேலதிகச் செலவை தாம் ஏற்று நிறுவினார்.

## க. ஐயாத்துரை ஆசிரியர்



இவர் திரு. தில்லையர் கந்தையாவின் ஐந்தாவது மகனாக 29.04.1916 இல் பிறந்தார். கூடப்பிறந்தவர்கள் ஒன்பது பேர். பெரிய குடும்பம் செலவுகள் அதிகம். வாழ்க்கையில் முன்னேறக் கிடைத்த வசதிகள் அற்ப சொற்பமே. ஆனால் தன்னால் இயன்ற சேவை செய்தார். தன்பகுதி மக்களை ஒன்றிணைத்து கம்பலியன், நக்கந்து, நாவல் குளங்களையும் கிணறுகளையும் திருத்தியமைத்து அணைகட்டி மழைநீரைப் பெருமளவுக்கு கடலை அடையவிடாது தேக்கி நீர்த் தேவையை ஓரளவுக்காவது பூர்த்தி செய்யக்கூடிய நிலைக்குக் கொண்டு வந்தவரும் இவரே. தனது கிராம மக்களை உலகம் புரிந்தவர்களாக சிந்தனையாளர்களாக உருவாக்க வேண்டும் என்பதற்காக தனது கிராமத்திலுள்ள ஸ்ரீ சண்முகநாதன், ஸ்ரீ கமலாம்பிகை வித்தியாலயங்களில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆசிரியராக பணிபுரிந்ததுடன், வல்லன் சன சமூக நிலையத்தை அமைத்து நாளேடுகளும், நல்ல நூல்களும் தருவித்து அறிவுத் தொண்டாற்றிய ஒரு நல்ல ஆசான்.

1952 அளவில் கிராம முன்னேற்றச் சங்கத்தை ஆரம்பித்து கிராமத்தின் குறைபாடுகளையும் மக்களின் தேவைகளையும் காலத்திற்குக் காலம் எழுத்தில் வடித்தெடுத்து அரச நிறுவனங்களை அண்டி உதவிகளைப் பெற்று பிரதான வீதிகளைத் திருத்தியமைத்து வல்லன் வீதியூடாக பஸ் போக்குவரத்துக்கு வழி செய்த பெருமையும், நெசவு, தையல், பன்னவேலை போன்ற கைத்தொழில்களில் மக்களை மேம்படச் செய்து ஒவ்வொரு வீட்டிலும் வறுமை என்பதை இல்லாதொழிக்க இயன்றளவு முயற்சி செய்த பெருமையும் இவரையே சாரும். எமது மக்கள் சிந்தனையாளர்களாக இருந்தால் மட்டும் போதாது சிறந்த சமயப் பற்றுள்ளவர்களாகவும், சமயத் தொண்டாற்றுபவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதில் அதிகூடிய கவனம் செலுத்தியவர். வல்லன் திருப்பெருந்துறை நாகதம்பிரான் ஆலயம் என்றவுடன் என்றும் நினைவுக்கு வரும் மனிதர், சிவத்தொண்டர் ஐயாத்துரை ஆசிரியர் அவர்களே. ஆலயத்தைப் புனருத்தாரணம் செய்வதில் இருந்து திருவிழா, விசேடபூசைகள் நாளாந்த கருமங்கள் அனைத்திற்கும் உதவி செய்தவர் ஆசிரியர் மறைந்து விட்டார் ஆனாலும், அவர் புகழ் மறையவில்லை.

## சின்னத்தம்பி சின்னத்துரை ஆசிரியர் (1911 – 1992)



புங்குடுதீவு எனும் புண்ணிய பூமியில் சின்னத்தம்பி சின்னத்துரை ஆசிரியர் அவர்கள் எடுப்பான அழகுமிகு தோற்றம் நல்ல குரல்வளம் திருமுறைகளைப் பாடுவதில் மிகுந்த வல்லமையுடையவராய் சப்த தீவுகளில் மட்டுமல்லாது வடமாகாணம் முழுவதும் எல்லோராலும் நன்கு அறியப்பட்டவர். புங்குடுதீவு கிழக்கு இராஜ இராஜேஸ்வரி வித்தியாலயத்தில் ஆசிரியராகக் கடமையாற்றிய காலத்தில் கொழும்பு வாழ் புங்குடுதீவு மக்களிடம் சென்று பணம் திரட்டிப் பாடசாலைக் கட்டிட வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியவர்.

புங்குடுதீவு கிழக்கு கண்ணகியம்மன் ஆலய நிர்வாக சபைத் தலைவராகவும் சமூக சேவையாளராகவும் விளங்கியவர். குடும்ப நலனைவிட தான் பிறந்த மண்ணுக்காகத் தன்னை

அர்ப்பணித்து வாழ்ந்தவர். கலட்டிப் பிள்ளையார் ஆலயம், பெருங்காடு சிவனாலய விழா உபயகாரராக இருந்து வந்தவர். இல்லற வாழ்வில் ஒன்பது பிள்ளைகளைப் பெற்றும் முதல் மகன் சரவணபவன் இலங்கைப் பொலிஸ் திணைக்களத்தில் பொறுப்பான பதவி வகித்தார். இளைய மகன் சிவராஜா கொழும்பு தேசிய சேமிப்பு வங்கி முகாமையாளராகவும் கொழும்பு புங்குடுதீவு மக்கள் அபிவிருத்திச் சங்க நிர்வாக உறுப்பினராகவும் இருந்து புங்குடுதீவு மக்களின் வளர்ச்சியில் நிறைந்த அக்கறை கொண்டவராகத் தந்தையின் பணியைச் செய்து வருகின்றார். இவரது ஏனைய பிள்ளைகள் இலண்டன், பிரான்சில் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். ஆசிரியர் எங்கள் மத்தியில் இருந்து மறைந்தாலும் அவரது அழகிய உயர்ந்த தோற்றமும் எடுப்பான குரலும் எங்கள் முன் இன்றும் நிழலாடுகின்றன.

## அருளம்பலம் கனகரெத்தினம் (1916 –2000)

(சின்னத்துரை ஆசிரியர்)



புங்குடுதீவு மேற்கு 3ஆம் வட்டாரத்தில் அருளம்பலம் தங்கமுத்து தம்பதியர்க்குக் குடும்பத்தில் 2வது புதல்வராக 1916ஆம் ஆண்டு பிறந்தார். ஆரம்பக் கல்வியை ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாலயத்தில் பயின்று 1932 இல் கல்விப் பொதுத் தராதர (சா.த)ப் பரீட்சையில் சித்தியடைந்து அரச பதவிக்கு விண்ணப்பித்து 1939 ஆம் ஆண்டு பதுளையில் ஆசிரியராகப் பணிபுரியும் வாய்ப்புக் கிடைத்தது. அங்கு நடந்த பரீட்சையில் உயர் சித்தியடைந்து ஆசிரிய நற்சாட்சிப்பத்திரம் பெற்று 1942 இல் நெடுந்தீவு மகாவித்தியாலயத்தில் ஏழு வருடங்கள் கடமை புரிந்து 1951 ஆம் ஆண்டு புங்குடுதீவு சிங்கப்பூர் வள்ளல் ஐயம்பிள்ளை அன்னபூரணம் தம்பதியரின் அருமைப் புதல்வி பராசக்தியை மணம் புரிந்து நற்பிள்ளைச் செல்வங்களைப் பெற்று மகிழ்ந்தனர். பின்னர் சித்தி விநாயகர் துரைசுவாமி வித்தியாலயங்களில் சில வருடங்களும், ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாலயத்தில் 13 வருடங்களும் கடமைபுரியும் வாய்ப்பினைப் பெற்றார். பலாலி ஆசிரியகலாசாலையில் தேர்ச்சி பெற்றதும் 1965 இல் கிளிநொச்சி வித்தியாலயத்துக்கு அதிபராகப் பதவி உயர்வு கிடைத்தது. பலருடைய காணிகளை நில அளவை செய்ய மக்கள் நாடும் பொழுது நீதி, நேர்மை, நெறிமுறை தவறாது அளவீடு செய்தும், ஏற்படும் தகராறுகளை அன்பான வார்த்தைகள் கூறியும், எவ்வித ஊதியமும் இன்றி செய்து வந்தவர். கல்விப் பணியினை தெய்வப் பணியாகப் போற்றி வாழ்ந்தவர். ஆசிரியப் பணியில் இருந்து ஓய்வு பெற்றபின் தனது வீட்டிலே மாலை நேர வகுப்புகளை ஏற்படுத்தி சிறுவர்களுக்குப் பாடம் புகட்டி சிறு வேதனம் பெற்று வந்தவர். பெருங்காடு முத்துமாரி அம்பாள் ஆலயத்தின் திருவிழா உபயகாரராய் இருந்தும் தேவார திருமுறைகளை மிகுந்த பக்தியுடன் பாடியும் வருவார். சிறந்ததோர் ஆசானாய், அதிபராய், சமூக சேவையாளனாய், நில அளவையாளனாய், இறை நாமம் பாடும் ஏந்தலாய் எல்லோர் வாழ்விலும் கல்வி அறிவுச் சுடரினை ஏற்றிவைத்த அறிவுப் பெட்டகம் 2000 ஆம் ஆண்டு பங்குனித் திங்களில் மறைந்தாலும் அவர் மாணவர்களுக்கு ஏற்றிய அறிவுச் சுடர் பிரகாசமாய் எரிந்து கொண்டிருக்கின்றது.

## சு. யோ. பூராசா (அதிபர்)



புங்குடுதீவில் 1938ஆம் ஆண்டு பிறந்த சு. யோ. பூராசா ஆசிரியராக நியமனம் பெற்று அதிபராக உயர்ந்தவர். 1966ஆம் ஆண்டு புங்குடுதீவின் நலன் விரும்பிகளையும் புத்தி ஜீவிகளையும் உள்ளடக்கிய 'புங்குடுதீவு கல்வி வளர்ச்சிக் கழகத்தை' நிறுவி புங்குடுதீவுப் பாடசாலைகளை வளர்த்தார். குறிகாட்டுவான் அ. த.க.வித்தியாலயத்தை உருவாக்க முன்னின்று உழைத்தார். பராசக்தி வித்தியாசாலையை சங்கத்தார்கேணிக்கு இடம்மாற்றினார். புங்குடுதீவு மேற்கு அமெரிக்கன் மிஷன் வித்தியாலயம், இராஜேஸ்வரி வித்தியாலயம் ஆகியவற்றில் நூலகம் அமைக்க வழி செய்தார்.

கமலாம்பிகை வித்தியாலயத்தில் கிணறு அமைக்க வழிசமைத்தார். இ.போ.ச. பஸ்வண்டி வல்லனூடாக செல்ல முன்னின்று உழைத்தார்.

புங்குடுதீவின் தென்கரையில் அமைந்துள்ள அந்தோனியார் ஆலயத்தின் மண் உரிமைக்காரராகிய சு.யோ. பூராசா தமிழரின் கலை கலாசாரங்களை சமயவழிபாட்டிலும் புகுத்தினார். புங்குடுதீவு ப.நோ.கூ. சங்கத்தின் தலைவராக 1974இல் தெரிவு செய்யப்பட்டார். ஊழியர்கள், இயக்குநர்கள், கூட்டுறவாளர்கள் ஆகியோரின் உதவியோடு பல புதிய முயற்சிகளுக்கு வழிவகுத்தார். இவரது காலத்தில் எரிபொருள் நிலையம் உருவாகியது. லொறி ஒன்று கொள்வனவு செய்யப்பட்டது. மக்கள் கடைகளும் சங்கக்கிளைகளும் மேலும் திறக்கப்பட்டன.

1980 ஆம் ஆண்டு 'அந்தோனியார் தெய்வக் குழந்தைகள் இல்லம், வீரமாமுனிவர் கலை அரங்கு என்பவற்றை ஆலயக்காணியில் அமைத்துக் கொடுத்தார். 1991ஆம் ஆண்டு தீவுப்பகுதியிலிருந்து இடம்பெயர்ந்து யாழ்நகர்வந்து அல்லல்பட்ட மாணவர்களுக்கு சீருடைகள் வழங்க ஆவன செய்தார். இப்பொழுது யாழ். நகரில் வாழும் சு.யோ. பூராசா புங்குடுதீவின் தண்ணீர் பிரச்சனையைத் தீர்ப்பதற்காக தாயகப்பற்றுள்ள மக்களின் ஆதரவோடு யாழ்பல்கலைக் கழகத்தின் உதவியோடு நிலக்கீழ் நீர் ஆய்வுப் பரிசோதனையை நடந்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

## சிவப்பிரகாசம் இரத்தினசபாபதி (அதிபர்)

பண்ணிசையிலும் சோதிடக்கலையிலும் ஈடுபாடு கொண்ட இரத்தினசபாபதி ஆசிரியர் தனது தளராக சேவையின் மூலம் அதிபராக உயர்ந்தார். புங்குடுதீவு ஆலயங்களில் நடைபெறும் திருவிழாக்களிர் ஓதுவார் மூர்த்தியாகத் தொழிற்படுவார். மாணவர்களுக்கு பண்ணுடன் பஞ்சபுராணம் ஓதும் முறையைக்கற்றுக் கொடுத்தார்.

இராணுவம் புங்குடுதீவை ஆக்கிரமித்தபோது இவரும் புங்குடுதீவில் பிரிக்கப்பட்டார். அப்பொழுது அங்கு தங்கிய முதியவர்களுக்கு மு. பொன்னம்பலம் குழுவினருடன் சேர்ந்து உதவிசெய்தார். கிராமமக்களுக்கு இவர் செய்த பணிகளுக்காக 2006ஆம் ஆண்டு வேலணை பிரதேச சபை கலைவிழாவில் கௌரவிக்கப்பட்டார். இவரது மனைவி திருமதி இ. திருமேனிப்பிள்ளை சிறந்த ஆசிரியை ஆவார்.

## சோ. சேனாதிராசா (அதிபர்)



நெடுந்தீவு கணபதிப்பிள்ளை உடையாரின் மகன் தான் சோமசுந்தரம் ஆவார். இவர் முன்னாள் விவாகப்பதிவாளராவார். இவரது மனைவி ஞானமணி முன்னாள் தபாலதிபராவார். சோமசுந்தரம் ஞானமணி தம்பதியருக்கு மகனாகப் பிறந்தவர்தான் சோ. சேனாதிராசா. புங்குடுதீவில் திருமணம் செய்த இவர், பருத்தித்துறை ஹாட்லிக் கல்லூரியிலும் புங்குடுதீவின் ராஜராஜேஸ்வரி, திருநாவுக்கரசு, குறிகாட்டுவான் அ.த.க. பாடசாலை ஆகியவற்றில் ஆசிரியராகவும், கணேச வித்தியாலயத்தில் அதிபராகவும் கடமையாற்றியவர்.

கல்விப் பணி மட்டுமன்றி சமூகப்பணியில் அதிகமாக ஈடுபட்டவர். தீவுப்பகுதியில் பாரளுமன்ற உறுப்பினர் பதவிக்காக இரண்டு முறை போட்டி இட்டு கணிசமான வாக்குகள் பெற்றவர். மக்களுக்காக ஆட்சியினருக்கு மன்றாட்டக்கடிதங்கள் எழுதியே பல சாதனைகள் செய்தவர். புங்குடுதீவு மக்களின் உயர்ச்சிக்கு குறிப்பாக 10,11,12 ஆம் வட்டார மக்களின் உயர்ச்சிக்கு பெரும்பாடுபட்டவர். சுங்க அத்தியட்சர் சுந்தரலிங்கம், டாக்டர் செல்வலிங்கம் போன்ற பிரமுகர்களின் த ந்தையாரும் இவரே.

## நா. பொன்னையா (அதிபர்)

புங்குடுதீவுக்கு சேவையாற்றிய ஆசிரியர்களில் நா. பொன்னையா அவர்களும் முக்கியமானவர். புங்குடுதீவு அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் நீண்ட காலம் தலைமை ஆசிரியராக கடமையாற்றியவர். பாடசாலைக்கு வராத மாணவர்களைத் தேடி அவர்கள் வீடுகளுக்கே சென்று விடுவார்.

இவரது சேவையின் காரணமாகவே இப்பாடசாலையின் முன்புறத்தே இவரது சிலை அமைந்திருக்கிறது.

## சாலி வாத்தியார் (1923 - 2006)



சாலிவாத்தியார் என்று அன்புடன் அழைக்கப்பட்ட யோகுப்பிள்ளை சாள்ஸ் செல்வராஜா புங்குடுதீவுப் பாடசாலைகளில் கல்விப்பணியாற்றியவர். 1923 ஆம் ஆண்டு புங்குடுதீவில் பிறந்த இவர் ஆசிரியராகவும், அதிபராகவும் கடமையாற்றி ஓய்வு பெற்றார். புங்குடுதீவில் சாலி வாத்தியாரிடம் ஆங்கிலம் கற்ற பலர் உலகெங்கும் சிறப்புடன் வாழ்கிறார்கள்.

சாலிவாத்தியார் கல்விப்பணியுடன் சமூகப்பணிகள் பலவற்றிலும் ஈடுபட்டார். அந்தக் காலத்தில் புங்குடுதீவில் கடமை ஆற்றிய சகல ஆசிரியர்களுடனும் ஒன்று சேர்ந்து கல்விப்பணியிலும் சமூகப்பணியிலும் ஈடுபட்டார். இவரது பிள்ளைகள் உலகெங்கும் சிறப்புடன் வாழ்கிறார்கள். 2006ஆம் ஆண்டு தனது 81வது வயதில் காலமானார்.

### நா. கார்த்திகேசு (அதிபர்)



புங்குடுதீவுக் கிராமத்தின் மீது அதிக அக்கறை கொண்ட ஆசிரியர். கணேச வித்தியாசாலையின் அதிபராக நீண்டகாலம் கடமையாற்றினாலும் கிராமத்தின் அனைத்துப் பாடசாலைகளும் முன்னேற வேண்டும் என்று பணியாற்றினார். இவர் கணேச வித்தியாசாலையின் அதிபராக இருந்தபோது, பாடசாலை சகல துறையிலும் முன்னேறியது. எப்பொழுதும் சிரித்தமுகத்துடன் எளிமையாகக் காட்சியளிக்கும் இவர் புங்குடுதீவின் சமய சமூக தொண்டுகளில் அதிக ஈடுபாடு கொண்டவர்.

1971ஆம் ஆண்டு முதல் கணேசவித்தியாசாலையின் அதிபராக நியமனம் பெற்றார். இவரது காலத்திலேயே மகாவித்தியாலயமாக தரம் உயர்ந்தது. புதியமாடிக் கட்டடங்கள் நிறுவப்பட்டன. 8 பரப்புக்காணி வாங்கப்பட்டது. இவர் இவ்வித்தியாலயத்தில் 10 வருடத்துக்கு மேல் அதிபராக கடமையாற்றினார்.

புங்குடுதீவு 10 ஆம் வட்டாரத்தில் பிறந்த குணமாலை ஆசிரியர் கணேச வித்தியாசாலையில் நீண்டகாலம் ஆசிரியராகப்பணியாற்றியவர். எவருக்கும் பயப்படமாட்டார். மாணவர்களின் நன்மைக்காகவே தண்டனை வழங்குவார். இவரிடம் தண்டனை பெற்றவர்கள் இப்பொழுது பெரிய பதவிகளில் இருக்கிறார்கள். இலக்கிய இலக்கணங்களை அழகாகப் படிப்பிப்பார். குணமாலை ஆசிரியரின் பிள்ளைகள் பலரும் வெளிநாடுகளில் சிறப்பாக வாழுகிறார்கள்.

புங்குடுதீவு இறுபிட்டியில் பிறந்த கோபாலபிள்ளை ஆசிரியர் கணேச வித்தியாசாலையில் நீண்டகாலம் ஆசிரியராகப் பணியாற்றியவர். அமைதியான குணம் உள்ளவர். கணேச வித்தியாசாலையில் உள்ள சிறுவர் படங்கள் பல இவரால் வரையப்பட்டவை. சிறுவர் நாடகங்களை பழக்குவதில் சமர்த்தர்.

### கா.க. கனகசுந்தரம் ஆசிரியர்

இவர் பெரியபுலம் பிள்ளையார் ஆலய வளர்ச்சியில் பெரும் பங்காற்றியவர். றோமன் கத்தோலிக்கப்பாடசாலையில் பல வருடங்கள் ஆசிரியராகப்பணியாற்றியவர். சித்தி விநாயகர் வித்தியாலயத்தின் அதிபராக இருந்து கொண்டு கல்விப்பணியுடன் சமூகப்பணியும் ஆற்றியவர்.

நடுவுத்துருத்தியில் பிறந்த பொன்னம்பலம் ஆசிரியர், நடுவுத்துருத்தி குறிகாட்டுவான் பாதை அமைப்பில் முன்னின்று உழைத்தவர். குறிகாட்டுவான் இறங்குதுறை அமைப்பில் முக்கியபணியாற்றியவர். ஊரைதீவில் பிறந்த சி. நா. பாலசிங்கம் ஆசிரியர் பல வருடம் கிராமமுன்னேற்ற சங்கத்தலைவராக இருந்து பெரும்பணியாற்றியவர். மடத்துவெளி சங்குமாலடி வீதி உருவாக்கத்துக்கு பெரும்பாடுபட்டவர்.

புகழ்பெற்ற ஆசிரியர்கள் பலர் புங்குடுதீவில் கடமையாற்றியிருக்கிறார்கள். ஆசிரியசேவைக்காக புங்குடுதீவில் முதன்முதலில் சிலை வைக்கப்பட்ட ஆசிரியர் நா. பொன்னையா ஆவார். இவருக்கு சிலை வைப்பதற்காக சு. நடராசா ஆசிரியர் பெரிதும் உழைத்தார். 12ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த நீ. சேதுபதி, நீ. ஆறுமுகம் போன்ற ஆசிரியர்களும் மடத்துவெளியைச் சேர்ந்த சொக்கலிங்கம் ஆசிரியரும் புகழ்பெற்றவர்கள். மூன்றாம் வட்டாரத்தைச் சேர்ந்த கந்தையா ஆசிரியர் இரத்தினபுரியிலும் பணிபுரிந்தவர். சுப்பிரமணியம் ஆசிரியர் ஊரைதீவு திருநாவுக்கரசு வித்தியாலயத்தில் அதிபராக பணியாற்றியவர். இதே பாடசாலையில் சி. நல்லதம்பி ஆசிரியரும் பணியாற்றி இருக்கிறார்.

புங்குடுதீவு முதலாம் வட்டாரத்தைச் சேர்ந்த அ. சபாபதிப்பிள்ளை ஆசிரியரும் முக்கியமானவர். சுப்பிரமணிய வித்தியசாலையில் நீண்டகாலம் அதிபராக கடமையாற்றியவர். புங்குடுதீவு ஐக்கிய நாணய சங்கத்தின் செயலாளராக கடமையாற்றியவர். புகழ்பெற்ற நொத்தாரிசு முத்துலிங்கத்தின் மாமனாராவார். இவ்வாறு புங்குடுதீவில் பிறந்த பல ஆசிரியர்கள் புங்குடுதீவிலும் பிற இடங்களிலும் பலவாறு சிறந்த ஆசிரியர்களாக பணிகளைச் செய்துள்ளார்கள்.

### நீ. சேதுபதி ஆசிரியர்

தனிநாயக முதலியின் வாரிசான சிதம்பரநாதரின் சகோதரியின் மகன்தான இந்த சேதுபதி ஆசிரியர். கடைசியாக புங்குடுதீவு சண்முகநாதன் வித்தியலாயத்தில் அதிபராக கடமையாற்றினார். இவரது மனைவி நெடுந்தீவில் ஆசிரியையாக கடமையாற்றியவர். பரம்பரைச் சைவர். தேசிய உடை அணிந்து குடுமியும் வைத்திருப்பார். இந்துப் போர்ட்டின் தலைவரான சேர் வைத்திலிங்கம் துரைசுவாமியின் கல்வித்துறை ஆலோசகராகவும் செயற்பட்டார். புங்குடுதீவில் பல பாடசாலைகள் உருவாக்கத்துக்கு காரணகர்த்தா. கந்தபுராண கலாசாரத்தை ஆரம்பித்து வைத்த பெருமை இவரையே சாரும்

### நீ. ஆறுமுகம் ஆசிரியர்

இவர் நீ. சேதுபதி ஆசிரியரின் தம்பியாவார். ஆரம்பத்தில் சிங்கப்பூரில் ஆசிரியராக கடமையாற்றினார். பின்பு உரைதீவு திருநாவுக்கரசு வித்தியாலயத்தில் அதிபராக கடமையாற்றினார். சைவசமய ஆசாரத்தின் உறைவிடம். தமது குடும்ப ஆலயமான தல்லையபற்று முருகன் ஆலயத்தில் கந்த புராண படனத்தை ஆரம்பித்து வைத்துடன் தனது மகளான யோகாம்பிகை அம்பலவாணரையும் தனது வழியில் கந்தபுராண படனத்தை வளர்க்க வைத்தார். ஆறுமுகம் ஆசிரியரும் அவர்மகள் யோகம்பிகையும் அவரது மருமகன் அம்பலவாண ஆசிரியருமே புங்குடுதீவின் கந்தபுராண கலசார வளர்ச்சியின் ஆரம்ப கர்த்தாக்கள்.



### அருளம்பலம் சுப்பிரமணியம் (தம்பிமுத்து ஆசிரியர்)

1913ஆம் ஆண்டு புங்குடுதீவு 3ஆம் வட்டாரத்தில் பிறந்த அருளம்பலம் சுப்பிரமணியம் “தம்பிமுத்து” ஆசிரியர் என்ற பெயரில் புகழ்பெற்றவர். புங்குடுதீவு பராசக்தி வித்தியாலயத்தில் நீண்டகாலம் அதிபராக கடமையாற்றிய இவர், அப்பாடசாலையின் வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டவர். புங்குடுதீவின் கல்வி, சமய, சமூக சேவைகளில் முன்னின்று உழைத்தவர்.

புங்குடுதீவு ஸ்ரீ முத்துமாரியம்மன் கோவில் தர்மகர்த்தாவாக இருந்து அக்கோவிலின் வளர்ச்சிக்கு பெரிதும் உதவியவர். புங்குடுதீவில் இணக்க சபை செயற்பட்டுக் கொண்டிருந்த பொழுது அதன் தலைவராக இருந்து கிராமமக்கள் பலரின் சிக்கல்களை நீதியாகத் தீர்த்தவர்.

இவரது பிள்ளைகளும் புகழ் பெற்றவர்கள். மூத்த புதல்வரான சு. பாலரெத்தினம், "நல்லூரான்ஸ்" என்ற பெயரில் புங்குடுதீவில் முதன் முதலில் உல்லாசப் பயண ஹோட்டல் ஒன்றை நிறுவியவர். இளைய புதல்வரான சு. குணரெத்தினம் (சி.ஓ. குணம்) புங்குடுதீவில் பயிர்ச் செய்கை உத்தியோகத்தராக கடமையாற்றி பல சமூக சேவைகளில் ஈடுபட்டவர். மிக இனிமையாக தேவாரம் பாடுவார். இவர் பாடிய பக்திப்பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து இறுவெட்டாக (சீடி) வெளியிட்டுள்ளார்.

கொழும்பு "பம்பே ஸ்ரோர்ஸ்" முன்னாள் உரிமையாளர் கிருஷ்ணபிள்ளையும் புங்குடுதீவு முன்னாள் ஆர். டி.ஓ. புஸ்ப்பராணியும் இவரது மருமக்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

திரு. அருளம்பலம் சுப்பிரமணியம் 2007 ஆம் ஆண்டு தனது 94வது வயதில் கொழும்பில் காலமானார்.

## திருமதி. இ. திருமேனிப்பிள்ளை



புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிறந்த திருமதி திருமேனிப்பிள்ளை கணேச வித்தியாலயத்தில் படித்து அங்கேயே ஆசிரியையாக கடமையாற்றியவர். அப்பாடசாலையின் கல்வி வளர்ச்சியிலும் நிர்வாக அமைப்பிலும் அக்கறை கொண்டவர். தல்லையபற்று முருகன் ஆலயத்தின் நிர்வாக முறையிலும் வழிபாட்டு அமைப்புகளிலும் முன்னின்று உழைத்தவர். கணேச வித்தியாலயத்தின் ஆசிரியையாக மட்டுமன்றி உத்தியோகப் பற்றற்ற அதிபரைப் போல் கடமையாற்றியவர். அந்த அளவுக்கு அந்தப்பாடசாலையுடன் ஒன்றி வாழ்ந்தவர். இவருடைய கணவர் இரத்தின சபாபதி அவர்களும் சோதிடத்திலும் சமயத்திலும் ஆழ்ந்த அறிவுடையவர். திருமதி. திருமேனிப்பிள்ளை 2006 ஆம் ஆண்டு புங்குடுதீவில் காலமானார்.

## திருமதி. இராஜேஸ்வரி திருநாவுக்கரசு



திருமதி. இராஜேஸ்வரி திருநாவுக்கரசு புங்குடுதீவில் சமயப்பணியும் கொழும்பில் கல்விப்பணியும் செய்தவர். ஆங்கிலத்தில் உயர்ந்த பாண்டித்தியம் பெற்றவர். கொழும்பு வன்ரோயன் வீதியில் பல ஆண்டுகளுக்கு முன்பே இராஜேஸ்வரி கல்வி நிலையத்தை உருவாக்கி கல்விப்பணி செய்தவர். பல இளம் பெண்களுக்கு திருமணம் செய்து வைத்தவர். தன் சொத்தில் பெரும்பகுதியை ஏழைகளுக்கும் கோயில்களுக்கும் வழங்கியவர். கொழும்பில் உள்ள தனது காணியை கொழும்பு வூல்பெண்டால் பெண்கள் பாடசாலைக்கு வழங்கியவர். புங்குடுதீவில் தனது பரம்பரைக் கோயிலான கலட்டி பிள்ளையார் கோயிலை புனருத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்தவர்.

கல்வி, கலை, ஆன்மீகம் ஆகிய துறைகளில் பெரும்சேவை செய்தமைக்காக "வித்யாகலாஜோதி" என்ற பட்டத்தைப் பெற்றவர். இவரது புதல்வியான மஞ்சுளா சிறந்த வயலின் கலைஞராவார். இராஜேஸ்வரி கல்விநிலையத்தை நடத்திவரும் மஞ்சுளா, தாயார் விட்டுச்சென்ற பணியை தொடர்ந்து செய்து வருகிறார்.

## திருமதி. புவனேவரி துரைசிங்கம்

புங்குடுதீவு கணேச வித்தியாலயத்தில் கல்விகற்று அங்கேயே ஆசிரியையாக நியமனம்பெற்றவர். திருமதி. புவனேஸ்வரி துரைசிங்கம் பாடசாலையின் வளர்ச்சிக்கும் மாணவரின் உயர்ச்சிக்கும் அரும் பாடுபட்டவர். இவரது கணவரே பிரபல எழுத்தாளரும் கல்விப்பணிப்பாளருமான த. துரைசிங்கம் ஆவார். இவர்களின் ஒரே புதல்வி யசோதாவை, மு. இராமலிங்கம் ஆசிரியர் தம்பதிகளின் புதல்வன் பாஸ்கரன் திருமணம் செய்தார்.

## மு. இராமலிங்கம்



மு. இராமலிங்கம் அவர்கள் புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் நீண்டகாலம் அதிபராக கடமையாற்றியவர். இவரது காலத்தில் புங்குடுதீவு மகாவித்தியாலயம் பலவழிகளில் வளர்ச்சி கண்டது. இவருடைய காலத்திலேயே க.பொ.த. (உ/த) விஞ்ஞான, வர்த்தக பிரிவுகள் ஆரம்பிக்கப்பட்டன. இவர் புங்குடுதீவின் கல்வி வளர்ச்சி க்கு உதவியது போல் சமூகமுன்னேற்றத்திற்கும் உதவி செய்தார்.

## அம்பலவாண ஆசிரியர்

புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிறந்த அம்பலவாணர், நீண்டகாலம் கணேச வித்தியாலயத்தில் ஆசிரியராக கடமையாற்றியவர். ஆற்றல்மிக்க இலக்கியவாதியாக விளங்கினார். நகைச்சுவையாக பலகதைகளைச் சொல்லி மாணவர் மனதில் கல்வியை வளர்த்தவர்.

நல்லூர் நல்லை ஆதீனத்தில் கந்தபுராண ஆஸ்த்தான வித்தகராக பல ஆண்டுகள் சேவையாற்றியவர். புங்குடுதீவின் கண்ணகை அம்மன் கோவிலின் கொடியேற்றத் திருவிழாவை 40 வருடங்களாக தொடர்ந்து நடத்தியவர். தல்லயபற்று முருகன் கோவிலின் தர்மகர்த்தா சபை உறுப்பினர். யாழ்ப்பாண செங்குந்தா இந்துக்கல்லூரியின் அதிபராக இருந்து ஒய்வு பெற்றவர்.

கந்தபுராண கலாசாரத்தை புங்குடுதீவில் வளர்த்தவர்களில் முக்கியமானவர். கந்தபுராண கலாசாரத்தை யாழ்நகர்வரை கொண்டு சென்றவர். புங்குடுதீவு கிழக்கிலும் மேற்கிலும் உள்ள கோயில்களில் கந்தபுராணத்துக்குப் பயன் சொல்லி பக்தியை வளர்த்தவர். இவர் அதிகமாகப்பாடும் "வானநாடரும் அறியநாதனி கேட்பாயோ தோழி" என்ற பாடலைக் கேட்போர் ஆனந்தப் பரவசமடைவர்.

## ஆசிரியர் திருநாவுக்கரசு

புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிறந்த திருநாவுக்கரசு ஆசிரியர், சண்முகநாதன் வித்தியாலயத்தில் நீண்டகாலம் ஆசிரியராக கடமையாற்றியவர். பிற்காலத்தில் கணேச மகாவித்தியாலத்திலும் கடமையாற்றினார். மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு அயராது பாடுபட்டவர். மாணவர்களின் கலை முயற்சிகளுக்கும் வழிகாட்டியவர்.

## அதிபர் சி.வி. பேரம்பலம்



கல்வித்துறையில் பலசேவைகள் செய்த அதிபர் சி.வி பேரம்பலம், புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். கணேச வித்தியாசாலையில் ஆரம்பக்கல்வியை கற்றவர். 1964ஆம் ஆண்டு அகலவத்தையில் ஆசிரியராக கடமையாற்றினார்.

1971ஆம் ஆண்டு அரச ஆசிரியராக நியமனம் பெற்று வவுனியாவில் கடமையாற்றினார். 1980ஆம் ஆண்டு புங்குடுதீவு மகாவித்தியாலயத்துக்கு மாற்றம் பெற்று வந்தார். 1985ஆம் ஆண்டு பாவற்குளம் மகாவித்தியாலயத்தில் அதிபராக நியமனம் பெற்றார். 1994முதல் ஓமந்தை மத்திய கல்லூரியிலும் 1998 முதல் வுவனியா விபுலானந்த வித்தியாலயத்திலும் அதிபராக கடமையாற்றி 2004ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார்.

கல்விப் பணியில் மட்டுமன்றி சமூகப் பணியிலும் இவர் ஈடுபட்டார். இவரது சேவையைப் பாராட்டி சிறப்பு மலர் ஒன்றும் வெளியிட்டு வைக்கப்பட்டது. சி.வி. பேரம்பலம் அவர்களின் கல்வி, சமூக சேவை காரணமாக வவுனியா தெற்கு வலயத்தின் சிறந்த அதிபர் என்ற பாராட்டையும் பெற்றார்.

அதிபர் சி.வி. பேரம்பலம் ஆசிரியராக நியமனம் பெற்ற 1970 காலப் பகுதியில் பல இளைஞர்கள் ஆசிரியர்களாக நியமனம் பெற்று புங்குடுதீவிலும் பிற ஊர்களிலும் கல்விப்பணியாற்றினார்கள். அவர்களில் ச. சதாசிவம், செ. ஈஸ்வரமூர்த்தி, அ. கணேசமூர்த்தி, எஸ். எம் தனபாலன், என். தர்மபாலன், ந. சுந்தரலிங்கம் கா. பரமேஸ்வரன், த. கருணாகரன், ஐ. சண்முகநாதன், ந. கலைநாதன், ஈ. ஜெயசீலன் போன்றோரைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

புங்குடுதீவைச் சேர்ந்த ஆசிரியைகளில் சிலர் சிறந்த கல்விப் பணியாற்றியிருக்கின்றார்கள். அவர்களில் திருமதி. சின்னகுட்டி, திருமதி. மாணிக்கம், திருமதி. நல்லம்மா சிவசாமி, திருமதி. கமலா, திருமதி. கனகம்மா, திருமதி. பொன்னம்மா, திருமதி. செல்லமுத்து, திருமதி. சகுந்தலா, திருமதி. சீதாலட்சுமி, திருமதி. மகேஸ்வரி, திருமதி. தங்கேஸ்வரி, திருமதி. ஞானேஸ்வரி,

திருமதி. சகுந்தலா, திருமதி. நடராசா, திருமதி. பூராசா, திருமதி. இராசரெத்தினம், திருமதி. வடிவேலு, திருமதி. வசந்தகுமார், திருமதி. கலைநாதன், திருமதி. இராமச்சந்திரன், திருமதி. சண்முகலிங்கம், திருமதி. யோகம், திருமதி. மணி, திருமதி. ஞானம், திருமதி. சிவயோகம், திருமதி. இராஜேஸ்வரி திருமதி யோகேஸ்வரி போன்ற ஆசிரியைகளை முக்கியமாக குறிப்பிடலாம்.

### கிராமசேவகர்கள்

கல்விச் சேவையில் ஆசிரியர்கள் ஈடுபட்டது போன்று நிர்வாக சேவையில் கிராம சேவகர்கள் ஈடுபட்டனர். புங்குடுதீவைச் சேர்ந்த சிலர் வெளியூர்களிலும், கிராம சேவகர்களாக கடமையாற்றி இருக்கின்றார்கள்.

மகாலிங்கம், சௌந்தரராஜன் போன்றோர் யாழ்ப்பாணத்திலும் வைத்தியநாதன், வி. வைத்தீஸ்வரமூர்த்தி போன்றோர் வன்னியிலும் கிராம சேவகர்களாக கடமையாற்றிருக்கின்றார்கள்.

### வைத்தியர்கள்

புகழ்பெற்ற பல வைத்தியர்கள் புங்குடுதீவின் பரம்பரையினராக இருக்கின்றனர். எலும்பு முறிவு வைத்திய நிபுணரான டொக்டர் உமாபதி புங்குடுதீவைச் சேர்ந்தவர். புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் பிறந்த கந்தையா வைத்தியர். ஆயுள்வேத வைத்தியசாலையில் புகழ்பெற்ற வைத்தியராக கடமையாற்றினார். பின்னாளில் 12ஆம் வட்டாரம் அடைப்பனாம் வளவில் வைத்திய சாலை வைத்திருந்தார்.

### சட்டத்தரணிகள்

புங்குடுதீவில் பிறந்த பலர் புகழ்பெற்ற சட்டத்தரணிகளாக விளங்கியிருக்கிறார்கள். புகழ்பெற்ற சட்டத்தரணியான வி.தியாகராஜா புங்குடுதீவில் பிறந்தவர். புறக்டர் சுப்பிரமணியம் வேலணையில் திருமணம் செய்தவர். உறுதி எழுதல் போன்ற சேவைகளுக்காக இவருக்கு கிளாக்கர் கார்த்திகேசு பல்வேறு வழிகளில் உதவிசெய்தார். புறக்டர் ச. நடராசாவும் புகழ்பெற்ற ஒருவராக விளங்கினார்.

**16**

# புங்குடுதீவுச் சமூக சேவையாளர்கள்

## வாணர் தாம்போதி அமைத்த அம்பலவாணர் சகோதரர்கள்



பெரியவாணர்

புங்குடுதீவில் அன்று மக்கள் குடியேறிய பகுதிகளில் மடத்துவெளி ஊரதீவுப்பகுதி மிகத் தொன்மை மிக்கதாகும். இக்கிராம மக்களின் வாழ்வில் சங்க கால நெய்தல் நில மாந்தரின் வாழ்க்கை முறை இருந்ததை நாம் அறிவோம். இந்தப் பண்பட்ட மடத்துவெளிக் கிராமத்தில் தான் பெரியவாணரும் சின்னவாணரும் பிறந்தனர். தீவகம் மேன்மையடைய மடத்துவெளி அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலும் கோப்பாய், கிறிஸ்தவக் கல்லூரியிலும் யாழ்ப்பாணக் கல்லூரியிலும் தமிழோடு ஆங்கிலமும் கற்றுத் தம் தகைமையை உயர்த்திக் கொண்டனர். தமது கல்விக்காக கோப்பாய், வட்டுக்கோட்டை ஆகிய இடங்களுக்கு சென்று வந்த வாணர் சகோதரர்கள், ஆண்டாண்டு காலம் நமது மக்கள் அனுபவித்து வரும் பிரயாண துன்பத்தை தமது அனுபவத்தின் மூலம் உணர்ந்தனர். க. அம்பலவாணர் பெரியவாணர் என்றும் ச. அம்பலவாணர் சின்ன வாணர் என்றும் அழைக்கப்பட்டனர்.

· வாணர் சகோதரர்களும் தம் திறமைக்கேற்ற தொழில் தேடி நின்றனர். கல்வியும் திறமையும் கொண்ட வாணர் சகோதரர்களும் தம் திறமைக்கேற்ற தொழில் தேடி மலாயாவுக்குச் சென்றனர். ஆங்கில அரசின் நிர்வாகத் திறமையையும் பொதுநல சேவையின் மகத்துவத்தையும் தாய் நாட்டின் நல்வாழ்வுக்காகத் தம் இன்னுயிரையும் புன்னகையோடு அளிக்கக் காத்திருக்கும் ஆங்கிலேயரின் தேச பக்தியையும் அங்கு நேரிற் கண்ட வாணர் சகோதரர்கள், தாயகத்தின் அவல நிலையை எண்ணியெண்ணி மனம் கலங்கினர். தம் வாழ்விற்கு பொருள் தேடிச்சென்ற சகோதரர்கள் தீவகத்தின் வாழ்வுக்காக தம் வாழ்க்கையை அர்ப்பணிக்க முன்வந்தனர்.

மலாயாவில் தாம் கண்ட பாலங்கள், பள்ளிக்கூடங்கள், வைத்தியசாலைகள், அஞ்சல் அலுவலகங்கள், தொலைபேசித்தொடர்புகள், குழாய் நீர்த்திட்டங்கள், விவசாய உற்பத்திகள், கடல் தடுப்பு அணைக்கட்டுகள், மின்சார வசதி, தொழிற்சாலைகள், உள்நாட்டு வீதிகள் ஆகிய மறுமலர்ச்சிச் சாதனங்களை தமது தாய் நாட்டிலும் உருவாக்கத்திட்டமிட்டனர். பொருள் தேடி மலாயா சென்ற புங்குடுதீவு மக்களைத் திரட்டி, திட்டங்களை விளக்கி "புங்குடுதீவு ஐக்கிய சங்கம்" என்ற ஸ்தாபனத்தை உருவாக்கினர். இந்த புனித ஸ்தாபனமே புங்குடுதீவுத் தாயைச் சிறப்பித்த ஸ்தாபனங்களில் மூத்த ஸ்தாபனமாகும். "மலாயா புங்குடுதீவு ஐக்கிய சங்கம்" புங்குடுதீவு அலைகடலுக்கும் பண்ணை ஆழ்கடலுக்கும் குறுக்கே வீதியை அமைக்கத் திட்டமிட்டது.



சின்னவாணர்

தாய் நாட்டிற்காகத் தீட்டிய திட்டங்களை செயற்படுத்துவதற்காக முதலாம் உலகப் போரின் பின் 1918 ஆம் ஆண்டு பெரிய வாணர் தீவகம் வந்தார். தாம்போதியின் அவசியத்தை புங்குடுதீவு மக்கள் சார்பில் அரசாங்கத்திற்கு சமர்ப்பிப்பதற்காக வீடுகள் தோறும் கையொப்பங்களைச் சேகரித்து அரச போக்குவரத்து சபையினருக்கு சமர்ப்பித்துவிட்டு மலாயா சென்றார். இந்த விண்ணப்பங்கள் அரசின் கண்களைத் திறக்கவில்லை 1924, 1926, 1930, 1934 ஆகிய ஆண்டுகளில் பல்லாயிரம் விண்ணப்பங்கள் மீண்டும் அரசாங்கத்திற்கும் அரச பிரதிநிதிகளுக்கும் அனுப்பப்பட்டன. இந்த மகஜர்களைத் தயாரிப்பதிலும் கையொப்பங்களை சேகரிப்பதிலும் சின்னவாணர் அவர்களே பெரும்பங்காற்றினார். இடையறாத இந்தக் கிளர்ச்சியால் இலங்கை முழுவதும் பரவி வாழ்ந்த புங்குடுதீவு மக்கள் மத்தியில் புதிய விழிப்புணர்வு ஏற்பட்டது. நமது கிராமப் பெரியார்கள் 1922 ஆம் ஆண்டு "புங்குடுதீவு மகாஜன சேவா சங்கம்" என்ற அமைப்பினை உருவாக்கினர். இந்த ஸ்தாபனம் அகில இலங்கை புங்குடுதீவு மகாஜன சேவா சங்கமாக மாறியது. இந்த விஸ்தரிப்பு ஒவ்வொரு புங்குடுதீவு மக்களையும் கிராமத்தின் நல்வாழ்வுக்கு பணியாற்றத் தூண்டியது. தலைநகரில் வாணர் சகோதரர்கள் தமது இலட்சியத்தை அரசாங்கப் போக்குவரத்துத் துறையினருக்கும் அமைச்சர்களுக்கும் அரச பிரதிநிதிகளுக்கும் எடுத்துக் கூறியதுடன் பல அரச பிரதிநிதிகளையும் தேசாதிபதியையும் புங்குடுதீவுக்கு அழைத்து வந்து நேரில் மக்களின் துயரங்களைக் காட்டியும் இலங்கையின் தேசியப் பத்திரிகைகளின் கவனத்துக்கு கொண்டுவரச் செய்தும் தமது கோரிக்கைகளுக்கு பத்திரிகைகளை குரல் கொடுக்கச் செய்தனர். புகைப்படங்கள் மூலம் மக்களின் அவலங்களை நாடு முழுவதும் அறியச் செய்தும் தமிழ்த் தலைவர்களை, நேரில் அழைத்து வந்தும் நேரிற் காட்டினார்கள். வாணர் சகோதரர்களின் தலைமையில் புங்குடுதீவு மக்கள் பதினேழு வருடங்கள் போராடியதன் விளைவாக 1935 ஆம் ஆண்டு இலங்கை சட்ட நிரூபண சபையில் புங்குடுதீவுக்கு தாம்போதி அமைக்கும் பிரேரணை விவாதத்திற்கு வந்தது.

இந்த விவாதம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது பெரியவாணர் கொழும்பில் சட்டசபை உறுப்பினர்களின் ஆதரவை தமக்கு திரட்டிக்கொண்டிருக்க, சின்னவாணர் அவர்கள் யாழ் நகரிலிருந்து 80 தந்திகளில் தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தி நிரூபண சபைக்கு அனுப்பும் பணியில் ஈடுபட்டார். இந்தப் பணிக்காக வாணர் சகோதரர்களும் புங்குடுதீவு மக்களும் எடுத்த முயற்சியை எழுத்தில் வடிக்க முடியாது. புங்குடுதீவுத் தாம்போதி தான் முதலில் போடப்பட வேண்டுமென கண்டி மாவட்ட அரச பிரதிநிதி பண்டிற் பட்டுவந்துடாவ அவர்களும் ஆங்கிலேயப் பிரதிநிதி சேர். வில்லியம்ஸ் அவர்களும் ஏ. ஈ. குணசிங்க அவர்களும் வாதிட்டனர். விவாத முடிவில் புங்குடுதீவுத் தாம்போதி வேலையைத் தொடங்குவதற்கு நிரூபண சபையின் அனுமதியும் நிதியும் கிடைத்தன.

1953 ஆம் ஆண்டு தீவக மக்களின் மறுமலர்ச்சி மாளிகையான புங்குடுதீவு வேலணை தாம்போதி அமைக்கும் பணி ஆரம்பமாகியது. இந்தப்புதிய பணியை நிறைவேற்றும் பொறுப்பை ச. அம்பலவாணர் என்ற சின்னவாணர் அவர்களிடமே அரசாங்கம் முதலில் ஒப்படைத்தது. சின்னவாணர் ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகள் நாட்டுக்காகப் பணி புரிந்தவர். முதல் முப்பத்தைந்து ஆண்டுகளில் அவருடைய பணி ஒப்பற்று ஓங்கி நின்றது. அறிவுரை வழங்கும் அறிஞராக விளங்கியதுடன், இனிய பண்புகளும் ஈகைத்திறனும் விருந்தோம்பும் திறனும் இவருடைய உயர்வுக்கு காரணமாக விளங்கின. புங்குடுதீவு மகா வித்தியாலயத்தை மத்திய மகாவித்தியாலயமாக உயர்த்த அரும்பாடுபட்டவர்.

இவரின் கள்ளமற்ற வெள்ளை உள்ளம் போல அவருடைய உருவமும் அழகிய உருவமாகும். சிறந்த சிந்தனையாளர், கிராமச்சங்கத்தின் அங்கத்தவராகவும் தலைவராகவும் இருந்தவர். பிரபல ஒப்பந்தக்காரராகிய இவர், இப்பணியை செய்து வரும் காலத்தில் 1947 ஆம் ஆண்டு நடைபெற்ற முதலாவது தேர்தலில் தீவுப்பகுதி மக்களுக்காகவும் புங்குடுதீவுத் தாய்க்காகவும் முப்பது ஆண்டுகள் அயராது கண்துஞ்சாது உழைத்த உத்தம தொண்டர் பெரியவாணர் அவர்களும் போட்டியிட்டு தோற்ற செய்தி நம் தாயகத்தின் வரலாற்றில் பொறிக்கப்பட்டது. முப்பது ஆண்டுகள் உழைத்த தொண்டனின் உடல் இழைத்தது. 1948 இல் நோய்வாய்ப்பட்ட பெரியவாணரை வைத்திய உதவிக்காக கொழும்பு அனுப்பி வைத்த சின்னவாணர், திரும்பி வருவார் என எதிர்பார்த்திருக்க பெரியவாணர் மறைந்து விட்ட செய்தி கேட்டு தீவக மக்கள் கதறியழுதனர். தனக்குத் தாயாகவும் தந்தையாகவும் ஆசானாகவும் வழிகாட்டியாகவும் வாழ்ந்த அண்ணன் பிரிந்த செய்தி தம்பிக்குத் தீராத துயரை ஏற்படுத்தியது. நம் தலைமகனின் புகழுடம்பு புங்குடுதீவுக்கு எடுத்துவரப்பட்டு மக்கள் கதறியழ தீக்கு இரையாகியது. இவரால் ஆரம்பிக்கப்பட்ட இப்பெரும்பணியினை சின்னவாணர் அவர்கள் முன்னெடுத்து செய்தார். இவரின் விசுவாசம் மிக்க அச்சுறுதியான வேலைப்பாட்டினால் 1953 ஆண்டு அன்றைய பாராளுமன்ற உறுப்பினர் திரு. அல்பிரட் தம்பிஐயா அவர்களினால் வாணர்தாம்போதி திறந்து வைக்கப்பட்டது.

## அமரர் வ. பசுபதிப்பிள்ளை



புங்குடுதீவின் நவீன கல்வி வரலாற்றை எழுத முயற்சிக்கும் எவரும் அமரர். வ.பசுபதிப்பிள்ளை அவர்களைப் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. கதருடை, விபூதி முக்குறிப்பூச்சு, மெல்லிய உடல், சுமாரான உயரம் இதுவே அவரது தோற்றம். வ. பசுபதிப்பிள்ளையவர்கள் சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்தாருடன் சேர்ந்து நாட்டின் பல கோணங்களிலும் பல கல்வி நிலையங்கள் தோன்றக் காரணமாக இருந்தார். அத்துடன் ஸ்ரீ கணேச வித்தியாசாலை, பராசக்தி வித்தியாசாலை இவற்றை தமது முயற்சியால் அமைத்துத் திறம்பட நடாத்தினார். ஸ்ரீ சித்தி விநாயகர் வித்தியாசாலையின் தோற்றத்திற்கும் பெரும் பங்காற்றியுள்ளார். புங்குடுதீவு அரசினர் ஆங்கிலக் கல்லூரியும் (மகா வித்தியாலயம்) இவரது பெரு முயற்சியினாலேயே ஆரம்பிக்கப்பட்டது.

சைவப் பிள்ளைகள் சைவச் சூழலில் சைவ நெறிக்கமைய கல்வி பயில வேண்டு மென்னும் உன்னத இலட்சியத்தைக் குறிக்கோளாகக் கொண்டு 03.03.1910 இல் ஸ்ரீ கணேச வித்தியாசாலையை அமரர் வ. பசுபதிப்பிள்ளை அவர்கள் உருவாக்கினார். ஸ்ரீ கணேச வித்தியாசாலை ஆரம்பிக்கப்பட்டது தொடக்கம் 1954 ஆம் ஆண்டு வரை அப்பாடசாலையின் முகாமையாளராக கடமையாற்றி புங்குடுதீவின் கல்வி வளர்ச்சிக்கு பெரும் தொண்டாற்றியிருந்தார். இருபது ஆண்டுகளுக்கு மேலாக கிராமச் சங்கத் தலைவராயும் ஆரம்பகாலத்தில் கிராமக்கோட்டு நீதிபதியாகவும் இருந்து தொண்டாற்றினார். 1910 ஆம் ஆண்டளவில் ஒரு சைவப் பாடசாலையை நிறுவமுற்படுபவர்கள் அனுபவிக்க வேண்டி இருந்த இன்னல்கள் பலப்பல. சைவ வித்தியாபிவிருத்திச் சங்கத்தின் செயலாளரும், சைவப் பெரியாருமான அமரர் சு. இராசரெத்தினம் அவர்கள் குறிப்பிட்டுள்ள பின்வரும் வார்த்தைகள் அக்கால நிலையை நன்கு படம் பிடித்துக் காட்டுகின்றன.

"1910 ஆம் ஆண்டளவில் ஒரு சைவப் பாடசாலையைத் தாபிப்பதாயின் ஸ்தாபிக்க வந்தவர்கள் படும் பாட்டைப் பற்றிக் காலம் சென்ற ஸ்ரீ அருணாசலம் அவர்களோடு சம்பாசித்தவர்களுக்கு நன்கு தெரியும். இலங்கையில் போர்த்துக்கீசர் ஆளத் தொடங்க முன்பு 500 பாடசாலைகளிலும் மடங்களிலும் சைவக்கல்வி கற்பித்தல் நடாத்தப்பட்டு வந்தது. போர்த்துக்கீசருக்குப் பின் இலங்கையை ஆண்ட டச்சுக்காரர்களுக்குப் பின் வந்த பிரிட்டிஷார். பேச்சளவில் ஒவ்வொரு மதத்தவரும் ஏதும் செய்யலாமென்று சொன்னாலும் புரட்டஸ்தாந்து மதப் பாடசாலைகளுக்கே பணமும் மற்றும் உதவிகளும் செய்து வந்தார்கள். அப்படிச் செய்து வந்த தால் சைவ மக்கள் நூற்றுக்கணக்கான பாடசாலைகளைத் தாபித்தனர். பொருளுதவி, ஆளுதவி இல்லாமல் சில சைவப் பாடசாலைகள் மூடப்பட்டன. அக்காலத்தில் சைவர்கள் எல்லோரும் திரண்டு ஒரு சபையை உண்டாக்கி அரசாங்கத்தின் பாரபட்சத்தை நீக்க இயலாத படியால் சைவ மக்கள் பட்ட கஷ்டம் சொல்லும் தரமல்ல. அத்தகைய ஒரு கால கட்டத்தில் புங்குடுதீவில் "புரட்டஸ்தாந்து" மதப் பாடசாலைகள் எழுச்சி பெற்றிருந்த காலத்தில் இலட்சிய வேட்கை கொண்ட அமரர் பசுபதிப்பிள்ளை அவர்கள் சைவப் பெருமக்கள் பலரது ஒத்துழைப்புடன் பெரியார் நீ. அம்பலவாணர் (மூத்ததம்பி) அவர்களது வளவில் முதல் முதலாக1910 இல் ஸ்ரீ கணேச வித்தியாலயத்தை நிறுவினார்.

1914ஆம் ஆண்டு ஆவணி மாதம் வரை அரசினரின் நன்கொடைப் பணம் எதுவுமின்றி அமரர் பசுபதிப்பிள்ளை அவர்களின் சுய முயற்சியினாலும் உள்ளூர்ப் பெரியார்கள் பலரது ஒத்துழைப்புடனும் பல்வேறு இன்னல்களுக்கு மத்தியில் இப்பாடசாலை இயங்கி வந்தது. 1925 இல் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீ கணேச வித்தியாசாலைப் பழைய மாணவர் சங்கத்தின் போஷகராக இருந்த பெரியார், வ. பசுபதிப்பிள்ளை மாணவர்கள் தேவாரம், சமய பாடம், உடல் நலப் பயிற்சி இவற்றில் உயர்வு பெறப் பரீட்சைகள் நடாத்தி, உயரப்புலம் முற்றவெளி மைதானத்தில் போட்டிகள் நடத்தி நாடு நலமுறப் பரிசில்கள் வழங்கி ஊக்குவித்தார்" என்று குறிப்பட்டுள்ளது.

முதலியார் குல. சபாநாதன் அவர்கள் 1951 ஆம் ஆண்டு வெளியான வித்தியாலயப் பழைய மாணவர் சங்க மலரில் இவரைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகின்றார். "புங்குடுதீவினை வெளியூரவர்கள் பெரும்பாலும் அறியவந்தது ஸ்ரீமான் பசுபதிப்பிள்ளை அவர்கள் மூலமே என்று கூடச் சொல்லலாம். வெளியூர்களிலிருந்து புங்குடுதீவுக்குச் செல்பவர்களை உபசரிப்பதில் இப்பெரியார் கைதேர்ந்தவர். ஆங்கிலமும் தமிழும் அழகாகப் பேசுவார். இவர் முதலில் கிராம விதானையாகக் கடமையாற்றிப்பின் கிராமச்சங்கத்தலைவராகத் தொண்டாற்றினார். புங்குடுதீவு மக்களின் முன்னேற்றத்தைப் பற்றியே கனவு காண்பவர். பாடசாலைகளை நிறுவுவதில் சலியாது உழைத்து வருபவர். வயது சென்றாலும் சுறுசுறுப்புக் குறையவில்லை. இவரது உதவியால் புங்குடுதீவை முதன் முறை சுற்றிப் பார்க்கும் சந்தர்ப்பம் எங்களுக்குக் கிடைத்தது" என்று குறிப்பிட்டுள்ளார்.

சைவத்தையும் தமிழையும் வளர்க்கும் பணியின் ஒரு பாகமாக விளங்கியதே புங்குடுதீவு வேதாகம சாஸ்திர பாடசாலை. இது புங்குடுதீவு பெருங்காடு சிவன் கோவிலுக்கு அருகாமையில் அமைந்திருந்தது. இதனை சென்ற நூற்றாண்டின் நாற்பதுகளில் நிறுவியவரும் அமரர் பசுபதிப்பிள்ளை அவர்களே. இலங்கையில் முதன் முதலாக ஆரம்பிக்கப்பட்ட இந்த வேதாகம பாடசாலையில் தீவகத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் பிராமணர்கள் வந்து படித்தார்கள். யாழ்ப்பாணத்திலும் ஒரு வேதாகம பாடசாலையை நிறுவுவதற்கு இவர் முயன்றார். ஆனால் அம்முயற்சி சிலரின் இடையூறினால் கை கூடவில்லை.

சைவச்சிறார்கள் சைவச் சூழலில் சைவ நெறிக்கமைய கல்வி பயில முடியாதிருந்த குறைபாட்டை இங்கு நீக்கிய பெருமை அமரர் பசுபதிப்பிள்ளை அவர்களையே சாரும். இதனை நன்கு உணர்த்தும் வகையில் இலக்கிய கலாநிதி பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்கள் அமரர் பசுபதிப்பிள்ளையைப் பற்றி பின்வரும் வெண்பா மூலம் எமக்கு உணர்த்துகின்றார்.

"புங்குடுதீவென்றாற் புகல் பசுபதிப்பிள்ளை
எங்கும் புகழ் நிறுவி ஏகினார் - இங்கிவர்போல்
தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று"

வேறு பல கவிஞர்களும் அமரர் பசுபதிப்பிள்ளை அவர்களைப் பற்றி கவிதைகள் புனைந்துள்ளனர். இதுவரையும் நாம் கூறியவற்றிலிருந்து அறிவது யாதெனில் வ. பசுபதிப்பிள்ளை அவர்கள் புங்குடுதீவின் கல்வி வளர்ச்சிக்கு பங்காற்றியவர்களில் முதலிடத்தைப் பெறுகின்றார் என்பதேயாகும். புங்குடுதீவு வாழ் மக்களாகிய நாம் என்றென்றும் அமரர் வ. பசுபதிப்பிள்ளை அவர்களுக்கு நன்றியுடையவர்களாக இருப்போமாக.

## பேராசிரியர் சி.இ. சதாசிவம்பிள்ளை (1893 – 1983)



பேராசிரியர் சதாசிவம்பிள்ளை (இளையப்பா உபாத்தியாயர்) அவர்கள் தொண்ணூறு வயதிலும் படித்துக் கொண்டிருந்தவர், கடவுளை வழிபட்டவர், இயன்ற வரை செயற்பட்டவர். இளையப்பா உபாத்தியாயர் என்ற பெயரைக் கேட்டதும் எல்லோருடைய நெஞ்சிலும் பெரும் பக்தியும் மகிழ்ச்சியும் ஏற்படும். அவருடைய உருவத்தைப் பார்ப்பதில் எவருக்கும் ஆசை அதிகம். அவர் அவதரித்த ஆண்டு ஆயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்று மூன்றாம் ஆண்டு. ஏப்ரல் மாதம் இருபத்திரண்டாம் திகதி (22.04.1893) சித்திரை மாதத்துத் திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தமையால் "திருஆதிரையான்" என்ற புனை பெயரில் கவிதைகள், கட்டுரைகள் எழுதி வந்தவர். அவர் ஆசிரியராகவும் தலைமை ஆசிரியராகவும் பணிபுரிந்தவர். வாழ்நாளில் அவர் பெற்ற பட்டங்கள் பல. அவற்றுள் முதன்மையானவை இரண்டு.

புங்குடுதீவு கண்ணகியம்மன் ஆலய முன்றலில் 1953ஆம் ஆண்டு சிலப்பதிகார விழா நடைபெற்றது. அவ்விழாவுக்கு தமிழக அறிஞர் சிலரும், ஈழத்து அறிஞர் பலரும் வருகை தந்தனர். தமிழக அறிஞர்களான கி.வா. ஜகநாதன் (கலைமகள் ஆசிரியர்) "சிலம்புச் செல்வர்" ம. பொ. சிவஞானகிராமணியார், பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன், பேராசிரியர் ஆ. முத்துசிவன் முதலானோர் மத்தியில் சதாசிவம் பிள்ளை அவர்களுக்கு "பேராசிரியர்" என்ற பட்டம் வழங்கப்பட்டது. ஆசிரியர் பலரையும் உருவாக்கிய பெருமைக்கு உரியவர் "பேராசிரியர்" சதாசிவம்பிள்ளை அவர்கள். புங்குடுதீவு கலைப்பெருமன்றம் அம்பலவாணர் அரங்கில் நிகழ்ந்த கலை விழாவில் பேராசிரியர் அவர்களுக்குச் "செந்தமிழ்க்கவிமணி" என்ற பட்டத்தையும் வழங்கியுள்ளது.

பட்டங்கள் பல பெற்ற பேராசிரியர் தனிப்பெருஞ் செந்தமிழ்ச் செல்வர். சீரிய சைவசீலர். ஆங்கில மொழியும் கற்றவர். சைவ சித்தாந்த வித்தகர். பத்தி நெறி கைவந்த உத்தமர். சிறந்த கவிஞர். தலை சிறந்த பேச்சாளர். ஆறடி உயரம் உள்ள ஆஜானுபாகுவான தோற்றம் உடையவர். பேராசிரியர் நெற்றியில் திருநீற்று முக்குறியும் செழுஞ்சந்தனத் திலகமும், செம்பொடியும் திகழ பின்தாழ்ந்த சடையுடன் பெருங்காட்டிலிருந்து ஆண்சிங்கம் போலக் கிழக்கூர் நோக்கி எழுந்தருளி வந்தவர். இவர், கிழக்கையும் மேற்கையும் இணைத்தவர். இவர், நெஞ்சம் இனிய உயர்ந்த நெஞ்சம். எவருடனும் நன்கு பழகி மதிப்புப் பெற்றவர் எம் பேராசிரியர் சதாசிவம்பிள்ளை அவர்கள்.தொண்ணூறு வயதிற்கு மேலும் உலாவித்திரிந்தவர். போராசிரியர், திருக்கேதீச்சர நாதரையும் கௌரியம்பாளையும் கண்டு தொழுது பாலாவியில் நீராடியவர். இவர் பிறந்தமையால் புங்குடுதீவு பெருமை பெற்றுள்ளது. காலத்துக்கு ஏற்ற கருத்தும், கருத்துக்கு ஏற்ற நடையும் அமைந்த பேராசிரியர், நல்லாசிரியர் பலரை உருவாக்கிய பெருந்தகை. நாட்டுக்கு நற்பணி புரிந்த தொண்டர் வ.பசுபதிப்பிள்ளை அவர்களின் நிழல் போல் விளங்கி பணி புரிந்தவர்.

இளமை தொட்டே கவிதை இயற்றும் ஆற்றல் பெற்ற பேராசிரியர், பாடியுள்ள தனிப்பாடல்கள் பல. இவர் திருவூஞ்சற் பிரபந்தங்கள் இயற்றிப்புகழ் பெற்றவர். தூது, பிள்ளைத் தமிழ் முதலிய பிரபந்தங்களும் பாடியுள்ளார். இவர் இயற்றிய திருக்கேதீச்சரநாதர் கிள்ளை விடு தூது, ஈழத்துச் சிவனடியார் திருக்கூட்டத்தினால் வெளியிடப்பெற்றது. "திருக்கேதீச்சரத்துக் கௌரிநாயகி பிள்ளைத் தமிழ் பிரபந்தங்களுள் தலை சிறந்தது. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழோடு ஒப்பிட்டு நோக்கத் தக்கது" என்று அறிஞர்கள் அதனைப் பாராட்டியுள்ளனர். திருக்கேதீச்சரத்துத் திருவாசக மடத்தில் கௌரிநாயகி பிள்ளைத் தமிழ் 1976ஆம் ஆண்டு தமிழகத்து மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பேராசிரியர், பன்மொழிப்புலவர் டாக்டர் தே.பொ. மீனாட்சிசுந்தரனார் தலைமையில் அரங்கேற்றப் பெற்றது. இந்தப் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் ஒன்றே பேராசிரியரின் கவித்திறனைக் காட்டப் போதுமானது. நீங்கள் தமிழில் விரும்பிப் படிக்கும் உயர்ந்த நூல்கள் எவை என்ற வினாவுக்கு அவர் தம் அருமைத் திருவாயினால் கூறிய பதில் வார்த்தைகள் இவை. "பக்தி நூல்களில் உயர்ந்தது திருவாசகம். நீதி நூல்களில் தலை சிறந்தது திருக்குறள், புராணங்களில் மேலானது கந்தபுராணம், சாத்திரங்களில் உத்தமமானது சிவஞானசித்தியார் இவைகளையே நான் முதல்தரமானவை எனப் போற்றிப் படிக்கின்றேன்" என்பது பேராசிரியர் திருவாக்கு. பேராசிரியர் அரசியலில் காந்தியடிகளைப் பின்பற்றியவர். ஆன்மீகத் துறையில் நாவலர் வழியே நலமெனக் கண்டவர். புங்குடுதீவின் கல்விக்காகத் தம்மை அர்ப்பணித்த சைவப் பெருந்தொண்டர் வ. பசுபதிப்பிள்ளை அவர்களையே வாழ்வுக்கு வழிகாட்டியாகக் கொண்டவர். புங்குடுதீவு ஸ்ரீ கணேச வித்தியாசாலை அவருடைய உள்ளங் கவர்ந்த ஒரு பெரும் கலைக் கூடமாகும்.

யாழ்ப்பாணத்திலுள்ள பிரபல ஆங்கிலக் கல்லூரிகளிற் கூடப் பழைய மாணவர் சங்கம் **(O.B.A.)** அமைக்கப் பெறுமுன் புங்குடுதீவு ஸ்ரீ கணேச வித்தியாசாலைப் பழைய மாணவர் சங்கத்தினை அமைத்து இருபத்தெட்டு ஆண்டுகள் அதன் சீர்கண்டு மகிழ்ந்தவர் பேராசிரியர் சதாசிவம்பிள்ளை என்பதனை நமது சமுதாயம் மறக்கவே மாட்டாது. இப்பாடசாலை மகா வித்தியாலயமாகத் தரம் உயரவேண்டுமென்று நினைத்து வாழ்த்தி நின்றபேராசிரியர் சதாசிவம்பிள்ளை அவர்கள் உள்ளத்தால் உயர்ந்த உத்தமர். அவர் பழமையும், புதுமையுங் கலந்த தனித்துவம் வாய்ந்த ஒரு தனி மாமனிதர். அவர் மறைந்துவிட்டாலும் புங்குடுதீவு மக்கள் அவரை மறந்துவிடமாட்டார்கள்

பொறியியல் நிபுணர்

## அமரர் என். ஏ. வைத்திலிங்கம்



புங்குடுதீவில் பிறந்த என்.ஏ. வைத்திலிங்கம் அவர்கள் காலத்தால் முற்பட்ட பொறியியலாளராவார். 1940ஆம் ஆண்டு இலங்கை அரசின் புலமைப்பரிசில் பெற்று இந்தியாவிலுள்ள பல வடிகால் அமைப்புகள் பற்றிய தொழில் நுட்பப் பயிற்சியை கச்சிதமாக முடித்து இந்திய விஞ்ஞானிகள் பலரின் பாராட்டைப் பெற்றுக் கொண்டு நாடு திரும்பிய இவர், யாழ்ப்பாணம் பிரபல நொத்தாரிசு வீரவாகு தம்பதியரின் புதல்வியும், கொழும்பு பிரதம சுகாதார வைத்திய அதிகாரி டாக்டர் நடராஜா, இலங்கை அதி உயர் நீதிமன்ற நீதியரசர் சிவசுப்பிரமணியம், கொழும்பு புகழ்பெற்ற அப்புக்காத்து சம்பந்தனின் துணைவியார் சரஸ்வதி, யாழ்ப்பாணம் பிரபல சட்டத்தரணி நவரட்னராஜா, கொழும்பு டாக்டர் இராஜதுரை, கொழும்பு பாலங்கள் அமைப்பு பொறியியலாளர் கந்தசாமி ஆகியோரது சகோதரி மீனாவைத் திருமணம் செய்து கொண்டார்.

புங்குடுதீவையும் வேலணையையும் இணைக்கும் வாணர் தாம்போதியை அமைப்பதற்கு பொறியியல் தொழில் நுட்ப ஆலோசகராகவும் கொழும்பு -புங்குடுதீவு நலன்புரிச் சங்க ஆலோசகராகவும் வாணர் சகோதரர்களுக்கு பக்க பலமாக இருந்து செயற்பட்டவர். இத் தாம்போதி பலமான இறுகிய அமைப்புக்கொண்டு அமைக்கப்பட்டதால் கடற் பெருக்கு, காற்றுப் புயல் எதற்கும் இன்று வரையும் அசையாமல் இருக்கின்றது. இவரின் பொறியியல் தொழில் நுட்பத்தின் சிறப்பை இன்றும் பலர் பாராட்டிக் கொண்டிருக்கின்றார்கள். இலங்கையிலே மிகவும் நீளமான தாம்போதி இதுவேயாகும். இப்பாலம் அமைத்ததன் மூலம் புங்குடுதீவு மக்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள் என்றால் மிகையாகாது. இதனால் புங்குடுதீவு, வேலணை, நெடுந்தீவு, நயினாதீவு மக்களும் நன்மையடைந்தார்கள். தென் கிழக்காசியாவில் தலை சிறந்த பொறியியலாளரான இவர், இலங்கை புகையிரத இலாகாவில் பல ஆண்டுகள் பிரதம பொறியியலாளராக பணியாற்றி சகல இன மக்களாலும் நன்கு மதிக்கப்பட்டவர். சிறந்த விவேகத்திறன், நிர்வாக ஆற்றல், திட்டமிடல், தொழில்நுட்பம், நேர்மை யாவரையும் அன்புடன் நேசிக்கின்ற பண்பு, யாவும் இவரை புடம்போட்ட அறிஞன் ஆக்கியதென்றால் மிகையாகாது. யாழ்ப்பாணம், அநுராதபுரம், நாவலப்பிட்டி புகையிரத நிலையங்கள் இவரின் சிறந்த தொழில் நுட்பத்தின் கை வண்ணத்தில் உருவாக்கப்பட்டவையாகும். இவருடைய மனிதநேயத்திற்கும் தொழிலாளரை அனுசரித்துப்போகும் பண்புக்கும் வெகுமதியாகப் புகையிரத சேவையில் உள்ளவர்கள் 100 பவுண் எடையுள்ள ஒரு தங்கப்புகையிரத வடிவத்தை வழங்கியுள்ளார்கள். இது இன்றும் இலங்கை வங்கியில் வைக்கப்பட்டுள்ளது.

1958 ஆம் ஆண்டு இலங்கையில் இடம்பெற்ற புயற்காற்று, வெள்ளப் பெருக்கு, மண்சரிவினால் பாதிப்படைந்த புகையிரத போக்குவரத்துச் சேவையை ஒரு வார காலத்தில் திருத்த வேலைகளை நிறைவேற்றி முடித்து மீண்டும் புகையிரதசேவையை ஆரம்பித்து வைத்து, அன்றைய அரசினதும் மக்களினதும் பாராட்டைப் பெற்றுக் கொண்டவர். அரசின் பிரதிநிதியாக உலகின் பல நாடுகளுக்கும் சென்று தனது புலமையை நிலைநாட்டத் தவறவில்லை. இலங்கை புகையிரத இலாகாவிலிருந்து ஓய்வு பெற்று 1967ஆம் ஆண்டு சிங்கப்பூர் பல்கலைக்கழகத்தில் பொறியியல் சிரேஷ்ட விரிவுரையாளராக பணியாற்றியவர்.

இவர் 1971ஆம் ஆண்டு அரச பொறியியல் கூட்டுத்தாபனத்தின் பிரதம ஆலோசகராகவும் பணிப்பாளருமாக நியமனம் பெற்று ஆசிய நாடுகளின் அபிவிருத்திப் பணிகளுக்கு பெரிதும் சேவையாற்றி 1984ஆம் ஆண்டு ஆசிய அபிவிருத்தி வங்கியின் ஆலோசகராகவும் திட்ட பணிப்பாளராகவும் அதியுயர் பதவி வழங்கப்பட்டது. பன்னிரண்டு ஆண்டுகள் உலகின் பல பாகங்களிலும் சிறப்பாகப் பணியாற்றிய இவர், தான் பிறந்து வளர்ந்த புங்குடுதீவு மண்ணை மறக்காமல் உற்றார். உறவினர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தவர். "இறுதியாக தனது தொண்ணூறாவது வயதிலும் இலங்கை இந்து மாமன்ற கட்டிட வேலையை ஒவ்வொரு நாளும் சென்று பார்வையிட்டு ஆலோசனைகளை வழங்கி வந்தார்" என்று இலங்கை இந்து மாமன்ற செயலாளர் திரு. கந்தையா நீலகண்டன் பெருமையாகக் கூறியுள்ளார்.

புங்குடுதீவு அபிவிருத்திப் பணிகளில் பெரிதும் ஈடுபாடு கொண்ட இவர் புங்குடுதீவு குடிநீர் பிரச்சினைக்கு எப்படி முடிவு கட்டலாம் என்று வடஇலங்கை சர்வோதய தொண்டர் திரு. திருநாவுக்கரசு, இவரை புங்குடுதீவின் எல்லா இடங்களையும் சுற்றிக் காண்பித்தார். அதற்கு அவர் கொடுத்த பொறியியல் ஆலோசனை முதலில் கடல் நீரை நன்னீருடன் கலவாமல் தடுத்தல் வேண்டும். மழைநீரை கடல் நீருடன் கலவாமல் சேகரித்தல் வேண்டும். சிறு குளங்களை புனரமைத்து மழை நீரை தேக்கி வைத்தல் வேண்டும் என்று ஆலோசனை வழங்கியிருந்தார். புங்குடுதீவு பெருங்காடு கிராஞ்சியம்பதி கந்தசுவாமி கோவில் தர்மகர்த்தாக்களில் ஒருவரான இவர், புங்குடுதீவு மின்விநியோகத்தை அன்றைய இலங்கை மின்சாரக் கூட்டுத்தாபன பிரதம பொறியியலாளர் திரு. சண்முகராஜாவுடன் வந்து திறந்து வைத்தார்.

நண்பர்களாலும் உறவினர்களாலும் 'வைத்தி' என்றும் 'என். ஏ.வி.' என்றும் அன்புடன் அழைக்கப்பட்ட இவர், புங்குடுதீவுக்கு மட்டுமல்ல முழு இலங்கைக்கும் பெருமை தேடித்தந்த பெருமகன்.

**புங்குடுதீவின் பெருமகன்**

## வே. க. சோமசுந்தரம்

ஒரு விடுதலை இயக்கத்தை வழிநடத்தக்கூடிய ஒருதலைமைக்காக தொண்டர்கள் தவித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் தான் , சோமசுந்தரம் என்ற அந்த மாமனிதரை கட்சித்தொண்டர்கள் கண்டறிந்தனர். இந்திய சுதந்திரப் போராட்டத்திற்காக இந்தியத் தேசிய இராணுவத்திற்குப் படைதிரட்டிக் கொடுத்த பயிற்சிகளும், ஜவஹர்லால் நேரு போன்ற பெருந்தலைவர்களுக்கு வரவேற்பளித்து அரசியல் கூட்டங்கள் நடத்திப் பழகிய அனுபவங்களும் கொண்ட வே.க. சோமசுந்தரம் அவர்களின் இனப்பற்று, விடுதலை உணர்வு, பொதுநல உணர்வு புங்குடுதீவு இளைஞர்களையும் ஏனைய தீவக இளைஞர்களையும் எழுச்சிபெறச்செய்தன. அவரின் உணர்ச்சிமிக்க உரையாடல்களும் அவர் கூறிய இந்திய சுதந்திரபோராட்டச் செய்திகளும் தீவகம் எங்கும் பரவி தீவக இளைஞர்கள் அனைவரையும் தமிழரசு மூவர்ணக்கொடியின் கீழ் திரண்டு நிற்கச் செய்தமையால் 1956ஆம் ஆண்டு தேர்தலில் தமிழரசுக்கட்சி தீவகத்தில் புதிய சாதனையுடன் வெற்றிபெற்றது.



இந்தவெற்றி. வே. க. சோமசுந்தரம் அவர்கள் தந்த வெற்றியாகக் கொண்டாடப்பட்டது. அன்று தொடக்கம் கட்சியை எவராலும் தோற்கடிக்க முடியாதவாறு அவரின் தலைமை காத்து நின்றது.

1925 ஆம் ஆண்டு உருவாகிய புங்குடுதீவு இளைஞர்கழகம் 1960 ஆம் ஆண்டு தொடக்கம் அமரர் வே. க. சோமசுந்தரம் அவர்களின் தலைமையைப் பெற்று புதிய எழுச்சிக்கீதம் பாடியது. அரசியல், சமூகம், கலை, கலாசாரம், நிர்மாணம் ஆகிய சகல துறைகளிலும் இளைஞர்களை அளப்பரிய சேவையாற்ற வைத்தது. அவரின் தலைமை கிராமமெங்கும் புதிய மன்றங்கள், கழகங்கள் சங்கங்களை உருவாக்கி கிராம இளைஞர்கள் தமது இயல்பூக்க திறமைகளை வெளிக்கொண்டுவர வழிகாட்டியதுடன் புதிய தலைமுறைக்கு தலைவனாகவும் ஆக்கியது.

தமிழரசுக்கட்சியின் சத்தியாக்கிரக போராட்டத் தீர்மானம் நிறைவேறியதும் தீவகம் புதிய எழுச்சிகொண்டது. 50 நாட்கள் நடைபெற்ற சத்தியாக்கிரகத்தில் தீவகம் பெரும்பங்களிப்பை வழங்கியது. ஊர்வலங்களுக்கு தலைமைதாங்கியும் மறியல் நடாத்தும் பொறுப்புகளை ஏற்றும் அமரர் ஆற்றிய பணி நெஞ்சைவிட்டு அகலாதவையாகும். திருகோணமலை சத்தியாக்கிரகத்தில் பங்குபற்றிவிட்டு யாழ்ப்பாணச் சத்தியாக்கிரகிகளுடன் கலந்துகொள்ளச் சென்ற பொழுது வாகனத்தை சுற்றிவளைத்த இராணுவம் அமரர் கு.வி. செல்லத்துரை அவர்களையும் அமரர் அவர்களையும் நடுவீதியில் இழுத்தெடுத்து தாக்கியது. ஐந்துக்கும் மேற்பட்ட இராணுவம் இருவரையும் தாக்கியபொழுதும் மனம் தளராது தாங்கிக்கொண்டனர்.

சத்தியாக்கிரக போராட்டத்தின் பின் அரச தபால் சேவைக்கு எதிரான தபால்சேவை நடாத்தும் சட்டமறுப்பு போராட்டம் ஆரம்பமாகியது. இப்போராட்டத்திற்கு எதிராக கடும் தண்டனைகள் கொண்ட சட்டங்கள் அரசாங்கத்தால் பிறப்பிக்கப்பட்டன. புங்குடுதீவில் தபால்சேவை நடத்துவதற்கான முத்திரைகளும் கடிதஉறைகளும் கட்சித்தலைமைப்பீடத்திலிருந்து பெறப்பட்டன. ஆனால் எங்கிருந்து செயல்படுவது என்பதை முடிவெடுக்காமல் ஒரு இரவு முழுவதும் ஆராய்ந்தனர். ஏற்படக்கூடிய விளைவுகள் பற்றி நன்றாக அறிந்திருந்த ஒரு குடும்பத்தின் தலைவனாக இருந்தும் தனது வீட்டிலேயே வைக்கப்போவதாக அமரர் தெரிவித்தார். இன்னொருவர் வீட்டை உபயோகித்து அவர்களுக்கு இழப்புகளை ஏற்படுத்துவதை விட நாமே அதனால் ஏற்படும் விளைவுகளை ஏற்றுக்கொள்வதே முறையென அமரர் கூறியதைக் கேட்டு அனைவரின் கண்களும் நீர்சொரிந்தன. இவர்களது தபால் அலுவலகத்தைப்பிடிப்பதற்குப் பொலிஸார் படாதபாடு பட்டனர். மலாயாவில் மூன்று நட்சத்திர கம்யூனிஸ்டுகளின் கெரில்லா முறைகளை அமரர் தெரிந்து வைத்திருந்தமையால் திட்டமிட்டு நடாத்திய தபால்சேவையை பொலிஸாரால் பிடிக்கவோ தடைசெய்யவோ முடியவில்லை.

புங்குடுதீவு வைத்தியசாலையின் நடவடிக்கையினால் வைத்தியசாலையின் அபிவிருத்தியும் அதிகாரிகளின் வருகையும் அதிகரித்தன. வைத்தியசாலை சுற்றுமதில், வைத்திய அதிகாரிகளுக்கான நிரந்தர விடுதி, வார்ட்டுகளுக்கு செல்வதற்கான வீதிகள் என்று எல்லா வளங்களையும் பெற்றது. நிரந்தர பஸ்போக்குவரத்து, மரங்கள் வளர்த்து பசுமையை உருவாக்கல், மருந்துகளைப் பாதுகாக்கும் குளிர்சாதன களஞ்சியம், காசநோய், தொழுநோய், மலேரியா நோய்களுக்கான பரிசோதனைக்கூடங்களும் உருவாக்கப்பட்டன.

மின்சாரவசதியும் பெறப்பட்டன. இத்தகைய அருஞ்சேவைகளுக்கும் பின்னால் அமரரின் அளப்பரிய பங்களிப்பும் பலருக்கு தெரிந்திருக்காவிட்டாலும் வைத்தியசாலையில் எழுந்துநிற்கும் நிர்மாணத்திட்டங்கள் சாட்சிகூறும். புங்குடுதீவு மக்கள் கற்பனை செய்திருக்கமுடியாத மின்சாரவிநியோகத்தை அமரரின் இடைவிடாத தூண்டுதலால் தீவக பாராளுமன்ற உறுப்பினரின் முயற்சியினால் கிடைக்கப்பெற்றது. புங்குடுதீவு கமநல சேவை நிலையமும் அமரர் ஆற்றிய கமநல சேவைத்திட்டங்களின் ஞாபகச்சின்னங்களாகும் . அமரரின் வாழ்நாளில் மேற்கொள்ளப்பட்ட கால் நடைகள் அபிவிருத்தி திட்டங்கள், நாய்கள், கோழிகள் கால் நடைகள் ஆகியவற்றுக்கு வழங்கப்பட்ட தடுப்பூசிச்சேவைகள், பசுமைக்கான மழை நீர்த்தேக்கங்கள், மரம் நாட்டும் இயக்கங்கள், முத்தமிழ் விழாக்கள் அனைத்தும் அவரது நன்றி நிறைந்த உள்ளத்தில் மலர்ந்தவை. மனிதநேயத்தால் விளைந்தவை. மலேசிய நாட்டில் தேடிய செல்வம் அனைத்தையும் தமிழரசுக் கட்சிக்காகவும் சமூகத்திற்காகவும் அர்ப்பணித்து பணிபுரிந்தமையால் ஏற்பட்ட வறுமை நிலையையும் பெரிதாக எண்ணாது இறுதிவரை தமிழரசுத் தாகத்தோடு வாழ்ந்த மனிதர். அரைநூற்றாண்டு காலம் புங்குடுதீவு வரலாற்றில் அமரர் வே. க. சோமசுந்தரம் அவர்களின் தொடர்பில்லாத நிகழ்ச்சிகள் எதுவுமில்லை எனலாம்.

**கிராமசபைத் தலைவர்**

## கா. மதியாபரணம்



புங்குடுதீவில் எளிமையாக வாழ்ந்து உயர்ந்தவர் அமரர். கா. மதியாபரணம் அவர்கள். எங்கள் கிராமத்தின் வளர்ச்சியில், கோவில்களின் வளர்ச்சியில், பாடசாலைகளின் வளர்ச்சியில் என்று பல்வேறு அபிவிருத்திகளிலும் அமரர் கா. மதியாபரணத்தின் பங்களிப்புகள் அதிகம் உண்டு. புங்குடுதீவு கலட்டி வரசித்தி விநாயகர் ஆலயத்தின் நிர்வாகியாக இருந்து அக்கோயிலின் வளர்ச்சியில் பெரும் பங்காற்றியவர். புங்குடுதீவு கிராம சபையின் 10 ஆம் வட்டார மக்கள் அவரை தமது வட்டார அங்கத்தவராக தெரிவு செய்தார்கள். அக்கிராம சபையின் பன்னிரண்டு அங்கத்தவர்களும் அவரை எங்கள் கிராம சபையின் தலைவராக தெரிவு செய்தார்கள். எங்கள் கிராமத்துக்கு அவர் செய்த அரும்பணிகள் காரணமாகவே அவருக்கு அவ்வாறான தலைமைப் பதவி கிடைத்தது.

எவ்வளவு பெரிய வர்த்தகராக அவர் விளங்கிய போதும் எளிமையான தோற்றத்துடனேயே காட்சியளிப்பார். இனிமையாகப் பேசுவார். அவர் கொழும்பு நகரில் பொரளையில் வர்த்தகம் செய்து வந்தாலும் அவரை அடிக்கடி புங்குடுதீவில் காணலாம். ஆலடிச் சந்தியில் கந்தையா அப்பு கடையில் இருந்த தபால்பெட்டி மீது அமைதியாக அமர்ந்து இருப்பார். அப்பொழுது என்னைப்போன்ற இளைஞர்கள் அவரிடம் பேச்சுக் கொடுப்போம்.

அப்பொழுது அவரது உரையாடல்கள் எல்லாம் புங்குடுதீவு வளர்ச்சி பற்றியும் அவ்வூர் இளைஞர்களின் உயர்ச்சி பற்றியதாகவுமே அமைந்திருக்கும். ஜே.பி. என்ற சமாதான நீதிவான் பதவியை இன்று பலர் கேட்டே பெற்றுக் கொள்ளுகிறார்கள். ஆனால், ஆரம்ப காலத்தில் உண்மையான சமூக சேவையாளர்களுக்கு மட்டுமே அதை வழங்குவார்கள்.

இவ்வாறு உண்மையான சேவைக்காகவே இவருக்கு 'ஜே.பி.' பதவி வழங்கப்பட்டது. எங்கள் கிராமத்தில் ஒரு சிலருக்கு மட்டுமே இந்த 'ஜே.பி'. பதவி கிடைத்திருக்கிறது. ஆரம்பத்திலேயே ஜே.பி. பதவி கிடைத்தவர்களில் அமரர் மதியாபரணமும் ஒருவர் என்பது குறிப்படத்தக்கது.

போரினாலும் பிரச்சினைகளாலும் எங்கள் ஊரின் பெரும்பாலான மக்கள் ஊரைவிட்டு இடம் பெயர்ந்து விட்டார்கள். அதைப்போலவே அமரரும் கொழும்புக்கு இடம்பெயர்ந்தார். அப்பொழுது அவரை என்னால் அடிக்கடி சந்திக்க முடிந்தது. புங்குடுதீவின் போக்குவரத்துகள், கடற்பிரயாணத்தால் ஏற்பட்ட விபத்துகள், தண்ணீர்ப் பிரச்சினை, சாதிப் பிரச்சினை, பாடசாலைகளின் குறைபாடுகள், கோயில்களின் வளர்ச்சி எனப் பல்வேறு பழைய வரலாறுகளைக் கூறுவார். அவர் இறக்கும் வரையில் அவரது எண்ணமெல்லாம் 'புங்குடுதீவு' என்னும் தனது கிராமத்தைப் பற்றியதாகவே இருந்தது. அவர் எங்களைவிட்டு மறைந்துவிட்டாலும் அவரது பெயரும் பணிகளும் என்றும் நிலைத்திருக்கும்.

**சட்டத்தரணி**

## ப. கதிரவேலு



புங்குடுதீவின் கல்வித்தந்தை என்று போற்றப்படும் வ. பசுபதிப்பிள்ளை விதானையாரின் மகனான இவர், தனது படிப்பு உத்தியோகங்களால் பல நிலைகளில் உயர்ந்தவர்.வழக்கறிஞரான இவர், சமாதான நீதிவானாகவும் பிரசித்த நொத்தாரிஸாகவும் உத்தியோகப்பற்றற்ற நீதிவானாகவும் கடமை புரிந்தவர். கூட்டுறவுத்துறையில் முக்கிய கூட்டுறவாளனாகக் கணிக்கப்பட்டவர் இப்பெரியார். புங்குடுதீவு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் தலைவராய் இருந்த காலத்தில் செய்தபணிகள் புங்குடுதீவின் சரித்திரத்தில் பதியப்படத்தக்கவையாகும். பலநோக்குக் கூட்டுறவுச்சங்கத்துக்கென்று தனியான பணிமனை ஒன்றைக்கட்டி எழுப்பியதோடு கிழக்கூரில் ஒரு கிளை நிறுவனத்தையும் மேற்கூரில் பெற்றோல் நிரப்பு நிலையத்தையும் கட்டிமுடித்தவர். புங்குடுதீவு பலநோக்குக் கூட்டுறவுச்சங்கம், நெடுந்தீவு பலநோக்குக் கூட்டுறவுச்சங்கம், நயினாதீவு பலநோக்குக் கூட்டுறவுச்சங்கம் அனைத்தும் இணைந்து புங்குடுதீவில் தலைமைச் செயலகம் வைத்து இயங்கியதோடு காலப்போக்கில் வேலணை, மண்டைதீவு, ஊர்காவற்றுறைச் சங்கங்களும் இணைந்து ஊர்காவற்றுறையில் தலைமைச் செயலகத்தை நிறுவி இயக்கிய காலத்திலும் ப. கதிரவேலு அவர்கள் தலைவராய் விளங்கி தீவுப்பகுதி அனைத்துக்கும் சேவையாற்றினார். இவருடைய காலத்திலேயே புங்குடுதீவுக்கு மக்கள் வங்கியும் வந்தது.

இவருடைய தந்தையார் பசுபதிப்பிள்ளை விதானையார் உருவாக்கிய ஸ்ரீகணேச வித்தியாசாலை ஸ்ரீ பராசக்தி வித்தியாசாலை இலங்கையின் முதல் சமஸ்கிருத பாடசாலையான புங்குடுதீவு வேதாகம பாடசாலை ஆகியவற்றிற்கு தந்தையாருக்குப் பின்பு முகாமையாளராகப் பெரும்பணியாற்றியவர். 1950 ஆம் ஆண்டளவில் புங்குடுதீவு வேலணை தாம்போதியை திறந்து வைக்க வந்த அன்றைய போக்குவரத்து அமைச்சரான திரு. கலுகல்லையின் சிங்கள உரையை ப.க. மொழிபெயர்த்ததோடு அப்பாலத்தை உருவாக்கிய பெரியார் அம்பலவாணருடைய பெயரையே அப்பாலத்துக்கு சூட்டும்படி மந்திரியிடம் வேண்டிய பெருந்தகையாளர் இவரே.

“திரு. ப. கதிரவேலுவின் வேண்டுகோளின்படி இந்தப்பாலத்துக்கு ‘அம்பலவாணர் தாம்போதி’ என்று பெயர் சூட்டுகின்றேன்” என்று அமைச்சர் கலுகல்லை அன்று பேசினார்.

அன்றைய இளைஞர்களுக்கு ப.கதிரவேலு அவர்கள் முன் உதாரணமாகவே திகழ்ந்தார். கல்வி சமூகப்பணிகள் மட்டுமல்லாது சமயப்பணிகளிலும் ப.க.வின் பங்களிப்பும் பார்வையும் விரிவும் ஆழமும் நோக்கியவை என்பதை இளம் தலைமுறையினர் அறிவர்.எழுத்தாளர் மு. தளையசிங்கம் உருவாக்கிய பூரண சர்வோதய இயக்கத்தின் சார்பில் பாராளுமன்றத் தேர்தல் களத்தில் இறங்கிய ப.க. அவர்கள். குறைந்த வாக்கு வித்தியாசத்தில் பாராளுமன்றம் செல்லமுடியாது போனாலும் பாராளுமன்றம் செல்லாமலே பல பணிகளை சமய, சமுதாய உலகுக்குச் செய்தவர்.

**சட்டத்தரணி**

**எஸ். கே. மகேந்திரன்**



புங்குடுதீவில் பிறந்த சிறந்த பேச்சாளர் எஸ். கே. மகேந்திரன். கந்தையா தங்கம்மா தம்பதியருக்கு 1951ம் ஆண்டு பிறந்த எஸ்.கே. மகேந்திரன் தனது ஆரம்பக் கல்வியை கமலாம்பிகை வித்தியாலயத்திலும் உயர்கல்வியை வேலணை மத்திய மகாவித்தியாலயத்திலும் கற்றார். 1970களில் சிங்களப் பேரினவாதம் இளைய தமிழ் தலைமுறையைக் கல்வித்துறையில் கருவறுக்க முற்பட்டபோது கிளர்ந்தெழுந்த மாணவர்களில் ஒருவராக “மாணவர் பேரவை” என்ற அமைப்பின் மூலமும் பின்னர் இளைஞர் பேரவை என்ற அமைப்பினை உருவாக்கியும் செயற்பட்டவர். 1965ஆம் ஆண்டு ஊரைதீவு இளந்தமிழர் மன்றம் என்ற இயக்கத்தை தாபித்து “தொழிலாளர் தோழன்” என்ற நாடகத்தை மக்கள் மத்தியில் சமர்ப்பித்து அவர் ஆற்றிய உரை மூலம் பல இளைஞர்களைக் கவர்ந்து கொண்டவர். தான் பிறந்த மண்ணின் மக்கள் கல்வியறிவில் சிறப்படைய வேண்டுமென்ற பேரவாவினால் “அறிவகம்” என்ற பெயரில் தனது தலைமையில் அமைத்த நூலகத்தை நோக்கி இளைஞர்களைப் படையெடுக்கச் செய்தவர். 1977ஆம் ஆண்டு இலங்கை உயர் நீதிமன்ற சட்டத்தரணியாக சத்தியப்பிரமாணம் செய்தமையையொட்டி புங்குடுதீவு மக்களால் அளிக்கப்பட்ட வரவேற்பு விழாவின் போது “தலைமை தாங்குவதற்கு ஏற்ற அறிவும் ஆற்றலும் ஆளுமையும் ஒருங்கே அமையப் பெற்ற இளம் தலைவராக தம்பி மகேந்திரனைக் காணுகிறேன்” என்று தலைவர் அமிர்தலிங்கமும், “இளம்படை நடத்தவல்ல இளம் தளபதி” என்று புலவர் ஈழத்துச் சிவானந்தனும் கூறி நிற்க வித்துவான் சி. ஆறுமுகம் அவர்களோ “உன் உரையை உலகமும் கேட்கும்” என்று வாழ்த்தினார்கள். தனது இளமைக்காலத்திலேயே தமிழீழ விடுதலை உணர்வு கொண்டு இலங்கையில் பொது அரசியல் பணிகளில் ஈடுபட்டு தமிழர்களின் இலட்சிய வேள்வியில் இதய பூர்வமாகப் பங்கெடுத்துக் கொண்டவர். தந்தை செல்வா, தளபதி அமிர் ஆகியோரின் தமிழரசுப் பாசறையை வளர்த்தவர்.

சட்டக்கல்லூரியில் சட்டம் பயின்றிடும் காலத்தில் பல விவாத அரங்குகளிலும், பேச்சுப் போட்டிகளிலும், பட்டிமன்றங்களிலும் பங்கேற்றுப் பல பரிசில்கள் பெற்றவர்.

தமிழர் விடுதலைக் கூட்டணியின் பிரசாரப் பீரங்கிகளில் ஒருவராக விளங்கி தமிழீழமெங்கும் எங்கள் வாழ்வும் வளமும் மங்காத தமிழென்று முழங்கிடும் இவரின் சொல்லாட்சியும் அரங்கை வசீகரிக்கும் ஆளுமையும் பலரை வெகுவாகக் கவர்ந்திடும் சிறந்ததோர் பேச்சாளனாக, இளைஞர் அணியின் அமைப்பாளனாக, வழக்கறிஞனாக தமிழர்களுக்கு அறிமுகமாகியிருந்தார். இவரின் "என்று முடியும் எங்கள் போட்டிகள்" என்னும் நூல் ஒரு சிறந்த சக்திமிகுந்த எழுத்தாளனாக இவரை இனம் காட்டியது.

அரசியலையும் இலக்கியத்தையும் சமயத்தையும் மொழியியலையும் சுமந்து திரிந்த நடமாடும் பல்கலைக்கழகம். தாயக விடுதலை உணர்வோடு ஊறி வளர்ந்த ஒரு தமிழீழ தேச பக்தனாய் மனித நேயத்தையும் மனிதாபிமானத்தையும் நிரம்பப் பெற்றவர்.

தனக்கு பெறுமதி மிக்க கல்வியை ஊட்டிய அன்புத் தாயை அன்புத் தெய்வமாய் போற்றி மகிழ்ந்தவர். அரசியல், பொது பேச்சுப்பணிகளோடு தான் பிறந்து வளர்ந்த கிராமத்தின் ஆலயங்களில் பொறுப்பான பதவி வகித்து, அவற்றின் துரித வளர்ச்சிக்கு அயராது உழைத்தவர்.

இளைஞர்கள் வீணான போக்குகளில் ஈடுபடாது தம் சேவைகளையும் வழி நடத்தல்களையும் ஏங்கிய உள்ளத்தோடும் ஏக்கம் மிகுந்த பார்வையோடும் தாய்நாட்டில் இருந்து இரத்தக்கண்ணீர் வடித்திடும் நம் இரத்தத்தின் இரத்தங்களை நோக்கி நம் கடைக்கண் பார்வையை காருண்ய நோக்கோடு வீச வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்தவர். இனம், மதம், மொழியாவும் வாழ்வுக்கு அத்திவாரம் தான். ஒவ்வொருவருக்கும் தூணாய் இருந்த அத்திவாரத்தின் மீது கட்டி எழுப்பப்பட்ட அழகிய வீடு, உலகம், இதில் அனைவரும் உரிமையோடு வாழவேண்டும். அதற்கு உதவி புரியவேண்டியது மனிதநேயம் மட்டுமே என்று உரைத்த அவர் இன்று எங்கள் மத்தியில் இல்லை.

**ப. கனகலிங்கம்**

பரராஜசிங்கம் கனகலிங்கம் புங்குடுதீவில் பிறந்த சமூக சேவையாளர்களில் முக்கியமானவர். சிறந்த அரசியல் சமூகத்தலைவர், பத்திரிகையாளர், தான் சார்ந்திருந்த கூட்டுறவு இயக்கத்தை பலப்படுத்த தீவக கூட்டுறவு ஒன்றியத்தை அமைத்தவர்.

1998ஆம் ஆண்டு தொடக்கம் இன்று வரை புங்குடுதீவு - நயினாதீவு பலநோக்கு கூட்டுறவுச் சங்கத்தலைவராக இருந்து வருகிறார். 1991-95 இராணுவ நடவடிக்கைகளின் போதும் புங்குடுதீவு - நயினாதீவு சங்கத்தையும் இடம்பெயரச் செய்து இடம் பெயர்ந்த மக்களுக்காக உழைத்தார். 1991 ஆம் ஆண்டு யாழ். மாவட்ட பொது அமைப்புகளை ஒன்றிணைத்து ஒன்றியம் அமைக்கப்பட அதன் பொதுச் செயலாளராக இன்று வரை செயற்படுகிறார்.

2003 ஆம் ஆண்டு யாழ். மாவட்ட தேசிய எழுச்சிப் பேரவையின் ஊடகப் பேச்சாளராக நியமிக்கப்பட்டார். 1995 - 2002 காலப்பகுதியில் வன்னியில் அரசியல், கூட்டுறவு, கல்வி , மக்கள் வாழ்வாதார மேம்பாட்டுக்காக அரும்பணியாற்றினார். அவர் புனைபெயரில் பல அரசியல் கூட்டுறவுக் கட்டுரைகளை எழுதியுள்ளார்.

பிரகாஸ், கலி என்பன இவரது புனைபெயர்களாகும். 1983 ஆம் ஆண்டு கொழும்பிலிருந்து “சந்திப்பு” என்ற சஞ்சிகையை வெளியிட்டார். 1997 முதல் 2002 வரை கிளிநொச்சியிலிருந்து “சங்கமம்” என்ற கூட்டுறவு சார்ந்த பத்திரிகையை வெளியிட்டார்.

மாணவனாக இருந்த காலத்தில் கா. பொ. இரத்தினம் எம்.பி.யுடன் இணைந்து செயற்பட்டார். தந்தை செல்வா மீது பற்று வைத்திருந்தார். இப்பொழுது தமிழ் தேசிய இனத்தின் விடுதலைக்காக குரல் கொடுக்கிறார். யாழ் மாவட்டத்தில் 2004 இல் பாராளுமன்றத் தேர்தலில் வேட்பாளராக நியமிக்கப்பட்ட போதும் வேறு ஒருவருக்காக விட்டுக் கொடுத்தார். 2006ஆம் ஆண்டு நடைபெறும் உள்ளூராட்சி சபை வேலணை பிரதேச சபை தேர்தலில் தமிழரசுக் கட்சியின் தலைமை வேட்பாளராக நியமிக்கப்பட்டார். இவரது காலத்தில் பல சமூக அபிவிருத்திகள் ஏற்பட்டன. பல திட்டங்களை அரசு அதிகாரிகள் மட்டத்தில் தெரியப்படுத்தி தீர்வு கண்டார்.

**சு. கருணாகரன்**



சந்தையடியில் உள்ள “மணியம் ஸ்ரோர்ஸ்” புங்குடுதீவில் பிரபல்யம் பெற்றது. இந்த சுப்பிரமணியத்தின் புதல்வர்கள் எல்லோரும் புங்குடுதீவின் வளர்ச்சியில் முக்கிய பணியாற்றியிருக்கிறார்கள். இவர்களில் ஒருவர் தான் சு. கருணாகரன். இவர் 20.09.1934இல் புங்குடுதீவில் பிறந்தவர். நீண்ட காலம் புங்குடுதீவு கிராம அபிவிருத்திச் சபையின் தலைவராக இருந்து பெரும் பணியாற்றியவர்.

1963ஆம் ஆண்டு புங்குடுதீவு கிராமசபையின் உபதலைவராகவும் தெரிவு செய்யப்பட்டார். அந்தக்காலத்தில் புங்குடுதீவு 12 வட்டாரங்களிலும் அங்கத்தவர்கள் தெரிவு செய்யப்பட்டார்கள். அப்பொழுது கு.வி. தம்பித்துரைக்கு ஆறு அங்கத்தவர்களும் பி. கதிரவேலுவுக்கு ஆறு அங்கத்தவர்களும் ஆதரவு வழங்கினார்கள். அதனால் திருவுளச் சீட்டு மூலம் கு.வி. தம்பித்துரை கிராமசபைத் தலைவராக தெரிவு செய்யப்பட்டார்.

நாகேசு, குமாரசாமி விதானையார், க. திருநாவுக்கரசு, கு. வி. தம்பித்துரை, பரியாரி தம்பிப்பிள்ளை, ராஜரட்ணம், நா. நல்லதம்பி, நாகநாதி, கிளாக்கர் கார்த்திகேசு, எஸ். கதிரவேலு போன்றோர். புங்குடுதீவு கிராமசபையில் அங்கத்தவராக இருந்தனர். புங்குடுதீவுக்கு மின்சாரம்வந்தபோது மகாவித்தியாலயம் முழுவதற்கும் மின்சார இணைப்பை (வயறிங்) சு. கருணாகரனே தனது சொந்தச் செலவில் செய்து கொடுத்தார்.

இந்த மகாவித்தியாலயத்தின் பெற்றோர் ஆசிரிய சங்கச் செயலாளராக இருந்து பாடசாலையின் வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றுகிறார். 1984 முதல் 1989 வரை சு. கருணாகரன் பலநோக்கு கூட்டுறவுச் சங்கத்தலைவராக இருந்து பெரும் பணியாற்றியிருக்கிறார். 1991இல் புங்குடுதீவுப் பாடசாலைகள் எல்லாம் இடம்பெயர்ந்து யாழ். நகரில் ஒரே இடத்தில் இயங்கியபோது அங்கு கற்ற பல மாணவர்களுக்கு சீருடை, பாடசாலை உபகரணங்கள் போன்றவற்றை சங்கம் மூலம் வாங்கிக் கொடுத்து உதவி செய்தார்.

1972 காலப்பகுதியில் கள்ளியாறு அணைத்திட்டத்தை செயற்படுத்தியவர் இவரே. கடல்நீர் தரைப்பகுதிக்குள் வந்துவிடாமலும் அதிகமான மழை நீர் கடலுக்குள் செல்லாமலும் தடை அமைத்தார். ஐந்து துரிசுகள் மூலம் அத்தடை அமைக்கப்பட்டது. வெள்ளம் வற்றும்போது துரிசை மூடியும் வெள்ளம்பெருகிய போது துரிசை திறந்துவிடக்கூடியதுமாக அது அமைக்கப்பட்டது. புங்குடுதீவு மகாவித்தியாலயம் மீது திரு. கருணாகரனுக்கு தீராத காதல். முதன் முதலில் மகாவித்தியாலய சூழலில் 15க்கு மேற்பட்ட வாகை மரங்களை இவரே நட்டார். அவற்றில் ஐந்து மரங்கள் மட்டுமே இப்பொழுது தப்பி உயர்ந்து நிற்கின்றன. 2006 இல் 50 மரங்களை நட்டுள்ளார்.

மகாவித்தியாலயத்துக்கு தெற்கே இப்பொழுது சிறு குளம் ஒன்று தூர்ந்து போய்க் கிடக்கிறது. பாடசாலையின் பிரயோசனத்துக்காக இக்குளத்தையும் இவரே தோண்டிக் கொடுத்தார். புங்குடுதீவு அரசினர் மருத்துவமனையின் அபிவிருத்திச் சங்க தலைவராக சு. கருணாகரன் சேவையாற்றுகிறார். இவ் வைத்தியசாலையின் புனரமைப்பில் பெரும்பங்காற்றி வருகிறார். வார்ட்டுகள் திருத்தி அமைக்கப்பட்டன. வெளிநோயாளர்பகுதி திருத்தி அமைக்கப்பட்டது. இப்பொழுது வெளிநோயாளர் பகுதி மட்டும் இயங்குகிறது.

புங்குடுதீவு மகாவித்தியாலயத்தின் பின்புறத்தில் ஒரு விளையாட்டு மைதானத்தையும் நீச்சல் தடாகத்தையும் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்பது இவரது நீண்டநாள் கனவாகும். இந்தக்கனவை நனவாக்க இராசரெத்தினம் விஜயகுமார் என்ற வர்த்தகர் ஒரு லட்சம் ரூபா வழங்கி சு. கருணாகரனின் கனவை நனவாக்க ஆரம்பித்திருக்கிறார்.

## எஸ். தில்லைநாதன் (J.P.)



சமாதான நீதிவான் எஸ். தில்லைநாதன் புங்குடுதீவு, கொழும்பு, நீர்கொழும்பு என்னும் பல்வேறு இடங்களில் சமூக சேவை செய்தவர். புங்குடுதீவு கணேச மகாவித்தியாலயத்தின் பெற்றோர் ஆசிரியர் சங்கத்தின் உபதலைவராகவும், பழைய மாணவர் சங்கத்தின் செயலாளராகவும் பெரும் பணியாற்றியவர். அக்காலங்களில் இவ்வித்தியாலயத்தின் புது மாடிக் கட்டிடம், பின்காணிகள், நூல்நிலையம் போன்றவை உருவாக்கத்தில் பெரும்பணி செய்தார்.

1974 -77 காலப் பகுதியில் புங்குடுதீவு 12 வட்டாரங்களினதும் மக்கள் குழுத்தலைவர்களில் ஒருவராக தெரிவு செய்யப்பட்டு சேவை செய்தார். காணி எல்லைப்பிரச்சினை, ஒழுங்கைகளை அகலிக்கும் பிரச்சினை, கடத்தல் தொழில்களால் ஏற்படும் பிரச்சினைகள் என்று பல்வேறு பிரச்சினைகளையும் சுமுகமாகத் தீர்த்தார்.

1970ஆம் ஆண்டு இவரின் சேவைகளுக்காக இவருக்கு ஜே. பி. பட்டம் வழங்கப்பட்டது. 1980இல் புங்குடுதீவு - நயினாதீவு ப. நோ. கூ. சங்க பொதுச்சபைத்தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு செயற்பட்டார். புங்குடுதீவு தல்லையபற்று முருகமூர்த்தி ஆலயத்தின் பரிபாலன சபைத்தலைவராக இருந்து பணியாற்றினார்.

1976ஆம் ஆண்டு அதிபர் ரி. திருநாவுக்கரசுடன் (நாவேந்தன்) சேர்ந்து புங்குடுதீவு அபிவிருத்திச் சபை ஒன்றை உருவாக்கினார். அரச அதிபர் காரியாலயம், பஸ் டிப்போ போன்றவற்றை புங்குடுதீவுக்கு கொண்டு வர முயற்சி செய்தார். ஆனால் அக்கால அரசியல் சூழ்நிலைகளால் அது கை கூடாமல் போய்விட்டது.

திரு. தில்லைநாதன் புங்குடுதீவு மத்தி இத்தித் திடல் நாச்சிமார் கோயிலின் அயலில் 09.09.1929இல் செல்லையா செல்வம் தம்பதியருக்கு மூத்த மகனாகப்பிறந்தவர். புங்குடுதீவு கணேச மகாவித்தியாலயத்தில் கல்விகற்றவர். ஆரம்பத்தில் பொரளை நாகலிங்கத்தின் வர்த்தக நிலையத்தில் தொழில் செய்தார். பின்பு நீர்கொழும்பில் புடைவையகம், உணவகம் போன்றவற்றை ஆரம்பித்து நடத்தினார். 1983 கலவரம் மூலம் இவை அழிந்தன. அதன்பின்பு இவர் சமூகப்பணிகளில் ஈடுபட முனைந்தார்.

## சோம. சச்சிதானந்தன்



இவர் புங்குடுதீவில் பிறந்த சமூகசேவையாளர்களில் இளையவர்.புலம் பெயர்ந்து கனடாவில் வாழ்ந்தாலும் மத, மொழி, கலாசார விடயங்களில் அதிக ஈடுபாடு காட்டுகிறார். சிறந்த பேச்சாளர், சிறந்த பாடகர்.

1982-1992 வருட காலத்தில் புங்குடுதீவில் கிராம சேவை உத்தியோகத்தராகப் பணியாற்றினார். அரச நிர்வாகத்தின் மூலம் என்ன உதவிகளைச் செய்ய முடியுமோ அத்தனை உதவிகளையும் புங்குடுதீவு மக்களுக்குச் செய்தார். கனடாவுக்கு இடம்பெயர்ந்து அங்கு புங்குடுதீவு பழைய மாணவர் சங்கத்தை ஏற்படுத்தி அதன் மூலம் 1996 முதல் "பூவரசம் பொழுது" என்னும் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்வதில் முக்கிய இடம் வகிக்கிறார்.

பாடுவதில் ஆர்வம் காட்டிய இவர், "பாக்கியநாதம்" என்ற பெயரில் தான் பாடிய திருமுறைப் பாடல்களைத் தொகுத்து சி.டி. யாக வெளியிட்டுள்ளார். அதன் வெளியீட்டு விழா கொழும்பில் (2006) நடைபெற்ற போது புங்குடுதீவு மக்கள் பெருவாரியாகக் கலந்து கொண்டனர். தமிழரசுக்கட்சியை தீவுப்பகுதியில் வளர்த்தவர்களில் முக்கியமானவரான க.வே. சோமசுந்தரம் அவர்களின் புதல்வரே சோம. சச்சிதானந்தன். புங்குடுதீவில் வாழ்ந்த போதும் தற்பொழுது கனடாவில் வாழும் பொழுதும் பொதுச் சேவைகளிலேயே அவர் ஈடுபட்டார்.

## க. பொன்னம்பலம் (J.P.)

புங்குடுதீவு வல்லனில் பிறந்த பொன்னம்பலம் போக்கத்தையடியில் திருமணஞ் செய்தவர். பல பொதுப்பணிகளில் ஈடுபட்டார். வல்லன் உபதபால் நிலைய உருவாக்கத்தில் முன்னின்று உழைத்தவர். குடிசைக்கைத்தொழில் மூலம் புங்குடுதீவு மக்களை பொருளாதாரத்தில் உயர்த்தலாம் என்று பாடுபட்டவர். பனங்கைப்பணிப் பொருட்களை கிராம மக்களுக்கு அறிமுகப்படுத்தி புங்குடுதீவை உயர்த்தப்பாடுபட்டார்.

## சமூகத்தொண்டர் திருவிளங்கம்

புங்குடுதீவு 2ஆம் வட்டாரத்தில் கந்தையா சீதப்பிள்ளை தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்த இவர், புங்குடுதீவு அமெரிக்கன்மிஷன் பாடசாலையில் கல்வி கற்றவர். வே.க. சோமசுந்தரம் கா. திருநாவுக்கரசு ஆகியோருடன் சேர்ந்து உழைத்தவர். தமிழரசுக் கட்சியின் அபிமானி. புங்குடுதீவுக்கு பல தொண்டுகள் செய்தவர். ஆஸ்பத்திரி வீதியில் தண்ணீர் தொட்டி அமைப்பதில் முன்னின்று உழைத்தவர். நெசவு ஆசிரியர் ஐயம்பிள்ளை அவர்களின் மகன் தியாகராசா ஆசிரியர், இந்த தண்ணீர் தொட்டிக்கான காணியை வழங்கினார். செல்லப்பா நாகநாதி அவர்கள் அத்தொட்டி அமைக்க பணம் வழங்கினார். ஆஸ்பத்திரிவீதி வைரவர் ஆலயத்தின் தர்மகர்த்தாசபையின் தலைவராக இருந்து கொண்டு அவ்வாலயத்தின் வளர்ச்சியில் பெரும்பங்காற்றியவர்.

## சி.சிவராசா



புங்குடுதீவு -10, சின்னத்துரை வாத்தியார் கிராம வளர்ச்சியில் முன்னின்றவர். அவரின் புதல்வர்கள் பலர், புங்குடுதீவுக்குப் புகழ் தேடித்தந்தனர். மூத்த புதல்வர் பொலிஸ் துறையிலும், இளைய புதல்வர் வங்கித்துறையிலும் புகழ் பெற்றவர்கள். சின்னத்துரை சிவராசா இப்பொழுது தேசிய சேமிப்பு வங்கியின் முகாமையாளராக இருக்கிறார். இவர் புங்குடுதீவின் வளர்ச்சியில் மிக அக்கறை கொண்டவர். அமரர் திருநாவுக்கரசு ஆரம்பித்து வைத்த கொழும்பு - புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கத்தை வளர்த்தெடுப்பதில் அதிக அக்கறை காட்டியவர். தான் கடமையாற்றிய வங்கிக்கட்டிடத்திலேயே அச்சங்கத்தின் ஆரம்பக்கூட்டத்தை நடத்தி வைத்தவர். புங்குடுதீவின் ஆலயங்களின் வளர்ச்சியில் அக்கறை கொண்டவர். புங்குடுதீவு வைத்தியசாலையின் புனரமைப்புக்கு இவரது மேற்பார்வையும் உந்து சக்தியாக விளங்கியது.

## கணபதிப்பிள்ளை சிவநாமம்



புங்குடுதீவில் இளைஞர்களை ஒன்றிணைத்து அவர்களுக்கு வழிகாட்டியவர். க. சிவநாமம் பாரதியின் கவிதையிலும் பாரதிதாசனின் பாடல்களிலும் பற்றுக்கொண்டு பகுத்தறிவை வளர்த்துக் கொண்டவர். சாதிக்கொடுமையை எதிர்த்த இவர் தமிழரசுக் கட்சியில் சேர்ந்து பணியாற்றினார். 1963 ஆம் ஆண்டு அக்கட்சியின் ஒன்றியச் செயலாளராக பணிபுரிந்தார். சாத்வீகப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றார். தமிழரசுத் தலைவர்களின் தலைமையில் மகாலெட்சுமியை புரட்சித் திருமணம் செய்து கொண்டார்.

கழுத்தில் கறுப்புத்துணி போட்டுக்கொண்டு மேடைகளில் அழகாகப் பேசுவார். அழகான கவிதைகளை எழுதுவார். ஈழத்துச் சிவானந்தன் எஸ். கே. மகேந்திரன், எஸ். இராசரெத்தினம் இவர்களுடனேயே அடிக்கடி காணப்படுவார். 1984 இல் சுவிஸிற்கு புலம் பெயர்ந்தார். 1936ஆம் ஆண்டு பிறந்த க. சிவநாமம் தனது 63ஆவது வயதில் சுவிஸில் காலமானார். அவர் மறைந்தாலும் அவருடைய சேவைகளை யாரும் மறக்கமாட்டார்கள்.



## மா.க. வைத்தியநாதன்

இவர் புங்குடுதீவு 10ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். இராஜேஸ்வரி வித்தியாலயத்தில் ஆரம்பக்கல்வியும், இரத்தினபுரி சென். லூக்ஸ் வித்தியாலயத்தில் உயர் கல்வியும் பெற்றவர்.

தாயகத்தில் அபிமானம் கொண்டு உள்ளூராட்சி தேர்தலில் போட்டியிட்டவர். இராஜேஸ்வரி சனசமுக நிலையத் தலைவராகவும், கலட்டி வீரகத்தி விநாயகர் இணைச் செயலாளராகவும், வீராமலை முருக மூர்த்தி ஆலயத் தலைவராகவும், கண்ணகை அம்மன் கோயில் தர்மகர்த்தாவாகவும், சபை அங்கத்தவராகவும் 32 வருடங்கள் கடமையாற்றியவர். தட்டையன்புலம் உபதபாலகம் உருவாக உழைத்தவர்களில் இவர் முக்கியமானவர்.

1983ஆம் ஆண்டு கலவரம் நடந்தபோது பாதிக்கப்பட்டவர்களின் சார்பில் சங்கம் அமைத்து மக்களுக்கு பல உதவிகளை அரசாங்கத்திடமிருந்து பெற்றுக் கொடுத்தார்.

1992ஆம் ஆண்டு அப்போதைய இந்து கலாசார அமைச்சர் பி.பி.தேவராஜ் இவருக்கு "கலைக்காவலன்" என்ற பட்டத்தை வழங்கினார். நாட்டுப்பிரச்சினை காரணமாக 1993ஆம் ஆண்டு இவர் ஜேர்மனிக்குப் பயணமானார். இப்போது கனடாவில் வாழ்கிறார்.

## சின்னத்துரை கிருபானந்தவேல்



இவர் புங்குடுதீவு 12 இல் பிறந்தவர். யாழ். இந்துக்கல்லூரியில் உயர்தரம் வரை கற்றவர். கொழும்பில் கணக்காளராகக் கற்றவர். இப்பொழுது கொன்சல்ரனாக இலண்டனில் பணியாற்றுகிறார். இலண்டன் - புங்குடுதீவு அபிவிருத்திச் சங்க தலைவர். புங்குடுதீவுக்கு தண்ணீர் பிரச்சினை தீர்ப்பதற்காக லண்டன் - புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கம் ஒரு பவுசரை அனுப்ப முடிவு செய்தமைக்கு திரு. சி. கிருபானந்தவேலே முக்கியமானவர். புங்குடுதீவுக்கும் புங்குடுதீவு மக்களுக்கும் தன்னாலான உதவிகளைச் செய்பவர்.

இப்பொழுது வருடா வருடம் நடைபெறுகின்ற 'காற்றுவழிக்கிராமம்' நிகழ்ச்சிக்கு மலர் அமைப்புக்கு இவர் முன்னின்று உழைத்தார். பெற்றதாய் மீதும் தாய்நாட்டின் மீதும் பெரும் பாசம் கொண்டவர். ஒரு மகனும் ஒரு மகளும் இவருக்குப் பிள்ளைகள். மகன் இளம் மிருதங்க வித்துவான். தன் தமையனார் சின்னத்துரை முருகானந்தவேலைப் போலவே இவரும் தான் பிறந்த கிராமமான புங்குடுதீவு மீது அபிமானம் கொண்டவர்.

தாய்மீது பற்றுக்கொண்ட இவர் தனது பெயரை சின்னத்துரை பார்வதிப்பிள்ளை கிருபானந்தவேல் என்று எழுதி வருகிறார்.

## வீ. பாலசுப்பிரமணியம்



வீ. பாலசுப்பிரமணியம் புங்குடுதீவில் உள்ள தனது வீட்டைத் திருத்தி 2003 முதல் சர்வமத சங்கப் பாலர் பாடசாலையை ஆரம்பித்தார். சிறுவர்களின் போக்குவரத்துக்காக ஒரு ஓட்டோவண்டியும் வாங்கிக் கொடுக்கப்பட்டது. இவர்களுக்கு சீருடை, சத்துணவு, பாடசாலை உபகரணங்கள், விளையாட்டுப்பொருட்கள் என்பன வழங்கப்பட்டன. இரு ஆசிரியர்களை நியமித்திருக்கிறார்கள்.

புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பாரதி சனசமூக நிலையத்தில் இவர்களது இரண்டாவது பாலர் பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. அவ்வாறே மடத்துவெளியில் முன்பள்ளி ஒன்றும் 4 ஆம் வட்டாரத்தில் காந்தி முன்பள்ளி, நிலாஜோதி முன்பள்ளி ஆகியன ஆரம்பிக்கப்பட்டன. புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் தையல்பயிற்சி நிலையம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. பாரதி சனசமூக நிலைய மாதர் சங்கத்துக்கு சுய தொழில்வளர்ச்சிக்கும் உதவி வழங்கினர். மீன்பிடி உபகரணங்கள் என்பன வழங்கப்பட்டன.

மு. பத்மநாதன் என்னும்புங்குடுதீவு மாணவனுக்கு இதய சத்திரசிகிச்சைக்காக 115,000 ரூபா வழங்கப்பட்டது. கண்பார்வையற்ற வாய்பேசாத குடும்பத்துக்கு மாதம் 5,000 ரூபா வழங்கப்படுகிறது. புங்குடுதீவு இராஜேஸ்வரி வித்தியாசாலை புனர்நிர்மாணம் செய்யப்பட்டுள்ளது. புங்குடுதீவு மகாவித்தியாலயத்துக்கு வடக்குப்பக்க மதில் 2 இலட்சம் ரூபா செலவில் கட்டிக் கொடுக்கப்பட்டது. 9ஆம் வட்டாரத்திலுள்ள நாவுண்டான் சுடலை திருமதி. கமலா சிவபாதம் உதவியுடன் கட்டிக் கொடுக்கப்பட்டது. 15 குளங்களை ஆழமாக்கியது. பல கிணறுகள் துப்பரவாக்கப்பட்டுள்ளன. இவை அனைத்துக்கும் வீ. பாலசுப்பிரமணியமே முன்னின்று உழைக்கிறார்.

ஆலடிச்சந்தியில் முன்னாள் கிராமசபைத் தலைவர் மதியாபரணம் அவர்களின் வீடு தற்பொழுது இச்சங்கத்தின் தலைமைக்காரியாலயமாக இயங்குகிறது. புங்குடுதீவின் வளர்ச்சியில் ஈடுபடுவது இச்சங்கத்தின் நோக்கமாகும்.

## லெ. ஶ்ரீகாந்தன்



புங்குடுதீவு -11 இல் பிறந்த லெ. ஶ்ரீகாந்தன் பிரபல ஆசிரியர் மூனா. லெட்சுமணபிள்ளையின் மூத்த மகனாவார். பிரபலவர்த்தகரான அவர் சிறந்த சமூக சேவையாளர். புங்குடுதீவு -11 தெங்கந்திடல் வீரகத்தி விநாயகர் ஆலயத்தின் மீது பக்தி கொண்டவர். கொழும்பு - முகத்துவாரம் பகுதி லயன் கழகத் தலைவராக இருந்து சேவையாற்றியவர். கொழும்பு மாவட்டத்தில் பாராளுமன்ற தேர்தலில் போட்டியிட்டவர். புங்குடுதீவின் பிரபல செல்வந்தர் 'பணக்கார நல்லதம்பி'யின் பேரனாவார்.

## நடராசா காந்திகுமார்



குறுகிய காலத்தில் தன் திறமையால் முன்னுக்கு வந்தவர்தான் பொறியியலாளர் நடராசா காந்திகுமார், தன் திறமைகளை வெளிக்காட்டிப் பலரும் வியக்கும் வண்ணம் கொழும்பில் வீட்டு மனைகளை, கட்டிடங்களை கட்டி எழுப்பியவர். பொறியியல் படிக்காதவர்களே இத்தொழிலில் ஈடுபடும் பொழுது பொறியியல் படித்த தன்னால் இத்தொழிலில் முன்னேறலாம் என்ற துணிவில் இத்தொழிலில் ஈடுபட்டு வெற்றி பெற்றார். தொடர்ந்து மூன்று கட்டிடத் தொகுதிகளை கட்டி முடித்து விட்டார். தன் தொழிலில் மேலும் முன்னேற வேண்டும் என்று செயற்பட்ட போதே அவரை காலன் கவர்ந்துவிட்டான்.

1976ஆம் ஆண்டு புங்குடுதீவில் பிறந்த காந்தி குமார், யாழ் இந்துக்கல்லூரியில் கல்வி பயின்றவர். மொரட்டுவ பல்கலைக்கழகத்தில் பயின்று பொறியியலாளராக வெளியேறினார். புங்குடுதீவின் பெயரை நிலைநாட்டும் வகையில் பல கட்டிடத் தொகுதிகளை கொழும்பில் கட்டிக் கொடுத்தார். பழகுவதற்கு இனியவரான அவர், பல நண்பர்களைப் பெற்றிருந்தார்.

புங்குடுதீவு நடராசா அன்னலெட்சுமி தம்பதியரின் மகனான காந்திகுமார், புகழ்பெற்ற ஆசிரியர் சேனாதிராசாவின் பேத்தியும் பிரபல மத்துகம வர்த்தகர் நா. சுப்பிரமணியத்தின் மகளுமான சுகந்தியை திருமணம் செய்தவர். நடராசா காந்தி குமார் போல தொடர்மாடி மனைகளைக் கட்டிக்கொடுக்கும் தொழிலில் பல புங்குடுதீவு இளைஞர்கள் ஈடுபடுகின்றனர். அவர்களில் 'திவாகன்' உரிமையாளர் திவாகரன், மற்றும் முருகேசு, ரவி ஆகியோர் முக்கியமானவர்கள்.

## சட்டத்தரணி
## கே.வி. தவராஜா



புங்குடுதீவில் பிறந்த சிறந்த சட்டத்தரணிகளில் கே.வி. தவராஜாவும் முக்கியமானவர். புங்குடுதீவு 8ஆம் வட்டாரத்தில் பிறந்த இவர், பிரபல இரத்தினபுரி வர்த்தகர் கு.க. வேலுப்பிள்ளையின் புதல்வராவார்.

சட்டம் பயிலும் போது பல விவாத அரங்குகளிலும் பேச்சுப் போட்டிகளிலும் துடிப்புடன் கலந்து கொள்ளுவார். சிறந்த விளையாட்டு வீரன்.

சட்டத்தரணி கே.வி. தவராஜா புங்குடுதீவுக் கிராமத்தின் மீது அபிமானம் கொண்டவர். போர்க்காலத்தின் போது அநியாயமாக கைது செய்யப்பட்டு சிறைகளில் அடைக்கப்பட்ட தமிழ் இளைஞர்களுக்காக போராடி அவர்களைத் தன் வாதத்திறமையால் மீட்டவர்.

இவரது மனைவி கௌரி தவராஜாவும் சிறந்த சட்டத்தரணியாவார்.

17

# புங்குடுதீவில் வைத்திய சேவை

புங்குடுதீவில் அரிய மருத்துவ மூலிகைகள் காணப்பட்டன. ஆனால் அவை இப்பொழுது அருகி வருகின்றன. பூர்வீக பரம்பரை ஏடுகள் படித்த திறமையான வைத்தியர்கள் ஊருக்குள் இருந்தனர். வைத்திய பூபதி சி. கணபதிப்பிள்ளை (சின்னத்தம்பர்) புங்குடுதீவில் வைத்தியசாலை வருவதற்கு முன்பே மக்களின் நோய்களை தீர்த்த பெருமைக்குரியவர். கைநாடி வைத்தியத்திலும் வாய்மணத்திலிருந்து நோயைக் கண்டுபிடிக்கும் தன்மையிலும் திறமை மிக்கவர். வைத்தியர் வீரவாகு தம்பிராசா (தம்பையா) வைத்தியத்திலும் சோதிடத்திலும் சிறந்து விளங்கினார். புங்குடுதீவில் மட்டுமன்றி தீவுப்பகுதி எங்கும் இவரது சேவை இடம் பெற்றது.

அந்தக் காலத்தில் 12 ஆம் வட்டாரத்தில் சின்னட்டி என்ற வைத்தியர் இருந்தார். இவர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் உயர்சாதியினருக்கும் வைத்தியம் செய்தார். சூசைப்பிள்ளை என்ற கிறிஸ்தவ வைத்தியர் ஒருவரும் 2ஆம் வட்டாரத்தில் இருந்தார். இவரும் எல்லா மக்களுக்கும் வைத்தியம் செய்தார். சௌரி என்ற வைத்தியரும் 10 ஆம் வட்டாரத்தில் நீண்டகாலம் வைத்தியம் செய்தவர். பாம்புக்கடி வைத்தியர்கள் பலரும் வாழ்ந்தனர். கிழக்கூரில் சங்குவேலிப் பகுதியில் இராமையா என்ற பாம்புக்கடி வைத்தியர் நீண்டகாலமாக வைத்தியம் செய்தார். பிள்ளைப்பேறு போன்ற நிகழ்ச்சிகளும் வீடுகளிலேயே ஊர் மருத்துவிச்சியின் உதவி கொண்டு நடைபெற்றன. வாணர்பாலம் திறக்கப்பட்ட பின் சுகாதார சேவை அதிகம் தேவைப்பட்டது. சுகாதார சேவையை மக்கள் விரும்பியதும் வைத்தியசாலை தேவைப்பட்டதும் பிற்காலத்திலேயாகும்.

1942ஆம் ஆண்டளவில் புங்குடுதீவில் அரசினர் வைத்தியசாலை கட்டப்பட்டது. அதற்கான காணியை சிதம்பரநாதரின் புதல்வர்களான அப்பாக்குட்டியர், சுப்பர், கந்தையர், அப்பச்சியர் ஆகியோர் வழங்கினர். சுகாதாரப் பாதுகாப்பிற்காக வாணர் சகோதரர்கள் எடுத்த முயற்சியினால் எமது வைத்தியசாலை உருவாகியது. முதலில் ஒரு சுகாதாரப் பரிசோதகரும் பொது சௌக்கிய மாதுவும் நியமிக்கப்பட்டனர். "சபா" என்பவர் மருந்தாளராக நீண்ட காலம் கடமையாற்றினார். அவரை அனைவரும் "ஓடலி சபா" என்று அன்புடன் அழைப்பர். முதலில் வெளிநோயாளர் பகுதி ஆரம்பிக்கப்பட்டது. பின்பு ஆண், பெண் வார்ட்டுகள் இரண்டு கட்டப்பட்டன. நீண்ட நாட்களின் பின் பிள்ளைப்பேற்று வார்ட்டு கட்டப்பட்டது. அதன்பின்பு வைத்திய அதிகாரிகள் தங்குவதற்கான விடுதிகள் கட்டப்பட்டன. நாளாவட்டத்தில் சிறந்த வைத்தியசாலையாக உயர்ந்தது. நெடுந்தீவு, நயினாதீவு நோயாளர்களும் இங்கு வந்து சிகிச்சை பெறும் அளவுக்கு உயர்ந்தது.

புங்குடுதீவு அரசினர் வைத்தியசாலை அடிப்படை வசதிகள் அற்று விளங்கிய போது உத்தியோகப் பற்றற்ற மேற்பார்வையாளராக வே. க. சோமசுந்தரம் நியமிக்கப்பட்டார். இவரது காலத்தில் பல வசதிகள் கிடைத்தன.

1976 ஆம் ஆண்டு காலப்பகுதியில் புங்குடுதீவு அரசினர் வைத்தியசாலையை விரிவுபடுத்தும் நோக்கத்தில் அரசாங்கம் பல உதவிகள் செய்து வந்தது. அப்பொழுது எஸ். தில்லைநாதன் உத்தியோகப் பற்றற்ற மேற்பார்வையாளராக நியமனம் பெற்று உதவினார். போர்ச் சூழல் காலத்தில் இவ்வைத்தியசாலை சீரழிந்தது. 2003ஆம் ஆண்டு புலிகளின் சுகாதார சேவையினால் தியாகி திலீபன் மருத்துவமனை அமைக்கப்பட்டது. போக்குவரத்து வசதிகள் மருத்துவ வசதிகள் இல்லாத நிலையில் இவ்வைத்தியசாலை அமைக்கப்பட்டது. அது கூட 2006 ஜனவரி மாதத்தில் விஷமிகளால் சேதமாக்கப்பட்டது. புங்குடுதீவில் பிறந்த பலர் வெளியூர்களுக்கு சென்று படித்து வைத்தியர்களாகியிருக்கிறார்கள். புங்குடுதீவு ஊரைதீவில் 1875ஆம் ஆண்டு பிறந்த அருணாசலம் சின்னையா பிரபலமான மிருக வைத்தியர். இலங்கையில் பல்கலைக் கழகம் இல்லாத காலத்தில் இவர் இலங்கை அரசால் வழங்கப்பட்ட புலமைப்பரிசின் மூலம் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டு மிருக வைத்தியம் படித்தார். இவரது மகன் சின்னையா சத்திய கீர்த்தியும் பிரபலமான மிருகவைத்தியர். இவர் கொள்ளுப்பிட்டி இலக்கம் 5, கிளிபெட் வீதியில் மிருக வைத்தியசாலை அமைத்து நீண்ட காலம் சேவையாற்றியவர். இவராலேயே "இலங்கை விலங்கு ஜீவகாருண்ய சபை" ஏற்படுத்தப்பட்டது. அருணாசலம் சின்னையாவின் பேரன் தான் புறொக்டர் ராஜேந்திரன் ஆவார். இவர் ஹட்டனில் புகழ்பெற்ற சட்டத்தரணியாவார்.

## வைத்தியர் வீரவாகு தம்பிராசா (தம்பையா)



வைத்தியத்திலும் சோதிடத்திலும் வல்லவரான இவர், கைநாடி பார்த்து நோயாளர்களின் நோய்களைக் கூறும் வல்லமை பெற்றிருந்தார். இதன் மூலம் இவர் தீவுப்பகுதியெங்கும் புகழ் பெற்றார். புங்குடுதீவில் மட்டுமன்றி காரைநகர், நெடுந்தீவு, அனலைதீவு, நயினாதீவு ஆகிய இடங்களிலும் இவரது சேவை இடம்பெற்றது.

1904ஆம் ஆண்டு வீரவாகு வள்ளியம்மை தம்பதியருக்கு மகனாகப் பிறந்த இவர், 60 ஆண்டுகளுக்கு மேலாக வைத்தியப் பணி செய்துள்ளார். ஏழு தலை முறைகளுக்கு மேலான வைத்திய சோதிடப் பரம்பரையில் வந்தவர். தனது மாமனாரும் பிரபல வைத்தியருமான இலட்சுமணபிள்ளை (சரவணையில் வாழ்ந்தவர்) அவர்களிடம் வைத்தியம் பயின்றவர். இலங்கை அரசின் சித்த ஆயுர்வேத வைத்தியசபையின் நேர்முகத் தேர்வுக்குத் தோற்றிச் சுதேச வைத்தியராக பதிவு பெற்றவர். ஆரம்பத்தில் தமது குருவான இலட்சுமணபிள்ளையுடன் தீவுப்பகுதியின் பல பாகங்களுக்கும் சென்று வைத்திய சேவைகளில் ஈடுபட்டார்.

1939ஆம் ஆண்டில் சிங்கப்பூர், மலேசியா நாடுகளுக்கு சென்ற இவர், சில வருட காலம் அந்நாடுகளில் தங்கியிருந்து வைத்திய சோதிட சேவை புரிந்தார். மலாய் மொழியில் வைத்திய சோதிட விடயங்களை கூறும் ஆற்றலும் பெற்றிருந்தார். வட இலங்கை சித்த ஆயுர்வேத வைத்திய சங்கத்தின் உறுப்பினராகவும் விளங்கினார். சித்தர்களால் அருளப்பட்ட ஏட்டுச்சுவடிகளை கற்றதன் பேறாக நோய்களின் குணங்குறிகளையும் அவற்றுக்கான பரிகார முறைகளையும் பாட்டின் மூலமே எடுத்துக் கூறும் திறமை இவரிடம் காணப்பட்டது. வாக்குச் சித்தியும் வைத்தியச் சித்தியும் பெற்ற இவர், ஆங்கில வைத்தியம் பயின்றோரால் கைவிடப்பட்ட பல நோயாளர்களைக்கூட குணமாக்கியிருக்கிறார்.

சிவபாக்கியத்தை மணந்த இவர், புங்குடுதீவின் பிரபல எழுத்தாளர்களான நாவேந்தன், த. துரைசிங்கம், த. சிவானந்தன். வி.ரி இளங்கோவன். வி. ரி. தமிழ்மாறன் மற்றும் பராசக்தி , ஞானசக்தி ஆகியோரின் தந்தையாராவார். வைத்தியர் வீரவாகு தம்பிராசா அவர்கள் 01.03.1986 ஆம் ஆண்டு 82ஆவது வயதில் காலமானார். இவரது மகன் த.சிவானந்தனும் சிறந்த ஆயுர்வேத வைத்தியராவார்.

**வைத்தியர்**

## சி. கணபதிப்பிள்ளை (சின்னத்தம்பர்)



சிவபூசை, சைவசித்தாந்த சிந்தனைகள், சித்தவைத்தியம் என்ற மூன்று தளங்களிலும் தனது கவனத்தைப்பதித்து வாழ்ந்தார் வைத்தியர் சி.கணபதிப்பிள்ளை அவர்கள். தமிழ்மொழியிலும் சமஸ்கிருதத்திலும் புலமை மிக்க இவர் தமிழ் திருமுறைகளாலும் வடமொழிச் சுலோகங்களாலும் தனது சிவபூசையை ஒவ்வொரு நாளும் நியமமாகக் கைக்கொண்டவர்.

யாழ்ப்பாணத்தில் பிரபலமான பரம்பரைச் சித்த வைத்திய நிபுணர் கஸ்தூரியாரிடத்திலும் தூத்துக்குடி மரபுநிலை வைத்தியசிகாமணி சிகண்டியாரிடத்திலும் வைத்தியம் படித்த இவர், புங்குடுதீவில் அரசினர் மருத்துவமனை வருவதற்கு முன்பே மக்களின் நோய் தீர்த்த பெருமைக்குரியவர்.

மலேசியாவுடன் சிங்கப்பூர் இணைந்திருந்த காலப்பகுதியில் அங்கு வாழ்ந்த இவருடைய மைத்துனர் பசுபதியின் அழைப்பை ஏற்று சிங்கப்பூரில் ஏழு ஆண்டுகள் சீனர், மலாயர், தமிழர் என்னும் அனைத்து இனத்தவர்களுக்கும் வைத்தியசேவை ஆற்றியவர். அங்கு வாழ்ந்த போது கைநாடி பிடித்து வருத்தத்தை அறிவதோடு ஒருவருடைய வாய்மணத்திலிருந்தும் நோயைக்கண்டுபிடிக்கும் ஆற்றல் இவருக்கு இருந்தமையை பாராட்டி சீனமருத்துவ அமைப்பு ஒன்று பொற்பதக்கம் சூட்டியதாக அங்கு வாழ்ந்த எங்கள் ஊரவர்களான தற்பரானந்தம், முத்தையா, பொன்னுத்துரை, ரிஜிஸ்ரார் பொன்னையா அருணாசலம், நாதன், வே.க. சோமசுந்தரம், அம்பலவாணர், அருளையா, மலாயன் கபே-கதிரவேலு, சிங்கப்பூர் -வேலாயுதர், நவாப்மணியம், துரையப்பர் முதலியோர் ஊருக்கு வரும்போது சொல்லியிருக்கிறார்கள்.

வைத்தியர் சி.க.வின் சைவசித்தாந்தப்புலமை பல இந்திய ஆதீனங்களாலும் அறிஞர்களாலும் கௌரவிக்கப்பட்டதாகும். இவர் தனது வீட்டிலேயே மாலை நேரங்களில் சைவசித்தாந்தத்தை மாணவர்களுக்கு இலவசமாகவே கற்பித்தவர். நயினாதீவு, நெடுந்தீவு, வேலணை, ஊர்காவற்றுறை, வட்டுக்கோட்டை, யாழ்ப்பாணம் முதலிய இடங்களிலிருந்து பிராமணர்களும், பிரமுகர்களும் வந்து இந்த வகுப்பில் கலந்து கொள்வார்கள். இவர் புராணங்களுக்கு பயன்சொல்லும் புராணிகராகவும் திகழ்ந்தவர். நல்லூர் சடையம்மா மடத்திலும் திருக்கேதீஸ்வரம் திருவாசகமடத்திலும் இவருடைய புராண உரைகள் இடம்பெற்றன. 1950ஆம் ஆண்டில் இலங்கையின் முதலாவது சமஸ்கிருதப் பாடசாலையை பெருங்காடு சிவன்கோயில் மேற்குவீதியில் தோற்றுவித்த கல்வித்தந்தை வ.பசுபதிப்பிள்ளை, வைத்தியர் சி.க.வை அங்கு சைவசித்தாந்தம் படிப்பிக்க ஒழுங்குசெய்தார்.

வைத்தியர் இந்தியாவுக்கு யாத்திரை செய்தவர். மலேசியா சிங்கப்பூர் சைவசித்தாந்த அரங்குகளிலும் கருத்துரை வழங்கியவர். இத்தோடு இந்தியாவிலுள்ள திருக்கோவிலூர் என்னும் இடத்தில் 1958ஆம் ஆண்டு நடந்த சிவாச்சாரியார்களுடைய அர்ச்சகர் மகாநாட்டில் பிரதிஷ்டா பூஷணம் ஐ. கைலாசநாதக்குருக்கள், திருகோணமலை பூரணானந்தக்குருக்கள் ஆகியோருடன் இலங்கைப் பிரதிநிதியாகக் கலந்துகொண்டவர்.

இவருடைய சித்தாந்தப் புலமையையும் சிவபூசைக்கிரமங்களையும் பாராட்டி காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீன சந்நிதானம் சிவத்திரு ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் நிர்வாண தீட்சையளித்து ஈசானசிவன் என்னும் தீட்சாநாமத்தையும் சூட்டினார். சுவாமிகளுடைய பணிப்பின்பேரில் வைத்தியர் குறிகாட்டுவான் பகுதியில் உயிர்பிரிந்த பின் உடலோடு சமாதி வைக்கப்பட்டுள்ளார். அமரர் க. சிவராமலிங்கமும் புலவர் ஈழத்துச் சிவானந்தனும் வைத்தியரின் புதல்வர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## வைத்தியர் தம்பிப்பிள்ளை



மருத்துவராகவும், கிராமசபை அங்கத்தவராகவும், கிராம அபிவிருத்திச் சங்கச் செயலாளராகவும் மக்களால் அறியப்பட்டவர் வைத்தியர் தம்பிப்பிள்ளை. இவர் உண்மையில் ஒரு சகலகலா வல்லவர்.

புலவர் ஈழத்துச் சிவானந்தன் அவர்களுடைய தந்தையாரைக் குருவாகக் கொண்டு முறையாக மருத்துவம் கற்று இலங்கை அரசின் சான்றிதழையும் பெற்று வைத்தியத் துறையில் ஈடுபட்டார். சாதாரண வேர்க்கொம்புச் சூரணம் தொடக்கம் தங்க பஸ்பம் வரை சகல விதமான மருந்துகளும் இவர் வீட்டிலிருக்கும். அவற்றைத் தயாரிப்பதில் பெரும்பங்கு மனைவியைச் சாரும். வைத்தியர் வீட்டிலில்லாதபோது அவசரமாக வருகின்ற நோயாளிகளுக்கு மருந்துகளைக் கொடுத்தனுப்புமளவுக்கு தாயாரும் மருத்துவத்தில் பரிச்சயமாயிருந்தார்.

இவரிடம் பழமையான ஏடுகள், நூல்கள், பண்டங்கள் பலவிருந்தன. சித்த ஆயுர்வேத வைத்தியம், சோதிடம், ஆன்மீகம், மாந்திரீகம், விஞ்ஞானம், பொறியியல் என்று பலவிதமான விடயங்களிலும் அவர் கவனம் இருந்திருந்தது என்பதை அத்தடயங்கள் காட்டி நின்றன. நிறைய வாசிக்கும் பழக்கமுள்ளவர். கல்கி, கலைமகள், குமுதம், ஆனந்த விகடன், கலைக்கதிர் போன்ற இந்தியச் சஞ்சிகைகளுடன் இலங்கைத் தினசரிகளான வீரகேசரி, தினகரன், ஈழநாடு என்று பலவற்றையும் அவர் வாங்கிப் படிப்பார். புங்குடுதீவின் சந்தையடியில் இருந்த பரநிருபசிங்கம் நியூஸ் ஏஜன்ட் கடையிலிருந்து அந்தக் காலத்தில் இச்சஞ்சிகைகளும் தினசரிகளும் இவரது வீடு தேடிவரும்.

ஆன்மீகம், சோதிடம், மருத்துவம் போன்ற பல விடயங்களையும் உள்ளடக்கிய உரையாடல்களில் அவர் நண்பர்களுடன் சல்லாபித்துக் கொண்டு இருப்பார். பல பிராமணப் பெருமக்களும் கல்விமான்களும் வருவார்கள். காயத்திரி மந்திரம் தொடக்கம் பஞ்ச பட்சி தந்திரம் வரை இவருக்கு அத்துப்படி. கிராமத்தில் வாழ்ந்தாலும் "சீமைப்" பழக்கங்களில் அவர் வெகு பிரியர்.

புங்குடுதீவில் முதன் முதலாகக் கட்டிய இரட்டை மாடி வீடு இவருடையது என்கிறார்கள். 1940 களிலேயே "ஒஸ்டின் 8" காரொன்றும், "றெட் இன்டியன்" மோட்டார் சைக்கிள் ஒன்றும் இவர் வீட்டில் நிற்கும். வீட்டிலேயே கிராமபோன் பெட்டியில் "வதனமே சந்திர பிம்பமே" பாட்டுக் கேட்க வசதி செய்து தந்தவர்.

அரசியலிலும் அவர் ஒரு முக்கிய பிரமுகராகவே இருந்தவர். தமிழரசுக் கட்சியின் ஆதரவாளர். புங்குடுதீவுக் கிராம சபையில் 6ஆம் வட்டாரத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தினார். ஊர்காவற்றுறையில் அரச அதிபரது பணிப்பின் கீழ் இயங்கிய கிராம அபிவிருத்திச் சபையில் பணியாற்றியபோது 5ஆம் 6ஆம் வட்டாரங்களில் தூர்ந்துபோன குளங்களைப் புனரமைப்பதிலும், கழுதைப்பிட்டித் துறைமுகத்தில் நயினாதீவுப் பயணிகளது சிரமங்களைப் போக்கும் விதமாகத் துறைமுகமொன்றை அமைப்பதிலும் முன்னின்றவர். தீவு முழுவதுக்குமான நன்னீராக்கும் திட்டத்தில் தீவைச் சுற்றி அணைகட்டி நீரைத் தேக்கிவைக்கும் திட்டத்திலும் அவரது பங்கு அளப்பரியது.

அப்போது கிராமசபையின் உத்தியோகபூர்வ வைத்தியராகப் பணிபுரிந்த இவர், சபையோடு ஒவ்வாத காரணத்தால் பிரிந்துபோய்த் தனியார் மருத்துவ மனை ஒன்றை நிறுவினார். "கைராசிக்காரர்"என்ற பெயரை கரம்பன், வேலணை, நாரந்தனை என்று பல இடங்களிலிருந்தும் வருகின்ற நோயாளிகளிடமிருந்து பெற்றுக் கொண்டார்.

ஆன்மீகத்தில் அதிக ஈடுபாடு இருந்தாலும் அடிக்கடி கோவிலுக்குப் போகும் பழக்கம் அவருக்கு இருந்ததில்லை. நோய்வாய்ப்பட்டிருந்த காலத்திற்கூட அவருக்கு அருகில் பிராமணப் பெருமக்கள் இருந்தார்களேயொழிய கடவுளை மட்டும் வருந்தி அழைக்கவில்லை.

"இறுதிக் கடனாக என் பெயரில் ஏழை எளியதுகளுக்குச் சாப்பாடு போடுங்கள். கோவில் குளமென்று எதுவும் கொடுக்க வேண்டாம். பிராமணர்களுக்கு நான் கொடுக்கவேண்டியதைக் கொடுத்து விட்டேன்" என்பதே அவரது இறுதி வாக்கியங்கள்.

## டாக்டர் வி. கே. குணரத்தினசிங்கம்

தீவகத்தின் மூத்த சைவ வைத்திய மரபிலே மிக்க தகைமைகளும் செயல்முறைச் சிறப்பும் பெற்று கொழும்பு ஆயுர்வேத வைத்தியக் கல்லூரியில் கற்று Diploma in Inoigenous Medicine and Surgery எனும் பட்டம் பெற்று வைத்திய கலாநிதியானார். கல்விகற்கும் காலத்தில் விரிவுரையாளர்கள், பேராசிரியர்கள், சகமாணவர்கள் முதலியோரின் நன்மதிப்பைப் பெற்றிருந்தார். முதலிலே தமது சொந்த இருப்பிடமாகிய புங்குடுதீவிலே கிராமசபை மூலம் இலவச வைத்தியசாலை தொடங்கி உழைத்தார். பின் வேலணை, முல்லைத்தீவு முதலிய இடங்களிலே கடமையாற்றி அரச சேவையிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும் ஏழைகளுக்கு இலவச மருத்துவசேவை புரிந்துவந்தார்.

இவர் கஷ்டப்பட்ட மக்களுக்கு உதவி செய்யப் பின்னிற்கமாட்டார். சமஸ்கிருத சம்கிதை எனும் பழைய இந்திய மருத்துவ நூல் குறிப்பிடும் மருத்துவருக்குரிய தகைமைகள் இயல்புகள் பல இவரிடத்துக் காணப்பட்டன. தமர் பிறர் எனப் பேதம் பாராட்டாது தம்மிடம் வந்த நோயாளிகள் அனைவருக்கும் தக்க சிகிச்சை அளித்துப் புகழ் பெற்றவர்.

இவரிடத்து முன்னோரின் மருத்துவ அறிவும் நிறுவன ரீதியிலான நவீன ஆங்கில மருத்துவ அறிவும் ஒருங்கே சங்கமித்திருந்தன. பாரம்பரிய வைதீக சைவத் தமிழ் மரபிலே தோன்றிய இவருக்குத் தமிழ், சோதிடம், சைவ சித்தாந்தம், இதிகாச புராணங்களிலும் தக்க தேர்ச்சி இருந்தது.

இவருடைய பாட்டனாராகிய விதானை சந்திரசேகரம் வினாசித்தம்பி, ஆசிரியராகவும் வைத்திய சோதிடராகவும் ஆறுமுகநாவலரின் நேரடி சிஷ்ய மரபைச் சேர்ந்த பிரபல சைவத் திருமுறை புராண உரை காரராகவும் விளங்கியவர்.

இலங்கை அரசால் 1951 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட இலவச சத்துணவுத் திட்டம் (பால் சபை) மூலம் புங்குடுதீவு 4ஆம் வட்டாரத்தில் சத்துணவுக் குறைபாடுடைய பிள்ளைகளுக்குப் பால் உணவு விநியோகிக்க ஏற்பாடு செய்து அதனை செயல்படுத்தி நன்கு சேவையாற்றியவர். கொழும்பு - புங்குடுதீவு நலன்புரிச் சங்க உறுப்பினராகவும், இலங்கை ஆயுர்வேத வைத்திய சங்க உறுப்பினராகவும், இலங்கை மூலிகை மருத்துவ ஆராய்ச்சிச் சபையின் ஆலோசகராகவும், புங்குடுதீவு இந்து இளைஞர் சங்கம், இலங்கை இந்து மாமன்றம், இலங்கை இந்து விஷ்வ பரிசத் சங்கம் முதலியவற்றின் பணிகளில் ஈடுபட்டு சிறப்பான சேவையாற்றியவர்.

சமூக சேவையிலும் மிக்க கவனம் செலுத்தி வந்த இவர், இறுபிட்டி சனசமூக நிலையத்தினை உருவாக்குவதிலும் அதற்கு அரசாங்க உதவி பெற்றுக் கொடுத்து வளர்ப்பதிலும் பெரிதும் ஈடுபட்டு வந்தார். இறுபிட்டி அமெரிக்கன் மிஷன் பாடசாலை வளர்ச்சியிலும் பெற்றோர் ஆசிரிய சங்க ஆலோசகராக இருந்து செயல்பட்டு வந்தார். கிராமிய கைத்தொழில் அமைச்சின் உதவியுடன் பால் உற்பத்தித் தொழிற்சாலை, நெசவுத் தொழிற்சாலை என்பவற்றைக் கிராமிய மட்டத்தில் உருவாக்கிச் செயற்படுத்தியவர்.

புங்குடுதீவு மேற்கு இறுபிட்டி மூத்த நயினார்புலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் ஆலயம், பெருங்காடு கிராஞ்சியம்பதி கந்தசுவாமி கோவில் பரிபாலன சபைகளில் அரைநூற்றாண்டுக்கு மேலாக நிர்வாகசபை உறுப்பினராகப் பணிபுரிந்தவர். இவற்றின் புனருத்தாரணத் திருப்பணி வேலைகளிலும் சிறப்பாகச் செயற்பட்டவர்.

புங்குடுதீவில் முன்னே தோன்றிய ஆலயங்களின் வளர்ச்சியிலும் பங்குபற்றிய இவர் புங்குடுதீவுக் கோவில்களை இலங்கை இந்து கலாசார அமைச்சில் பதிவு செய்து அரசின் உதவி கிடைப்பதற்கும் வழி அமைத்துக் கொடுத்தவர்.

## டொக்டர் எஸ். கணேஸ்



இவரிடம் வைத்தியம் பெறாத எவருமே புங்குடுதீவில் இல்லை எனலாம். புங்குடுதீவின் 12 வட்டாரங்களுக்கும் ஓடித் திரிந்து சேவை செய்தவர். ஆரம்பத்தில் அம்மா கடைச் சந்தியில் கிளினிக் வைத்திருந்த அவர், பின்பு போக்கத்தையடியில் பெரிய கிளினிக்கை கட்டினார். அங்குபலர் தங்கியிருந்து சிகிச்சை பெற்றனர். போர்ச்சூழலின் பின்புகூட இப்பொழுதும் அவர் புங்குடுதீவில் சேவை செய்கின்றார்.

இவர் வே. சின்னத்தம்பி சின்னம்மா தம்பதிகளுக்கு மூத்த மகனாக 22.9.1931இல் புங்குடுதீவு கிழக்கில் பிறந்தவர்.

ஆரம்பக்கல்வியை புங்குடுதீவு ஸ்ரீ சண்முகநாதன் வித்தியாலயத்திலும் உயர்கல்வியைத் திருகோணமலை இந்துக்கல்லூரியிலும் பயின்றவர். 1951இல் தமிழ் எஸ். எஸ். சி. பரீட்சையிலும் சித்திபெற்றார். பின்பு கும்பகோணத்தில் நடைபெற்ற வைத்திய பயிற்சியில் கலந்து கொண்டு பரீட்சையில் சித்தி பெற்றார். அதன்பின்பு இலங்கை வைத்தியக்கல்லூரியிலும் பயின்று L.A.M.P. என்னும் பட்டத்தைப் பெற்று பதிவு செய்யப்பட்ட மருத்துவரானார். 1958முதல் இன்றுவரை புங்குடுதீவு மக்களுக்கு மருத்துவசேவை செய்து வருகிறார்.

1960 -1964 காலப்பகுதியில் புங்குடுதீவின் கிராமசபையில் 9 ஆம் வட்டார உறுப்பினராகத் தெரிவு செய்யப்பட்டார். 1964 ஆம் ஆண்டு தொடக்கம் 10 ஆண்டுகள் புங்குடுதீவு மத்தி - கிழக்கு கிராம முன்னேற்றச் சங்கங்களின் தலைவராக தெரிவுசெய்யப்பட்டுச் சேவையாற்றினார். இவரது சேவைக்காக 1974 ஆம் ஆண்டு யாழ். மாவட்ட சமாதான நீதிவான் பட்டம் வழங்கப்பட்டது. இதே ஆண்டு கிராமோதய சபைத்தலைவராகவும் பின்பு பிரதேச சபை உறுப்பினராகவும் தெரிவு செய்யப்பட்டு சேவையாற்றினார். 1980 -1991 காலத்தில் இணக்க சபைத்தலைவராக இருந்து சேவையாற்றி பல வழக்குகளை சமாதானமாக தீர்த்தார்.டாக்டர் எஸ். கணேஸ் பொதுச் சேவைகள் பலவற்றிலும் ஈடுபட்டார். மலசலகூடம் அமைத்துக் கொடுத்தல், பொதுக்கிணறு கட்டிக் கொடுத்தல், ஒழுங்கைகளை விஸ்தரித்தல், கிணறுகளைச் சீர் செய்தல், வாசிகசாலைகள் திறத்தல், கோழிப்பண்ணை அமைக்க உதவுதல், விலங்குகளுக்கு தடுப்பூசி போடுதல், பயிர்ச்செய்கைகளுக்கு வங்கிமூலம் கடனுதவி பெற வழி செய்தல், விதவைப் பெண்களுக்கு சமூக சேவைப் பகுதியிலிருந்து உதவிகள் பெற்றுக்கொடுத்தல், புற்றுநோய், காசநோய் நோயாளர்களுக்கு அரசாங்க உதவிப் பணம் பெற்றுக்கொடுத்தல் போன்றவை இவர் செய்த சேவைகளில் சிலவாகும்.

டாக்டர் கணேஸ் புங்குடுதீவு இளைஞர்களுக்கு பலவகையிலும் உதவி செய்துள்ளார். 1960ஆம் ஆண்டு "புங்குடுதீவு ஈஸ்ரன் விளையாட்டுக்கழகம்" என்ற அமைப்பை ஏற்படுத்தி பல வீரர்களை அறிமுகப்படுத்தினார். இலக்கியப் படைப்புகளை வாசிப்பதில் ஆர்வமுள்ள இவர், ஓய்வு நேரங்களில் மருத்துவத்துறையில் பல ஆய்வுகளை மேற்கொண்டார்.புங்குடுதீவில் பிறந்த ஒருவருக்கு டாக்டர் கணேஸை தெரியாமல் இருக்க முடியாது.

## வைத்திய கலாநிதி ஆ. பேரின்பநாதன்.



புங்குதீவில் பிறந்த சமூக சேவையாளர்களில் இவர் முக்கியமானவர். சமய சேவையுடன் வைத்திய சேவையை ஒரு சமூக சேவையாகவே செய்தவர். தனிநாயக முதலி பரம்பரையில் வந்த இவர், புங்குடுதீவின் வரலாற்றை அறிந்தவர்களில் முக்கியமானவர். பல தேடல்களைச் செய்து வருபவர்.

1944ஆம் ஆண்டு புங்குடுதீவு கிழக்கில் பிறந்த ஆ. பேரின்பநாதன், ஸ்ரீ கணேச வித்தியாசாலையில் ஆரம்பக்கல்வியையும் யாழ்ப்பாணக்கல்லூரியில் உயர்கல்வியையும் கற்றார். மருத்துவப் பட்டங்களை அடுத்து முதுமாணிப் பட்டத்தைப் பெற்ற இவர், உள்ளகப் பயிற்சியை களுபோவில வைத்தியசாலையில் பெற்றார்.

1970ஆம் ஆண்டு பருத்தித்துறை (மந்திகை) ஆதார வைத்தியசாலையில் வைத்திய நலன்பேண் அதிகாரியாக முதல்நியமனம் பெற்றார். அங்கொட முல்லேரியா வைத்தியசாலையில் மனநலம் நரம்புநோய் சத்திரசிகிச்சை பற்றிய விசேட பயிற்சி பெற்றார். பேரின்பநாதன் மந்திகை ஆஸ்பத்திரியில் ஒரு பிள்ளையார் கோயிலையும் யாழ்ப்பாண வைத்தியசாலையில் சரஸ்வதி ஆலயத்தையும் கட்டுவித்தார். "சுகவாழ்வு" என்னும் நூலை எழுதி வெளியிட்டார். பல வைத்தியக்கட்டுரைகளை பத்திரிகையில் எழுதி வெளியிட்டார். மந்திகை வைத்தியசாலையில் பணியாற்றிய போது பல அபிவிருத்திப் பணிகளைச் செய்தார்.

1982 ஆம் ஆண்டு பரிபாலகராக பதவி உயர்வு பெற்று ஊர்காவற்றுறை வைத்தியசாலைக்கு இடமாற்றம் பெற்றார். இந்தியப்படையின் அடிபாடு, விமானத்தாக்குதல்கள் போன்றவற்றில் காயமடைந்தவர்களுக்கு சிகிச்சை செய்தார். இடம்பெயர்ந்தவர்களுக்கு உதவி செய்தார். தான் பிறந்த புங்குடுதீவு மக்களின் நலன் கருதி "அமிர்தம் கிளினிக்" ஒய்வு நேர வைத்தியசாலையை நடத்தினார். 1985ஆம் ஆண்டு குமுதினிப்படகில் காயமடைந்தவர்களுக்கு சிகிச்சை செய்து பலரைக் காப்பாற்றினார். புங்குடுதீவுப் பாடசாலைகளில் மாணவர்களுக்கு முதலுதவிப்பயிற்சியளித்து தாக்குதல்களில் இருந்து எப்படித் தற்பாதுகாத்துக் கொள்ளலாம் என்று பயிற்சி கொடுத்தார்.

2004 ஆம் ஆண்டு தொடக்கம் தனது மருத்துவ மனையின் கிளைகளை அல்லைப்பிட்டியிலும் மண்டைதீவிலும் நிறுவி பொதுமக்களுக்கு வைத்தியசேவை செய்தார். புங்குடுதீவுப்பாடசாலைகள் யாழ்ப்பாணத்தில் இயங்கியபோது அவற்றின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டார்.

இவர் செய்த சமயப்பணிகளில் முக்கியமானது அடியார்களின் உதவியுடன் ஒருகோடி ரூபாவுக்கு மேல் செலவு செய்து பாணாவிடை சிவன்கோவிலை புனர்நிர்மாணம் செய்து கும்பாபிஷேகம் செய்ததாகும். சித்திரத் தேர் செய்து வெள்ளோட்டம் விட்டார். திருவிழாக்காலங்களில் இயங்கும் வகையில் திருநாவுக்கரசு தண்ணீர்ப்பந்தலை செயற்படுத்தினார். தீவக அரிமாச்சங்கம், செஞ்சிலுவைச்சங்க உறுப்பினராக இருந்து பல மருத்துவ முகாம்களை நடத்தி வந்துள்ளார். பாணாவிடை சிவன்கோவிலில் திருநாவுக்கரசர் அன்னதான மடம் கட்டுவதற்கு முக்கியமானவராக இருந்தார்.

தனது தாயாரின் நினைவாக 1985முதல் பெருங்காட்டு சிவன் கோவில் திருவிழாவின் போது "அமிர்தம் தாகசாந்தி நிலைய"த்தை நடத்தி வருகிறார். 1948இல் மாணிக்கம் அப்பாவால் தொடங்கிய பாணாவிடை சிவன் கோயில் தேர்த் திருவிழாவை உறவினர்களின் உதவியுடன் இன்றுவரை செய்து வருகிறார். சமயக் கட்டுரைகளையும் சிவன் முருகன் பாமாலைகளையும் யாத்துள்ளார். பல கும்பாபிஷேக மலர்களைத் தொகுத்துள்ளார். தல்லையபற்று சனசமூக நிலையத்தின் செயலாளராக செயற்பட்டு நிரந்தரக் கட்டிடம், பாலர் பாடசாலை போன்றவை அமைப்புக்கு வழிவகுத்தார்.

புங்குடுதீவு அரசினர் மருத்துவமனை அபிவிருத்திச்சபையின் பொருளாளராக இருந்து கொண்டு அவ்வைத்தியசாலையின் மீள் அமைப்புக்கு பக்க பலமாக விளங்கினார். புங்குடுதீவில் மாட்டிறைச்சிக் கடை உருவாவதை தடுத்து நிறுத்தினார். பனை, தென்னை வள அபிவிருத்தி விவசாயம், மீன்பிடி, வீதிப்புனரமைப்பு என்பவை இவர் ஆர்வம் காட்டிய மற்றைய சமூக சேவைகளாகும்.

இலங்கைச் சரித்திரம் சம்பந்தமாக பல தேடல்களை செய்து வருகிறார். இராவணன் காலத்திலிருந்து இயக்கர் நாகர் காலம்வரை இலங்கை திராவிட நாடாகவே திகழ்ந்தது என்பதற்காக பல சான்று நூல்களை தேடிவைத்துள்ளார். தீவுப்பகுதியில் மட்டுமன்றி யாழ். மாவட்டம் முழுவதுமே புகைத்தல், மது அருந்தல், போதைப் பொருள் பாவனையைக் கட்டுப்படுத்தல் சம்பந்தமான தடுப்பு நிகழ்ச்சிகளை செய்து வருகிறார்.

## தாதியர்கள்

புங்குடுதீவு வைத்திய சாலையில் கடமை உணர்வு மிக்க பல தாதிமார்கள் கடமையாற்றினார்கள். வெளியூர் தாதிமார்களை விட உள்ளூர்த் தாதிமார்கள் பலர் சிறப்பாகப்பணியாற்றினர். ஆரம்பத்தில் புங்குடுதீவு 10ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த நல்லம்மா தாதியாக கடமையாற்றினார். நேர்ஸ் மனோன் நீண்டகாலமாக புங்குடுதீவு வைத்தியசாலையில் அர்ப்பணிப்புடன் கடமையாற்றியவர். "நேர்ஸ் முத்தம்மா" என்று அழைக்கப்படும் திருமதி முத்தம்மா சண்முகநாதனும் அர்ப்பணிப்புடன் சேவையாற்றியவர். நேர்ஸ் தங்கைச்சியம்மாவும் நோயாளிகளை அன்புடன் கவனித்துக் கடமையாற்றியவர். 10ஆம் வட்டாரத்தில் தனியார் மருத்துவமனையை நடத்திய டாக்டர் ரத்தினமும் அவர் மனைவி மாசிலாவும் வைத்திய சேவை செய்தனர்.

புங்குடுதீவில் பிறந்த பலர் இப்பொழுது வெளியூர்களிலும் வெளிநாடுகளிலும் வைத்தியர்களாக கடமையாற்றுகின்றனர். எங்களூரில் பிறந்த இளம் டாக்டர்கள் வைத்தியக் கல்லூரிகளிலும் கற்று வருகின்றனர்.

"சுவிஸ் புங்குடுதீவு ஒன்றியம்" புங்குடுதீவு வைத்தியசாலையை புனரமைப்பதற்காக 10 லட்சம் ரூபாவை கொழும்பு புங்குடுதீவு அபிவிருத்தி சங்கத்திடம் வழங்கியது. அச்சங்கம் அப்பணத்தை வைத்தியசாலை அமைப்புச் சபையின் உறுப்பினர் கு. வீரசுப்பிரமணியத்திடம் வழங்கியது. அப்பணம் புங்குடுதீவு அரசினர் மருத்துவமனை அபிவிருத்திச் சபையிடம் வழங்கப்பட்டது. இச்சபையின் பிரதான போஷகராக பி. கனகலிங்கம் விளங்கினார்.

வைத்தியர் ஆர். தேவேந்திரனும் பேராசிரியர். கா. குகபாலனும் போஷகர்களாக நியமிக்கப்பட்டனர். தலைவராக சு. கருணாகரனும் செயலாளராக வைத்தியர் இ. ராசையாவும் பொருளாளராக வைத்தியகலாநிதி ஆ. பேரின்பநாதனும் செயற்பட்டு வைத்தியசாலை புனரமைப்புக்கு அரும்பாடுபட்டனர்.. அதன் செயற்பாட்டுக்கு பேருதவிபுரிந்தனர். புங்குடுதீவு அரசினர் வைத்தியசாலையில் முக்கியமான கட்டிடங்கள் புனரமைக்கப்பட்டு விட்டன. நோயாளர் வார்ட்டுகள், வெளி நோயாளர் பிரிவு, வைத்தியர் விடுதி, தண்ணீர் தாங்கி என்பன புனரமைக்கப்பட்டுவிட்டன.

1991 ஆம் ஆண்டு சீரழிந்து போன புங்குடுதீவு அரசினர் வைத்திய சாலையில் 17.10.2005 முதல் வெளிநோயாளர் பிரிவுமட்டும் இயங்கத் தொடங்கியது. ஒருவைத்தியரும் இரண்டு தாதிமாரும் பணியாற்றத் தொடங்கினர். வைத்தியசாலையின் மற்றைய கட்டிடங்கள் புனரமைக்கப்பட்டு வருகின்றன.




புங்குடுதீவு பிரதான தபாலகம்



புங்குடுதீவு அரசினர் மாவட்ட வைத்தியசாலை

# 18

# புங்குடுதீவின் தொலைத்தொடர்புகள்



தபாலதிபர் ஆறுமுகம்

பண்ணைப் பாலம் அமைப்பதற்கு முன் புங்குடுதீவில் தொலைத் தொடர்பு வசதிகள் குறைவாகவே இருந்தன. ஒரு சிறு தபாலகம் மட்டுமே இருந்தது. அப்பொழுது பெருங்காட்டில் புரட்டஸ்தாந்து ஆலயம் அமைந்திருக்கும் இடத்திலேயே அந்த தபாலகம் அமைந்திருந்தது. அதன் பின்பு 1940ஆம் ஆண்டளவில் தற்போது இருக்கும் இடத்துக்கு மாற்றப்பட்டது. இந்த இடத்துக்கு முன்புறம் தபால் அதிபர் வீடு இருந்தது. அவர்தான் ஆறுமுகம். அவர் முதலில் தனது வீட்டையே தபாலகமாக பயன்படுத்தினார். அப்பொழுது இத்தபாலகத்தில் தபால் சேவை மட்டுமன்றி ஓய்வூதியம், விதவை அநாதைப்பணம் போன்றவையும் வழங்கப்பட்டன. புங்குடுதீவு போன்ற கடலின் மத்தியில் இருக்கும் ஒரு ஊருக்கு தொலைபேசிச் சேவை முக்கியமானதாகும். புங்குடுதீவு தபாலகத்தில் ஆரம்பத்தில் தொலைபேசிச் சேவை வசதி இருக்கவில்லை. பலரின் முயற்சியின் பின் 1946ஆம் ஆண்டு முதன்முதலில் புங்குடுதீவுத் தபாலகத்துக்கு தொலைபேசிச் சேவை கிடைத்தது.

புங்குடுதீவில் புகழ்பெற்ற சரவணமுத்து உடையாரின் மகன் தான் இராசேந்திர விதானையார். புங்குடுதீவு மேற்குப் பக்கத்துக்கு இராசேந்திர விதானையாரும் கிழக்குப் பக்கத்துக்கு சின்னத்துரை விதானையாரும் பொறுப்பாக இருந்தனர். இவர்களின் சிபார்சின் பேரிலேயே புங்குடுதீவுக்கான தபாலதிபரும் தபாற்காரர்களும் நியமிக்கப்பட்டனர். ஆரம்பத்தில் ஆறுமுகம் தபாலதிபராக நியமிக்கப்பட்டார். புங்குடுதீவு கிழக்குற்கு ஆறுமுகமும், மேற்கிக்கு குணரெத்தினமும் தபாற்காரர்களாக நியமிக்கப்பட்டனர்.

ஒரு தபாலகத்துக்கு தொலைபேசி வசதி கிடைக்க வேண்டுமானால் அதன் தரம் உயர்ந்திருக்க வேண்டும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது. அத் தபாலகத்தில் முத்திரை போன்றவற்றின் விற்பனையும் அதிகரிக்கவேண்டும். அவ்வாறு ஒரு தபாலகத்தில் அதிக பணம் கொடுக்கல் வாங்கல் செய்யப்பட்டிருந்தால் மட்டுமே அத் தபாலகத்தின் தரத்தை உயர்த்துவார்கள். புங்குடுதீவுத் தபாலகத்தின் விற்பனைப் புள்ளிவிபரங்களை அதிகரித்துக் காட்டுவதற்காகவே ஆயிரக்கணக்கான ரூபாய்க்கு முத்திரைகளை விற்றுக் கொடுத்தும் கிராமத்துக்கு வெளியே இருந்து நூற்றுக்கணக்கான காசுக்கட்டளைகள் மூலம் பணத்தை அனுப்பச் சொல்லியும் சின்னவாணர் (சண்முகம் அம்பலவாணர்) செய்த பணிகள் மூலம் எமது புங்குடுதீவின் தபாலகம் தரம் உயர்ந்தது. புங்குடுதீவுக்கும் கொழும்புக்கும் இடையே தொலைபேசிச்சேவை ஆரம்பமான தினத்தன்று நடந்த சம்பவம் முக்கியமானது. அன்றைய வைபவத்தில் தபால்மாஅதிபர் கொழும்பிலிருந்து தொலைபேசியை இயக்க புங்குடுதீவிலிருந்து

பெரியவாணர் (க.அம்பலவாணர்) ஹலோ என்று பேசி முதலாவது தகவலைப் பெற்றுத் தொலைபேசிச் சேவையை ஆரம்பித்து வைத்தார்.

புங்குடுதீவில் 1953ஆம் ஆண்டுக்குப்பின்பே தபால் சேவை சிறப்புறத் தொடங்கியது, ஆரம்பத்தில் பிரதான அஞ்சலகத்தில் ஒரு தபால் அதிபரும் இரண்டு தபால் சேவகர்களும் வேலை செய்தனர். காலப்போக்கில் ஒரு பெரிய தபாலகமும் 5 உப தபாலகங்களும் உருவாகின. பெரிய அஞ்சலகம் புங்குடுதீவு அஞ்சலகம் என்ற பெயரில் சந்தையடியில் அமைக்கப்பட்டது.

1950 ஆம் ஆண்டளவில் தீவுப்பகுதியில் ஊர்காவற்றுறை தபாலகமே பிரதான தபாலகமாக விளங்கியது. ஊர்காவற்றுறைக்கு வரும் கடிதங்கள் அங்கிருந்து சுருவில் துறைக்கு வரும். அங்கிருந்து தோணிமூலம் மடத்துவெளித்துறைக்கு வரும். மடத்துவெளித்துறைக்கு வரும். கடிதச்சாக்கை "றண்ணர்" என்பவர் புங்குடுதீவுத் தபாலகத்துக்கு எடுத்து வருவார். அங்கு வரும் கடிதங்களைப் பிரித்து புங்குடுதீவு மக்களுக்கு தபாற்காரர்கள் கொடுப்பார்கள். அப்பொழுது புங்குடுதீவு தபாலகத்தில் ஒரு தபாலதிபரும் இரண்டு தபாற்காரர்களும் இரண்டு றண்ணர்களும் இருந்தனர். 1967ஆம் ஆண்டளவில் 7 தபாற்காரர்களும் இரண்டு தந்திக்காரர்களும் கடமையாற்றினர்.

முதலாவது தபாலகம் பெருங்காட்டில் (தற்பொழுது தபாலகம் அமைந்திருக்கும் இடத்துக்கு எதிரில்) ஆரம்பிக்கப்பட்டது. முதலாவது தபாலதிபர் ஆறுமுகத்தைக் தொடர்ந்து சேனாதிராசா தபாலதிபராக நியமிக்கப்பட்டார். தற்போது தபாலகம் இருக்கும் காணி இவருக்கே சொந்தமானது. இவரை அடுத்து தங்கவேலு தபாலதிபராக நியமிக்கப்பட்டார். அடுத்து ஒரு வெளியூர்க்காரர் இருந்தார். அடுத்து ஐ.வி. பொன்னுத்துரை தபாலதிபராக நியமனம் பெற்றார். இவருக்கு பின்பு தற்காலிக தபாலதிபர்களே சேவை செய்து கொண்டு வந்தனர். தபால் ஊழியர்கள் இரண்டில் இருந்து அதிகமாக கடைசியில் ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஒவ்வொருவராக 12 தபால் ஊழியர்கள் கடமையாற்றினர்.

புங்குடுதீவில் முதலில் வல்லன் உபதபால் நிலையம் உருவாக்கப்பட்டது. இவ் உபதபால் நிலையம் உருவாவதற்கு பலர் முன்னின்று உழைத்தனர். அவர்களில் ஐயாத்துரை ஆசிரியர், சோ.க. ஐயம்பிள்ளை, வித்துவான் சி. ஆறுமுகம், க.பொன்னம்பலம் ஆகியோர் முக்கியமானவர்கள். அதன்பின் இறுபிட்டி, ஊரைதீவு, குறிகாட்டுவான், தட்டையன்புலம் என்பன திறக்கப்பட்டன. 1960ஆம் ஆண்டு திறக்கப்பட்ட குறிகாட்டுவான் உபதபால் நிலையத்துக்கு சீவரெத்தினம் முதலாவது தபாலதிபராக நியமனம் பெற்றார். குறிகாட்டுவான் தபாலகத்துக்கு சீவரத்தினத்தின் மரணத்தின்பின் அவரது மனைவி உபதபாலதிபராக கடமையாற்றினார். வல்லனுக்கு தம்புசுப்பிரமணியமும், ஊரைதீவுக்கு சுப்பிரமணியமும், இறுபிட்டிக்கு நாகரெத்தினமும் உபதபாலதிபர்களாக நியமிக்கப்பட்டனர்.

தட்டையன் புலம் உபதபால் நிலையம் உருவாகுவதில் பி. கதிரவேலு, மா.க. வைத்தியநாதன், சு. கருணாகரன், மு. தளையசிங்கம் ஆகியோர் முன்னின்று உழைத்தனர். 1972 ஆம் ஆண்டு

ஆரம்பிக்கப்பட்ட தட்டையன்புலம் உபதபால் நிலையத்துக்கு நாகேசு தர்மலிங்கம் முதலாவது தபாலதிபராக நியமனம் பெற்றார்.

1960 - 70 ஆம் ஆண்டு காலகட்டத்தில் வெளியூர்களிலிருந்து புங்குடுதீவு தபாலகத்துக்கு ஒரு நாளைக்கு 150க்கு மேற்பட்ட காசுக்கட்டளைகள் வந்து கொண்டிருந்தன. "மணியோடர் பொருளாதாரத்தில் புங்குடுதீவின் தபாலகங்களின் பங்களிப்புப் பணிகள் மிகப் பெரியதாகும்.

முதலில் வல்லன் உபதபாற் கந்தோர் திறக்கப்பட்டது. சுப்பிரமணியம் முதலாவது உபதபால் அதிபராக நியமிக்கப்பட்டார். அதன்பின்பு இராசையா நீண்டகாலம் உபதபால் அதிபராக கடமையாற்றினார். அங்கு தந்தி கொடுக்கும் ஊழியராக நகுலன் கடமையாற்றினார். ஊரைதீவு உபதபாலகம் 1950ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. அங்கு ஆரம்பம் முதல் நீண்டகாலமாக சுப்பிரமணியம் உபதபாலதிபராக கடமையாற்றினார்.

அதே காலப் பகுதியிலேயே இறுபிட்டி உபதபாலகமும் உருவாக்கப்பட்டது. அதன்பின்பு குறிகாட்டுவான் உபதபால் நிலையம் உருவாக்கப்பட்டது.

பிரதான தபாலகத்துக்கும் வல்லன் உபதபாலகத்துக்கும் இடையில் தொலைபேசித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. அதன்பின்பு தபாலகத்துக்கும் ஆஸ்பத்திரிக்கும் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. பின்பு மகாவித்தியாலயத்துக்கும் தொலைபேசித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது, பின்பு கூட்டுறவு கடை, சில பாடசாலைகள் என்று தொலைபேசித் தொடர்புகள் அதிகரித்தன. புங்குடுதீவில் பிறந்த பலர் வெளியூர்களிலும் தபாலதிபர்களாக கடைமையாற்றியிருக்கிறார்கள்.

ஆரம்பகாலத்தில் புங்குடுதீவின் பொருளாதாரம் "மணியோடர்" பொருளாதாரமாகவே அமைந்திருந்தது. அதனால் தபால்காரர்களின் சேவை பிரதானமாக விளங்கியது. கடிதங்கள் மட்டுமன்றி கொழும்பிலிருந்து வரும் பார்சல்களையும் இந்த தபாலகங்களே கொடுத்தன. பண்டிகைக் காலங்களில் வெளியூர்களில் இருந்து வரும், முக்கியமாக கொழும்பிலிருந்து வரும் பார்சல்கள் அதிகமாகும். கொழும்பிலும் பிற ஊர்களிலும் தொழில் செய்யும் ஆண்கள் தங்கள் குடும்பத்தினருக்கு பண்டிகைக்கால புத்தாடைகளை இந்தத் தபாலகங்கள் மூலமே அனுப்பினர்.

திரு. ஐ.வி. பொன்னுத்துரை நீண்டகாலம் புங்குடுதீவில் தபாலதிபராக கடமையாற்றியவர். புங்குடுதீவு 8ஆம் வட்டாரத்தில் மடத்துவெளியில் பிறந்தவர். புங்குடுதீவில் 1946ஆம் ஆண்டு 5ஆம் வகுப்பு புலமைப்பரிசில் பரீட்சையில் சித்திபெற்று முதன் முதலில் வேலணை மகாவித்தியாலயத்துக்கு சென்று படித்தவர் இவரே.

ஆரம்பத்தில் திருநாவுக்கரசு வித்தியாலயத்தில் ஆங்கில ஆசிரியராக நியமனம் பெற்றார். 1967முதல் 1969வரையும் மீண்டும் 1976முதல் 1979வரையும் புங்குடுதீவு தபாலகத்தில் தபாலதிபராக கடமையாற்றியிருக்கிறார்.

புங்குடுதீவின் தபால் சேவை வளர்ச்சியில் இவரது பங்களிப்பு அதிகமாவே இருக்கிறது. 1991ஆம் ஆண்டு இடப்பெயர்வின் பின் எல்லாமே சீரழிந்தன.

1995ஆம் ஆண்டின் பின் பிரதான தபாலகம் மட்டும் படிப்படியாக இயங்கத் தொடங்கியது. மக்கள் அதிகம் இல்லாமையால் சேவைகள் குறைவாகவே இடம்பெற்றன. பின்பு உபதபால் அலுவலகங்களும் படிப்படியாகத் தமது சேவைகளை ஆரம்பித்தன.

இப்பொழுது ஆலடிச் சந்திக்கு அருகாமையில் தனியார் தொலைபேசி நிலையம் ஒன்று இயங்குகிறது. அதன்பின்பு பெருங்காட்டிலும் தனியார் தொலைபேசி நிலையமொன்று இயங்கத் தொடங்கியது. அவற்றின் மூலம் புங்குடுதீவிலிருந்து வெளிநாடுகளுக்கும் தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளலாம்.

# 19

# புங்குடுதீவின் கலைஞர்கள்

புங்குடுதீவில் பல கலைஞர்கள் பிறந்திருக்கிறார்கள். சிறந்த நாட்டுக்கூத்துக் கலைஞர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். சில இசைக் கலைஞர்கள் சிறந்து விளங்கினார்கள். கர்நாடக இசை, பண்ணிசை, நாதஸ்வரஇசை, நாட்டார்பாடல் என்று பல்வேறு இசைத்துறையிலும் பல கலைஞர்கள் புகழ்பெற்று விளங்கினர். புங்குடுதீவில் ஓர் இசைப்பாரம்பரியம் நிலவிவந்துள்ளது. சைவத்திருமுறைகளைப் பண்ணுடன் பாடக்கூடிய கலைஞர்கள் 19ஆம் நூற்றாண்டு தொடக்கமே வாழ்ந்து வந்துள்ளனர். கந்தபுராண படனம் பண்ணிசை என்பன வளர்ச்சியடைந்தன. கோயில்களில் தேவாரம் பாடுவதில் சிறந்த கலைஞர்கள் இன்றும் வாழ்கிறார்கள்.

க.வினாசித்தம்பி, நா.தில்லையம்பலம், போன்ற ஆசிரியர்கள் பாடுவதிலும், பயிற்சியளிப்பதிலும் சிறந்து விளங்கினர். இவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் போன்றவற்றிலிருந்து பயிற்சி பெற்றுத் திரும்பினர். புங்குடுதீவில் இசையை வளர்த்தவர்களில் சங்கீத பூஷணங்களான தா.இராசலிங்கம், தா.பாலசுந்தரம் போன்ற ஆசிரியர்கள் முக்கியமானவர்கள். தா. பாலசுந்தரம் ஆசிரியர் நெடுந்தீவிலும் நீண்டகாலம் இசையாசிரியராக கடமையாற்றியவர். சங்கீத பூஷணம் தா. இராசலிங்கம் புங்குடுதீவில் இசைப்பணி செய்தவர். கனகசுந்தரம் என்ற ஆசிரியர் வாய்ப்பாட்டிலும் வீணை வாசிப்பதிலும் சிறந்து விளங்கினார்.

புங்குடுதீவு மாணவர்களிடையே சங்கீதக் கலை உயர்ந்து விளங்கியது. அதற்கு மகாவித்தியாலயத்தில் கற்பித்த சங்கீதபூஷணம் க. தாமோதரம்பிள்ளையும் ஒரு காரணகர்த்தாவாவார். வை. குமாரசாமி வாத்தியாரும் தனது இனிய குரலால் தேவார திருமுறைகளைப் பண்ணோடு பாடுவார். சந்திரபாலன் ஆசிரியரும் சிறந்த இசையாசிரியர். விமலாதேவி, ராஜேஸ்வரி போன்ற இசை ஆசிரியர்களும் புங்குடுதீவைச் சேர்ந்தவர்களே. நடராசா போன்ற வயலின் கலைஞரும், திருப்பூங்குடி ஆறுமுகம் போன்ற வில்லிசைக் கலைஞர்களும் புங்குடுதீவின் இசைப்பாரம்பரியத்தை வளர்த்தவர்களில் முக்கியமானவர்கள். தபேலா வாசிப்பதில் தம்பிஜயா சிறந்து விளங்கினார். வயலின் வாசிப்பதில் ஆசிரியை மஞ்சுளா திருநாவுக்கரசு புகழ் பெற்றவர்.

கர்நாடக இசையில் யாழ்ப்பாணத்தில் பிரபலமானவர்களில் புத்துவாட்டி சின்னத்தம்பியின் மனைவி பொன்னு அவர்களும் பிரபலமானவர். புகழ்பெற்ற நாதஸ்வர, தவில் வித்துவான்களான என்.ஆர்.கோவிந்தசாமி, என்.ஆர். சின்னராசா ஆகியோரின் தாயார் புங்குடுதீவைச் சேர்ந்தவர்.சங்கீதத்தை முறையாக கற்காமல் இனிமையான குரல் வளத்தால் உயர்ந்தவர்கள் பலரும் இங்கு இருந்தனர். இவர்கள் தேவாரம், திருவாசகம் போன்றவற்றைப் பாடுவதில் சிறந்து விளங்கினர். பிரபல நாட்டிய நர்த்தகி வாசுகி விக்னேஸ்வரன் மற்றும் அவரது சகோதரர் ரூபவாஹினி விஸ்வநாதன் ஆகியோரின் தந்தையார் சண்முகம்பிள்ளை பிரபல மிருதங்க வித்துவானாவார். சண்முகம்பிள்ளையின் தாயார் புங்குடுதீவைச் சேர்ந்தவர்.

சங்கீத பூஷணம் பொன்.சுந்தரலிங்கம் கர்நாடக இசையில் வல்லவர். அவர் தம்பி பொன். சுபாஷ்சந்திரன் மெல்லிசையில் வல்லவர். இவர்கள் இருவரினதும் கர்நாடகப் பாடல்களும், மெல்லிசைப் பாடல்களும் பல இசைத்தட்டுகளாக வெளிவந்திருக்கின்றன.புங்குடுதீவின் இசை வளர்ச்சியில் லிங்கம் சகோதரர்களுக்கும் பங்குண்டு. சங்கீத பூஷணங்களான சண்முகலிங்கம் மாஸ்டரும் கனகலிங்கம் மாஸ்டரும் "லிங்கம் சகோதரர்கள்" என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் பாடசாலைகளிலும் தனிப்பட்ட முறையிலும் இசைவளர்ச்சியில் பெரும்பங்காற்றினர்.

மண்டைதீவில் பிறந்த கனகலிங்கம் புங்குடுதீவில் திருமணம் செய்தார். இவரும் இவரது தம்பியும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இசைப்பட்டம் பெற்றனர். புங்குடுதீவுப் பாடசாலையில் கற்பித்தனர். இவர்கள் 'லிங்கம் சகோதரர்கள் இசைக்குழு' என்று ஒன்றை அமைத்து இசை வளர்த்தனர். நொட்டி நடராசா என்பவர் சங்கீத ஆசிரியராக புங்குடுதீவுப் பாடசாலைகளில் கடமையாற்றினார். இவர் வயலின் வாசிப்பதிலும் கெட்டிக்காரர். பரஞ்சோதி ரதிரூபன் கனடாவில் சிறந்த மிருதங்க வித்துவானாக விளங்குகிறார். கிருபானந்தவேல் அருண் இளம் மிருதங்க வித்துவானாக லண்டனில் வளர்ந்து வருகிறார். எழுச்சிப் பாடல்கள் பாடி புகழ்பெற்ற எஸ். ஜி. சாந்தன் (செல்லப்பா குணரெத்தினம் சாந்தன்) புங்குடுதீவு கிழக்கைப் பிறப்பிடமாகக் கொண்டவர்.

## சங்கீத பூஷணம் தா. இராசலிங்கம்

புங்குடுதீவில் பிறந்த இசைக்கலைஞர்களில் சங்கீத பூஷணம் தா. இராசலிங்கம் முக்கியமானவர். அக்காலத்திலேயே அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்றவர். இவர் இசையுலகில் தனக்கென தனியான இடத்தைப் பெறுகிறார். இலங்கையில் வாழ்ந்த காலத்தில் நீண்டகாலம் ஆசிரியராகப் பணியாற்றியவர். வாய்ப்பாட்டில் மட்டுமன்றி இசைவிழாக்கள், மாணவர் இசைப் போட்டிகள், மற்றும் ஊடக இசைக்கலை போன்றவற்றுக்கு புத்துயிர்ப்பு வழங்கி வளர்த்த இசையறிஞர். கனடாவில் இன்றுங்கூட மாணவர் பரம்பரை ஒன்றினை உருவாக்கும் பணியில் ஈடுபட்டு வருகிறார்.



மேடைநிகழ்ச்சிகளில் பங்குபற்றி மற்றவர்களுக்கு ஒரு உந்து சக்தியாக விளங்குகிறார். கனடா ஸ்காபரோவில் இவர் வசிக்கும் இல்லம் ஒரு இசைக் கூடமாகவே விளங்குகிறது. கர்நாடக சங்கீதம் தொடர்பான பலநூல்களையும் இவர் எழுதி வெளியிட்டுள்ளார். இவரது தமையனாரான தா. பாலசுந்தரமும் புகழ் பெற்ற இசையாசிரியராவார். தா. இராசலிங்கத்தின் புதல்வரான வாசுதேவன் திறமைமிக்க மிருதங்க வித்துவானாவர். வயதில் இளையவரானாலும் மிருதங்கக் கலையில் புகழ்பெற்று விளங்குகிறார்.

கச்சேரிகள், நாட்டிய அரங்கேற்றங்கள் போன்ற அனைத்திலும் கடந்த பல ஆண்டுகளாக தனது திறமையை மிருதங்க வாசிப்பில் நிலை நாட்டி வருகிறார். பரம்பரையான சங்கீத ஞானமும் தந்தையாரிடம் கற்றுக்கொண்ட பயிற்சி முறைகளும் வாசுதேவனை மிருதங்கத்தின் பக்கம் திசை திருப்பியது. இளவயதில் யாழ்ப்பாணத்தில் ஏ. எஸ். இராமநாதன் அவர்களிடம் முறையாக மிருதங்கம் கற்றவர். சென்னையில் பூவலூர் - ஸ்ரீநிவாசா, நெய்வேலி - வெங்கடேஷ், மாடிப்பாக்கம் - சுரேஷ் ஆகியோரிடமும் பயிற்சி பெற்றவர்.

1987 இல் கனடாவுக்கு வந்த வாசுதேவன், "மிருதங்க சேஷத்திரம்" என்ற பெயரில் பாடசாலையை அமைத்தார். இங்கு மிருதங்கத்துடன் இவர் வேறு இசைக்கருவிகளையும் கற்பித்து வருகிறார். ஐந்நூறுக்கு மேற்பட்ட மேடை நிகழ்ச்சிகளிலும் நூற்றுக்கு மேற்பட்ட நடன அரங்கேற்றங்களிலும் மிருதங்கம் வாசித்துள்ளார். சங்கீத பூஷணம் பொன். சுந்தரலிங்கம், புல்லாங்குழல் - பிரபஞ்சன் சேதுராமன், மண்டலின் - ராஜு, வீணை - லக்சுமிரங்கநாதன், தவில் மேதை - கணேசபிள்ளை, நாதஸ்வரம் - கலாநிதி என். கே. பத்மநாதன் போன்ற புகழ்பெற்ற இசைக் கலைஞர்களுடன் சேர்ந்து மிருதங்கம் வாசித்திருக்கிறார்.

பல்வேறு பரிசுகள் பெற்ற இரா. வாசுதேவனுக்கு கன்டாவின் தமிழர்தகவல் விருதும் கிடைத்திருக்கிறது. சங்கீத பூஷணம் தா. இராசலிங்கத்தின் சகோதரர் தா. பாலசுந்தரமும் கனடாவில் வாழ்ந்து கொண்டு இசை பணி செய்கின்றார். இவர்களது குடும்பமே ஒரு இசைக் குடும்பம் என்றால் அதில் தவறு எதுவும் இல்லை.

## இன்னிசைவேந்தர் பொன். சுந்தரலிங்கம்

புங்குடுதீவைப் பிறப்பிடமாகக் கொண்ட பொன். சுந்தரலிங்கம், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சங்கீத பூஷணம் பட்டம் பெற்றவர். ரி.கே.ரங்காச்சாரி, சிதம்பரம் சிவசுப்பிரமணிய பிள்ளை, வேணுகோபால ஐயர் போன்றோரிடம் இசை பயின்றவர். 35 ஆண்டுகால இசை அனுபவத்தில் இன்று அருகிவரும் சம்பிரதாய ராக வெளிப்பாடுகளில் மதுரை சோமசுந்தரம், மகாராஜபுரம் சந்தானம் போன்றவர்களை நினைவுபடுத்தும் ஓர் உன்னத கலைஞராக திகழ்கிறார்.



இலங்கை வானொலியினதும் இலங்கை தொலைக்காட்சி சேவையினதும் அதிஉயர் தர கலைஞரான இவர், சிங்கப்பூர், மலேசியா, இந்தோனேசியா, ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா, கனடா, அவுஸ்திரேலியா என்று பல நாடுகளிலும் பிரபல்யத்தைப் பெற்றிருக்கிறார். பண்ணிசை பாடுவதிலும் சிறந்தவரான இவரின் பன்னிரு திருமுறைப் பாடல்கள் 15 ஒலிப்பேழைகளாக வெளிவந்திருக்கின்றன. வலங்கைமான் சண்முகசுந்தரம், முனிரத்தினம் ஆகியோருடனும் என்.ஆர். சின்னராசா, எஸ்.கணேசபிள்ளை போன்ற ஈழத்து தவில் மேதைகளின் ஏழு தவில்களுடன் யாழ்ப்பாணத்து இசைவிழா ஒன்றில் இவர் பாடிய "இராகம் தாளம் பல்லவி" நிகழ்ச்சி மிகுந்த புகழ் பெற்றது.

சிங்கப்பூரில் "இன்னிசைவேந்தர்" சிட்னியில் "சுருதி லய மாமணி" ஜெர்மனியில் "தமிழிசைச் செல்வர்" என்பன இவர் பெற்ற கௌரவ பட்டங்களில் சில. அருமையான ஓர் இசைக்கலைஞர் என்பதற்குப் புறம்பாக இளம் கலைஞர் மன்றம் என்ற அமைப்பை உருவாக்கி இளைய தலைமுறையினரையும் இணைத்து கர்நாடக இசை வளர்ச்சியில் இலங்கையில் இவர் ஏற்படுத்திய தாக்கம் மகத்தானது. இவரால் நிர்மாணிக்கப்பட்ட இளம் கலைஞர் மன்ற மண்டபமே இன்று யாழ்ப்பாணத்தின் ஒரே கலா மண்டபமாக மிளிர்கிறது. பொன். சுந்தரலிங்கம் இப்பொழுது கனடாவில் வசித்து வருகிறார்.

சங்கீத பூஷணம்

## பொன். சுபாஷ்சந்திரன்



சங்கீத குடும்பத்தைச் சேர்ந்த சங்கீத பூஷணம் பொன். சுபாஷ்சந்திரன், இசைத்துறையிலே ஈடுபடுவதற்கு அவரது சகோதரன் சங்கீதபூஷணம் பொன். சுந்தரலிங்கம் தான் மூலகாரணமாகத் திகழ்ந்தார்.முதலில் யாழ். வேலணை இந்துக்கல்லூரியில் சங்கீத ஆசிரியராகக் கடமையாற்றியவர். 1979ஆம் ஆண்டு காலகட்டத்தில் இலங்கை வானொலிக்குத் தனது பங்களிப்புகளை வழங்கத்தொடங்கினார். இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபன நிகழ்ச்சித் தயாரிப்பாளராகத் திகழ்ந்து பல மெல்லிசைப்பாடல்களை உருவாக்கினார். ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம், ரூபவாஹினிக் கூட்டுத்தாபனம் ஆகியவற்றில் "ஏ" பிரிவில் கர்நாடக இசைபாடியவர்.

மெல்லிசைப் பாடல்களை பாடியவர் என்ற பெருமையும் இவருக்குரியதாகும். இக்கால கட்டத்தில் இலங்கையின் பல பாகங்களிலும், நடாத்திய மேடை இசைக்கச்சேரிகள், நிகழ்ச்சிகள் இவருக்குப் பெரும் புகழை ஈட்டிக் கொடுத்திருக்கின்றன. சுபாஷ்சந்திரன் பாடிய பல மெல்லிசைப்பாடல்கள் புகழ் பெற்றுத் திகழ்கின்றன. இன்றும் இலங்கை வானொலியில் ஒலிபரப்பாகி வருகின்றன. 1987ஆம் ஆண்டில் நோர்வே வந்து சேர்ந்தார். நோர்வே, சுவீடன் போன்ற நாடுகளில் இடம்பெற்ற சர்வதேச நிகழ்ச்சிகளில் கர்நாடக இசையில் அமைந்த இலங்கைப்பாடல்களை பாடி நாட்டிற்கும் இலங்கைக் கலைஞர்களுக்கும் பெருமை சேர்த்து வந்தார். புங்குடுதீவில் பல ஓவியர்களும் வாழ்ந்தார்கள். புங்குடுதீவில் பிறந்த சோமசுந்தரம் அவர்களும் அவரது புதல்வர்களும் வரைந்த ஓவியங்கள் பல புங்குடுதீவின் கோவில்கள் சிலவற்றில் காணப்படுகின்றன. அரிய நாயகன் புலம் வீரகத்தி விநாயகர் கோவில், பெரியபுலம் ஸ்ரீ வீரகத்தி விநாயகர் கோவில் ஆகியவற்றில் இவர்களது ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. வெளிநாட்டுக் கோவில்களிலும் இவர்களது ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த ரத்தினம் சகோதரர்கள் இசைக்கச்சேரி நடத்துவதில் வல்லவர்கள். இவர்கள் ஓவியம் வரைவதிலும் கெட்டிக்காரர்கள். தெங்கந்திடல் வீரகத்தி விநாயகர் ஆலயத்தின் வசந்த மண்டப திரைச்சீலையை இவர்களது ஓவியமே அழகு செய்கிறது.

பல்கலைக்கலைஞர்

## அம்புறோஸ் பீட்டர்



புங்குடுதீவு 10 ஆம் வட்டாரத்தில் பிறந்த அம்புறோஸ் பீட்டர், கொழும்பில் பிரபலமானவர். பயிற்றப்பட்ட மறை ஆசிரியரான இவர், ஒரு சிறந்த நடிகர். இவர் இயற்றிய பாடல்கள் ஒலிப்பேழையாக வந்திருக்கின்றன. சிறந்த நாட்டுக் கூத்துக் கலைஞர். சிறந்த எழுத்தாளர். "தாய்" என்ற சஞ்சிகையின் ஆசிரியர். உள் நாட்டிலும் வெளிநாட்டிலும் கலைபரப்பி வரும் கொழும்பு திருமறைக் கலாமன்றத்தின் இணைப்பாளர். கலாசுரபி கவின் கலைகள் பயிலக இயக்குநர். கொழும்பு கிறிஸ்தவ கலைஞர் ஒன்றியத்தின் தலைவர்.

கிறிஸ்தவ சமய எழுச்சி மன்றங்களுடன் நெருங்கிய தொடர்புடைய இவர், கிறிஸ்தவ பாடல்களை 25க்கு மேற்பட்ட ஒலி நாடாக்களாக வெளியிட்டுள்ளார். "இயேசு கானங்கள்" "திருப்பாடல்கள்" "திரு மணித்தியால திருவிழா வழிபாடு" என்பன முக்கியமானவை. தேசிய மறைக்கல்வி நிலையம் வழங்கிய "மறைச்சுடர்" என்ற விருது, தேசிய சமூகத் தொடர்பு நிலையம் வழங்கிய சமூக தொடர்பாடல் விருது ஆகியன இவருக்கு கிடைத்துள்ளன. கொழும்பு வாழ் புங்குடுதீவு கிறிஸ்தவர்களின் மத்தியில் எழுச்சியூட்டிய கலைஞர் அம்புறோஸ் பீட்டராவார்.

## சினிமாத்துறையில் புங்குடுதீவுப் புதல்வர்கள்



வி.சி. குகநாதன்

புங்குடுதீவுக் கிராமத்தில் பிறந்த பலர், பல்வேறு துறைகளிலும் சிறந்து விளங்குகிறார்கள். இயல், இசை, நாடகம் என்னும் துறைகளிலும் சிறந்து விளங்குகிறார்கள். நவீன கலையான சினிமாக்கலையிலும் சிறந்த பல கலைஞர்கள் புங்குடுதீவில் வாழ்ந்திருக்கிறார்கள்.

புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் பிறந்த விஸ்வலிங்கம் அவர்களுக்கு நான்கு ஆண்பிள்ளைகளும் ஒரு பெண்பிள்ளையும் பிறந்தனர். ஆண்களில் மூத்தவரின் பெயர் செல்லையா. அவர் ஆசிரியரானார். ஆசிரியர் செல்லையா சங்கானையில் மணம் முடித்து அங்குள்ள கிராமசபையின் தலைவராகவும் இருந்தார். இவரது மகன் தான் பிரபல தென்னிந்திய சினிமா இயக்குநர் வி.சி. குகநாதன். இந்த குகநாதன் புங்குடுதீவு தல்லமியில் பிறந்தவர். இவரது முழுப்பெயர் விஸ்வலிங்கம் செல்லையா குகநாதன் என்பதாகும்.

இலங்கையில் முதன் முதலாக தயாரிக்கப்பட்ட தமிழ்ப்படம் "சமுதாயம்" ஆகும். இத்திரைப் படத்துக்கான கதை வசனம் எழுதியவர் ஜீவா நாவுக்கரசன் என்ற எழுத்தாளராவார். இவர் "பூமாலை" என்ற கலை இலக்கியச் சஞ்சிகையை நீண்டகாலம் நடத்தியவர். இவர் புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிறந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. இலங்கையில் தயாரிக்கப்பட்ட முதலாவது வர்ணச் சிங்களப்படம் "ரன் முத்து தூவ" என்பதாகும். "தங்கத்தீவு" என்பது அதன் அர்த்தம். இத்திரைப்படத்தை ஒளிப்பதிவு செய்தவர் ஏ.வி.எம்.வாசகம் என்ற கலைஞராவார். "வாடைக்காற்று" என்ற தமிழ்த்திரைப்படத்தையும் இவரே ஒளிப்பதிவு செய்தார். இப்பொழுது கனடாவில் வாழும் இவர் புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தைச் சேர்ந்தவர்.

சி.சண்முகம் என்ற எழுத்தாளர் வானொலி நாடகங்கள் எழுதிப்புகழ் பெற்றார். இவர் எழுதிய பல கதைகள் சிங்களத் திரைப்படங்களாகவும் உருவாகியிருக்கின்றன. பிரபல வானொலி அறிவிப்பாளர் திருமதி ராஜேஸ்வரி சண்முகத்தின் கணவரான இவர் புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். இலங்கையின் புகழ்பெற்ற நாடகக்கலைஞர் எம். உதயகுமார். "கடமையின் எல்லை" "மஞ்சள் குங்குமம்" போன்ற இலங்கைத் தமிழ்ப் படங்களில் கதாநாயகனாக நடித்தவர். "மாமியார் வீடு" என்ற படத்தில் இந்திய நடிகை ஜெயாவுக்கு துணையாக நடித்தவர். கொழும்பு நகராட்சி மன்றத் தேர்தலில் போட்டி போட்டு கணிசமான வாக்குகளைப் பெற்றவர். இவர் புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் பிறந்தவர்.

இலங்கை வானொலியில் அறிவிப்பாளராக கடமையாற்றிக் கொண்டு பல தொலைக்காட்சி நாடகங்களில் நடித்தவர் தம்பிஜயா தேவதாஸ். இலங்கை சினிமா சம்பந்தமான பல புத்தகங்களை எழுதி வெளியிட்டவர். இவரும் புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் பிறந்தவர்.

இந்தியாவில் பல தமிழ்ப்படங்களை தயாரித்த சுந்தரம்பிள்ளை ஆனந்தசிவம் புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். இவரது தம்பியார் இந்தியப்படங்களை இங்கிலாந்துக்கு இறக்குமதி செய்து விநியோகம் செய்தவர். ஆனந்தசிவத்தின் மகன் ஒருவர் இப்போது ஹொலிவூட்டில் ஒளிப்பதிவுத்துறையில் பயிற்சி பெறுகிறார்.

உலகின் பல்வேறு பகுதிகளிலும் வாழும் புங்குடுதீவு இளைஞர்கள் தாங்கள் வாழும் நாடுகளில் சிறு சிறு வீடியோப்படங்களையும் தயாரித்திருக்கிறார்கள். இவர்களில் கனடாவில் வாழும் ஆசிரியர்கள் தனபாலன், தர்மபாலன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். ஈழத்துச் சிவானந்தன் கனடாவில் பல வீடியோ படங்களில் நடித்தவர். ஜேர்மனி - பூவரசு மூலம் இந்து மகேஷ் "கோடையில் வந்த மழை" என்ற பெயரில் குறும்படம் ஒன்று தயாரித்து 1995இல் சின்னத்திரையில் காண்பித்தார். புங்குடுதீவில் பிறந்த பலர் தென்னிந்திய தமிழ்ப்படங்களை தாங்கள் வாழும் நாடுகளில் இறக்குமதி செய்து வெளியிட்டிருக்கிறார்கள். புங்குடுதீவு மக்களில் சிலர் தாம் புலம் பெயர்ந்த நாடுகளில் திரைப்படங்களை இறக்குமதி செய்து தொழில் செய்தனர். கனடாவில் திரைப்படங்களை இறக்குமதி செய்ததில் சின்னத்துரை விதானையாரின் மகள் மங்கையும் அவரது சகோதரன் நவம், நவத்தின் மருமகன் தர்மரெத்தினம் உதயகுமாரும் முக்கியமானவர்கள்.



பி. ஆரூரன்

மனோன் சினி மூவீஸ் உரிமையாளர் பொன், ஆரூரன் பல படங்களை இலங்கைக்கு இறக்குமதி செய்து வெளியிட்டார். பல சிங்களப்படங்களைத் தயாரித்தார். "சந்துனி" "நாகன்யா" போன்ற சிங்களப் படங்கள் அவர் தயாரித்தவைகளில் முக்கியமானவை. "லீடர்" என்ற தலைபில் தமிழிலும் சிங்களத்திலும் அவர் படமொன்றை தயாரித்தார். இவர் புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். பிரபல வர்த்தகர் அமரர் கே. பொன்னம்பலம் அவர்களின் புதல்வர்.



தி. தில்லைவண்ணன்

கொழும்பு கொம்பனித் தெருவில் விக்டோறியா வர்த்தக நிலையம் புகழ்பெற்றது. அதன் உரிமையாளர் கலைகளிலும் சமயத்திலும் ஆர்வமுடைய எஸ். தில்லைநாதன் புங்குடுதீவில் பிறந்தவர். தில்லைநாதனின் மகன் தில்லைவண்ணன் நீண்டகாலம் கனடாவில் வாழ்ந்தவர். சினிமா ஆர்வம் காரணமாக இலங்கை வந்து இந்தியா இலங்கை கூட்டுத்தயாரிப்பாக "காதல் கடிதம்" என்னும் படத்தை தயாரித்து வருகிறார். இப்படத்துக்காக 2006ஆண்டு வெப்சைட் ஒன்றையும் ஆரம்பித்துள்ளார்.

இப்படத்துக்கான பாடல் காட்சிகள் இலங்கையில் ஒளிப்பதிவு செய்யப்பட்டன.

## கலைஞர்கள்

1900 ஆம் ஆண்டளவில் புங்குடுதீவுக் கலைஞர்கள் பலர் நாடகக்கலையில் ஈடுபாடு காட்டினர். யாழ்ப்பாணத்தின் கூத்துக் கொட்டகைகளில் நாடகம் நடித்த தென்னிந்திய சினிமா நட்சத்திரங்களையும் பாடகிகளையும் புங்குடுதீவுக்கு அழைத்து வந்து அறிமுகப்படுத்தினர். கே.பி. சுந்தராம்பாள் போன்ற பாடகிகளை பெருங்காட்டைச் சேர்ந்த முத்தையா புங்குடுதீவுக்கு அழைத்து வந்தார். தென்னிந்திய நடிகை ஒருவரை கிழக்கூரைச் சேர்ந்த மூக்குப்புரி முத்துக்குமார் புங்குடுதீவுக்கு அழைத்து வந்தார்.



திருப்பூங்குடி வி.வி. கே. ஆறுமுகத்தின் வி.வி.கே. வில்லிசைக்குழுவினர்

## திருப்பூங்குடி வீ.வீ. கே. ஆறுமுகம்



உயர்ந்த உருவம் உள்ளத்தைக்கவரும் வெண்மைநிறம். அதன்மீது வெண்ணீற்றுப்பூச்சு, நகைச்சுவைகலந்த பேச்சு, இனிமையான குரல்வளம் இவை அனைத்தையும் தன்னகத்தே கொண்டவர்தான் திருப்பூங்குடி வி. வி. கே. ஆறுமுகம் "திருப்பூங்குடி" என்ற பெயரை புங்குடுதீவுக்கு முதன்முதலில் சூட்டியவர் இவரே. வில்லிசையின் மூலம் புங்குடுதீவின் பெயரை உலகறியச் செய்தவர், இந்த திருப்புங்குடி ஆறுமுகம். யாழ்ப்பாண மாவட்டத்தில் வில்லிசையை வளர்த்த முன்னோடிகளில் இவர் முக்கியமானவர். புங்குடுதீவு 12ஆம் வட்டாரத்தில் பிறந்த இவர், அங்குள்ள கணேச மகாவித்தியாலயத்தில் நீண்டகாலம் ஆசிரியராக கடமையாற்றியவர். வில்லிசையும் கதாகாலேட்சபமும் இவருக்கு கைவந்த கலைகள். "வீ.வீ.கே. வில்லிசைக் குழு" என்ற பெயரில் வில்லிசைக் குழுவொன்றை நீண்டகாலம் நடத்தி வந்தார். இவர் வில்லிசை நடத்தாத கோவில்களே புங்குடுதீவில் இல்லை எனலாம். இலங்கையில் மட்டுமன்றி இவரது வில்லிசைக் கச்சேரிகள் சிங்கர்பூர், மலேசியா போன்ற வெளிநாடுகளிலும் நடைபெற்றன.

திருப்பூங்குடி வீ.வீ. கே. ஆறுமுகம், வில்லிசைத்துறையில் தன்னைப் போலவே பல சிஷ்யர்களையும் உருவாக்கினார். இவரது வில்லிசைக்குழுவில் துணைக்கலைஞர்களாகப் பங்குபற்றிய பலர், இவரது மறைவின்பின் தனித்தனி வில்லிசைக் குழுக்களை அமைத்துப் புகழ்பெற்றனர். அவர்களில் சின்னமணி கணபதிபிள்ளை முக்கியமானவர்.

## பாட்டுக்காரக் கனகர்



பாரிஸில் வாழும் "பாட்டுக்காரக் கனகர்" என்ற மயில்வாகனம் கனகரெத்தினம் புங்குடுதீவு 6ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். பாட்டுப்பாடிப் புகழ் பெற்றதால் பாட்டுக்காரக்கனகர் என்ற பெயரைப் பெற்றார்.

புங்குடுதீவில் பல நாடக மன்றங்களை ஏற்படுத்தி, நாடகக் குழுக்களை அறிமுகப்படுத்தியதில் முக்கிய பங்கு இவருக்கே கிடைக்கின்றது. கேள்வி ஞானத்தின் மூலம் இசை ஞானம் பெற்றவர். பிரபல இசையமைப்பாளர்களான கண்ணன் கோஷ்டி, புத்தூர் மார்க்கண்டு, யூனியன் செல்லத்துரை, வண்ணார்பண்ணை ராமசாமி ஆகியோரின் இசைக்குழுவிலும் பாடியிருக்கிறார். பாரிஸ் நகரில் தயாரான சில குறும்படங்களிலும் நடித்துள்ளார்.

## வானொலிக் கலைஞர்கள்

புங்குடுதீவைச் சேர்ந்த சி.க. நடராசா திருச்சிக்குச் சென்று சுருக்கெழுத்துக் கற்றார். அதனால் அவருக்கு இலங்கை வானொலியில் வேலைகிடைத்தது. அதனால் அவர் "ரேடியோ சிலோன் நடராசா" என்று அழைக்கப்பட்டார். கொழும்பில் புங்குடுதீவு மகாசபை அமைக்கப்பட்டபோது அதன் செயலாளராக கடமையாற்றினார். இவரும் இவரது மைத்தனரான அப்புக்குட்டி சோமசுந்தரமும் சேர்ந்து புங்குடுதீவில் சிலப்பதிகார விழா நடப்பதற்கு முன்னின்று உழைத்தனர்.

சக்தி எப். எம் வானொலிச் சேவையில் ஏ. கே. குணா சிறந்த அறிவிப்பாளராக பெயர் பெற்று வருகிறார். வெளிநாட்டு மேடைகளிலும் அறிவிப்புச் செய்து புகழ்பெற்று வருகின்றார்.

வெளிநாட்டு வானொலிகளிலும் புங்குடுதீவைச் சேர்ந்த கலைஞர்கள் பங்குபற்றி வருகின்றனர். லண்டன் கானக்குயில் நிகழ்ச்சியை ஆ. தில்லைநாதன் தன் மனைவி யோகா தில்லைநாதனுடன் சேர்ந்து நடத்தி வருகிறார். லண்டன் சன்றைஸ் வானொலியில் செல்லத்துரை மோகன் அறிவிப்பாளராக கலந்து கொள்கிறார். கனடாவில் கென்பிரபா சிறந்த மேடை அறிவிப்பாளராக விளங்குகிறார்.

மேலும் பல புங்குடுதீவு இளைஞர்கள் உலகின் பலபகுதிகளிலுமுள்ள வானொலி நிலையங்களிலும் தொலைக்காட்சி நிலையங்களிலும் புகழ்பெற்ற கலைஞர்களாக ஜொலிக்கின்றார்கள்.

# 20

# புங்குடுதீவின் எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும்

இலங்கையின் வடமாகாணத்தில் அமைந்துள்ள சப்ததீவுகளில் ஒன்றான புங்குடுதீவில் பிறந்த பலர் பல்வேறு துறைகளிலும் சிறந்து விளங்குகிறார்கள். அவ்வாறு சிறந்து விளங்கியவர்களில் எழுத்தாளர்களும் அடங்குவர்.

ஆரம்பகாலத்தில் தேவி அருள்பெற்ற ஒரு புலவர் புங்குடுதீவில் வாழ்ந்தார். அவர்தான் ஊரைதீவில் பிறந்த முத்துக்குமாரப்புலவர். இயற்கையாகவே கவிபாடும் ஆற்றல் பெற்றவராகையால் அவர் "வரகவி" என்று பெயர் பெற்றவர். புங்குடுதீவு கண்ணகை அம்பாளைப்பற்றிப் பாடியவர். பாடலின் இறுதிவரிகளில்

"கன்னலொடு செந்நெல் விளைய
பொன்னகை நகர் தன்னிலுறை
கண்ணகிப் பெண்ணரசியே" என வாழ்த்திப் பாடினார்.

திரு.ச.வினாசித்தம்பி திருமுறைகளுக்கும் கந்தபுராணத்துக்கும் உரை எழுதினார். திரு.நா.தில்லையம்பலம் ஆசிரியர் ஒரு சிறந்த சைவத்தமிழ் அறிஞர். திரு ச. ராசமணி, சேதுபதி ஆசிரியர், ச.சதாசிவக்குருக்கள், சீனிவாசக்குருக்கள் முதலியோர் சிறந்த சைவ அறிஞர்கள். பிரபலமான வைத்திய சோதிடர் சி.குருமூர்த்தி சாஸ்திரியார் 'அறிவானந்த ஞான குருதீபம்' என்னும் சைவசமய நூலை 1940இல் மலேசியாவில் வெளியிட்டார். புங்குடுதீவில் உள்ள சில கோவில்கள் பற்றியும் பதிகம் பாடியுள்ளார். புங்குடுதீவு பெருங்காட்டில் பிறந்த வித்துவான் பொன். கனகசபை தமிழிலும் சைவத்திலும் தேர்ச்சி பெற்ற எழுத்தாளர்.

வித்துவான் சி.ஆறுமுகம் நவீன உத்திகளோடு கவிதைகள் எழுதியவர். நல்லூர் முருகன் மேல் இவர் பாடிய "நல்லூரான் நாற்பது" என்னும் நூல் பலராலும் சிறப்பித்துக் கூறப்பட்டது. ஆசிரியர். சி. இ. சதாசிவம்பிள்ளை தமிழிலும் சைவத்திலும் பற்று மிக்கவர். 'கௌரியம்மை பிள்ளைத்தமிழ்' என்ற இவரது நூல் சிறப்புமிக்கது.

பண்டிதர் வி.வ. நல்லதம்பி கவிதைகள் கட்டுரைகள் எழுதி ஆக்க இலக்கியத்துக்கு பங்களிப்புச் செய்தவர். குழந்தைப் பாடல்கள் எழுதி புகழ் பெற்றவர். ஆசிரியமணி சி.க. நாகலிங்கம் எழுந்த மாத்திரத்தே கவிதை எழுதும் ஆற்றல் படைத்தவர். புங்குடுதீவில் பிறந்த பல எழுத்தாளர்களுக்கு சாகித்திய மண்டலப் பரிசுகள் கிடைத்துள்ளன.

## மூத்த எழுத்தாளர் நாவேந்தன்



புங்குடுதீவில் பிறந்த வி. ரி. திருநாவுக்கரசு, எழுதுவதற்காக தன்பெயரை "நாவேந்தன்" என்று மாற்றிக் கொண்டார். ஏழை எளிய மக்களின் பிரச்சினைகளை மையக்கருவாகக் கொண்டு சிறுகதைகள் படைத்தார். நான்கு தசாப்தங்களுக்கு மேலாக தனது எழுத்தாலும் பேச்சாலும் தமிழ்த் தேசியத்தின் வளர்ச்சிக்கு துணைநின்றவர். தனது 15ஆவது வயதில் "இந்துசாதனம்" மூலம் எழுத்துத் துறைக்குள் புகுந்தவர்.

ஆசிரியராக, அதிபராக, எழுத்தாளராக, மேடைப்பேச்சாளராக, அரசியல்வாதியாக, தொழிற்சங்கவாதியாக, பத்திரிகை ஆசிரியராக பன்முகத் தன்மையோடு இயங்கியவர். தமிழரசுக் கட்சியின் பிரசாரப் பீரங்கிகளில் ஒருவர். சிங்களச் ஸ்ரீ எதிர்ப்புப் போராட்டத்தில் பங்கு கொண்டு சிறை சென்றவர். "வாழ்வு" என்னும் நூலுக்கு சாகித்திய மண்டலப் பரிசு கிடைத்தது. யாழ். மாநகரசபையின் பிரதி மேயராகவும் சிலகாலம் கடமையாற்றினார்.

ஈழத்து அரசியல், இலக்கியவானில் ஐந்து தசாப்தங்களுக்கு மேலாக சுடர்விட்டுப் பிரகாசித்தவர். புங்குடுதீவில் பிறந்த எழுத்தாளர் என்ற வகையில் சாகித்திய மண்டலப் பரிசுபெற்ற முதல் எழுத்தாளர் நாவேந்தனேயாவார். "தெய்வமகன்" "வாழ்வு" என்பவை இவரது சிறுகதைத் தொகுதிகளாகும். இவர் அரசியல் கட்டுரைகளையும் எழுதியிருக்கிறார். "தலைவர் வன்னியசிங்கம்" "மாவட்ட அபிவிருத்தி சபைகளை பகிஷ்கரிப்பது ஏன்? என்பவை அவற்றில் சிலவாகும். "நான் ஒரு பிச்சைக்காரன்" "சிலப்பதிகார செந்நெறி" "மானவீரன் கும்பகர்ணன்" "மரியாள் மத்தேலேனா" "ஜோன் ஸ்கடர் நாடகம்" "ஜோன் ஸ்கடர் வரலாறு" "பெருநெருப்பு" என்பன அவற்றில் சில.புங்குடுதீவு பெற்ற புதல்வர்கள் பலர். பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் நடத்தியிருக்கின்றனர். அதில் முதலானவராக நாவேந்தனைக் கொள்ளலாம். "தமிழ்க்குரல்" "சங்கப்பலகை" "நாவேந்தன்" "நம்நாடு" (தினசரி) போன்ற பத்திரிகைகளை நடத்தியுள்ளார். அமரர் நாவேந்தனின் எழுத்துக்கள் உள்ளவரை அவரது நாமமும் நின்று நிலைக்கும். இவர் புங்குடுதீவின் வைத்தியர் வீரவாகு தம்பிராசாவின் மூத்தமகன் ஆவார்.

## கவிஞர் மு.பொன்னம்பலம்



இலங்கையின் புகழ்பெற்ற கவிஞரான மு.பொன்னம்பலம் 1939ஆம் ஆண்டு புங்குடுதீவில் பிறந்தவர். கவிஞர், விமர்சகர், நாவலாசிரியர், சிறுகதையாசிரியர், பத்திரிகையாசிரியர், என்று நீட்டிக்கொண்டே போகலாம். தனக்கு என ஒரு தத்துவத்தை வைத்து அதன் வழி இலக்கியம் படைத்தவர். தத்துவத்தளத்தில் இவரது முன்னோடி மு.தளையசிங்கம் ஆவார். மு.தளையசிங்கமும், மு.பொன்னம்பலமும் கூடப் பிறந்த சகோதரர்களாவர்.

மார்க்சியத்தை, இதுவரை வந்த தத்துவங்களில் சிறந்தது என்று ஏற்றுக்கொண்டாலும் மார்க்சியத்தின் போதாமை குறித்த தமது கருத்துகளை தொடர்ச்சியாக படைப்புகள் மூலமும் எழுத்துகள்

மூலமும் வழங்கி வருபவர். மு.பொன்னம்பலம் எழுதிய கவிதைகளின் முதலாவது தொகுப்பு "அது" என்ற தலைப்பில் 1968இல் வெளியாகியது. இவர் எழுதிய "விடுதலையும் புதிய எல்லைகளும்" என்ற நூல் 1986இல் வெளிவந்ததது. "யதார்த்தமும் ஆத்மார்த்தமும் என்ற கட்டுரைத் தொகுப்பு 1990இல் வெளியாகியது. மு.பொன்னம்பலம் எழுதிய முதலாவது சிறுகதைத் தொகுதி "கடலும் கரையும்" 1996இல் வெளிவந்தது. இவர் எழுதிய "காலி லீலை" என்ற கவிதைத் தொகுதி 1997இல் வெளியாகியது. கட்டற்ற காலத்தின் ரூபமான காளியின் சிறு அசைவும் ஆனந்த லீலையின் வெளிக்காட்டலே என்றவகையில் நூலின் தலைப்பு காலி லீலையாக அமைகிறது என்று விளக்கம் கூறுகிறார்.

"நோயில் இருத்தல்" என்னும் நாவல் 1999இல் சென்னையில் வெளியானது. இதற்கு சாகித்திய மண்டலப் பரிசு கிடைத்தது. மு.பொ. ஆஸ்பத்திரியில் இருந்த போது தனக்கு நேர்ந்த அனுபவங்களை இந்த நாவலில் வெளிப்படுத்துகிறார். இவர் எழுதிய "திறனாய்வு சார்ந்த சில பார்வைகள்" என்ற விமர்சன நூல் 2000 ஆம் ஆண்டு கொழும்பில் வெளியானது.

பல சிறுவர் பாடல்களை எழுதியுள்ள மு.பொன்னம்பலத்தின் முதலாவது சிறுவர் கவிதை நூல் "ஊஞ்சல் ஆடுவோம்" என்ற தலைப்பில் 2001இல் கொழும்பில் வெளியானது. இந்தப் படைப்புகளில் சில இரண்டாம் பதிப்பையும் கண்டன. இவற்றை விட, துயரி (நெடுங்கதை), வீடும் பல்லக்கும் (சிறுகதைத் தொகுப்பு), சங்கிலியன் கதை (நாவல்), விசாரம் (கட்டுரைகள்), புனிதநீர், யுகமொன்று மலரும் ( நாடகங்கள்) போன்ற நூல்களும் வெளிவர இருக்கின்றன. "சத்தியம்" என்ற சஞ்சிகையை வெளியிட்டவர்

"திசை" என்ற பத்திரிகையை நீண்ட நாட்களாக யாழ்ப்பாணத்தில் நடத்தியவர். இலங்கை இலக்கிய வரலாற்றில் பிரதான போக்கை பிரதிபலித்த முற்போக்கு எழுத்தாளர் சங்கத்துக்கு எதிர்முகாமில் இருந்தவர். தனிக்குரலாக இருந்தாலும் தனித்துவமான குரலாக ஒலித்துக் கொண்டிருப்பவர். மு.பொ. வின் கவிதைகள் எளிமையான மொழியில் அமைவன. அவை சராசரி மனிதனுக்கு அக்கறையான விடயங்களைப்பற்றி சராசரி மனிதனின் மொழியிலேயே பேசுகின்றன. தொடர்ந்து பல்வேறு படைப்புகளை வழங்கிவரும் மு.பொன்னம்பலத்திற்கு இரண்டு ஆண்பிள்ளைகளும் இரண்டு பெண்பிள்ளைகளும் இருக்கிறார்கள். இவர்களில் இருவர் மருத்துவபீட மாணவர்கள்.

### கவிஞர் சு.வில்வரெத்தினம்



இலங்கையில் உள்ள சிறந்த கவிஞர்களில் சு.வில்வரெத்தினமும் ஒருவர். கவிதைகள், கட்டுரைகள், சிறுகதைகள் என்று எழுதிக் குவித்தவர். "காற்று வழிக்கிராமம்" "நெற்றிக்கண்" முதலிய கவிதைத் தொகுதிகளால் பெரிதும் பேசப்பட்டார். தனக்கு சரி என்று பட்டதை நெற்றிக்கு நேரே சொல்லிவிடுவார். சிறந்த பேச்சாளர். புங்குடுதீவில் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக மு.தளையசிங்கத்துடன் சேர்ந்து சத்தியாக்கிரகம் செய்தவர். வெளிநாடுகள் பலவற்றுக்குச் சென்று கவிதை பாடி புங்குடுதீவின் பெயரை உயரச்செய்தவர்.

1992 அக்டோபர் மாதம் யாழ்ப்பாணத் தீவுகள் சிறைப்பிடிக்கப்பட்டன. மனைவி பிள்ளைகள் புங்குடுதீவிலும் கவிஞர் யாழ்ப்பாணத்திலுமாகப் பிரிக்கப்பட்டார்கள். கவிஞர் தான் குடும்பத்துடன் இணையத்துடித்த எட்டுமாத காலத்தில் தான்பட்ட அவஸ்தைகளை கவிதைகளாக்கியுள்ளார். "காலத்துயர்" என்ற சிறந்த கவிதைத் தொகுப்பு அது. தமிழர்களின் சமகாலத் துயர்களையும், வடபகுதி மக்களின் புலம்பெயர்வுகளையும் தொடரும் இடம்பெயர்வுகளையும் கவிதைத் தொகுப்பாக பதிவு செய்தார். அண்மையில் வெளிவந்த அவரது சிறந்தநூல் "வாசிகம்".

## புலவர் ஈழத்து சிவானந்தன்



தாய்நாட்டைத் தனது புனைபெயரின் தலைப்பெழுத்தாக்கி "ஈழத்துச் சிவானந்தன்" என்ற பெயரில் எழுதி வருகிறார். சிறுகதை, கவிதை, கட்டுரை, நாடகம், நாவல் என்று எழுதியவர். சிறந்த பேச்சாளர். இலங்கையில் வாழ்ந்த பொழுது 'ஆலயமணி', 'வாழ்க்கை', 'விடுதலை', 'தமிழ்மகன்' போன்ற பத்திரிகைகளை நடத்தியவர்.

அடிகளார் பாதையிலே, ஈழத்தில் நான்கண்ட சொற்செல்வர்கள், சீதனக்கொடுமை ஒழிக, ஈழத்துச் சொற்பொழிவுகள், இதயங்கள், ஒரு திருமுருகன் வந்தான், கண்ணதாசனைக் கண்டேன், காலனைக்காலால் உதைத்தேன் முதலிய நூல்களின் ஆசிரியர். இவர் எழுதிய ஈழத்துச் சொற்பொழிவுகள் என்னும் நூல், இரண்டாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு சென்னையில் நடந்த போது பூம்புகார் திடலில் வைத்து அன்றைய முதலமைச்சர் அறிஞர் அண்ணாவால் வெளியிடப்பட்டது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் படிக்கும் பொழுது அங்கு தமிழ் மன்றச் செயலாளராய் பெரும் பணி ஆற்றியவர். இலங்கை, இந்தியா, மலேசியா, சிங்கப்பூர், கனடா முதலிய இடங்களில் சைவத் தமிழ் பணிகளால் தமிழ் அடையாளங்களைப் பதித்தவர். பெரியார் ஈ.வெ.ரா. அறிஞர் அண்ணா, குன்றக்குடி அடிகளார், கவிஞர் கண்ணதாசன் முதலியோரோடு நெருக்கமாய் பழகிய புலவர் பற்றி, ஆனந்த விகடனில் குன்றக்குடி அடிகளார் எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இப்பொழுது கனடாவில் வாழும் இவர் சித்திரைப்பொங்கல், கரைதேடும் அலைகள், தேசத்தின் கானங்கள், தமிழச்சி ஆகிய திரைப்படங்களின் சிறப்பு நாயகர். இவருடைய ஆன்மீக அலைகள், திருப்பள்ளி எழுச்சியும் திருவெம்பாவையும் என்னும் இரண்டு நூல்கள் கனடாவில் வெளியாகியுள்ளன.

## தீவக அபிமானி சதாசிவம் சேவியர்



தீவகம் மீது பெரும்பற்றுக் கொண்ட எழுத்தாளர், சமூகத்தொண்டர் புங்குடுதீவு பெற்றெடுத்த தவப் புதல்வர். தற்பொழுது கனடாவில் வாழும் சதாசிவம் சேவியர் உலகில் பல்வேறு நாடுகளுக்கும் சென்று பயண நூல்கள் பலவற்றை எழுதிவருகிறார். அவற்றில் பெரும்பாலானவை சமயம் சம்பந்தப்பட்டதாகும். நாவலர் பாடசாலை, யாழ் இந்துக் கல்லூரி, சென்பற்றிக் கல்லூரி போன்றவற்றில் கல்வி கற்றவர். 1956இல் காலிமுகத்திடலில் நடைபெற்ற சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்டு தாக்குதலுக்கு உள்ளானவர்.

"சப்ததீவு" என்ற பெயரில் இவர் தொகுத்து எழுதிய நூலை அடிப்படையாக வைத்தே பலர் தீவுப்பகுதிகள் பற்றிய நூல்களை எழுதத் தொடங்கினர். இவர் கொழும்பில் வாழ்ந்த போது புங்குடுதீவு மக்களை தலை நிமிர்ந்து வாழ வைத்தவர். அந்த அனுபவங்களைக் கொண்டு பல புத்தகங்களை எழுதியவர். ஆரம்பத்தில் தீவகன் என்ற புனைபெயரில் "சப்ததீவு" என்று நூலை எழுதி வெளியிட்டார். இந்தியாவின் பல திருத்தலங்களுக்கும் சென்று "இந்தியத்திருத்தலயாத்திரை" என்ற நூலை இரண்டு பாகங்களாக வெளியிட்டார். இவர் எழுதி வெளியிட்ட "தத்துவமுத்துக்களும் சமுதாயவித்துக்களும்" என்னும் நூல் பல தத்துவக்கருத்துகளை அழகாக வெளிக் கொணர்ந்தது. "கீதாசாரம்" "இஷ்டதெய்வவழிபாடு" என்னும் நூல்கள் சமயம் சம்பந்தப்பட்ட நல்லநூல்கள். "நிம்மதிக்குப்பொன் மொழிகள்" "வாழ்க்கை வாழ்வதற்கே" என்னும் நூல்கள் பிரபலம்பெற்றன. "சட்டமேதை ஜி.ஜி. பொன்னம்பலம்" என்னும் நூலும் "அமரர் ஏ.எல் தம்பிஜயா" என்னும் நூலும் தமிழ்மக்களின் அரசியல் வரலாற்றோடு சம்பந்தப்பட்ட அருமையான நூல்கள். "அநாதை சங்கர்" என்னும் நூலும் புகழ்பெற்ற நூலாகும்.

### சட்டத்தரணி மு.நேமிநாதன்



சிறுகதைகள், கட்டுரைகளால் வாசகர்களைக் கவர்ந்தவர். இவர் எழுதிய "குழப்பாதே" என்னும் சிறுகதை நவீன இலக்கிய வாதிகளால் நயமாக பேசப்பட்டது. சட்டத்தரணியாக தொழிலாற்றுகிறார். இப்பொழுது லண்டனில் வாழ்கிறார். புங்குடுதீவை அபிவிருத்தி செய்யும் பணிகளில் அதிகமாக உழைப்பவர். புங்குடுதீவில் வாழ்ந்த போது பல எழுச்சிப்பணிகளில் பங்குகொண்டவர். நேமிநாதனது சிறுகதைகள் 1970களில் வீரகேசரி, தினகரனில் வெளிவந்தன. இலக்கியச்சஞ்சிகையான "பூரணி" ஆசிரிய குழுவில் கடமையாற்றியவர். புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் பிறந்த முருகேசபிள்ளை நேமிநாதன் ஆரம்பக்கல்வியை புங்குடுதீவு கணேசவித்தியாசாலையிலும் உயர்கல்வியை இரத்தினபுரி சென் லுகிஸ் கல்லூரியிலும் சுன்னாகம் ஸ்கந்தவரோதயாக் கல்லூரியிலும் கற்றவர்.

இறக்குமதி, ஏற்றுமதித் திணைக்களத்தில் வேலைசெய்து கொண்டே கொழும்பு சட்டக்கல்லூரியில் படித்து சட்டத்தரணியானார். தான் வேலை செய்யும் திணைக்களத்தின் இலக்கியச் செயல்களிலும் ஈடுபட்டார். 1960 இல் அரசாங்க எழுதுவினைஞர் சங்கம், கோடீஸ்வரன் வழக்குகளில் ஈடுபாடு காட்டினார். புங்குடுதீவில் மு. தளையசிங்கம் பலமுன்னோடி முயற்சிகளில் ஈடுபட்டபோது அவருக்கு உதவியாக இருந்தார். மு. நேமிநாதன் 1978 இல் இலண்டனுக்கு சென்றார். அங்கு அன்று முதல் இன்றுவரை அரசியல், அகதிகள் நலன், இலக்கிய நாடக முயற்சிகளில் ஈடுபட்டுவருகிறார். தமிழ் - ஆங்கில இருமொழிச் சஞ்சிகையான "தமிழ் அகதி"யின் ஆசிரியராக கடமையாற்றுகிறார். தமிழ் சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் போன்றவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நூலாக வெளியிட்டார். இலங்கையில் அழிக்கப்பட்ட கோவில்கள் பற்றிய நூல் ஒன்றை ஆங்கிலத்தில் வெளியிட்டார். தமிழ் கைதிகளின் கடிதங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நூலாக வெளியிட்டார். இலண்டனில் இயங்கும் தீவுப்பகுதி அபிவிருத்தி சங்கம் வீ. பாலசுப்பிரமணியம் தலைமையில் பல உதவிகளைச் செய்து வருகிறது. இச்சங்கத்துக்கு அறிவுரை கூறுவதும் ஊக்கப்படுத்துவதும் உதவிகள் பல செய்வதும் மு. நேமிநாதனின் பணியாகும்.

## நாடக ஆசிரியர் ஐ.சிவசாமி



கதை கட்டுரை எழுதுவதில் சிறந்தவர். நாடகம் எழுதிப் புகழ்பெற்றவர். இவர் எழுதிய "வாழ்வுப்பலி" என்னும் நாடகம் புங்குடுதீவின் நாடக வரலாற்றில் ஒரு திருப்புமுனை எனலாம். இந்நாடகம் யாழ். இந்துக் கல்லூரியில் நடந்த நாடகப் போட்டியில் முதலாவது இடத்தைப் பெற்றது. நீண்டகாலம் ஆசிரியராக பணியாற்றி ஓய்வு பெற்றார். இப்பொழுது கனடாவில் வாழ்கிறார். "புங்குடுதீவுக் கீதம்" என்னும் கீதத்தை எழுதிப்புகழ்பெற்றவர். ஐ. சிவசாமி புங்குடுதீவு இளைஞர்களுக்கு நாடகக் கலையை அறிமுகப்படுத்தி அவர்களை நாடகங்கள் மூலம் ஜொலிக்கச் செய்தவர். இவரது நாடகங்களில் நடிக்காத இளைஞர்களே புங்குடுதீவில் இல்லை எனலாம். மேடையில் பல புதிய உத்திகளைக் கையாண்டார். நாடகம் ஆரம்பமாகுவதற்குமுன் கலைஞர்களை அறிமுகப்படுத்தம் பொழுது வெள்ளித்தட்டொன்றை மேடையில் வேகமாக விட்டெறிந்து "டமார்" என்ற சத்தத்தை உருவாக்கி விட்டு "டைரக்ஷன் - சிவா" என்று அறிவுப்புச்செய்யும் பாணி அலாதியானது. இரங்கற்பா இயற்றுவதிலும் சமர்த்தர்.

மன்னாரிலும், புங்குடுதீவிலும் இவரிடம் கற்ற மாணவர்கள் இவருக்கு நன்றி செலுத்தி லண்டனில் விழா எடுத்தார்கள், ஆசிரியர் சிவசாமி அவர்களின் புதல்வர்கள் உலகமெங்கும் புகழுடன் வாழுகிறார்கள். இப்பொழுது சி. பிரேம் ஆனந் சிலகாலம் தீபம் தொலைக்காட்சியில் பொறுப்பு வாய்ந்த அதிகாரியாக கடமையாற்றினார். லண்டன் வொய்ஸ் ரெகொம் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர்.

## எழுத்தாளர் என்.கே.மகாலிங்கம்

புங்குடுதீவில் பிறந்த என்.கே.மகாலிங்கம் இப்பொழுது கனடாவில் வாழ்கிறார். இவர் இலங்கையில் ஆசிரியராக பணியாற்றியவர். இதயம், மல்லிகை போன்ற சஞ்சிகைகளில் சிறுகதைகள் எழுதினார். இவர் எழுதிய சிறுகதைகளின் தொகுப்பே "தியானம்" என்ற தலைப்பில் வெளியாகியது. அது 1982 ஆம் ஆண்டில் பூரணி வெளியீடாக கொழும்பில் வெளியானது. பூரணி என்ற சஞ்சிகையின் ஆசிரியர்.

என். கே. மகாலிங்கம் எழுதி வெளியிட்ட கவிதைத் தொகுப்பின் பெயர் "உள்ளொளி" என்பதாகும். இக்கவிதைத் தொகுப்பின் மூலம் கவிஞரின் கவிதா மனோ நிலையில் மூன்று முக்கியமான அம்சங்கள் தூக்கலாக இருப்பது தெரிகின்றது. இழப்பின் துயர், வீடுதிரும்புதல், சலிப்பு ஆகிய அம்சங்கள் இவரது கவிதைகளில் பளிச்சிடுகின்றன.

என். கே. மகாலிங்கம் சிறந்த மொழிபெயர்ப்பாளருமாவார்.சினுவா ஆச்சியி என்னும் ஆபிரிக்கா எழுத்தாளர் Things fall abort என்ற எழுதிய நாவலொன்றை "சிதைவுகள்" என்ற பெயரில் தமிழாக்கம் செய்து வெளியிட்டவர். ஆபிரிக்க வாழ்க்கையும் அங்கு எதிர்கொள்ளும் அரசியல் பிரச்சினையும் தான் நாவலின் கரு. என். கே. மகாலிங்கம் இந்நாவலின் ஆங்கில மூலத்திலிருந்து அழகாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## எழுத்தாளர் நாக. பத்மநாதன்

சிறந்த சிந்தனையாளரும், 'வீரம் மானம்' நூலின் ஆசிரியரும், உருவகக்கதைகள் எழுதுவதில் தனிப்பெரும் சிறப்பும்பெற்ற நாக. பத்மநாதன் தனது எழுத்தாலும், இனிமையான பேச்சாலும் எல்லோர் மனதிலும் தன்னை ஆழமாகப் பதித்துக் கொண்டவர். கஷ்டப்பட்டவர்களைக்கண்டு கலங்கிவிடுவார்.

சர்வோதயப் பணிகளில் ஆர்வங்கொண்ட நாக. பத்மநாதன், க. திருநாவுக்கரசு அவர்களின் தொண்டு வாழ்க்கையோடு தன்னையும் இணைத்துப் பலகாலம் அளப்பரிய சேவைகளைச் செய்துள்ளார். அவர் மட்டுமன்றி தன் மூத்தமகள் வாசுகியையும் சர்வோதயப் பணிகளோடு இணைத்துக் கிராமங்களில் சேவையாற்ற உதவியும் ஒத்தாசையும் நல்கினார். ஆன்மீக வாழ்க்கையில் தன்னையும் ஈடுபடுத்தி வாழ்ந்ததோடு, சிவயோக சுவாமிகள், தாளையன் பாபா போன்ற மகான்களின் ஆச்சிரம வாழ்க்கையைப் பின்பற்றி வாழ்ந்து வந்தார். யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் பிறந்து, புங்குடுதீவில் மணம் புரிந்து தமிழ் வளர்ச்சிப்பணிகளிலும் சமயப்பணிகளிலும் பொதுப் பணிகளிலும் தன்னையும் குடும்பத்தையம் இணைத்து வாழ்ந்து வந்த மரியாதை மனிதர். கடைசிக் காலத்தில் லண்டனில் வாழ்ந்த நாக. பத்மநாதன் உருவகக்கதைகள் எழுதுவதில் சிறந்து விளங்கினார்.

## வீ.ரி. இளங்கோவன்



புங்குடுதீவின் சிறந்த கவிஞர்களில் ஒருவரான வீ.ரி. இளங்கோவன் இப்பொழுது பிரான்சில் வாழ்ந்து கொண்டு இலக்கியப்பணியாற்றுகிறார். இலங்கையில் மக்கள் கலை இலக்கிய மன்றச் செயலாளராக இருந்து கொண்டு "மூலிகை" "வாகை" ஆகிய பத்திரிகைகளை நடத்தியவர்.'கரும்பனை' 'இது ஒரு வாக்கு மூலம்' 'சிகரம்' ஆகிய கவிதை நூல்களை வெளியிட்டவர். 1950ஆம் ஆண்டு புங்குடுதீவில் பிறந்த இளங்கோவன், புங்குடுதீவு அமெரிக்கன்மிஷன் பாடசாலை, வேலணை சேர். வை. துரைசுவாமி மகாவித்தியாலயம், கோப்பாய் கிறிஸ்தவக் கல்லூரி ஆகியவற்றில் கல்வி பயின்றவர். ஆயுர்வேத மருத்துவராக பட்டம் பெற்ற பின் 1984ஆம் ஆண்டு ஐ.நா. தொண்டராக பிலிப்பைன்ஸ் நாட்டுக்குச் சென்று ஒரு வருடம் தங்கியிருந்து மூலிகைகள் பற்றி ஆராய்ச்சி செய்தவர். அதன்பின்பு வ.கி.மா. இளைஞர் பயிற்சித்துறைப் பணிப்பாளரின் கீழ் கடமையாற்றினார். 1990ஆம் ஆண்டுமுதல் பிரான்ஸில் வாழுகிறார். அங்கு தீவக இலக்கிய மறுமலர்ச்சி மன்றத்தின் தலைவராக இருந்து கொண்டு இலக்கியப்பணி செய்கிறார். இவர் எழுதிய கரும்பனைகள், சிகரம் ஆகிய கவிதைத் தொகுதிகள் பரிஸில் வெளியிடப்பட்டன. "மண்மறவாத் தொண்டர்" என்ற தலைப்பில் சர்வோதய தொண்டர் திலகம் திருநாவுக்கரசு பற்றி ஒருநூல் எழுதியிருக்கிறார். 'மண்மறவா மனிதர்கள்' என்ற தலைப்பில் பல எழுத்தாளர்கள் பற்றி எழுதியிருக்கிறார். எழுத்தாளர் டானியல் பற்றி இரண்டு நூலும் தனது தமையனார் நாவேந்தன் பற்றி ஒரு நூலும் எழுதியுள்ளார்.

## சின்னையா மகேஷ்வரன் (இந்து மகேஷ்)



இலங்கை வானொலியால் வளர்க்கப்பட்ட புங்குடுதீவு எழுத்தாளர்தான் இந்துமகேஷ். "இசையும் கதையும்" நிகழ்ச்சியின் மூலம் அறிமுகமான இந்த எழுத்தாளர் பின்னாளில் புகழ்பெற்ற ஜனரஞ்சக எழுத்தாளராக உயர்ந்தார். ஒலிமஞ்சரி, நாடகஅரங்கம், சிறுகதைநாடகம், நாடகம் போன்ற நிகழ்ச்சிகளில் இவரது படைப்புகள் ஒலிபரப்பாகின. 1967ஆம் ஆண்டு இவரது 18ஆவது வயதில் கண்ணகி அம்மன் மீதான பக்திப்பாடல்களை எழுதி "பக்திச்சரம்" என்ற பெயரில் தேர்த்திருவிழாவின் போது சிறுநூலாக வெளியிட்டார். 1969ஆம் ஆண்டு வானொலி மஞ்சரி நடத்திய நாடக எழுத்துப்போட்டி, இளைஞர்மன்றம் நடத்திய நாடகப்போட்டி என்பவற்றில் பரிசுபெற்றார். இவரது 22ஆவது வயதில் "இதயம்" என்னும் சஞ்சிகையை ஆரம்பித்தார். இதயத்தில் எழுதிய பலர் பின்னாளில் பிரபல எழுத்தாளர்களானார்கள்.

சி. மகேஷ்வரனுக்கு "இந்துமகேஷ்" என்பது மட்டும் புனைபெயரல்ல. ரஜனி மணாளன், இளந்தீவகன், நந்தினி என்பனவும் இவரது புனைபெயர்களாகும். இவரது வானொலி நாடகங்களில் ஒன்று "உதயத்தில் அஸ்தமனம்" என்னும் பெயரில் பி.விக்னேஸ்வரனால் நாடகமாகத் தயாரிக்கப்பட்டு ரூபவாஹினியில் ஒளிபரப்பப்பட்டது. இந்துமகேஷ் எழுதிய பல நாவல்கள் வீரகேசரிப் பிரசுரமாக வெளிவந்தன. ஒரு விலைமகளைத் காதலித்தேன் (1974), நன்றிக்கடன் (1979), இங்கேயும் மனிதர்கள் (1977) என்பனவே அவை. "இங்கேயும் மனிதர்கள்" என்ற நாவல் 1984ஆம் ஆண்டளவில் கொழும்பில் நாடகமாக மேடையேறப்பட்டது.

இவர்எழுதிய " ஒரு ஆத்மா அழுகிறது" என்னும் நாடகம் பலமுறை மறு ஒலிபரப்புச் செய்யப்பட்டது. வீரகேசரி 1981இல் நடத்திய எழுத்தாளர் ஆண்டுப் போட்டியில் இவர் எழுதிய "அவர்கள் தோற்றுப்போனவர்கள்" என்னும் நவீனத்துக்கு பரிசு கிடைத்தது. இது பின்னர் "முற்றுப்பெறாத ராகங்கள்" என்ற பெயரில் மித்திரனில் தொடராக வெளிவந்தது. 1986ஆம் ஆண்டு ஜெர்மனிக்குப்புலம் பெயர்ந்த இந்துமகேஷ் 20 ஆண்டுகளாக அங்கேயே வாழ்ந்து வருகிறார். அங்கும் கலை இலக்கிய சேவைகளில் ஈடுபட்டார். மௌனத்தில் அழுகின்றமனங்கள் விடியலுக்கில்லை தூரம், நீலவிழிப்பாவைகள், மறுபடியும் நாங்கள் போன்ற நாவல்களை நூலுருவில் வெளியிட்டார்.

ஜேர்மனி, பிரான்ஸ் நாடுகளிலிருந்து வெளியாகிய சஞ்சிகைகளில் இவரது ஆக்கங்கள் இடம் பெற்றன. இவர் 1991இல் ஜேர்மனியிலிருந்து வெளியிட்ட "பூவரசு" என்னும் சஞ்சிகை இப்பொழுதும் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கிறது. பூவரசு வெளியீடாக இலங்கை எழுத்தாளர்கள் பலரின் படைப்புகளும் நூலாக வெளிவந்துள்ளன. ஜேர்மனியிலிருந்து வெளிவரும் "வெற்றிமணி" என்னும் மாதப்பத்திரிகையில் இவர் எழுதிய "காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி" என்னும் ஆன்மீகத் தொடர் 2002இல் நூலாக வெளியிடப்பட்டு பெரும் வரவேற்பைப் பெற்றது. "பூவரசு கலை இலக்கியப் பேரவை ஜேர்மனி" என்னும் அமைப்பினை நடத்தி வரும் இவர் ஆண்டுதோறும் இலக்கியப் போட்டிகளையும் சிறுவர்களுக்கான எழுத்து சித்திரப் போட்டிகளையும் நடத்தி பரிசுகள் வழங்கி ஊக்கப்படுத்துகிறார்.

## நாகேசு தர்மலிங்கம்



புங்குடுதீவில் பிறந்த எழுத்தாளர்களில் சிறந்தவர். 21 வயதில் புங்குடுதீவில் தட்டையன்புலம் உபதபாலகத்தில் உதவித்தபாலதிபராக நியமனம் பெற்றவர். பத்து வருடங்களுக்கு மேலாக புறக்கோட்டை தபாலகத்தில் தபாலதிபராக கடமையாற்றினார். "மல்லிகை" சஞ்சிகை மூலம் இலக்கிய உலகிற்குள் புகுந்த இவர், பலசிறுகதைகளை எழுதிப் புகழ்பெற்றார்.

விமர்சனக் கட்டுரைகள், வானொலி நாடகங்கள் என்று பலபடைப்புகளை எழுதினார். இவர் எழுத்தாளர் மட்டும்மல்ல சிறந்த கலைஞராகவும் திகழ்ந்தார். இலங்கை வானொலியில் நீண்ட காலம் நாடக கலைஞராக விளங்கினார்.

வானொலி, தொலைக்காட்சி, மேடை நாடகங்களில் நடித்துள்ளார். சமூகப் பணிகளில் ஈடுபாடு கொண்ட இவர், புங்குடுதீவு கணேச வித்தியாலய பழைய மாணவர் சங்கக் கொழும்புக் கிளையின் செயலாளராக பல ஆண்டுகள் கடமையாற்றியவர். மு. தளையசிங்கம் உருவாக்கிய பூரண சர்வோதய இயக்கத்தில் தொண்டராக செயற்பட்டார்.

புங்குடுதீவின் பல சங்கங்களிலும் அங்கத்தவராக இருந்தார். 1996 ஆம் ஆண்டு தனது 46வது வயதில் காலமானார். இவர் இறந்த பின்பே இவரது சிறுகதைத் தொகுதியான "அந்நியம்" வெளிவந்தது. இவரது மனைவி இராஜலக்சுமியும் புதல்வர்கள் சசிதரன், குகாதரன் ஆகியோரும் இப்பொழுது கனடாவில் வாழுகிறார்கள்.

## கவிக்கோ பரமு விஸ்வலிங்கம்

ஜெர்மனியில் வாழும் கவிக்கோ பரமு விஸ்வலிங்கம் பல கவிதைகளை எழுதியுள்ளார். கவிதைத் தொகுதி ஒன்றையும் வெளியிட்டுள்ளார். சிறந்த பாடகரான இவர், தானே இயற்றி இசையமைத்து பாடி சி.டி. இசைத்தட்டுக்கள் செய்துள்ளார். அகில உலக தமிழ்ப்பண்பாட்டு கழகத்தின் முக்கிய உறுப்பினராக கடமையாற்றுகின்றார். அதன் மூலம் பல்வேறு தமிழ் பண்பாட்டு மாநாடுகளை நடத்தி வருகின்றார். புங்குடுதீவின் மீது அபிமான்ம் கொண்ட இவர், சிறந்த பேச்சாளருமாவார்.

## திருமதி. தமிழரசி சிவபாதசுந்தரம்

ஐயனார் அவர்களின் அன்புத் தம்பி பண்டிதர் மு. ஆறுமுகம் புகழ்பெற்ற ஆசிரியராவார். இவர், ஈழத்துக்காடுகளில் இடிந்த பழைய கட்டிடங்களைத் தேடி தமிழர்களின் வரலாறுகளை ஆராய்ந்தவர். இவரது புதல்வியாரே திருமதி. தமிழரசி சிவபாதசுந்தரம். இவர் தன்து தந்தையாரைப் போலவே சிறுவயது முதல் தமிழ்மொழி, ஈழவரலாறு சமயம், இசை, நாட்டியம், ஓவியம் என்று பல விடயங்கள் பற்றியும் பல்வேறு ஆய்வுக் கட்டுரைகளை எழுதியவர். "திருக்குறளில் கேள்வியால் ஒரு வேள்வி" என்ற நூலை லண்டனில் வெளியிட்டவர். "ஈழவரலாறு" பற்றியும் ஒரு நூலை எழுதியிருக்கிறார். புங்குடுதீவின் மீது அபிமானம் கொண்டவர். புங்குடுதீவு மக்களை நேசிப்பவர்.

### சின்னத்தம்பி கோபாலபிள்ளை



புங்குடுதீவு 9ஆம் வட்டாரத்தில் பிறந்த சின்னத்தம்பி கோபாலபிள்ளை 11 ஆம் வட்டாரத்தில் திருமணம் செய்தவர். தற்பொழுது கனடாவில் வாழ்கின்றார். கதைகள், கவிதைகள் அதிகமாக எழுதாவிட்டாலும் பல வரலாற்றுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். புங்குடுதீவுக் கோவில்களின் வரலாற்றை இவரைப் போல வேறு எவரும் அதிகமாக எழுதவில்லை என்றே கூறிவிடலாம். அந்த அளவுக்கு புங்குதீடுவுக் கோவில்களின் வரலாற்றைப் பற்றி மிக அதிகமாகவே எழுதியுள்ளார்.

புங்குடுதீவில் இவர் வாழும் பொழுது சிறந்த சமூக சேவையாளராக விளங்கினார். புங்குடுதீவு சண்முகநாதன் வித்தியாலயத்தின் பழைய மாணவர் சங்கத்தின் செயலாளராக நீண்ட காலம் கடமையாற்றினார். கனடா சென்ற பின்பு புங்குடுதீவு பழைய மாணவர் சங்கத்தில் நீண்ட காலம் அங்கத்தவராக இருந்து அதன் வளர்ச்சிக்கு உழைத்து வருகின்றார். "பூவரசம் பொழுது - 2003" ஆண்டு மலரில் இவர் எழுதிய கோயில்களை பற்றிய கட்டுரைகளே மிக அதிகமாக இடம்பெற்றிருக்கின்றன.

புங்குடுதீவுக் கோவில்களின் வரலாறு எழுதப்படும் பொழுது இவரது கட்டுரைகளைப் பின்பற்றியே பலரும் கட்டுரைகளை எழுதுகின்றார்கள்.

### துரை சிவபாலன்



துரை சிவபாலன் துடிப்பான இளைஞர். இங்கிலாந்தில் வாழும் புங்குடுதீவு எழுத்தாளர். தீவகம் பற்றி பல கட்டுரைகளை எழுதியவர். பலகவிதைகளையும் எழுதியுள்ளார். இவர் புங்குடுதீவு பிரித்தானிய சங்கத்தின் முக்கியமான அங்கத்தவர். புங்குடுதீவின் பேச்சு மொழி பற்றியும் கிராமிய தன்மைபற்றியும் பல ஆராய்ச்சிக்கட்டுரைகளையும் எழுதியுள்ளார். புங்குடுதீவின்மீதும் புங்குடுதீவு மக்கள்மீதும் அபிமானம் கொண்டவர். சிறந்த பேச்சாளர். புங்குடுதீவு கலைஞர்களுக்கு பல்வேறு வகைகளில் உதவி வருகின்றார்.

### இரா ஞானசம்பந்தன்

புங்குடுதீவில் பிறந்த இரா ஞானசம்பந்தன் ஜெர்மனியில் வாழ்கின்றார். பல்வேறு சஞ்சிகைகளிலும் இவரது கவிதைகள் வெளிவந்திருக்கின்றன. வெளியான கவிதைகளில் பெரும்பாலானவை தாயகத்து நினைவுகளிலேயே மலர்ந்தவை.

2002ஆம் ஆண்டு வெளிவந்த "சம்பந்தன் கவிதைகள்" என்ற இவரது கவிதை தொகுப்பு புகழ்பெற்றது.

## நாகேசு தர்மலிங்கம்

சிறுகதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள் வானொலி நாடகங்கள் என்று பல படைப்புகளை எழுதியவர். வானொலி, மேடை, தொலைக்காட்சி நடிகர். மல்லிகைப் பந்தல் வெளியீடான இவருடைய 'அந்நியம்' என்னும் சிறுகதைத் தொகுதி பலராலும் பாராட்டப்பட்டது. 46 வயதில் 1996ஆம் ஆண்டு காலமானார்.

## எஸ். எம். தனபாலன்

சிறுகதை, கட்டுரை, கவிதை, நாடகங்கள் மூலம் தனது ஆக்கத்திறனை வெளிப்படுத்தியவர். 'அவன் ஒரு கலைஞனாகிறான்', 'மயக்கங்கள்', 'உனக்காக கண்ணே', 'பேசத் தெரிந்த ஊமைகள்' போன்ற சிறுகதைகளை எழுதிப் புகழ் பெற்றவர். அந்தஸ்து, ஜீவராகங்கள், சுமைதாங்கி போன்ற நாடகங்களை எழுதிப் புகழ்பெற்றவர். புங்குடுதீவுக் கலைஞர்களில் முதன் முதலாக "கரைதேடும் அலைகள்" என்ற வீடியோ திரைப்படத்தை எழுதித் தயாரித்தவர். 2006ஆம் ஆண்டுக்கான புங்குடுதீவு பூவரசம் பொழுது விழாவுக்கு இவரே தலைவராக செயற்பட்டார்.

## த.சிவதாசன்

சிறுகதை, கட்டுரை, கவிதைகளால், தனது படைப்பாற்றலை வெளிப்படுத்தியவர். சுயம்வரம், மரபுகள் மாறலாமா? தோல்வி, முக்கோணம், முதலிய கதைகள் சிறப்பானவை. மனைவி, ஆமை, சோதி ஆகியவை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் மரபுக்கவிதைகள், புகழ்பெற்றவை. "மறுமொழி", என்ற சஞ்சிகையை சிலகாலம் நடத்தியவர். கனடாவில் வசிக்கிறார்.

## துரை ரவீந்திரன்

சிறுகதை, கட்டுரைகள் மூலம் தனது சிருஷ்டித் திறனை வெளிப்படுத்தியவர், புலம் பெயர்ந்த உறவுகள், தத்தளித்த உள்ளங்கள், காதல் ஆத்மாவின் ராகம், இலக்கை நோக்கி, புலராத பொழுது முதலிய சிறுகதைகள் சிறப்புக்குரியன. 2006ஆம் ஆண்டுக்கான கனடா பூவரசம் பொழுது ஆண்டு மலருக்கு இவரே பொறுப்பாசிரியர்.

## ந. விவேகானந்தன்

1970 காலப்பகுதியில் பல சிறுகதைகளை எழுதியவர். இளவயதிலே காலமானார். இவரது கதைகள் வீரகேசரி, மித்திரன் போன்றவற்றில் வெளிவந்தன.

## வழிவேலு ஞானகாந்தன்

பல கட்டுரைகளை எழுதியுள்ளார், ஆசிரியமணி சி. க. நாகலிங்கத்துடன் சேர்ந்து 'புங்குடுதீவு அரசடி ஆதி வைரவர் தல மான்மியம் திருவூஞ்சல்" என்னும் நூலை எழுதியுள்ளார். 'நாக கோட்டம்' என்பது இவர் எழுதிய இன்னுமொரு நூல். பல ஆன்மீக கட்டுரைகளை எழுதியுள்ளார்.

### திருமதி கமலாசனி சிவபாதம்

இவர் சிறந்த எழுத்தாளர், பேச்சாளர் புங்குடுதீவில் ஆரம்பகாலத்தில் உருவான பட்டதாரி, புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் ஆசிரியையாக கடமையாற்றியவர். இவரது கணவர் செ. சிவபாதமும் சிறந்த பட்டதாரி ஆசிரியராவார்.

### யசோதா பொன்னம்பலம்

இவர் எழுத்தாளர் மு. பொ. வின் மூத்தமகள். தினக்குரல் பத்திரிகையில் பத்திரிகையாளராக பதவி வகித்த காலங்களில் பல அரசியல் விமர்சனக் கட்டுரைகள் எழுதிப் புகழ் பெற்றவர்.

### எஸ். திருச்செல்வம்

ஆரம்பகால எழுத்தாளர்களில் ஒருவர். நீண்டகாலம் மலையகத்தில் ஆசிரியராக கடமையாற்றியவர். இவரது சிறுகதைத் தொகுதி ஒன்றுக்கு மு. தளையசிங்கம் முன்னுரை எழுதியுள்ளார்.

### தாட்சாயினி

தாட்சாயினி என்ற புனை பெயரில் எழுதுபவர் சபாரெத்தினம் சிவானந்தன் என்ற பெயருடைய ஆண் எழுத்தாளராவார். சிறந்த கவிதைகள் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். 'திசைகள் வெளிக்கும்' என்ற இவரது நூல் புகழ்பெற்றது. கண்ணகை அம்மன் கோவில்பற்றி இவர் எழுதிய பாடல்கள் சீ.டி இசைத்தட்டாக வெளிவந்திருந்திருக்கிறது.

### நா. தேவதாசன்

ஒரு சிறந்த கவிஞர். ஜேர்மனியில் வாழ்ந்து வரும் இவர், புங்குடுதீவுக் கோவில்களைப்பற்றியும் தன் கிராமத்தின் இளமைக் காலம் பற்றியும் அழகான கவிதைகளை எழுதியிருக்கிறார்.

### சித்திரா மணாளன்

சிறுகதைகள், கட்டுரைகள் எழுதுவதில் வல்லவர். இவர் எழுதிய "தமிழர் குருஷேத்திரக் கீதை" என்னும் நூல் புகழ் பெற்றது.

### சு. மகாலிங்கம்

பல அரசியல் ஆய்வுக் கட்டுரைகளை எழுதியவர். அவற்றிலே அவரது சமூக கண்ணோட்டம் விவரணங்களைக் காண முடிந்தது.

### நாக. சாந்தலிங்கம்

கவிதை கட்டுரைகள் எழுதுவதில் வல்லவர். தமிழரசுக்கட்சியின் அபிமானி அ. அமிர்தலிங்கம் பற்றி இவர் எழுதிய 'களம் பல கண்ட காளை' என்ற நூல் பலராலும் பாராட்டப்பட்டது.

### கனக. திருச்செல்வம்

கவிதைகள், கட்டுரைகள் எழுதிப்புகழ்பெற்றவர். 'கவிதைக் கனிகள்' என்னும் இவரது கவிதைத்தொகுப்பு புகழ்பெற்றது.

## ஆர். ஆர். பிரபா

கதை, கட்டுரைகள் எழுதிப்புகழ் பெற்றவர். சிறந்த வானொலிக் கலைஞர். வானொலியில் பல ஆக்கங்களைப் படைத்துள்ளார்.

## பகீரதன்

சிவசித்திரை என்ற புனைபெயரிலும் எழுதிவருகிறார். இவர் எழுதிய 'பாசக்கடிதங்கள்' என்னும் நாவல் புகழ் பெற்றது.

## மைதிலி அருளையா

சிறந்த பல கவிதைகளை எழுதியிருக்கிறார். கனடா தொலைக்காட்சியில் இடைக்கிடை தோன்றுகிறார். கவிதைத் தொகுதியொன்றை வெளியிட்டிருக்கிறார்.

## புங்கையூர் மாணிக்கவாசர்

சில கவிதைகளை எழுதினாலும் அவைகள் சிறந்தவையாக இருந்தன.

இவர்களை விட புங்குடுதீவு பெற்றெடுத்த பல எழுத்தாளர்கள் உலகெங்கும் வாழுகிறார்கள். சுதாகரன், பாரதி கண்ணம்மா, பத்ம ரவீந்திரன், சி. சுந்தரராஜன், சி. கோகுலசந்திரன், இதயதீபன், இந்து, வை. தளையசிங்கம், மு. கோவிந்தன், சந்தியோ அமிர்தராஜ், சிவச்சந்திரபாலன், சுமித்திரா சண்முகநாதன், கருணாகரன், ஏகாந்தப்பிரியை, ரஞ்சி, ரவீந்திரன் போன்ற இளம் எழுத்தாளர்களையும் இங்கு பெயர் சொல்லலாம்.




க. திருநாவுக்கரசு வெளியிட்ட 'தீவகம்', ஈழத்து சிவனாந்தன் வெளியிட்ட 'வாழ்க்கை', வீ.ரி. இளங்கோவன் வெளியிட்ட 'வாகை', இந்து மகேஷ் ஜேர்மனியிலிருந்து வெளியிடும் 'பூவரசு' ஆகிய சஞ்சிகைகளை இங்கே காணுகின்றீர்கள்.

## பத்திரிகையாளர்கள்

தற்கால உலகத்தை நவீன தொடர்புசாதனங்கள் ஆட்டிப்படைக்கின்றன. தொடர்பு சாதனங்களாக தொலைக்காட்சி, வானொலி, திரைப்படம், பத்திரிகை என்று அவை நீண்டு கொண்டே போகின்றன. இந்தத் தொடர்பு சாதனங்களில் பழமையானது பத்திரிகையாகும். தினந்தோறும் வரும் தினசரிகளை "பத்திரிகை" என்றும் வாரந்தோறும் அல்லது மாதந்தோறும் வெளிவரும் இதழ்களை "சஞ்சிகைகள்" என்றும் நாம் பொதுவாகக் குறிப்பிடுகிறோம். பத்திரிகை ஒன்றை நடத்துவது என்பது மிகவும் கஷ்டமான காரியமாகும். ஆனாலும் சஞ்சிகைகளை நடத்துவதில் கஷ்டம் குறைவு தான் எனலாம். ஆனாலும் இவை இரண்டையும் நடத்துவதற்கு பணம் தேவை என்பது முக்கியமான விடயமாகும். பணத்துடன் படிப்பறிவும் அனுபவமும் முக்கியமானவை.

இவ்வாறான பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் புங்குடுதீவைச் சேர்ந்த அறிஞர்களும் எழுத்தாளர்களும் நடத்தியிருக்கிறார்கள். புங்குடுதீவு அறிஞர்களின் பத்திரிகை நாட்டம் 1950ஆம் ஆண்டளவிலேயே ஆரம்பித்து விட்டது. வித்துவான் சி. ஆறுமுகம் "நல்லையா ஆசிரியர்" என்று அழைக்கப்பட்டவர். புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் பிறந்த இவர், சுன்னாகம் ஸ்கந்தவரோதயாக் கல்லூரியில் பலகாலம் ஆசிரியராகக் கடமையாற்றியவர். சிறந்த சொற்பொழிவாளர்களில் ஒருவர். கவிதைகள் எழுதுவதில் வல்லவர். இவர் 1950ஆம் ஆண்டளவில் இலக்கியச் சஞ்சிகையொன்றை நடத்தியிருக்கிறார். "கலைமதி" என்ற பெயரில் வந்த இச்சஞ்சிகை அக்காலத்தில் புகழ்பெற்றது. புங்குடுதீவில் பிறந்த தி. திருலிங்கநாதன் சிறந்த நிர்வாகி. இவர் "ஆற்றல்" என்னும் சஞ்சிகையை நடத்தினார்.

வி.ரி திருநாவுக்கரசு என்ற எழுத்தாளர் புங்குடுதீவில் பிறந்தவர். சிறந்த பேச்சாளரான இவர், தனது பெயரை "நாவேந்தன்" என்று மாற்றிக் கொண்டார். பல பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் இவர் நடத்தினார் என்று அறியமுடிகிறது. ஆரம்பகால புங்குடுதீவின் பத்திரிகையாளர் இவர் என்றே கூறவேண்டும். இவர் "நம்நாடு" என்ற பத்திரிகையை ஆரம்பித்து நடத்தினார். தமிழரசுக்கட்சியின் சார்பாக வெளியிடப்பட்ட இப்பத்திரிகை சில நாட்களின் பின் நின்றுவிட்டது. நாவேந்தனுக்கு இலக்கியத்தின் மீதும் நல்ல ஈடுபாடு "நாவேந்தன்" என்ற பெயரிலும் ஒரு இலக்கியச் சஞ்சிகையை இவர் நடத்தினார். இது நீண்டகாலம் வெளிவந்தது. இதே எழுத்தாளர் பிற்காலத்தில் "தமிழ்குரல்" "சங்கப்பலகை" போன்ற சஞ்சிகைகளையும் நடத்தியுள்ளார். நாவேந்தனின் தம்பிமாரில் ஒருவர் வி.ரி. துரைசிங்கம் இவர் கல்விப்பணிப்பாளராக இருந்து ஓய்வு பெற்றவர். இவரும் தனது வாழ்க்கையை ஒரு பத்திரிகை நிருபராகவே ஆரம்பித்தவர். பல தமிழ்ப்பத்திரிகைகளில் நீண்ட காலம் நிருபராக கடமையாற்றினார்.

வி. ரி. துரைசிங்கத்தின் தம்பியின் பெயர் வி.ரி. இளங்கோவன். இவர் ஆயுர்வேத மருத்துவராகப் பயிற்சி பெற்றவர். சிறந்த கவிஞர். ஆயுர்வேதம் சம்பந்தமான சில சஞ்சிகைகளை வெளியிட்டார். "மூலிகை" என்பது அவர் நடத்திய சஞ்சிகைகளில் ஒன்றாகும். ஆயுர்வேதம் சம்பந்தமான பல கட்டுரைகள் அதில் வெளிவந்தன. இலக்கியம் சம்பந்தமான பல கட்டுரைகளும் வெளிவந்தன. இவர் "வாகை" என்ற பெயரிலும் சஞ்சிகை ஒன்றை நடத்தினார்.

வி.ரி. இளங்கோவனின் தம்பி தான் சட்ட அறிஞர் வி.ரி தமிழ்மாறன். இவர் சட்டம், அரசியல் சம்பந்தமாக பல கட்டுரைகளை எழுதியவர். சட்டம் சம்பந்தமான சஞ்சிகைகளையும் வெளியிட வேண்டும் என்ற ஆர்வம் இவருக்கு ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை. "திருப்பம்" "சட்டம்" என்னும் சஞ்சிகைகளை வெளியிட்டார். அவை சில காலந்தான் வெளிவந்தன. அண்மைக்காலத்தில் "நீதி" என்ற சஞ்சிகையை வெளியிட்டார். பல இளம் சட்டத்தரணிகளுக்கு அதுதான் "பாலபாடம்" ஆக அமைந்தது.ஜீவா நாவுக்கரசன் என்ற எழுத்தாளர் புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். இலங்கையின் முதலாவது தமிழ்ப்படமான "சமுதாயம்" திரைப்படத்துக்கு இவராலேயே கதை வசனம் எழுதப்பட்டது. இவர் 1970ஆம் ஆண்டளவில் "பூமாலை" என்ற சஞ்சிகையை நடத்தி வந்தார். கலை இலக்கியம் சம்பந்தமான பல ஆக்கங்களைச் சுமந்து வந்த இச்சஞ்சிகையும் சில இதழ்களுடன் நின்றுவிட்டது.

எழுத்தாளர் மு. தளையசிங்கம் புங்குடுதீவில் பல புரட்சிகள் செய்தவர். ஆரம்பத்தில் "உள்ஒளி", "சத்தியம்", ஆகிய பத்திரிகைகளை நடத்தினார். அக்காலத்தில் இவர் "பூரணி" என்ற சஞ்சிகையையும் வெளியிட்டார். அதன் மூலந்தான் அவரது ஆத்மீக சிந்தனைகளை வெளியிடமுடிந்தது. அது சிறந்த கல்வி, இலக்கிய சஞ்சிகையாகவும் மிளிர்ந்தது. இச்சஞ்சிகையின் அசிரிய குழுவில் புங்குடுதீவின் பிரபல எழுத்தாளர்கள் பங்குபற்றினார்கள். சட்டநாதன் மு. நேமிநாதன், என்.கே. மகாலிங்கம், ஜீவகாருண்யம் போன்றவர்களே அந்த எழுத்தாளர்கள்.மு. தளையசிங்கத்தின் தம்பியான மு. பொன்னம்பலம் சிறந்த கவிஞர். பல கவிதைகளையும் நாவல்களையும் கட்டுரைகளையும் எழுதியுள்ளார். "சத்தியம்" என்ற சஞ்சிகையின் ஆசிரியராக இருந்தார். இவர் யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்த "திசை" என்னும் பத்திரிகைக்கு பிரதம ஆசிரியராக இருந்தார். அரசியல், கலாசாரம், இலக்கியம் சம்பந்தமான பல படைப்புகள் இப்பத்திரிகையில் வெளிவந்தன. நீண்டநாட்கள் வெளிவந்த இப்பத்திரிகை நாட்டின் சூழ்நிலை காரணமாக நின்று கொண்டது.

வட இலங்கை சர்வோதய இயக்கத்தை உருவாக்கியவர். அமரர். க. திருநாவுக்கரசு புங்குடுதீவின் வளர்ச்சியில் அதிக அக்கறை கொண்ட பெரியார். புங்குடுதீவின் வளர்ச்சி பற்றியும் உயர்ச்சிபற்றியும் பல துண்டுப்பிரசுரங்களை வெளியிட்டார். தீவுப்பகுதியின் வளர்ச்சி பற்றி பொதுமக்களுக்கு ஆர்வமூட்ட ஒரு பத்திரிகை தேவைப்பட்டது. எனவே "தீவகம்" என்ற பெயரில் ஒரு மாதசஞ்சிகை ஆரம்பிக்கப்பட்டது. 1972 ஜனவரியில் முதல் இதழ் வந்தது. மாதத்துக்கு ஒன்றாக வந்த இந்த இதழ் 10 இதழ்களுடன் நின்று கொண்டது. ஆனாலும் தீவகத்தை உயர்த்திய பெரியோர்களான கு.வி. செல்லத்துரை, கு.வி. தம்பித்துரை, சிவஸ்ரீ கையிலாசநாதக்குருக்கள் போன்றோர் பற்றிய பல அரிய கட்டுரைகள் இவற்றில் இடம்பெற்றன.புலவர் ஈழத்துச்சிவானந்தன் புகழ்பெற்ற எழுத்தாளர், பேச்சாளர். இலங்கையில் அவர் வாழ்ந்த பொழுது பல பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையம் வெளியிட்டுள்ளார். "ஆலயமணி" என்பது அவற்றில் ஒன்று. இது ஆன்மீகம் சம்பந்தமான பல கட்டுரைகளை வெளியிட்டது. "வாழ்க்கை" என்பது அவர் வெளியிட்ட இன்னுமொரு சஞ்சிகையாகும். கலை, இலக்கியம் சம்பந்தமான பல கட்டுரைகள் இடம் பெற்றன. இவை இரண்டும் வெவ்வேறு கால கட்டங்களில் மாதாமாதம் வெளிவந்தன. சில மாதங்களின் பின் நின்று போயின. இலங்கையில் தேர்தல் காலங்களில் பல பத்திரிகைகள் தோன்றி மறைவது வழக்கம். ஈழத்துச் சிவனந்தன், வ. நவரத்தினத்தின் சுயாட்சிக் கழகத்தில் இருந்தவர். அக்கட்சிக்காக "விடுதலை", "தமிழ் மகன்" ஆகிய பத்திரிகைகளை வெளியிட்டார். தேர்தல் முடிந்ததும் பத்திரிகைகளும் நின்று போயின.

புங்குடுதீவு 10 ஆம் வட்டாரத்தில் பிறந்த சின்னையா மகேஸ்வரன், "இந்துமகேஷ்" என்ற புனைபெயரில் எழுதிவருபவர். சிறுகதை, நாடகம், நாவல், கவிதை என்று மிக அதிகமாகவே எழுதியவர். இவர் தனது இளவயதில் 1970களில் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்தபோது "இதயம்" என்ற மாத சஞ்சிகையை வெளியிட்டார் "இந்துமகேஷ்" இப்பொழுது ஜெர்மனியில் வாழுகிறார். அங்கிருந்து "பூவரசு" என்னும் சஞ்சிகையை நீண்ட நாட்கள் நடத்தி வருகிறார். லண்டனில் வாழும் மு. நேமிநாதன் "தமிழ் அகதி" என்ற பெயரில் ஆங்கில தமிழ்ச் சஞ்சிகையொன்றை நடத்திவருகிறார். ப. கனகலிங்கம் புங்குடுதீவு 8 ஆம் வட்டாரத்தில் பிறந்தவர். கூட்டுறவு இயக்கத்துடன் அதிக ஈடுபாடு உடையவர். இவர்தான் இப்பொழுது வடமாகாண கூட்டுறவுச்சங்கங்களின் தலைவராகவும் இருக்கிறார். அப்பொழுது "சந்திப்பு" என்ற சஞ்சிகையை வெளியிட்டார். சிறந்த இலக்கிய ஏடாக வெளிவந்த இச்சஞ்சிகை சில இதழ்களுடன் நின்று கொண்டது. ப. கனகலிங்கம் 1997இல் கிளிநொச்சியில் வாழ்ந்தவர். அப்பொழுது (2002 வரை) "சங்கம்" என்ற கூட்டுறவு சார்ந்த பத்திரிகையை வெளியிட்டார். கூட்டுறவு சம்பந்தமான பல அரிய தகவல்கள் அச்சஞ்சிகையில் இடம் பெற்றன.

புங்குடுதீவில் பிறந்த கல்வியாளர்கள் சிலரும் தாம் சார்ந்த துறைகளில் சஞ்சிகைகளை வெளியிடுவதில் ஆர்வம் காட்டினர். 1955ஆம் ஆண்டளவில் வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலிருந்து "இளஞாயிறு" என்ற சஞ்சிகை வெளிவந்து கொண்டிருந்தது. அச்சஞ்சிகையின் ஆசிரியர் குழுவில் பேராசிரியர் வீ. சிவசாமியும் கடமையாற்றினார். யாழ்ப்பாணப் பல்கலைக் கழகக் கலைப்பீடம் "சிந்தனை" என்ற இதழை வெளிட்டது. இச்சஞ்சிகையின் பிரதான ஆசிரியராக பேராசிரியர் கா. குகபாலன் விளங்கினார். 1999 ஆம் ஆண்டு முதல் 2005 வரை ஆறு ஆண்டுகளாக இவர் இச்சஞ்சிகையின் ஆசிரியராக இருந்து இலக்கியப்பணி செய்தார். விரிவுரையாளர் ந. பேரின்பநாதன் புங்குடுதீவில் பிறந்த அறிஞர். பொருளியல் சம்பந்தமான பல நூல்களை எழுதிப்புகழ் பெற்றவர். இவர் " பொருளியலாளன்" என்ற இதழை நீண்ட காலம் நடத்தி வந்தார். பொருளியல் கற்கும் மாணவர்களுக்கு அச்சஞ்சிகை பேருதவியாக அமைந்தது.

புங்குடுதீவில் பிறந்த அம்புறோஸ் பீட்டர் கொழும்புக் கிறிஸ்தவர்கள் மத்தியில் புகழ்பெற்றவர். இவர் நீண்டகாலம் "தாய்" என்ற சஞ்சிகையை நடத்தி வந்தார். 1983ஆம் ஆண்டளவில் "சந்தியோ அமிர்தராஜ்" என்னும் இளைஞர் புங்குடுதீவு தபாலகத்தில் கடமையாற்றி வந்தார். இலக்கிய ஆர்வம் மிக்க இவர் "அமிர்தம்" என்ற சஞ்சிகையை நடத்தி வந்தார்.இலங்கைத் திரைப்படக் கூட்டுத்தாபனம் வருடா வருடம் ஒரு ஆண்டு மலரை வெளியிட்டு வருகிறது. இம்மலரில் மூன்று மொழிகளிலும் கட்டுரைகள் இடம்பெறுகின்றன. இம்மலரில் மூன்று மொழிகளுக்கும் மூன்று ஆசிரியர்கள் பொறுப்பாக இருப்பார்கள். இம்மலரின் தமிழ்மொழிப் பிரிவுக்கு தம்பிஐயா தேவதாஸ் ஆசிரியராக இருந்தார். 2004 ஆம் ஆண்டு "பிலிம்ஸ்ரார்" என்ற மும்மொழியினாலான சினிமாச் சஞ்சிகை கொழும்பிலிருந்து வெளியானது. இச்சஞ்சிகையின் தமிழ்ப் பிரிவுக்கு தம்பிஐயா தேவதாஸ் பொறுப்பாக இருந்தார். இப்பொழுது சஞ்சிகைகள் இணையத்திலும் வெளிவரத் தொடங்கிவிட்டன. "தமிழ்நூலகம்" என்ற சஞ்சிகை இணையத்தில் வெளிவந்து கொண்டிருக்கிறது. பழைய தமிழ் நூல்கள் பலவற்றை இவ்விணைய சஞ்சிகையில் வாசிக்கலாம். புங்குடுதீவைச் சேர்ந்த பல எழுத்தாளர்களது நூல்களின் விபரங்களையும் இச்சஞ்சிகை மூலம் அறியலாம். அதன் ஆசிரியராக புங்குடுதீவில் பிறந்த தில்லைநாதன் கோபிநாத் என்ற இளைஞர் விளங்குகிறார்.

# 21

# புங்குடுதீவு வர்த்தகப் பெருமக்கள்

புங்குடுதீவில் பிறந்த பலர் உள்ளூரிலும் வெளியூர்களிலும் சிறந்த வர்த்தகர்களாக விளங்குகின்றனர். தென்னிலங்கையில் பல இடங்களிலும் இவர்களுக்கு கடைகள், வீடுகள் இருந்தன. காலத்துக்குக் காலம் நாட்டில் ஏற்பட்ட குழப்பங்கள் காரணமாக தமது வர்த்தகத்தை படிப்படியாக குறைத்துக்கொண்டு கொழும்புக்கும் ஊருக்கும் திரும்பினர். இவர்கள் தமது பிள்ளைகளை வெளிநாடுகளுக்கு அனுப்பினர். கிராமத்தின் இளைய தலைமுறையினருக்கு இப்பொழுது வெளிநாடுகளிலும் வர்த்தகநிலையங்கள் இருக்கின்றன.

ஒரு காலத்தில் புங்குடுதீவு மக்கள் தென்னிலங்கையில் வர்த்தகத்துறையில் பெரும்புகழுடன் விளங்கினர். தமது உடலை வருத்தி படிப்படியாக உயர்நிலைக்கு வந்தனர். புறக்கோட்டையில் அரிசி, கிழங்கு, சில்லறைப் பொருட்கள் வியாபாரம் இவர்களின் கைகளிலேயே இருந்தது. தாம் வாழ்ந்த இடங்களில் தானதருமங்களில் ஈடுபட்டனர். அவர்கள் வர்த்தகத்துடன் சமூக சேவையிலும் ஈடுபட்டனர். அதன் காரணமாக அவர்கள் வர்த்தகம் செய்த ஊர்களின் பெயர்களும் அவர்களின் பெயரின் முன்னால் ஒட்டிக் கொண்டன. பொரளை-நாகலிங்கம், தெரணியகலை-தம்பர், நுவரெலியா-கார்த்திகேசு, யக்குவெல-கந்தையா, பாணந்துறை-ஐயாத்துரை, காவத்தை - கணபதிப்பிள்ளை, அகலவத்தை - குழந்தைவேலு, குளியாப்பிட்டி - அப்பாக்குட்டி போன்ற பெயர்கள், இவ்வாறு வந்த பெயர்களுக்கு சில உதாரணங்களாகும். சில வர்த்தகர்களின் பெயருடன் அவர்களது நிறுவனத்தின் பெயர்களும் ஒட்டிக் கொண்டன. வூட்லண்ட் - மார்க்கண்டு, ஓம் சரவணா - முருகானந்தவேல், விக்டோறியா - தில்லைநாதன் போன்றவையே அந்தப் பெயர்கள்.

புங்குடுதீவில் பிறந்த இளைஞர்கள் ஆரம்பத்தில் வெளியூர்களுக்குச் சென்று உழைத்தனர். பிரபல வர்த்தகர்கள் என்ற நிலைக்குப் பலர் உயர்ந்தனர். ஊராருக்கு உதவி செய்ததுடன் தமது ஊரின் பெயரையும் உயர்த்தினர். அவர்கள் அனைவரினதும் பெயர்களையும் இச்சிறிய நூலில் அடக்க முடியவில்லை. ஆனாலும் அவர்களில் சில பெயர்களை மிக அதிகமாகவே நினைத்துப் பார்க்க வேண்டியிருக்கிறது.

பிருந்தாவனம் பொன்னையாவை பலரும் அறிவர். அவர் பலவழிகளிலும் புங்குடுதீவின் வளர்ச்சிக்கு உதவியிருக்கிறார். புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் பிறந்த அப்பாக்குட்டியரும் மாலைகட்டியரும் பிரபல வர்த்தகர்களாக விளங்கினர். அப்பாக்குட்டியின் புத்திரரான இலங்கைநேசனும் புங்குடுதீவின் வளர்ச்சியிலும் கோயில்களின் வளர்ச்சியிலும் பேருதவி புரிந்தவர். கண்ணகை அம்மன் கோவிலின் தெப்பத் திருவிழாவை பெரிதாக செய்து மகிழ்ந்தவர். இவ்வாறே பலரைப் பற்றியும் எழுதிக் கொண்டே போகலாம்.



## நா.கா. நாகலிங்கம்

(பொரளை- நாகலிங்கம்)

புங்குடுதீவு பெற்ற புதல்வர்களில் புகழ்பெற்ற மூத்த வர்த்தகர் தான் இவர். கொடைவள்ளல் எனப்புகழ் பெற்ற நா.கா. நாகலிங்கம் பொரளையில் நீண்டகாலம் வர்த்தகம் செய்தவர். புங்குடுதீவு கலட்டி வரசித்தி விநாயகர், கண்ணகி அம்மன் கோவில் ஆகியவற்றின் வளர்ச்சியில் பெரும் பங்காற்றியவர். 18.10.1892இல் புங்குடுதீவில் பிறந்த இவர், இங்கேயே கல்விகற்றார். கொழும்புவந்து சிலகாலம் கடைச் சிப்பந்திவேலை செய்தார். 26 வயதில் பொரளையில் தனியாக கடையொன்றை ஆரம்பித்தார். பின்பு தனது சகோதரன் கா. கணபதிப்பிள்ளையுடன் சேர்ந்து தொழில் செய்தார். தொழில் வளர்ச்சியின் பின் ஆறுகடைகளுக்குச் சொந்தக்காரரானார். தனது வாழ்க்கைக்குத் தேவையான செல்வத்தைத் தேடிக் கொண்டதும் அவரது மனம் பொதுசன சேவையில் ஈடுபடத்தொடங்கியது. கொழும்பில் கதிர்காம யாத்திரிகர் தொண்டர் சபையை ஏற்படுத்தி அதன் முதலாவது தலைவராக பணியாற்றினார். தான் பிறந்த புங்குடுதீவையும் எண்ணிப்பார்த்து 'அகில இலங்கை புங்குடுதீவு மகா சபை' என்ற அமைப்பை ஏற்படுத்தினார்.

இவ்வாறு இவர் உயர்ந்து வரும் பொழுது இவரது வாழ்க்கையில் பெருந்துன்ப நிகழ்ச்சி நடைபெற்றது. இவரது மனைவியின் பெயர் நாகம்மையார். பரமேஸ்வரி என்னும் புதல்வியும், மகாலிங்கம் என்னும் புதல்வனும் இருந்தார்கள். 1942 ஆம் ஆண்டு பண்ணைக் கடலில் நிகழ்ந்த படகு விபத்தில் இவரது மனைவியும் புதல்வியும் புதல்வனும் பலியானார்கள். துன்பக் கடலில் மூழ்கிய நாகலிங்கம் அவர்கள், காசிக்கு யாத்திரை சென்று நீண்ட நாட்களின் பின் இலங்கை திரும்பினார். புங்குடுதீவு கலட்டி வரசித்தி விநாயகர் ஆலயத்தை புனருத்தாரணம் செய்தார். கண்ணகை அம்மன் ஆலயத்தின் பரிபாலன சபைத் தலைவராக இருந்து சேவையாற்றினார். புங்குடுதீவு மகாவித்தியாலயத்திலும் ஓர் ஆலயம் அமைத்துக் கொடுத்தார். புங்குடுதீவில் நடைபெற்ற சிலப்பதிகார விழாவுக்கும் கலட்டி விநாயகர் ஆலயத்தில் நடைபெற்ற மகாயாக விழாவுக்கும் முக்கியமான காரணகர்த்தா இவரே. கொழும்புக்கு வரும் புங்குடுதீவு மக்களுக்கு விருந்தளிப்பது இவரது சுபாவம். பொரளையில் இவர் வாழ்ந்த இல்லம் எந்நேரமும் ஓர் அன்ன சத்திரமாகவே காட்சியளிக்கும். வாழ்வில் பெருமைபெற்றது போல் இவர் இறக்கும் பொழுதும் பெருமை பெற்றார். கலட்டி வரசித்தி விநாயகர் தேர்த்திரு விழாவிலே சுவாமி இருப்புக்கு வரும் பொழுது இவர் இறைவனடி சேர்ந்தார் என்ற செய்தி கிடைத்தது. ஆம் அவர் 02.04.1961 இல் காலமானார். "நாகலிங்கம் அவர்களின் வாழ்வு புங்குடுதீவு மக்களுக்கு மட்டுமன்றி இலங்கை வாழ் அனைத்து மக்களுக்கும் எடுத்துக்காட்டு ஆகும்". என்று அறிஞர் குல. சபாநாதன் குறிப்பிட்டுள்ளார். 1929 ஆம் ஆண்டு இலங்கை 'மேல்மக்கள் சரித்திரம்' என்ற நூல் வெளியிடப்பட்டது. இந்நூலில் சேர். பொன். இராமநாதனின் வாழ்க்கை வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. இதே நூலில் நாகலிங்கம் அவர்களுடைய வரலாறும் இடம்பெற்றிருப்பது இவரது சேவைக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.



## மு. முத்தையாபிள்ளை

(மூனா மூனா)

புங்குடுதீவிலே விதானையார் சுப்பரின் மரபிலே முருகேசு முத்துப்பிள்ளை தம்பதிகளுக்கு நான்காவது புதல்வராக பிறந்தவரே 'மூனா மூனா' என்ற மு. முத்தையாபிள்ளை. ஆரம்பத்தில் புங்குடுதீவிலும் பின்பு இளவாலையிலும் கல்வி கற்றார். இளமைப்பருவத்தில் தந்தையை இழந்த முத்தையாபிள்ளை, தனது இருபதாவது வயதில் தொழில் தேடிக் கொழும்புக்கு வந்தார். ஆரம்பத்தில் 5ஆம் குறுக்குத் தெருவில் ஒரு கடையில் காரியஸ்தராகக் கடமையாற்றினார். தனது தம்பியான கனகரத்தினம் (மூனா கானா) அவர்களுடன் சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்தார். கடும்முயற்சியின் பின் இருவரும் பெரும் பணக்காரர் ஆனார்கள்.

மூனா மூனா அவர்கள் புங்குடுதீவைச் சேர்ந்த கண்ணையா அவர்களின் புதல்வி மகாலெட்சுமியை மணந்து நான்கு புதல்வர்களையும் மூன்று புதல்விகளையும் பெற்றார். தனது விடாமுயற்சியினால் பல வர்த்தக ஸ்தாபனங்களை ஏற்படுத்தினார். நிலபுலங்களை கொழும்பில் வாங்கினார். ஆட்டுப்பட்டித்தெருவில் உள்ள உம்பிச்சிப் பிளேஸில் உள்ள வீடுகளில் பல இவருக்கு சொந்தமாகின. தனது வர்த்தக நிலையங்களில் புங்குடுதீவு மக்களுக்கு வேலை வழங்கினார். இனபந்துகளுக்கு உதவி செய்தார். கண்ணகி அம்மன் கோவிலைப் புனருத்தாரணம் செய்தார். தனது தாயார் முத்துப்பிள்ளையின் பெயரால் அங்கு அன்னதான மடம் அமைத்து திருவிழாக்களின் போது அன்னதானம் வழங்கினார். இந்த சேவையை அவரது பிள்ளைகள் தொடர்ந்து செய்கின்றனர்.

எவரையும் வசீகரப்படுத்தும் கம்பீரமான தோற்றமும் நீண்ட கைகளையுமுடைய அதிர்ஷ்டசாலி. புங்குடுதீவு கண்ணகை அம்மனையும் கொட்டாஞ்சேனை மாரியம்மனையும் குலதெய்வமாகக் கொண்டு வணங்குபவர்.அறுபது வயதுவரை மட்டும் வாழ்ந்த மு.முத்தையாபிள்ளை தான் வாழ்ந்த காலத்தில் நாட்டுக்கும் தான் பிறந்த புங்குடுதீவுக்கும் பல்வேறு சேவைகளைச் செய்தவர்.

## ஐயம்பிள்ளை நல்லதம்பி

(பணக்கார நல்லதம்பி)



பிறப்புச்சாட்சிப்பத்திரம் புழக்கத்தில் இல்லாத 1888ஆம் ஆண்டில் புங்குடுதீவில் பிறந்தவர் நல்லதம்பி. புகழ்பெற்ற வைத்தியர் கந்தையாவின் மகளான ஆச்சிமுத்துவை திருமணம் செய்ததன் மூலம் அதிகமான காணிகளுக்கும் ஆடு, மாடு போன்ற செல்வங்களுக்கும் உரித்துடையவரானார். நல்லதம்பி அவர்கள் முதலில் விவசாயமும் பின்பு வியாபாரமும் செய்தார். 1925ஆம் ஆண்டு வட்டிக்குக் கொடுக்கும் தொழிலை ஆரம்பித்து பெரும் பணக்காரரானார். "பணக்கார நல்லதம்பி" என்ற பெயரையும் பெற்றார்.

கிராமத்தின் பொது மக்கள் மட்டுமன்றி கொழும்பு போன்ற நகரத்தில் வர்த்தகம் செய்த பல முதலாளிகளுக்கும் வட்டிக்கு பணம் வழங்கியிருக்கிறார். வங்கிகள் இல்லாத அந்தக்காலத்தில் இவர்தான் புங்குடுதீவின் "கிராமவங்கி" யாகத் தொழிற்பட்டார்.

இவர் படித்த கணேச வித்தியாசாலையில் ஆரம்பத்தில் மதியபோசனம் வழங்கப்பட்டு வந்தது. அந்த நற்செய்கைக்கு இவர் பணம் வழங்கினார். கண்ணகை அம்மன் கோயிலின் இரண்டாம் திருவிழாவை செய்து வந்தார். தெங்கந்திடல் பிள்ளையார் கோவிலை பெரிதாகக் கட்டி கும்பாபிஷேகம் செய்தார். தெங்கந்திடல் குளத்தை ஆழமாக்கி அயலிலுள்ள வயல்களுக்கு நீர்பாய்ச்சல் வசதி செய்தார். உயரப்புலம் என்ற குறிச்சியில் வாழும் ஹரிஜன மக்களுக்கு காணி வழங்கினார்.

தல்லமியில் உள்ள இவரது வீட்டைச்சுற்றி இவருக்குச் சொந்தமான நெல்வயல்கள் இருக்கின்றன. மாரி காலத்தில் இந்நெல்வயல்கள் அனைத்தும் பச்சைப்பசேல் என்று காட்சியளிக்கும். அந்தக் காட்சியைக் கண்டே பூரித்துப் போவார். இவரது மக்களும் மருமக்களும் எமது கிராமத்தின் பெயர் உயர்வுக்கு வழிவகுத்தனர். புகழ்பெற்ற டாக்டர் கந்தையா இவரது மகன்களில் ஒருவராவார். புகழ்பெற்ற எழுத்தாளர் மு. தளையசிங்கம் இவரது மருமகன்களில் ஒருவராவார். பிரபலவர்த்தகர் லெ.ஸ்ரீகாந்தன் இவரது பேரப்பிள்ளைகளில் ஒருவர்.

## அமரர் மு. கனகரெத்தினம்

(மூனா கானா)



புங்குடுதீவிலே பிறந்த இவர், கொழும்பிலே பெரும் வர்த்தகராக விளங்கினார். ஆரம்பத்தில் புங்குடுதீவிலும் பின்பு கொழும்பிலும் கல்விகற்றார். இளமையிலேயே வியாபாரத்திறன்மிக்க இவர், தனது சகோதரர், மூனா மூனாவுடன் சேர்ந்து வியாபாரத்தில் ஈடுபட்டார். முருகேசு முத்துப்பிள்ளை தம்பதியருக்கு ஐந்தாவது புதல்வனாகப் பிறந்த (14.11.1913) இவர், சிறந்த மதிநுட்பமும் அயராது உழைக்கும் ஊக்கமும் கொண்டவர். உழைப்பால் உயர்ந்த இவர், கொழும்பிலே 'மூனா கானா' என்ற வியாபார நிலையத்தை நிறுவிப் பலருக்கு தொழில் வாய்ப்பு வழங்கினார்.

பொலிஸர் கந்தையா அவர்களின் மகளும் பிரபல வர்த்தகர் என்.கே. மயில்வாகனம் அவர்களின் சகோதரியுமாகிய பராசக்தி அவர்களை மணந்தார். கருணாகரன், சண்முகநாதன், சர்வானந்தசிவம், விநாயகமூர்த்தி, திலகவதி, சத்தியவதி, வடிவழகி ஆகிய ஏழுமணிகளின் தந்தையானார். முப்பது வருடங்களாக பிரபல வணிகராகவிளங்கி ஏற்றுமதி இறக்குமதி வியாபாரத்தில் ஈடுபட்டு சீரும்சிறப்புமாக வாழ்ந்தார். சிவனடியார்களையும் அந்தணர்களையும் ஆதரித்து அன்பு செய்வார். இனத்தவர்களுக்கும் ஊரவர்களுக்கும் ஏழைகளுக்கும் அள்ளி வழங்கினார். தமது ஐம்பதாவது வயதில் (03.11.1963) காலமானார். பிரபலவர்த்தகர் மு. கருணாகரன் இவரது மூத்த மகனாவார். மூனா கானா புங்குடுதீவில் பிறந்தவர் என்பதையிட்டு புங்குடுதீவு மக்கள் பெருமைப்படுகிறார்கள்.

## அமரர் என். கே. மயில்வாகனம்



புங்குடுதீவு பல தலைசிறந்த தொழில் அதிபர்களைக் கண்டிருக்கின்றது. அந்த வகையில் பொதுப்பணி, சமூகப்பணி, சிவப்பணி ஆகியவற்றில் என். கே. மயில்வாகனம் பெரிதும் ஈடுபட்டவர். சிவந்த மேனி, கம்பீரமான உருவம், சிரித்த முகம் இவைதான் இவரின் அடையாளங்கள். கொழும்பு கதிரேசன் கோயில், புங்குடுதீவு மேற்கு இறுபிட்டி, மூத்தநயினார்புலம் வீரகத்தி விநாயகர் ஆலயம் ஆகியவற்றின் தலைவராகவும் காப்பாளராகவும் விளங்கி ஆலயத்தின் முக்கிய பணிகளைச் செய்துள்ளார். மூலஸ்தானம், முன்மண்டபம் கருங்கல்லினால் செய்ததுடன் கிருஷ்ணர் ஆலயம், பத்திரகாளி ஆலயம், சண்டேசுரர் ஆலயம், யாகசாலை, அர்த்தமண்டபம், தரிசன மண்டபம், கூரை வேலைகள், சித்திரத்தேர், கொடித்தம்பம் இவற்றையெல்லாம் முன்னின்று அமைத்தவர். அத்துடன் ஆலய அன்னதான சபையைத் திறம்பட நடத்தியவர். புங்குடுதீவு கண்ணகி அம்மன் ஆலயத் திருப்பணிக்கு வாரி வழங்கிய பெருவள்ளல். இலங்கையில் பல ஆலயத் திருப்பணிகளுக்கும் பொதுப்பணிகளுக்கும் வாரி வழங்கிய பெருமகனார்.

புங்குடுதீவு மத்திய மகா வித்தியாலய வளர்ச்சியில் பெரிதும் ஈடுபட்ட இவர், 1973 ஆம் ஆண்டு புங்குடுதீவு சுப்பிரமணிய வித்தியாசாலையிலிருந்து புங்குடுதீவு மகாவித்தியாலயத்திற்கு குழாய் மூலம் குடிநீர் வழங்கி மாணவர்களின் தாகசாந்திக்காக பெரும்பணி செய்தவர். இவருடைய இந்தச் சேவையை என்றும் புங்குடுதீவு மக்கள் நினைவு கூருகின்றார்கள். புங்குடுதீவில் வாழ்ந்த தொழில் அதிபர்களில் தன்னுடைய சொந்தப் பணத்தை சமூகப்பணிக்கு செலவு செய்த பெருந்தகை. புங்குடுதீவு மக்கள் இவருடைய பணிகளை என்றும் மறந்துவிட மாட்டார்கள் என்பது உறுதி. எக்கவுண்டன் சிதம்பரநாதன் இவரது மூத்தமருகனாவார்.

## அமரர் எஸ். கே. செல்லையா



சிரித்த முகம் திடகாத்திரமான உடல்வாகு, நகைச்சுவை கலந்த பேச்சு, தூயவெண்ணிறத்தில் வேட்டியும் நஷனல் சேட்டும் இவை தான் அமரர் எஸ்.கே. செல்லையாவின் அடையாளங்கள். புங்குடுதீவு கண்ணகை அம்மன் ஆலயத்தின் மீதும் கொழும்பு கதிரேசன் ஆலயத்தின் மீதும் அளவிலாத பக்தி கொண்டவர். வேலைக்குப் போகும் பொழுதெல்லாம் கதிரேசன் கோவிலில் இறங்கி இறைவனை தரிசித்துவிட்டுத் திருநீறு சந்தனம் பூசிக்கொண்டே கடைக்குப் போவார்.

புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவிலில் பஞ்சாயத்து அங்கத்தவராக இருந்து பல காலம் பணியாற்றியவர். புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவிலுக்கான இராஜகோபுரம் அமைப்பதற்கு முன்னின்று உழைத்தவர்களில் அமரர் எஸ்.கே. செல்லையா முக்கியமானவர். இந்தக் கோவிலில் நவக்கிரகக் கோயிலை முதன் முதலில் அமைத்துக் கொடுத்தவரும் இவர் தான்.

கால்நடைகள் மீது காருண்யம் கொண்ட இவர், அவை நீர் பருகுவதற்கு வசதியாக பல குளங்களை அமைத்துக் கொடுத்தார். புங்குடுதீவு தென்கரையில் உள்ள மணற்காடு மயானத்தை புதுப்பித்துக் கொடுத்தார். புங்குடுதீவிலுள்ள பல பாடசாலைகளுக்கு தன்னாலான உதவிகளைச் செய்தார். இவரது நல்ல குணத்துக்கும் செயலுக்கும் எடுத்துக் காட்டாக, இவரது மரணச் சடங்கில் கலந்து கொண்ட ஏராளமான மக்கள் கூட்டத்தின் மூலம் நாம் அறிந்து கொள்ள முடிந்தது.

இவரது சேவை, தான் பிறந்த புங்குடுதீவுக் கிராமத்துக்குள் மட்டும் நின்றுவிடவில்லை. கொழும்பிலும் பல பணிகளைச் செய்தார். செக்கடித்தெரு கதிரேசன் கோவிலை புனருத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்தார். அக்கோயிலின் உள் வீதியில் உள்ள வைரவர் கோவிலை தனது சொந்தச் செலவில் கட்டிக் கொடுத்தார். இவரது நல்ல குணத்துக்கு ஏற்ப இவரது பிள்ளைகளும் பல்வேறு பொதுத் தொண்டுகளைச் செய்கிறார்கள். மூத்த மகனான செ. மகேந்திரனும் பல தொண்டுகளைச் செய்து வருகிறார். அமரர் செல்லையா விட்டுச் சென்ற பணிகளை அவரது புதல்வர்கள் தொடர்ந்து தொட்டுச் செய்ய வேண்டும்.

### அமரர் சின்னையா முத்துக்குமாரு



யாழ்ப்பாணத்தில் அம்பிகாபதி ரெக்ஸ்ரைல்ஸ் என்ற நிறுவனத்தை ஆரம்பித்தவர் திரு. சின்னையா முத்துக்குமாரு ஆவார். புங்குடுதீவில் 11ஆம் வட்டாரத்தில் பிறந்த இவர், இளவயது முதலே நல்லொழுக்கமும் இறைபக்தியும் நிறைந்து விளங்கினார். கல்விபயின்று வணிகத் தொழிலை மேற்கொண்டார். நேர்மையும் உழைப்பும் கடவுள் பக்தியும் அவரைப் பெருமகனாக்கின. புங்குடுதீவு கண்ணகை அம்பாள் மீது அளவில்லாது பக்தி கொண்டு பல தொண்டுகள் புரிந்தார். இவ்வாலயத்தின் பரிபாலனசபை உறுப்பினராகவும் இருந்து தொண்டாற்றினார். அம்பாள் ஆலயத்தின் தேர்த்திருப்பணிச்சபையின் தலைவராக இருந்து, கொழும்பு முதலான இடங்களுக்குச் சென்று நிதி சேர்த்து வந்து சித்திரத் தேர்த்திருப்பணியை சிறப்புற நிறைவேற்றிவைத்தார். உழைப்பால் உயர்ந்தவரான முத்துக்குமாரு அவர்கள் தன்னை நாடி வந்தோருக்கெல்லாம் இன்முகம் காட்டி அன்போடு ஆதரவு காட்டி உதவிகள் செய்வார்.

### அமரர் ரத்கம சண்முகம்



அரசன் கோயில் கட்டுவான் அல்லது ஊர்மக்கள் ஒன்று கூடிப் பணஞ் சேர்த்துக் கோயில் கோபுரம் கட்டுவர். ஆனால் புங்குடுதீவில் ஒரு தனிமனிதர் தனது சொந்தச் செலவில் கோபுரமொன்றைக் கட்டி கும்பாபிஷேகம் செய்திருக்கிறார். அந்தத்தனி மனிதன் தான் புங்குடுதீவு இரண்டாம் வட்டாரத்தில் பிறந்த நாகலிங்கம் சண்முகம். அவர் கட்டிய கோபுரம்தான் புங்குடுதீவுச் சிவன்கோவிலின் இராஜகோபுரமாகும்.

நாகலிங்கம் சண்முகத்துக்கு கொழும்பு 4ஆம் குறுக்குத் தெருவில் வர்த்தக நிலையம் ஒன்று இருந்தது. அதன் பெயர் தான் "ரத்கம ஸ்ரோர்ஸ்" ஆகும். அதன் உரிமையாளரான சண்முகம் "ரத்கம சண்முகம்" என்று அழைக்கப்பட்டார்.

இவருக்கொரு ஆண் குழந்தை பிறந்தான். அவன் பிறந்த அதிர்ஷ்டத்தால் தந்தையாருக்கு செல்வம் பெருகியது. பெரும் செல்வத்தைக் கொடுத்த இறைவன் அந்த "ஆண்மகன்" என்ற செல்வத்தை எடுத்துக் கொண்டான். இந்த செல்வமகனின் நினைவாக ஆலய கோபுரம் ஒன்றை கட்டி எழுப்ப எண்ணினார் தந்தை. அதன் விளைவாகத்தான் சிவன்கோவில் இராஜகோபுரம் எழுந்தது. இவர் இன்னுமொரு கைங்கரியத்தையும் செய்தார். தென்னிந்தியப்பாடகர் ஒருவர் புங்குடுதீவில் முதன்முதலில் பாடியது இந்த சிவன் கோவிலில்தான். சீர்காழி கோவிந்தராஜனின் இசைக்கச்சேரியை இக்கோவிலின் கும்பாபிஷேகத்திற்காக இந்த சண்முகம் ஒழுங்கு செய்து நடத்தினார். அன்று சீர்காழி கோவிந்தராஜன் புங்குடுதீவில் பாடிய பாடல்கள் இலங்கை வானொலி மூலம் இலங்கையெங்கும் ஒலிபரப்பானது. இவ்வாறான பணிகளை ஊருக்குச் செய்தமையால் நாகலிங்கம் சண்முகம் "உத்தம சோழன்" என்று அழைக்கப்பட்டார். கோவிலுக்கு மட்டுமல்ல ஊர்மக்களுக்கும் உறவினர்களுக்கும் அள்ளிக்கொடுத்தார். தன்னுடன் கடைசி வரை இருந்த நண்பர்களுக்கு தன்னாலான உதவிகளைச் செய்தார். நாகலிங்கம் சண்முகம் இறந்துவிட்ட போதும் அவர்கட்டி எழுப்பிய சிவன்கோவில் இராஜகோபுரம் அவர் பெயரை என்றும் உயர்வாகக் கூறிக்கொண்டே இருக்கும்.

## அமரர் கதிர்காமரும் புத்திரர்களும்



க.பொன்னம்பலம்

கார்த்திகேசு கதிரேசு என்ற இயற்பெயர் கொண்ட கா. கதிர்காமர், புங்குடுதீவு 10ஆம் வட்டாரத்தில் செல்வந்தராக வாழ்ந்தவர். விவசாயம் செய்து உயர்ந்தவர். ஊர்மக்களுக்கு உதவி செய்தவர். கொழும்பில் வாழ்ந்த வர்த்தகர்களுக்கும் உதவி செய்து அவர்கள் வர்த்தகத்தில் உயர்வடைய உதவி செய்தவர்.

கதிர்காமரின் பிள்ளைகள்தான் க. முத்துவேலு, க. தாமோதரம்பிள்ளை ஆசிரியர், க. பொன்னம்பலம், க. ஆறுமுகம், க. மார்க்கண்டு ஆகியோராவர். கதிர்காமரின் மூன்றாவது புத்திரரான க. பொன்னம்பலம் உழைப்பால் உயர்ந்தவர். புறக்கோட்டையில் பல வர்த்தக நிலையங்களுக்கு உரிமையாளர். கண்ணகை அம்மன் ஆலயத்தில் தன்னை மறந்து அபிராமி அந்தாதி பாடும்பொழுது கேட்போரின் மனம் உருகிவிடும். மிகவும் எளிமையாக தேசிய உடையில் காட்சியளிப்பார். அடுத்தவருக்குத் தெரியாமல் உதவிசெய்வார். 1992ஆம் ஆண்டு தனது 58ஆவது வயதில் காலமானாலும் இவரது இனிமையான குரல் இன்றும் நினைவில் நிற்கிறது. இவரது மூத்த மருமகள் தான் இந்து கலாசார திணைக்களப் பணிப்பாளர் திருமதி. சாந்தி நாவுக்கரசன். இவரது புதல்வர்களில் ஒருவர்தான் பிரபலதிரைப்படத் தயாரிப்பாளர் பொன். ஆரூரன்.

க. ஆறுமுகம் "ஜாஎல" என்ற இடத்தில் வர்த்தகம் செய்தவர். எண்ணெய் மில் போன்றவற்றை வைத்திருந்தவர். "ஜாஎல - ஆறுமுகம்" என்று அன்புடன் அழைக்கப்பட்ட இவர், புங்குடுதீவின் மீதும் மக்கள் மீதும் அபிமானம் கொண்டவர். இப்பொழுது குடும்பத்தாருடன் கனடாவில் வாழுகிறார்.

கதிர்காமரின் கடைசி மகனான க. மார்க்கண்டுவும் சிறந்த வர்த்தகர். நீண்டகாலம் கொழும்பு ஆமர்வீதியில் வர்த்தகம் செய்தவர். தன் தகப்பனாரின் பெயரில் "கதிர்காமர் பில்டிங்" என்ற மாடிக்கட்டிடத்தைக் கட்டியவர்.

"வுட்லண்ட்" என்ற பெயரில் ஹோட்டலும் வர்த்தக நிலையமும் நடத்தி வருபவர். தன் சேவைகளை வெளியே சொல்லமாட்டார். அமைதியாக இருப்பார். ஆனால் அஞ்சாநெஞ்சன். இவரைப்போலவே இவரது புதல்வர் மா.லிங்கநாதனும் சேவைமனப்பான்மை கொண்டவர். புங்குடுதீவின் மீதும் அங்குள்ள கோயில்கள் மீதும் அபிமானம் கொண்டவர். புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவிலின் புனருத்தாரண சபைக்கு பொருளாளராக இருந்து கும்பாபிஷேகத்தை அழகாகச் செய்து முடித்தார்.

கதிர்காமரின் சகோதரர்கள் தான்.கா. அம்பலவாணர், கா. குழந்தைவேலு ஆகியோராவர். அம்பலவாணரின் மகன் தான் அ. கண்ணையா "சோத்துக் கடைக் கண்ணையா" என்று புகழ்பெற்ற இவர், கொழும்பில் சிறந்த வர்த்தகராக விளங்கியவர்.

கொழும்பில் கோட்டையிலும் பிற இடங்களிலும் இவருக்கு ஹோட்டல்களும் கடைகளும் இருந்தன. புங்குடுதீவு முருக்கடியில் இருந்த பலரைக் கொழும்புக்கு அழைத்து வந்து வர்த்தகத்தில் உயரவழி சமைத்தவர். கா. குழந்தைவேலு புங்குடுதீவில் நீண்ட நாட்களாக கடை வைத்திருந்தவர். இவரது மகன் கனகலிங்கம் கண்ணகை அம்மன் கோவிலின் ஆலய பரிபாலன சபைப் பொருளாளராக இருந்து பணி செய்கிறார்.

### அமரர் சுப்பிரமணியம் திருநாவுக்கரசு



புங்குடுதீவு "சந்தையடி மணியங்கடை" என்றால் எல்லோருக்கும் தெரியும். அந்தக் கடையின் உரிமையாளர் அமரர் மணியத்தையும் யாவரும் அறிவர். அவரது புதல்வர்கள் எல்லோருமே புங்குடுதீவின் உயர்ச்சிக்கு உழைத்தவர்கள். சுப்பிரமணியம் மாணிக்கம் தம்பதியரின் மூத்த புதல்வன்தான் அமரர் சு. திருநாவுக்கரசு. தனது மற்றைய சகோதரர்கள் போலவே உதவிகள் செய்வதில் உயர்ந்தவர். குறிகாட்டுவானிலே கடை அமைத்தார். அப்பொழுது எத்தனையோ பேருக்கு உணவளித்திருக்கிறார். அடுத்தவர்களை அன்புடன் விசாரித்து உதவி வழங்குவார். எந்த நிகழ்விலும் முன்னின்று உழைப்பார்.

மக்களுக்கு தொண்டாற்ற வேண்டும் என்ற ஆவலில் 3ஆம் வட்டார கிராம சபை உறுப்பினராக பல காலம் கடமையாற்றினார். இணக்கசபை உறுப்பினராகவும் பணியாற்றினார். இக்காலத்தில் இவர் அக்கறையுடன் மேற்கொண்ட சமாதானப் பணிகள் எத்தனையோ பிரச்சினைகளுக்கு தீர்வுகள் கண்டிருக்கின்றன.

1931ஆம் ஆண்டு பிறந்த சு. திருநாவுக்கரசு 2000 ஆம் ஆண்டு தனது 71 வயதில் தான் பிறந்த புங்குடுதீவு மண்ணிலே இறந்தார். அவர் இறந்து விட்டாலும் அவர் புகழ் அழியாது.

## அமரர் சின்னத்தம்பி பொன்னையா



புங்குடுதீவு 7ஆம் வட்டாரம் ஊரைதீவில் பிறந்த பழம் பெரும் வர்த்தகர்களில் அமரர் சின்னத்தம்பி பொன்னையா அவர்கள் முக்கியமானவர். புறக்கோட்டை கே. சிவசங்கரன் பிள்ளை ஸ்தாபனத்தில் கடமையாற்றியபோது சிறந்த நிர்வாகியாக விளங்கினார். கொழும்பில் நடைபெற்ற கலவரங்களின் போது கோயில்களில் தங்கிய அகதிகளுக்கு உதவி செய்வதில் முன்நின்றார். புறக்கோட்டையில் உள்ள பெரும்பாலான வர்த்தகர்கள் இவரிடமே அறிவுரைகள் பெறுவார்கள். குமாரவேல் கம்பனி உருவான போது அதன் ஒரு பங்காளராக சேர்ந்து தனது மூத்த மகன் ஸ்ரீ வைகுந்த வாசனுக்கு அந்த பங்கை வழங்கினார்.

புங்குடுதீவுக் கோவில் பலவற்றின் வளர்ச்சியல் அமரர் பொன்னையாவுக்கு பங்கிருக்கிறது. பாணாவிடை சிவன்கோவிலுடன் பரம்பரை தொடர்புடைய இவர், பட்டயகார அம்மன் கோவிலின் நிர்வாகசபையில் அங்கத்தவராவார். புங்குடுதீவு 4ஆம் வட்டாரம் வீரகத்தி விநாயகர் ஆலய நிர்வாகத்திலும் பங்கு பற்றிய இவர், பெருங்காடு சிவன் கோவிலின் பல அபிஷேகங்களைச் செய்தவர்.

இவரின் மூத்தமகனான ஸ்ரீ வைகுந்தவாசன் தந்தையைப் போலவே தர்மசிந்தைமிக்க வர்த்தகர். புங்குடுதீவின் வளர்ச்சிகளுக்கு முன்னின்று உழைப்பவர். பிரதி உபகாரத்தை எதிர்பாராமல் எவருக்கும் உதவி செய்வார். அமரர் பொன்னையாவின் இரண்டாவது மகனான கைலாசபதிவாகனும் சிறந்த வள்ளல். லண்டனில் வாழும் இவர் புங்குடுதீவின் வளர்ச்சிப்பணிகளுக்கு உதவி செய்பவர்.

இங்கிலாந்தில் வாழும் புங்குடுதீவு நலன்விரும்பிகள் சேர்ந்து தண்ணீர் பௌசர் ஒன்றை அனுப்பிவைத்தார்கள். அப்படிக் கொள்வனவு செய்த புங்குடுதீவு நலன்விரும்பிகளில் பொ. கைலாசபதிவாகனும் முக்கியமான ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## அமரர் செல்லையா சிவசாமி



புங்குடுதீவில் பிறந்த சமூகசேவையாளர்களில் செல்லையா சிவசாமியும் ஒருவர். கிளிநொச்சியில் சிறந்த வர்த்தகராக விளங்கினார். ஆசிரியமணி சி. க. நாகலிங்கம் அவர்களின் மூத்தமகளைத் திருமணம் செய்தார். கொழும்பில் இருந்து கப்பல்கள் மூலம் பொருட்களை யாழ்ப்பாணத்துக்கு அனுப்பிவைப்பதில் முன்னின்று உழைத்தார். கொழும்புக்கும் யாழ்ப்பாணத்துக்கும் தரைத்தொடர்பு தடைப்பட்ட போது இவரது சேவை அதிகமாக இருந்தது. கோவில்களின் வளர்ச்சிக்கும் கலைஞர்களின் வாழ்வுக்கும் பலவழிகளில் சேவை செய்தார். அவரது சேவைக்காக ஜே.பி. பட்டமும் கலாநிதிப் பட்டமும் பெற்றார். 2005ஆம் ஆண்டு காலமானார்.

## விவசாய மன்னன் கு.வி. தம்பித்துரை

புங்குடுதீவின் தொழில் மன்னர்களில் ஒருவரும் தொண்டுகள் பலவற்றின் தந்தையுமான அமரர் கு.வி. தம்பித்துரை அவர்கள் மறைந்து பல ஆண்டுகள் சென்றாலும் அவர் ஆற்றிய பணிகளை மக்கள் என்றும் மறந்துவிட முடியாது. தன் சொந்த முயற்சியினாலும் அயராத உழைப்பினாலும் முன்னேறிய இப்பெரியார், தன் வாழ்நாளில் ஆற்றிய பெரும் தொண்டினாலும் கொடையினாலும் அவரைத் தெரிந்த தெரியாத மக்கள் அனைவரின் உள்ளத்திலும் நீங்காத நிலைபெற்று வாழும் இடத்தைப் பெற்றுக்கொண்டார்.

பொருள் வளத்தால் உயர்வு பெற்ற காலத்திலும் பொருளற்றார் கூட்டுறவைக் கைவிடாது அவர்கள் துயர் தீர்க்க வாரிக்கொடுத்த வள்ளல் ஆவார். நற்பணிகள் எங்கெல்லாம் நடைபெற்றனவோ அங்கெல்லாம் அவரின் பொருளும் தொண்டும் பங்குகொண்டுள்ளன. அச்சுக்கலையில் யாழ்ப்பாணத்தில் புதிய சகாப்தத்தை உருவாக்கிய பெருமகனாரும் இவரே.1964-1968 காலப்பகுதியில் புங்குடுதீவுக் கிராம முன்னேற்றச் சங்கத் தலைவராக இருந்து உள்ளூராட்சி அமைச்சர் மு. திருச்செல்வம் அவர்களை வரவழைத்து புங்குடுதீவில் புதிய கிராம முன்னேற்றச் சங்கத்தை நிர்மாணித்த பெருமை இவருக்குண்டு.

இறுபிட்டி பெரியபுலம் விநாயகர் ஆலயம் புனருத்தாரணம் செய்யப்பட்டு அப்பகுதி மக்களின் ஆன்மீக வாழ்வுக்கு வழிகாட்டிய தொழில் மன்னர். கண்டி, மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் ஆகிய நகரங்களில் கலைவாணி புத்தகசாலைகள் மூலம் சிறந்த நூல்களை மக்களுக்கு விநியோகித்து அறிவு வளர்ச்சி பெற வழிகாட்டினார். மன்னார் மாவட்ட விவசாய மன்னனாய் விளங்கி நூற்றுக்கணக்கான வன்னி விவசாயிகளுக்கு தனது இயந்திரங்களாலும் பொருளாலும் உதவியளித்து முன்னேற உதவியளித்த சமூக தொண்டராவார்.

இத்தகைய திறமைகளும் உயர்ந்த மனப்பான்மையும் கொண்ட கு.வி.த. அவர்கள் மிகவும் குறுகிய காலத்தில் எம்மை விட்டு (28.04.1971) பிரிந்தமை புங்குடுதீவு. அனலைதீவு கிராம மக்களுக்கும் விவசாய உலகத்துக்கும் அச்சுத்தொழில் உலகத்துக்கும் என்றுமே ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். அமரரின் சேவைகள் என்றும் நிலையாய் நிலைத்திருக்கும், அமரர் மக்களின் மனங்களிலும் வாழ்ந்து கொண்டேயிருப்பார்.

## அமரர் சின்னத்தம்பி கனகசபை (மகோ)

புங்குடுதீவு 9ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த சின்னத்தம்பி சேதுப்பிள்ளை தம்பதியருக்கு கடைசி மகனாகப் பிறந்தவர் கனகசபை அவர்கள். இவர் தனது ஆரம்பக் கல்வியை புங்குடுதீவிலும் உயர்கல்வியினை திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாலயத்திலும் பயின்றவர். 1949ஆம் ஆண்டில் மகோவில் வர்த்தகத் தொழிலை மேற்கொண்டு 'மகோ கனகர்' எனும் பெயரைத் தனதாக்கிக் கொண்டவர். வர்த்தகத் துறை மூலம் உயர்வடைந்து, தான் பிறந்த மண்ணின் வட்டார அங்கத்தவராகவும் வல்லன் நாச்சிமார் கோயிலைக் கட்டி நிர்வகித்தும் வந்தவர்.

வல்லன்பதி அருள்மிகு பாலசுப்பிரமணியர் கோயில் அறங்காவலர் சபைத் தலைவராக இருந்து இரண்டு முறை இக்கோவில் கும்பாபிஷேகம் செய்தவர். 1952ஆம் ஆண்டு தனது தாயார் நடாத்திவந்த கூட்டுறவுக் கடையை தானே நடாத்தி பல குடும்பங்களுக்கு உதவியாக இருந்தவர். பின்னர் புங்குடுதீவு 3ஆம் வட்டாரத்தில் வசித்து வரும் காலத்தில் தனது வீட்டுக்கு அருகாமையில் பெருங்காடு அமெரிக்கன் மிஷன் பாடசாலையை விஸ்தரிப்பதற்காக காணி தேவைப்பட்ட பொழுது தனது வீட்டோடு சேர்ந்த காணியின் சிறு பகுதியை கொடுத்து அங்கு கல்வி பயின்ற மாணவர்களுக்கு இன்னும் பல வகுப்புகள் உருவாக காரணமாக இருந்தவர். சர்வோதயம் போன்ற ஸ்தாபனங்களுக்கும் தனது வீட்டை பாவனைக்குப் பல காலம் கொடுத்து உதவியவர். இப்பெரியார் மறைந்தாலும் இவரது சேவைகள் என்றும் எம்மனங்களில் நிறைந்து விளங்கி வருகின்றன.

## அமரர் சு. அம்பலவாணர் குழந்தைவேலு



புங்குடுதீவு அம்பலவாணர் செங்கமலம் தம்பதியருக்கு இரண்டாவது புதல்வராக உதித்தவர்தான் அமரர் குழந்தைவேலு அவர்கள். தான் வாழும் காலத்தே பிரபல தொழிலதிபராக ஆரம்பகாலங்களில் விளங்கி இருந்ததோடு, அடக்கமாக பொதுப்பணிகளில் ஈடுபட்டு கிராமத்தில் வாழ்ந்தவர்.

இவர் எந்தவித தீய பழக்கவழக்கமும் இல்லாது தனது 87 வயதுவரை வாழ்ந்தவர். இவர் புங்குடுதீவு வல்லன் கிராம முன்னேற்றச் சங்கத்தலைவராகவும் புங்குடுதீவு இணக்கசபைத் தலைவராகவும், வல்லன் கிராம சனசமூக சங்கத் தலைவராகவும், புங்குடுதீவு கிழக்கு ப.நோ.கூ. சங்கத்தலைவராகவும், வல்லன் ஸ்ரீ ஹரி ஹர புத்திர ஐயனார் ஆலய தர்மகர்த்தாவாகவும், கொழும்பு, கதிரேசன் வீதி ஸ்ரீ கதிர்வேலாயுத சுவாமி கோவில் தர்மகர்த்தாவாகவும், கடமையாற்றி இருக்கிறார். இவ்வாறு தன்னைப் பொதுப்பணிகளுக்கும் அர்ப்பணித்த பெருமைக்குரியவர். தமிழ் மக்கள் நலன்கருதி ஊரில் முன்னின்று உழைத்த பெருமைக்குரியவர்.

இவர் நிறைந்த இறை பக்தர், சிறந்த குடும்பத்தலைவர். இவரது அடக்கமான போக்குகளால் தனது வாழ்க்கையில் பலர் தம் அன்பைப் பெற்றுக்கொண்ட பெரியார். ஆத்மா பிரியப் போகும் வேளையிலும் இறைவனை நோக்கி இருகரம் கூப்பி சற்றும் அறிவு மயங்காது இருந்தமை இவர்தம் பூர்வ புண்ணிய பலன் மட்டுமல்ல இப்பிறவிப் பயனும் எனலாம். இனிய பிள்ளைகள், மருமக்கள், பேரப்பிள்ளைகள், பூட்டப்பிள்ளைகளைக் கண்ட பெருமை, இவர்தம் இனிய துணைவியாரின் அருந்தவம் எனக் கூறலாம். கொழும்பு வீரமைலன் கல்யாண மண்டப உரிமையாளர் திரு. வீரசுப்பிரமணியம் அமரரின் அன்புப் புதல்வர்களில் ஒருவர்.

## அருமையான மனிதர் சுப்பையா பரராசசிங்கம்



அமரர் பரராசசிங்கம் அவர்கள் புங்குடுதீவு 5ஆம் வட்டாரத்தில் விவசாயக் குடும்பத்தில் மூன்று சகோதரிகளுக்கு ஒரு சகோதரனாகப் பிறந்து தான் பிறந்த மண்ணிலேயே கல்வி கற்றார். இளம் பராயத்திலேயே தொழில் நிமித்தம் சாவகச்சேரிப் பட்டினத்தில் வர்த்தகர்களாக இருந்த தன் உறவினர்களிடம் தொழில் கற்று சிறிது காலத்தின் பின் சொந்தமாகத் தொழில் செய்தார். இவர் இயற்கையாகவே சுறுசுறுப்பான நடையும் கடின உழைப்பும் கொண்டவர். எப்பொழுதும் தூய வெள்ளை நிற ஆடையில் காணப்படுவார். மற்றவர்களை வசீகரப்படுத்தும் பேச்சு வன்மையும் தமிழ் மொழிப் பற்றும் கொண்டவர்.

இளமையில் அரசியல் நாட்டம் கொண்டு சாவகச்சேரியில் தமிழரசுக்கட்சிப் பாராளுமன்ற உறுப்பினராக இருந்த வி. நவரெட்ணத்துடன் இணைந்து அவரது தொண்டராகவும் நண்பராகவும் இருந்தார். அவருடன் இணைந்து யாழ்ப்பாணத்தில் நடந்த கச்சேரி மறியல் போராட்டத்திலும் கொழும்பு கோல்பேஸ் திடலில் பாராளுமன்றத்தின் முன் நடந்த சத்தியாக்கிரகத்தின் பொழுதும் பங்குபற்றி குண்டாந்தடியடிபட்டு தலையில் காயத்துடன் வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டார். வைத்தியசாலையில் காயம் பட்டு அனுமதிக்கப்பட்டிருந்த நவரெட்ணம் அவர்கள் அறிவு தெளிந்தவுடன் முதல் விசாரித்த விடயம் "தம்பி அருமை எங்கே? அவருக்கு என்ன நடந்தது? என்பதாகும்.

யாழ்ப்பாணம் வந்து போசனசாலை ஒன்றைத் தொடங்கினார். இலாப நோக்குடன் தொழில் செய்தாலும் நேர்மையும் கண்ணியமும் கொண்டவர். வாடிக்கையாளர்களுக்குத் திருப்தியையும் சந்தோஷத்தையும் கொடுக்க வேண்டும் என்ற சேவை மனப்பான்மை கொண்டு தொழில் செய்தவர். தான் சேர்ந்து நிற்கும் கட்சி வெற்றி பெற வேண்டும் என்ற பேரவாக் கொண்டவர். வெற்றி பெற்ற பாராளுமன்ற உறுப்பினர்களின் அரச உதவியுடன் தன் கிராமமாகிய புங்குடுதீவு முழுவதற்கும் கூட்டுறவுச் சங்கங்கமூடாக, பாடசாலைகளின் முன்னேற்றத்திற்கும் போக்குவரத்துகளின் சீர்திருத்தத்திற்கும் சேவையாற்றியுள்ளார். தீவுப்பகுதி பாராளுமன்ற உறுப்பினர்களாக இருந்த வ.நவரெட்னம், கா. பொ. இரத்தினம் ஆகியோரின் அன்புக்கும் மரியாதைக்கும் உரியவர். கடைசிகாலத்தில் இந்தியாவில் வாழ்ந்தார். திருச்சியில் வாழும் பொழுது 14.12.2003இல் காலமானார்.

## கு.க. வேலாயுதபிள்ளை

புங்குடுதீவு 8ஆம் வட்டாரத்தில் பிறந்த இவர், ஊர்மக்களுக்கு உதவி செய்பவர். இரத்தின புரியில் நீண்டகாலம் வர்த்தகம் செய்து அங்குள்ள சிவன்கோவிலை உயர்த்துவதில் முன்னின்றார். கலட்டிப்பிள்ளையார் கோவில், மடத்துவெளி முருகன் கோவில் ஆகியவற்றின் வளர்ச்சிக்குப்பாடுபட்டவர். புங்குடுதீவில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளை முன்னின்று நடத்தினார். திருப்பூங்குடி ஆறுமுகத்தை வில்லுப்பாட்டுக் கலைஞராக அறிமுகப்படுத்தினார். திருப்பூங்குடி வீ. கே. ஆறுமுகத்தின் வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகள் பலவற்றை நாடுபூராகவும் ஏற்படுத்திக் கொடுத்தவர். கு.க. வேலாயுதபிள்ளை அவர்களே புகழ்பெற்ற சட்டத்தரணி கே. வி. தவராஜா அவர்களின் தந்தையாவார்.

## அமரர் இ. பரமேஸ்வரன் (1956-2006)



சிரித்தமுகம், சீரான வெள்ளையுடை, பரிவுடன் பார்க்கும் பண்பு, உற்றவரோ மற்றவரோ எவரையும் அன்புடன் அழைக்கும் பண்பு கொண்டவர்தான் இ. பரமேஸ்வரன். புங்குடுதீவு கணேசவித்தியாசாலையில் கற்றவர். ராஜாரேடிங் கம்பனியை ஆரம்பித்தார். பின்பு தீபம் ரேடர்ஸை உருவாக்கினார். புங்குடுதீவின் கோவில்களுக்கு அள்ளிவழங்கினார். நாடும் கிராமமும் விவசாயத்தில் முன்னேறவேண்டும் என்று எண்ணியவர். புங்குடுதீவு 12 ஆம் வட்டாரத்தில் சில தோட்டக்காணிகளை வாங்கி விவசாயத்திலும் முன்னேறவேண்டும் என்று விவசாயம் செய்தவர். அதற்கென்றே சிலரை நியமித்து விவசாயம் உயர வழி செய்தவர். நாட்டுச்சூழ்நிலைகள் அந்த விவசாய முயற்சி தொடர வழிவிடவில்லை.

அனைத்து மக்களிடமும் அன்பு கொண்டவர். அடுத்தவர்களுக்குத் தெரியாமலே பலருக்கும் உதவிசெய்வார். தனது 50வது வயதில் காலமானார்.

## அமரர் சோ.க.ஐயம்பிள்ளை (1923 -1981)

இவர் 16.08.1923 இல் புங்குடுதீவில் பிறந்தார். புங்குடுதீவு ஸ்ரீ சண்முகநாதன் கனிஷ்ட மகாவித்தியாலய ஸ்தாபகர் மார்க்கண்டு சோதிநாதர் அவர்களின் பேரன். கணபதிப்பிள்ளை பார்வதிப்பிள்ளை தம்பதியின் மகன். ஐயம்பிள்ளை, ஸ்ரீ சண்முகநாதன் கனிஷ்ட மகா வித்தியாலயத்துக்கு கல்வி அபிவிருத்திச் சபையின் தலைவராக இருந்து பெரும்பணியாற்றினார். பாடசாலையின் விளையாட்டு மைதானத்துக்கு 12 பரப்புக் காணி வழங்கியுள்ளார். கண்ணகை அம்மன் கோவிலில் நீண்ட நாள் பொருளாளர். இராசகோபுரத்துக்கும் மகா கும்பாபிஷேகத்துக்கும் தேர்த்திருப்பணிக்கும் பெரும் பங்காற்றினார். வல்லன்பதி இலுப்பண்டை நாச்சிமார் கோவில் நிர்வாகசபை அங்கத்தவர். வல்லன்பதி ஹரி ஹர புத்திர ஐயனார் கோவில் நிர்வாக சபைத்தலைவர். மாங்குளம் பிள்ளையார் கோவில் நிர்வாகசபை அங்கத்தவர். 1948ஆம் ஆண்டு புங்குடுதீவு 9ஆம் வட்டார பலநோக்கு கூட்டுறவுச் சங்கத்தில் செயலாளராக இருந்தபோது 1949ஆம் ஆண்டு இவரின் தலைமையில் பெரியகிராய் குளத்தை ஆழமாக்கும் அபிவிருத்தித் திட்டம் நடைபெற்றது. இவரது முயற்சியால் புங்குடுதீவு வல்லனுக்கு ஒரு உபதபாற் கந்தோர் கிடைத்தது.

1945ஆம் ஆண்டு புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் வீதியில் சிலப்பதிகார விழா நடைபெற்றது. இவ் விழாவில் இலங்கை இந்திய தமிழ்ப்பேரறிஞர்கள் கலந்து கொண்டார்கள். இதற்கு இவர்பெரும் பங்கு ஆற்றியவராவார். புங்குடுதீவில் நடந்த யாகத்திற்கு பெரும்பங்காற்றினார். மேலும் குடிதண்ணீர்ப் பிரச்சினையை முன்னிட்டு 1966ஆம் ஆண்டு கொழும்பு வாழ் புங்குடுதீவு மக்கள் சிலருடன் உள்ளூராட்சி அமைச்சர் மு. திருச்செல்வத்தை சந்தித்து குடிதண்ணீர் பிரச்சினை சம்பந்தமாக எடுத்துரைத்ததன் பிரகாரம் ஒரு தண்ணீர் பவுசர் கிடைத்தது. 1948ஆம் ஆண்டு கொழும்பு கொம்பனித்தெருவில் தமிழன் கொடி நந்திக் கொடியை ஏற்றினார். சோ. க. ஐயம்பிள்ளை தனது 58ஆவது வயதில் 23.08.1981 இல் காலமானார்.

### அங்கத்தவர் சி. க. நாகேசு



சி. க. நாகேசு அவர்கள் புங்குடுதீவு கிராம சபையின் முதலாம் வட்டார அங்கத்தவராய் இருந்து அவ்வட்டாரத்திற்கும் ஏனைய பதினொரு வட்டாரங்களுக்கும் பாகுபாடு காட்டாது பணி செய்த பெரியார். இவருடைய சேவைச்சிறப்பின் காரணமாக இவரை 'அங்கத்தவர்' என்றே மக்கள் அழைத்தனர்.

கொழும்பில் உள்ள பொரளையிலும் நாரஹேன்பிட்டியிலும் தொழில் நிலைய அதிபராய் இருந்த இவர், முதலாம் வட்டாரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் மூத்தநயினார்புலம் வரசித்திவிநாயகர் ஆலயத்தின் வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியவர். கோயில் நிர்வாக சபையின் பொருளாளராய் விளங்கி பெரும்பணி ஆற்றியவர்.

பொரளை நாகலிங்கத்துக்கு பின்பு காசுச் செட்டியார் மக்கள் நா.சி. சின்னத்துரை நா.சி.. செல்லையா, நா. சி. நடராசா ஆகியோர் பொரளையில் வர்த்தகம் செய்தனர். இவர்கள் காலத்திலேயே திரு.சி. க. நாகேசுவும் பொரளை முதலாளியானார். புங்குடுதீவு கந்தசாமி கோயில், பெருங்காடு மூத்தநயினார்புலம் வரசித்தி விநாயகர் ஆலயத் திருப்பணிகளிலும் பங்கு கொண்டவர். 1970 ஆம் ஆண்டளவில் புங்குடுதீவில் பெருத்த மழையோடு புயற்காற்றும் வீசியது. சிறிய வீடுகள் இடிந்து தரைமட்டமாகின. மக்கள் மழையில் நனைந்தபடி பள்ளிக்கூடங்களுக்குள் ஒதுங்கினார்கள்.

பெருங்காடு ஸ்ரீ சுப்பிரமணிய வித்தியாலயத்துள் மக்கள் திரண்டிருந்ததைக் கேள்விப்பட்ட நாகேசு அம்மக்களுக்கு தேநீர் உணவு தயாரித்து வழங்கியமையை அவரோடு இணைந்து தொண்டாற்றிய இளைஞர்கள் இன்றும் சொல்லுவார்கள். பெருங்காடு கிராம முன்னேற்றச் சங்கம், ஐக்கிய நாணய சங்கம், சைவ கலா சங்கம் முதலியவற்றிலும் அங்கத்தவராய் திகழ்ந்து பணியாற்றியவர். தனது சொந்தச் செலவில் தம்பனை வீதியைச் செய்து கொடுத்தவர். தமிழ் இனத்துக்காக தந்தை செல்வாவுடன் இணைந்து சத்தியாக்கிரகப் போராட்டங்களில் பங்குகொண்டவர்.

### எம். வீ. இராமநாதன்



இவர் புங்குடுதீவின் கோயில்கள் பாடசாலைகள் போன்றவற்றுக்கு பேருதவி புரிந்தார். மடத்துவெளி வயலூர் பாலசுப்பிரமணிய கோவிலின் திருப்பணிச்சபையில் அங்கத்தவராக இருந்து அக்கோவிலின் வளர்ச்சியில் முன்னின்று உழைத்தவர். அக்கோவிலின் இராஜகோபுர அமைப்புக்காக சொர்ணலிங்கம் போன்ற பல அன்பர்களை ஒன்று கூட்டி 2005 ஆம் ஆண்டு மார்ச் மாதம் அத்திவாரம் இட்டார்.

முருகேசு விநாசித்தம்பி இராமநாதன் புங்குடுதீவு 7ஆம் வட்டாரம் ஊரைதீவில் பிறந்தவர். கொழும்பு, கிளிநொச்சி, சீதுவை போன்ற இடங்களில் வர்த்தகம் செய்தவர். “சீதுவ இராமநாதன்” என்றே அழைக்கப்பட்டவர்.

புங்குடுதீவின் பெயரை சிதம்பரத்திலும் புகழ்பெறச் செய்தவர். புண்ணியநாச்சி மடம் என்ற பாரிய மடத்தை சிதம்பரத்தில் கட்டிக் கொடுத்தவர். அம்மடத்தின் பெயர்ப்பலகைகளில் இவரின் பெயரும் மேலும் சில புங்குடுதீவு பெருமக்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மு.வி. இராமநாதன் சிறந்த கொடைவள்ளல். மடத்துவெளி பாலசுப்பிரமணிய தேவஸ்தானத்தில் பரிபாலனசபைத்தலைவர் அவ்வாலயத்தின் இராஜகோபுர வளர்ச்சிக்கு இவர் ஆற்றிய பணி மகத்தானது. வி. இராமநாதன் அவர்கள் வருடா வருடம் சிதம்பரம் சென்று தில்லைக்கூத்தனை வணங்கி வருபவர்.

## கார்த்திகேசு மாணிக்கம்

இவர் மருதானையில் பெரிய பழக்கடை வைத்திருந்தார். அதனால் அவரை எல்லோரும் "பழக்கடைமாணிக்கம்" என்றே அழைத்தனர். கொழும்பிலும் புங்குடுதீவிலும் பிரபலம் பெற்று விளங்கிய இவர் பொதுமக்களுக்கு பெரிதாக உதவிசெய்வார். வல்லன் இலுப்பண்டை நாச்சிமார் கோவிலின் வளர்ச்சிக்கு முன்னின்று உழைத்தவர். அக்கோவிலின் அன்னதானம் வழங்கலை மிகவும் பிரமாதமாகச் செய்து முடிப்பார். சிறந்த சமூகத் தொண்டர். புங்குடுதீவின் வளர்ச்சியில் அதிக அக்கறை கொண்டவர்.

## அ. இலங்கைநேசன்

குளியாப்பிட்டி பிரபல வர்த்தகர். அப்பாக்குட்டி அவர்களின் மகன் இலங்கைநேசன் புங்குடுதீவு மீது பற்றுக்கொண்டவர். கோவில்கள் மீது அதிக பற்றுக்கொண்டு தொண்டு செய்பவர். புங்குடுதீவு 12ஆம் வட்டாரம் தல்லையபற்று முருகன் ஆலயத்தின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவர். கண்ணகை அம்மன் கோவில் வளர்ச்சியிலும் அரும்பாடுபட்டவர். அம்மன் கோவிலின் தெப்பத்திருவிழாவை இலங்கைநேசன் குடும்பத்தினரே பரம்பரையாகச் செய்து வருகின்றனர். அப்பாக்குட்டியரைப் போலவே அவரது சகோதரர் மாலைகட்டியரும் சிறந்த சமூக சேவையாளராவார்.

## சின்னத்துரை முருகானந்தவேல்



கொழும்பு "ஓம் சரவணா" அதிபர் சி. முருகானந்தவேல் புங்குடுதீவு மீது அதிக அபிமானம் கொண்டவர். கொழும்பு புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கத்தை ஆரம்பித்தவர்களில் முக்கியமானவர். அச்சங்கத்தின் பொருளாளராக இருந்து கொண்டு பெரும்பணியாற்றி வருகிறார். இவர் புங்குடுதீவு -12 இல் சின்னத்துரை பார்வதிப்பிள்ளை தம்பதியருக்கு மகனாக 21.02.1953 இல் பிறந்தவர்.

இவர் கணேசவித்தியாசாலையில் கற்றவர். படிக்கும் காலத்தில் 100 மீட்டர் ஓட்டப் போட்டியில் தீவுப்பகுதியில் முதலாவது இடம்பெற்றவர். பேச்சுப்போட்டிகளிலும் வெற்றி பெற்றவர். புங்குடுதீவு மக்களின் அதிக நம்பிக்கைக்குரிய இவர் கொழும்பு - புங்குடுதீவு அபிவிருத்திச்சங்கம், கணேசவித்தியாசாலை பழைய மாணவர் சங்கம் ஆகியவற்றின் பொருளாளர். அம்மன் கோவில் புனருத்தாரண சபை அங்கத்தவர். திருக்கேதீஸ்வரம் திருவாசகமடத்தின் பொருளாளர். கொழும்பு மனவளக் கலைமன்ற அறக்கட்டளையின் உறுப்பினர். கொழும்பு வர்த்தக சங்க உபதலைவர், சமாதான நீதிவான். இப்படியே நீட்டிக் கொண்டு போகலாம்.

நேர்மை, உண்மை முயற்சியால் உயர்ந்தவர். ஊழியனாக ஆரம்பித்து நிறுவனத்தின் பங்காளராக வளர்ந்து ஒரு நிறுவனத்தின் உரிமையாளராக உயர்ந்தார். மாணவர்களின் கல்விக்காக எந்த உதவியையும் செய்வார்.

இவரின் உதவியால் யாழ். பல்கலைக் கழகத்தில் 12 பேர் கல்வி கற்கிறார்கள். ஞான மார்க்கத்தை அறிய முயற்சித்து புத்த பெருமான் தவம் செய்த 'குசினாராம்' என்ற புனித தலத்தை தரிசித்து தியானம் செய்யும் பாக்கியம் பெற்றவர். வேதாத்திரி ஜோகிராஜ் மகரிஷியின் வழிகாட்டலில் மனவளக் கலையைக் கற்று வருகிறார். கமலாதேவியை மணந்து ஆண்பிள்ளைகள் இருவரையும், பெண்பிள்ளைகள் மூவரையும் பெற்றார். ஸ்ரீரங்கன் செந்தூரன், ஆகியோர் ஆண்பிள்ளைகளாவர். இவர்கள் இங்கிலாந்தில் படிக்கிறார்கள்.வித்தியா, கார்த்திகா, ஆதித்தியா என்போர் பெண்பிள்ளைகள் ஆவர்.

## கு. வீரசுப்பிரமணியம்



கொழும்புக்கு யாழ்ப்பாணத்தார் வந்த காலத்திலிருந்து செக்கடித்தெருவில் மைலன் தியேட்டர் இருந்தது. அந்தத்தியேட்டர் இப்பொழுது அழகிய கல்யாண மண்டபமாக மாறியிருக்கிறது. இப்பொழுது அதற்குப் பெயர் வீரமைலன் கல்யாண மண்டபம். அதன் உரிமையாளர்தான் கு. வீரசுப்பிரமணியம்.

இந்த வீரசுப்பிரமணியம் புங்குடுதீவின் பிரபல சமூக சேவையாளரும் வர்த்தகருமான அ. குழந்தைவேலு அவர்களின் புதல்வராவார். புங்குடுதீவின் மீதும் கோயில்கள் மீதும் அபிமானம் கொண்டவர். ஸ்ரீ கதிரேசன் வீதி கதிர்வேலாயுத சுவாமி கோவிலின் நிர்வாகத்தில் இருந்து கொண்டு அக்கோவிலின் வளர்ச்சிக்கு அரியபங்காற்றியவர். புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில், வீராமலை முருகன்கோவில், கோரியாவடி ஐயனார் கோவில் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உதவியவர். புங்குடுதீவின் பொதுக்காரியங்கள், ஆலயக்கூட்டங்கள் போன்றவற்றுக்கு வாடகை இல்லாமலே தனது கல்யாண மண்டபத்தை தந்து உதவுபவர். புங்குடுதீவின் வளர்ச்சியின் அனைத்து நடவடிக்கைகளுக்கும் முன்னின்று உதவிகள் செய்வார். அனைவரையும் அணைத்து நல்ல காரியங்களைச் செய்வதில் கெட்டிக்காரர்.

## கண்ணத்துரை தேவதாஸ்



இவர் 1954 இல் பிறந்தவர். ஸ்ரீ சித்திவிநாயகர் வித்தியாலயம், மகாவித்தியாலயம் ஆகியவற்றில் கற்றவர்.சிறுவயது முதலே பெரியபுலம் பிள்ளையார் மீது பக்தி கொண்டு கூட்டுப்பிரார்த்தனை செய்தவர். 1971இல் புங்குடுதீவு மேற்கு மக்கள் கமிட்டியில் இருந்தவர். மஞ்சக் குளத்தான் பகுதியில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு கிணறு தோண்டிக் கொடுத்தவர். 1973இல் இளைஞர் முன்னேற்ற கழகம் இவரால் ஆரம்பிக்கப்பட்டது. அரவிந்தபோஸ், நடராசா போன்றோர் அங்கத்தவர்களாக இருந்தனர். பெரியபுலம் சனசமூக நிலையத்தை இவர் ஆரம்பித்தார். சிறுவயது முதலே பெரியபுலம் பிள்ளையார் கோவில் மீது பக்தி கொண்டு செயற்பட்டவர்.

தற்பொழுது அக்கோயிலின் நிர்வாகசபைத் தலைவராக செயற்படுகிறார். பஜனைக் கோஷ்டிகளுடன் நல்லூர் , செல்வச்சந்நிதி ஆலயங்களுக்குச் செல்வார். படிக்கும் காலத்தில் புங்குடுதீவு கிராமத்தின் எழுச்சி பற்றிய பேச்சுப்போட்டியில் கலந்து கொண்டு ஆசிரியர் மு.தளையசிங்கத்திடமிருந்து பரிசுபெற்றவர்.திடீர் மரண விசாரணை அதிகாரி நமசிவாயம் புங்குடுதீவு மேற்கு கூட்டுறவுச்சங்கத் தலைவராக இருந்தபோது இவரும் உறுப்பினராகச் செயற்பட்டுப் பெயர் பெற்றார். 1983 இல் புங்குடுதீவு மேற்கு கிராமோதய சபைத் தலைவராகக் கடமையாற்றினார். திருநாவுக்கரசு அவர்களின் சர்வோதய *இயக்கத்தில் இவரும் இணைந்து கொண்டு பணியாற்றினார்.*

## த. குழந்தைவேலு



யாழ்ப்பாண நகரில் மக்கள் தமது அத்தியாவசியப் பொருட்களை ஒரே கூரையின் கீழ் கொள்வனவு செய்வதற்கு வசதியாக முதன் முதலாக 2003 ஆம் ஆண்டு ஒரு சுப்பர் மார்க்கட் திறந்து வைக்கப்பட்டது. அன்னை நாகா பூட்சிட்டி என்னும் இந்நிறுவனத்தை அமைத்த பெருமை புங்குடுதீவு வர்த்தகர்கள் த. குழந்தைவேலுவையும் அவர் தம்பி த. குகனேசனையும் சாரும். த. குழந்தைவேலு புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவிலின் கும்பாபிஷேக குழுத்தலைவராக இருந்து கொண்டு பெரும்பணியாற்றியவர். புங்குடுதீவு மேற்கில் பிறந்து கிழக்கே திருமணம் செய்தவர்.

உள்ளூர் கோயில்களுக்கு மட்டுமன்றி வெளியூர் கோவில்களுக்கும் வாரி வழங்குபவர். இலங்கையின் புகழ்பெற்ற கோவில்களில் நடைபெறும் அன்னதானங்களுக்கெல்லாம் இவர் நிச்சயம் உதவி செய்திருப்பார். திருக்கேதீஸ்வரம் சிவன் ஆலயம், நல்லூர் கந்தசாமி கோவில், நயினாதீவு நாகபூஷணி அம்மன் ஆலயம் கதிர்காமக்கந்தன் ஆலயம் போன்ற கோயில்களில் நடைபெறும் அன்னதானங்களுக்கு இவரின் பங்களிப்பு அதிகமாகவே இருக்கும். புங்குடுதீவு கண்ணகை அம்மன் ஆலயத்தின் புனருத்தாரணச் சபைத் தலைவராக இருந்து கொண்டு கோவிலின் புனர் நிர்மாணப்பணியில் அதிக அக்கறையுடன் செயற்பட்டவர். அக்கோவிலின் கும்பாபிஷேக விழாவன்று இந்தியாவிலிருந்து பல்வேறு பூக்களை தருவித்து கும்பாபிஷேக தினத்தன்று ஆலயத்தில் பூமாரி பொழிந்தவர். புங்குடுதீவின் அனைத்துக் கோயில்களுக்கும் அள்ளி வழங்கியிருக்கிறார். புங்குடுதீவுக்கிராமத்தின் வளர்ச்சியில் அதிக அக்கறை காட்டுபவர்.

## எஸ். தில்லைநாதன்



"விக்டோறியா அதிபர் தில்லைநாதன் கொம்பனித்தெரு முருகன் கோவில் தர்மகர்த்தா சபை தலைவராக இருந்து கொண்டு ஊர்மக்களுக்கு உதவிபுரிகிறார். கொழும்பு விக்டோரியா நிறுவனம் என்பது ஒரு மினி சுப்பர் மார்க்கட் ஆகும். கொம்பனித்தெருவில் புகழ்பெற்ற அந்த நிறுவனத்தை எஸ். தில்லைநாதன் நீண்ட நாட்களாகவே நடத்தி வருகிறார். அப்பகுதி மக்களுக்கு மிக அதிகமாகவே உதவிசெய்து வருகிறார்.

கொம்பனித் தெருவிலுள்ள சுப்பிரமணிய சுவாமி கோவிலின் வளர்ச்சியிலும் அதிக அக்கறை காட்டுகிறார். கொம்பனித் தெருவில் பல்வேறு மதங்களைச் சார்ந்த ஆலயங்கள் அருகருகே இருக்கின்றன. அந்நியமதங்களுக்கு சளைக்காமல் சுப்பிரமணிய சுவாமி கோவிலையும் உயர்த்திக் கொண்டு வந்ததில் இவருக்கும் அதிக பங்கிருக்கிறது. புங்குடுதீவில் பிறந்த இவர், தனது கிராமத்தின் மீதும் அபிமானம் கொண்டர். தனது கிராமத்தின் வளர்ச்சிக்கும் முன்னின்று உழைப்பவர். புங்குடுதீவின் கோவில்களுக்கும் அள்ளி வழங்குபவர். பிரபல திரைப்படத்தயாரிப்பாளர் தி. தில்லைவண்ணன் இவரது புதல்வராவார்.

மூனா மூனாவின் மகன் மு. நடராசா புங்குடுதீவு கோயில்களின் வளர்ச்சிக்கு பங்களிப்புச் செய்தவர். "அப்பன்" என்று அன்புடன் அழைக்கப்படும் ரகுநாதன் கோயில்களின் முன்னேற்றத்திற்கு முன்னின்று உழைப்பவர். புங்குடுதீவில் பிறந்து பதுளையில் வளர்ந்து தொழில் அதிபராகவும் சமூகத் தொண்டனாகவும் உயர்ந்தவர், அமரர் தம்பிராசா ஜெயசீலன் புங்குடுதீவு முத்துமாரியம்மன் கோவில் உட்பட பல கோயில்களின் வளர்ச்சியில் அவர் உதவியிருக்கிறார். தொழில் அதிபர் செல்லையா மகேந்திரன் புங்குடுதீவின் மீது அபிமானம் கொண்டவர். தந்தையைப் போல் ஊரின் வளர்ச்சிக்கு உதவி செய்தவர். திரு. பஞ்சாட்சரம் , அமரர் கல்பஹா - கிருஷ்ணசாமி, எஸ். தியாகராஜா போன்றோரும் பெயர் பெற்ற வர்த்தகர்களாவர்.

புங்குடுதீவில் பிறந்த மக்களிற் சிலர் கொழும்பு போன்ற நகரங்களில் உயர்ந்த வர்த்தகர்களாக உயர்வு பெற்றனர். இந்த வர்த்தகர்களின் வர்த்தகநிலையங்களின் கணக்கு வழக்குகளைப் பார்ப்பதற்கு கணக்கப்பிள்ளைகள் பலர் உருவானார்கள். கணக்கர் ஐயம்பிள்ளை சுந்தரம் பிள்ளை, கணக்கர் ஐ. சின்னத்துரை, கணக்கர் ஐ. குழந்தைவேலு ஆகியோர் அவர்களில் முக்கியமானவர்கள். கணக்கர் சுந்தரம்பிள்ளையின் மூத்தமகன் ஆனந்த சிவம்தான் முதன்முதலில் கப்பல் மூலம் லண்டனுக்குப் பயணமான புங்குடுதீவு இளைஞராவார். கணக்கர் சின்னத்துரையின் புதல்வர்கள்தான் பிரபல சமூக சேவையாளர்களான சி. முருகானந்தவேலும், சி. கிருபானந்தவேலுமாவார்கள். பிற்காலத்தில் தர்மலிங்கம் சிறந்த கணக்கப்பிள்ளையாக விளங்கினார். இவரது பிள்ளைகளே டாக்டர் சிவராசாவும் ஆசிரியர் கரணாகரனும் ஆவர்.

புங்குடுதீவு மீது அபிமானம்கொண்ட சிறந்த சமூக சேவையாளர்.சாரி எம்போரியம் தம்பிராசா, புங்குடுதீவு 6 இல் பிறந்த பிரபல வர்த்தகராவார். பதுளை ஹோம் நீட்ஸ் அம்பலவாணர், டெயிலிநீட்ஸ் சிவரெத்தினம், கல்யாணி ஸ்ரோர்ஸ் நாகலிங்கம், மலேசிய வர்த்தகப்புகழ் எஸ். கே. சுந்தரம் போன்றோரும் புங்குடுதீவில் பிறந்த கொடையாளிகளே. குளியாப்பிட்டி பசுவதிப்பிள்ளை, மரக்காலை சோமசுந்தரம் புகழ் பெற்றவர்கள். மருதானையில் இரத்தினத்தார் வர்த்தகம் செய்தவர். இவரது பிள்ளைகள் உலகத்திலே பிரபலமானவர்களாக இருக்கிறார்கள்.

இவரது மகன் ஆனந்தன் கணக்காளராவார். மற்ற மக்கள் குகனும், சிவானந்தனும் பொறியியலாளர்களாக இருக்கிறார்கள். கே. செல்லத்துரை வட்டிக்கடைவைத்திருந்து பிரபலமானவர். நடராசா சின்னத்துரை, செல்லையா, கிருபானந்தன் ஆகியோர் பொரளையில் சிறப்புடன் வர்த்தகம் செய்தனர்.

ஜோர்ஜ் கம்பனியை நடத்திய சுவாமிநாதன் புகழ்பெற்ற வர்த்தகர். அவர் மகன் சு. ரகுநாதன் கொழும்பு வர்த்தக சங்கத்தில் இருந்து பெரும் பணியாற்றுகிறார். புங்குடுதீவு இறுபிட்டியில் பிறந்த பலர் வர்த்தகத்தில் புகழ்பெற்றனர். எஸ்.என்.கே. சுந்தரம் என்பவர் சிங்கப்பூரில் பெற்றோல் நிலையம் வைத்திருந்தவர். இவர் தான் புங்குடுதீவில் முதன்முதலில் இரண்டு தட்டில் மாடி வீடு கட்டியவர். முதன் முதலில் மோட்டார் இயந்திரம் வைத்து தனது வீட்டுக்கு மின்சாரம் வழங்கியவர். 'பணக்காரச் சின்னத்தம்பர்' என்பவர் புகழ்பெற்ற வர்த்தகர். பாணந்துறை - ஐயாத்துரை, நுவரெலியா - கார்த்திகேசு, கறவிட்ட நாகலிங்கம், முத்துவேலு போன்றோர் புங்குடுதீவு மீது அபிமானம் கொண்ட வர்த்தகர்கள்.

புங்குடுதீவு 4 இல் பிறந்த 'மீசை' என்று அன்புடன் அழைக்கப்பட்ட குமாரசாமி கனகசபை கொம்பனித் தெருவில் நீண்ட காலம் வர்த்தகம் செய்தவர். புங்குடுதீவு வர்த்தகர்களில் 'பெற்றா எசென்ஸ்' கந்தவேள், சோமாஸ்கந்தன் சகோதரர்கள் முக்கியமானவர்கள். இவர்கள் தீவுப்பகுதியின் வளர்ச்சியில் அக்கறை கொண்டவர்கள். மேனன் றேடிங்கம்பனி - தனசிங்கநாதனும் சிவபாதமும் புங்குடுதீவில் பிறந்த சமூக சேவையாளர்கள். கொழும்பு குமாரவேல் - பங்காளர் பொன்னையா ஸ்ரீ வைகுந்தவாசன், மக்களுக்கு பல உதவிகள் செய்பவர். புங்குடுதீவு மீது அதிக அபிமானமும் அக்கறையும் கொண்டவர். எஸ். பி. எஸ் - பஞ்சாட்சரமும் புங்குடுதீவுமீது அபிமானம் கொண்ட வர்த்தகர்.

ஆட்டுப்பட்டித் தெருவில் பல புங்குடுதீவு மக்கள் வர்த்தகம் செய்து வருகின்றனர். முக்கியமாக கால் நடை உணவு வர்த்தகத்தில் அவர்கள் சிறந்து விளங்குகின்றனர். 'மாயா - சோமா' - ராசலிங்கம், ஸ்ரீ விஜயா ஸ்ரோர்ஸ் - குருவிட்ட இராசையா ஆகியோர் இதில் முக்கியமானவர்கள். நியூ லங்கா போரேஜ், சி. பாக்கியநாதன், நியுமல்லிகா திருச்சிற்றம்பலம் ஆகியோரும் இவ்வியாபாரத்தில் ஈடுபட்டனர்.

இவ்வாறே புங்குடுதீவில் பிறந்த பல வர்த்தப் பெருமக்கள் இலங்கையிலும் வெளிநாடுகளிலும் சிறந்து விளங்குகிறார்கள். இவர்கள் என்றும் புங்குடுதீவு மீது அபிமானம் கொண்டு வாழ்கிறார்கள். புங்குடுதீவின் புகழை தாம் வாழும் இடங்களில் எல்லாம் இவர்கள் பரப்பி வருகிறார்கள். 1960-1980ஆம் ஆண்டுகளுக்கிடையில் புறக்கோட்டையில் அரிசி மற்றும் உப உணவு வர்த்தகத்தை புங்குடுதீவு வர்த்தகர்கள் தங்கள் கைகளில் வைத்திருந்தனர். மூனா மூனா, மூனா கானா, குமாரவேல், ராம்சேது, கல்யாணி, எஸ்.பி.எஸ், றத்கம,ஜோர்ஜ், வூட்லண்ட், மேனன், மேக்கூரி, எஸ்.எஸ்.ஆர் போன்ற வர்த்தக நிறுவனங்கள் அவ்வாறான வர்த்தகத்தில் ஈடுபட்டன.

எண்ணெய், இரும்பு, வெண்கலச்சாமான், கால்நடை உணவு, புத்தக வியாபாரம், அச்சகம் நடத்தல், தொடர்பாடல் வாணிகம், ஸ்டுடியோ தொழில் போன்றவற்றில் புங்குடுதீவு வர்த்தகர்கள் ஈடுபட்டு வருகிறார்கள். கொழும்பில் மட்டுமன்றி பிறஇடங்களிலும் வியாபாரம் செய்தனர். இரத்தினபுரியில் ஆரம்பத்தில் சிவசம்பர் கடை வைத்திருந்தார். சப்ரகமுவ -வேலுப்பிள்ளை, லோட்டஸ் -தில்லைநாதன், போன்றோர் முக்கியமான வர்த்தகர்கள். இங்கு கடைசியில் முத்தையா கடை வைத்திருந்தார். பெல்மதுளையில் இராசையா பெரிய கடையொன்றை நடத்தினார். இவரே வல்லனில் முதன் முதலில் இரண்டு தட்டில் மாடிவீடு கட்டினார். கொழும்பு, இரத்தினபுரியில் மட்டுமன்றி யாழ்ப்பாணம், வவுனியா, நீர்கொழும்பு, மட்டக்களப்பு, திருகோணமலை, மன்னார், காலி, களுத்துறை, மத்துகம, பாணந்துறை, மாத்தறை, மலையகம் போன்ற இடங்களிலும் புங்குடுதீவு மக்களின் வர்த்தக நிலையங்கள் இருந்தன.

புங்குடுதீவு வர்த்தகர்களில் பலர் ஹோட்டல் தொழிலில் சிறந்து விளங்கினர். "நாகலிங்கம் போசனசாலை" யாழ்ப்பாணத்தில் பெயர் பெற்றது. பிருந்தாவனம் பொன்னையா யாழ்ப்பாணத்திலும் கொழும்பிலும் ஹோட்டல் வைத்திருந்தார். கதிரவேலு நடத்திய மலாயன்கபே யாழ்ப்பாணத்தில் புகழ் பெற்றது. கொழும்பு கோட்டையில் கண்ணையா நடத்திய "ஜப்னா ஹோட்டல்" பெயர் பெற்றது. மருதானை தவளகிரி ஹோட்டலை விஸ்வலிங்கம் ஆரம்பித்தார். புதிய தவளகிரி ஹோட்டலை தம்பிப்பிள்ளை நடத்தினார். பொரளை ஆரியபவானை கனகலிங்கம் நடத்தினார். சாரி எம்போரியம் நடத்திய யோகானந்தசிவம், பிரதான வீதியில் சாந்திவிலாஸை ஆரம்பித்தார்.

வூட்லண்ட் - மார்க்கண்டு, ரஞ்சனா கபே -தம்பி ஐயா, கல்பஹா -கிருஷ்ணசாமி, கீதா-தியாகராஜா, இந்துமதி - இலட்சுமணன், ரஞ்சனா - பாலசுப்பிரமணியம், தாமோதர விலாஸ் - சோமசுந்தரம், ராசாத்தி - நடராஜா, ஹோட்டல் வர்த்தகத்தில் பிரபலமானவர்கள், செக்கடித்தெருவில் பல அசைவ ஹோட்டல்கள் இருந்தன. அவற்றில் "மணியம் கபே"யும், சண்முகம் கடையும் பழமையானவை. திருகோணமலை கோணேஸ்வரா, வவுனியா வாஹினி என்பன பிற ஊர்களில் உள்ள ஹோட்டல்கள்.

புங்குடுதீவைச் சேர்ந்த பலர் நகைக்கடை வைத்திருந்தனர். யாழ்ப்பாணத்தில் நித்தியானந்தன் நகைக்கடை வைத்திருந்தார். செ. இலட்சுமணன் யாழ்ப்பாணத்தில் நீண்டநாட்களாக நகைக்கடை வைத்திருந்தார். பின்பு கொழும்பில் செட்டியார் தெருவில் "சுபராணி" என்ற கடையை ஆரம்பித்தார். செட்டி என்று அன்புடன் அழைக்கப்படும் சண்முகநாதன் "நியூ ராதிகா" என்ற நகைக்கடையை நடத்தி வருகிறார். சண்முகநாதன ஶ்ரீதர் "வாசனா" என்ற நகைக்கடையை நடத்தி வருகிறார். இவர்தான் 2006 கண்ணகை அம்மன் கும்பாபிஷேகத்தின் போது ஆலடிச்சந்தியில் "கண்ணகைபுரம்" என்ற அலங்கார அமைப்பைக் கட்டிக் கொடுத்தவர்.

வீ. கோபாலபிள்ளை கொழும்பில் "உதயம்ஸ்" புடைவைக் கடையையும் யாழ்ப்பாணத்தில் "உதயதிலகம்ஸ்" புடைவைக் கடையையும்நடத்தியவர். கொழும்பு சாரி எம்போரியம் புடைவைக் கடையை யோகானந்த சிவம் நடத்தியவர். குமரன் சில்க்கை குமரையாவும், ரகுவும் நடத்தி வருகின்றனர். கோ. செல்வமோகன் "குருஜி" என்ற புடைவைக்கடையை நடத்தி வருகிறார். பரிஸ் ரெக்ஸ்ரைல் சோமசுந்தரம் புடைவை வியாபாரத்தில் புகழ்பெற்றவர்.

முதன் முதலில் கொழும்பு வன்ரோயன் வீதியில் சி. நடேசபிள்ளை வேணி கல்யாண மண்டபத்தை அமைத்தார். அதன் பின்பு கு. வீரசுப்பிரமணியம் வீரமைலன் கல்யாண மண்டபத்தை அமைத்தார். க. கனகலிங்கம் கொட்டாஞ்சேனையில் ரூசா கல்யாண மண்டபத்தை அமைத்தார். கிருஷ்ணா லொட்ஜை பாலகிருஷ்ணனும் சௌபாக்கியா லொட்ஜை ராசையா விஜயகுமாரும் ஆரம்பித்தனர்.

அம்பிகாவதி பன்சிபலஸ் பன்ஸி வியாபாரத்தில் புகழ்பெற்றது. வெளிநாடுகளில் பலர் வர்த்தகத்தில் ஈடுபடுகின்றனர். இங்கிலாந்து, சுவிஸ், ஜேர்மனி, பிரான்ஸ், கனடா போன்ற நாடுகளிலும் புங்குடுதீவு வர்த்தகர்களுக்கு சொந்தமான பல நிறுவனங்கள் இருக்கின்றன.

## பதுளை இ. வைத்திலிங்கம்



புங்குடுதீவு 3ஆம் வட்டாரத்தில் பிறந்த இவர் பதுளையில் பிரபலவர்த்தகராக விளங்கியவர். அங்கிருந்த ஹோம்நீட்ஸ், டெயிலிநீட்ஸ் ஆகிய நிறுவனங்களின் உரிமையாளர். யாழ்ப்பாணத்தில் புடவைக் கடையும் திருநெல்வேலியில் கைத்தறி நிலையமும் வைத்திருந்து புங்குடுதீவு மக்களுக்கு தொழில் வழங்கியவர். மலையகத் தலைநகரான பதுளையில் நகரசபைத் தலைவராக இருந்த பெருமை இவரையே சாரும். புங்குடுதீவு மீது அளவில் அபிமானம் கொண்டவர். இவரின் நினைவாக புங்குடுதீவு அரச வைத்தியசாலையில் மண்டபம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. அக்கட்டிடம் இவரது பெயரை சொல்லிக் கொண்டு இவரது சேவையை ஞாபகப்படுத்துகின்றது.

## பதிப்பாசிரியர் எம். சொக்கலிங்கம்

பல எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும் புங்குடுதீவில் பிறந்திருக்கிறார்கள். அவர்களில் பலர் புத்தகங்கள் போன்றவற்றை அச்சடித்து வெளியிட்டு பெரும்புத்தக வர்த்தகர்களாக உயர்ந்திருக்கிறார்கள். அவ்வாறு உயர்ந்தவர்களில். எம். சொக்கலிங்கம் முக்கியமானவர். மருதானையில் அச்சகம் ஒன்றை ஆரம்பித்து "லிங்கம் வெளியீடு" என்ற பெயரில் வெளியீட்டு நிறுவனம் ஒன்றை உருவாக்கி பல புத்தகங்களை வெளியிட்டார். ஜனரஞ்சகமான நூல்கள், சினிமாப்பாடல்கள் பக்திப்பாடல்கள் என்று பல நூல்களை வெளியிட்டார். தமிழ் நூல்களை மட்டுமன்றி சிங்கள நூல்களையும் பதிப்பித்து வெளியிட்டு புகழ்பெற்றார். மகோவில் புங்குடுதீவைச் சேர்ந்த பலர் கடைகள் வைத்திருந்தனர். அவர்களில் மகோ- கனகர், மகோ-சின்னத்தம்பி, குமாரசாமி என்போர் பெயர் பெற்ற வர்த்தகர்கள்.

## வர்த்தகர் சரவணமுத்து பரநிருபசிங்கம்



சரணமுத்து பரநிருபசிங்கம் புங்குடுதீவின் ஆரம்பகால வர்த்தகர்களில் முக்கியமானவர். இவர் வர்த்தகராக இருந்தாலும் புங்குடுதீவில் பல சமூக சேவைகளிலும் ஈடுபட்டார். புங்குடுதீவில் சந்தையடியில் நீண்டகாலம் பத்திரிகைக் கடை வைத்திருந்தவர் சரவணமுத்து பரநிருபசிங்கம், புங்குடுதீவின் ஒரேயொரு பத்திரிகை முகவர் நிலையமும் அதுதான். புங்குடுதீவின் வாசிகசாலைகளுக்கும் பாடசாலைகளுக்கும் பெரியவர்களுக்கும் இவரது கடையிலிருந்தே பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் சென்றடையும். 89 வயது வரை வாழ்ந்த பரநிருபசிங்கம் 2003ஆம் ஆண்டு மறைந்தார்.

## துரைச்சாமி குருநாதசிவம்

புங்குடுதீவு 11 ஆம் வட்டாரத்தில் பிறந்த துரைச்சாமி குருநாதசிவமும் சிறந்த வர்த்தகராவார். புங்குடுதீவு கணேச மகாவித்தியாலயத்தில் கல்விகற்றவர். சிறுகைத் தொழில்களை ஆரம்பித்து பெரும் வர்த்தகராக உயர்ந்தவர். சித்த வைத்திய மருந்துகளை யாழ்ப்பாணத்துக்கு இறக்குமதி செய்வதில் முன்னின்றார்.

மூலிகைச் செடிகளை சித்த வைத்தியர்களுக்கு அறிமுகப்படுத்தினார். கோயில்கள், தர்மஸ்தாபனங்கள் போன்றவற்றுக்கு உதவிசெய்வார். பல எழுத்தாளர்களின் நூல்களின் முதற்பிரதியை வாங்கி உதவியிருக்கிறார். புங்குடுதீவு மீது அபிமானம் கொண்டவர்.

### எஸ். தியாகராசா



புங்குடுதீவில் பிறந்த சிறந்த வர்த்தகர்களில் எஸ். தியாகராசாவும் ஒருவர். கோயில்களுக்கு அள்ளிக் கொடுப்பதில் அளவிலா ஆசை கொண்டவர். புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் தேர் உருவாக்கத்துக்கு முக்கியபணி ஆற்றியவர். தேர்த்திருவிழாவின் போது தேர்முட்டிமடையை வருடா வருடம் பக்திமயமாக்கச் செய்து வந்தவர். ஊர் மக்களுக்கு பல உதவிகளை செய்தவர். இளவயதில் இவர் இறந்தது புங்குடுதீவுக்கு பேரிழப்பாகும்.

### வெளிநாடுகளில் வர்த்தகர்கள்

இலங்கையில் வாழ்ந்த புங்குடுதீவு இளைஞர்கள் சிலர் உலகமெங்கும் சிறந்த வர்த்தகர்களாக விளங்குகின்றனர். லண்டனில் வாழும் வே. தேவராஜா, ஜேர்மனியில் வாழும் செ. செல்வக்குமார், கனடாவில் வாழும் "வெள்ளையன்" என்ற நந்தகுமார் "திவ்வியன்" என்ற திவ்வியநாதன் போன்றோரை முக்கியமாக குறிப்பிடலாம். தீவுப்பகுதியைச் சேர்ந்த பலர் கனடாவில் வாழ்வதற்கு இவர்கள் வழிகாட்டினார்கள். 2005ஆம் ஆண்டு புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் கும்பாபிஷேகம் நடந்த போது அதை ஒளிப்பதிவு செய்து சி.டியாக அடித்து அம்பாளின் புகழை உலகெங்கும் நந்தகுமார் பரப்பினார். நந்தகுமாரின் சீமாட்டி நகை அகமும் திவ்வியனின் "பாலப்பாஸ்" நிறுவனமும் புகழ்பெற்றவை.

### கனடா கனக மகேந்திரன்



புங்குடுதீவு 11ஆம் வட்டாரத்தில் பிறந்த கனக மகேந்திரன் புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் கல்விகற்றவர். அக்காலத்தில் புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் மாணவர் தலைவனாக விளங்கினார். மு. தளையசிங்கத்தின் பூரண சர்வவோதய இயக்கத்தில் தொண்டராக விளங்கினார். 20 வயதில் சுவிற்சிலாந்துக்கு போனார். பின்பு கனடாவில் குடியேறினார். தீவுப்பகுதி மக்கள் பலர் கனடாவில் குடியேறுவதற்கு வழிசமைத்தார். கனகரெத்தினம் கனகமணி தம்பதிகளின் மூத்த புதல்வரான மகேந்திரன். கனடாவில் "மஞ்சுளா பஷன்" என்ற நிறுவனத்தை நிறுவி பெரும்வர்த்தகராக உயர்ந்தவர். பலநாடுகளுக்கும் சென்று பல பொருட்களை தனது வர்த்தக நிலையத்துக்கு கொண்டுவந்து வர்த்தகத்தை உயர்த்தியவர். கோயில்களின் வளர்ச்சிக்கும் கலைஞர்களின் உயர்விற்கும் பெரிதும் உதவியவர். 2006 ஆம் ஆண்டு தனது 49வது வயதில் காலமானார். இவரது மனைவி மஞ்சுளாவும் புதல்வர்கள் மூவரும் கனடாவில் வாழுகிறார்கள். தாயாரும் தம்பிமார் மூவரும் தங்கையொருவரும் கனடாவில் வாழுகிறார்கள். கனடா மகேந்திரனைப் போலவே புங்குடுதீவைச் சேர்ந்த பலர் கனடா, இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்ஸ், சுவிற்சர்லாந்து போன்ற நாடுகளிலும் பெரும் வர்த்தகர்களாக விளங்குகின்றார்கள்.

22

# புங்குடுதீவு

# வளர்ச்சிக்கு உதவிபுரியும் நலன்புரிச் சங்கங்கள்

அங்கத்தவர்கள் ஒன்று சேர்ந்து நலன்புரிச்சங்கங்கள் அமைப்பதன்மூலம் நல்ல பணிகளைச் செய்யலாம் என்ற எண்ணம் எப்பொழுதோ தோன்றிவிட்டது. இம்மாதிரியான எண்ணங்கள் 19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே புங்குடுதீவு அறிஞர்களின் மனதில் தோன்றிவிட்டன.

வாணர் சகோதரர்கள் 1922 ஆம் ஆண்டு புங்குடுதீவு மக்களை மலாயாவில் ஒன்றிணைத்து 'புங்குடுதீவு மகாஜன சேவா சங்கம்' என்ற அமைப்பினை உருவாக்கினர். இதன் அங்கத்தவர்களை அதிகரிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இந்தச்சங்கம் 1926ஆம் ஆண்டு "அகில இலங்கை மகாஜன சேவா சங்கம்" என்று பெயர் மாற்றப்பட்டது.

இந்த நலன்புரிச்சங்கத்தின் மூலமே வாணர் சகோதரர்கள் மலேசியாவில் வாழ்ந்த புங்குடுதீவு மக்களை ஒன்று சேர்த்து பல நல்ல காரியங்களைச் செய்தார்கள் அதனால்தான் வாணர் சகோதரர்களால் மாபெரும் வாணர் தாம்போதியை இலகுவாக அமைக்க முடிந்தது.

1950ஆம் ஆண்டில் பொரளை நாகலிங்கம் அவர்கள் அமைத்த 'புங்குடுதீவு மகாசபை'யும் முக்கியமான பல பணிகளைச் செய்தது. இந்தச் சங்கத்தில் பொரளை நாகலிங்கம், மு. முத்தையாபிள்ளை, சின்னத்துரை விதானையார் ஆகியோர் அங்கம் வகித்தனர். பெரும்பாலும் இம்மகாசபையின் பணியானது கோயில் திருப்பணிகளாகவே அமைந்தன.

1960ஆம் ஆண்டளவில் புங்குடுதீவிலே சைவசமய வளர்ச்சிக்காக வ. பசுபதிப்பிள்ளை விதானையாரால் உருவாக்கப்பட்ட 'சைவகலா சங்கத்தின்' சமயகல்விச் செயற்பாடுகள் புங்குடுதீவு மக்களின் சமய முயற்சிகளில் எழுச்சியை ஏற்படுத்தியது. 1970ஆம் ஆண்டு அதிபர் மு. நடேசு அவர்கள். கு.வி. செல்லத்துரை ஆசிரியருடன் இணைந்து புங்குடுதீவில் படித்தவர்கள், உத்தியோகத்தர்கள் வர்த்தகர்கள் எல்லோரையும் ஒன்று சேர்த்து "மக்கள் சேவா சங்கம்" என்ற அமைப்பை உருவாக்கி கிராம மக்களுக்கு பல நன்மைகளைச் செய்தார்.

பிரபல புங்குடுதீவுப் பாடகர் பொன். சுந்தரலிங்கம் உருவாக்கிய மன்றம்தான் "புங்குடுதீவு கலைப் பெருமன்றம்". இம்மன்றம் புங்குடுதீவில் பிறந்த பெரியோர்களையும் கல்வியாளர்களையும் கலைஞர்களையும் கௌரவித்தது.

1967ஆம் ஆண்டு காலப்பகுதியில் புங்குடுதீவுப் பாடசாலைகளுக்கு உதவி செய்த சங்கங்களுள் "புங்குடுதீவு கல்வி வளர்ச்சிக்கழகம்" முக்கியமானது. க. மதியாபரணம் தலைவராகவும் சு.யோ.பூராசா செயலாளராகவும் விளங்கிய இச்சங்கத்தின் மூலம் பாடசாலைகளுக்கு பல்வேறு உதவிகள் கிடைத்தன.

இளைஞர்கள் பலர் ஒன்று சேர்ந்து புங்குடுதீவின் பல பகுதிகளிலும் இளைஞர் கழகங்களை உருவாக்கினர். 1925 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட புங்குடுதீவு இளைஞர் கழகம் 1960 ஆம் ஆண்டு தொடக்கம் வே. க. சோமசுந்தரம் அவர்களின் தலைமையில் இயங்கியது.

புங்குடுதீவு இளைஞர் கழகம் மூலம் தான், சர்வோதய தொண்டர் திருநாவுக்கரசு, புலவர் ஈழத்துச்சிவானந்தன், சட்டத்தரணி எஸ். கே. மகேந்திரன், க. சிவநாமம், எஸ். நாகரெத்தினம், எஸ். ராசரெத்தினம் போன்ற இளைஞர்கள் ஆரம்பத்தில் பட்டை தீட்டப்பட்டனர். புங்குடுதீவின் பல பகுதிகளிலும் பல்வேறு கால கட்டங்களில் பல்வேறு கழகங்கள் அமைக்கப்பட்டன.

"கிராம முன்னேற்றச் சங்கம்" "இந்து இளைஞர் சங்கம்", "ஐக்கிய நாணய சங்கம", "சைவகலா சங்கம்", "ஊரைதீவு இளந்தமிழர்கழகம்" போன்ற அமைப்புகள் முக்கியமானவை.

எஸ்.கே. மகேந்திரன் தனது இளவயதில் 1965 ஆம் ஆண்டு "ஊரைதீவு இளந்தமிழர்கழகத்தை (அறிவகம்) அமைத்து இளைஞரிடையே வாசிப்புப்பழக்கத்தை ஏற்படுத்தினார். இம்மன்றத்தை புங்குடுதீவு இளந்தமிழர் மன்றம் என்று பெயர்மாற்றி பல பணிகளைச் செய்தார். சு. கருணாகரன் தலைமையில் "சூழகம்" என்ற இயக்கம், புங்குடுதீவின் பல பகுதிகளிலும் மரங்கள் நட்டு நன்னீர் வார்த்து வளர்த்து வருகின்றது. ஆயிரத்துக்கு மேற்பட்ட மரங்களை அது நாட்டி விட்டது.

## சூழலியல் மேம்பாட்டு அமைவனம்

இடப் பெயர்வுக்குப்பின்னர் புங்குடுதீவு கவனிப்பாரற்றுப் போன போது வயது போனவர்கள் மட்டுமே எஞ்சியிருந்தனர். யுத்த நிறுத்த ஒப்பந்தம் அமுலுக்கு வந்ததும் சிலர் திரும்பி ஊருக்கு வந்தனர். வேறு தீவுகளில் இருந்து வந்தவர்களும் குடியமர்ந்தனர். ஊருக்கு திரும்பியவர்களில் மணியத்தாரின் மகன் சு. கருணாகரனும் ஒருவர். புங்குடுதீவு தரிசாகிப் போவதை அவர் விரும்பவில்லை. அதற்காக ஒரு இயக்கத்தை உருவாக்க எண்ணினார்.

சு.கருணாகரன் தலைவராகவும் ஆசிரியை மகாலெட்சுமி செயலாளராகவும் செயற்பட்டனர். இவர்களுக்கு உதவப் பல இளைஞர்கள் முன் வந்தனர். சரவணன், சுதன், முரளி, நாவலன், வி.சசிதரன், குபேரன் ஆகியோரே அவ்விளைஞர்கள். இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து மரம் நடுகை இயக்கம் ஒன்றை ஏற்படுத்தினர். அதன் பெயர் தான் 'சூழகம்'என்பதாகும்.

புங்குடுதீவின் இயற்கை வளத்தை மேம்படுத்தி உல்லாசப்பயண மையமாக மாற்றுவது, ஊர்மக்களை மீண்டும் வரவழைத்துக் குடி ஏற்றுவது இந்த இளைஞர்களின் இலட்சியமாக விளங்கியது. சங்கத்தாகேணி, மடத்துவெளி, ஆலடிச்சந்தி போன்ற இடங்களில் மரங்களை நாட்டினர்.




புங்குடுதீவு – வட இலங்கை சர்வோதய நிலையத்தின் பிரதான காரியாலயம்




பிரித்தானியா – புங்குடுதீவு நலன்புரிச் சங்கத்தால் வழங்கப்பட்ட தண்ணீர் பவுசர், கொழும்பு – புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கத் தலைவர் வீ.ரி. தமிழ்மாறன் அவர்களால் பொறுப்பேற்கப்படுகிறது.

இப்பொழுது 1000க்கு மேற்பட்ட மரங்களை நாட்டி விட்டார்கள்.

கிராம அலுவலர் எஸ். சுந்தர்ராஜன் "புங்குடுதீவு ஐக்கிய அபிவிருத்திச்சங்கம் - யாழ்ப்பாணம்" என்ற அமைப்பின் மூலம் புங்குடுதீவுக் கிராமத்துக்கு பல சேவைகளைச் செய்து வருகின்றார்.

புங்குடுதீவு மக்கள் பல நாடுகளில் புலம் பெயர்ந்து வாழுகின்றார்கள். அவர்கள் எங்கு வாழ்ந்தாலும் பிறந்த மண்ணை மறந்து விடுவதில்லை. தாம் வாழும் நாடுகளிலெல்லாம் சங்கம் அமைத்து தாம் பிறந்த மண்ணுக்கு உதவிக்கரம் நீட்டுகிறார்கள்.

இந்த வகையில் 'பிரித்தானியா புங்குடுதீவு நலன்புரிச்சங்கம்', 'கனடா - புங்குடுதீவு பழைய மாணவர் சங்கம்' 'சுவிஸ் புங்குடுதீவு ஒன்றியம்' 'பிரான்ஸ் - புங்குடுதீவு மக்கள் ஒன்றியம்' 'ஜெர்மனி - புங்குடுதீவு மறுமலர்ச்சி ஒன்றியம்' போன்ற மன்றங்கள் முக்கியமானவை.

### பிரித்தானிய – புங்குடுதீவு நலன் புரிச்சங்கம்

இது புங்குடுதீவு மக்களின் பல பிரச்சினைகளில் உதவியிருக்கிறது. புங்குடுதீவு மக்களின் குடிநீர் பிரச்சினையை தீர்க்கும் வகையில் 2000 ஆம் ஆண்டு 26 லட்சம் ரூபா பெறுமதியான தண்ணீர் பௌசரை வாங்கி அன்பளிப்புச் செய்தது. இப்பௌசர் மூலம் புங்குடுதீவு மக்களுக்கும் மாணவர்களுக்கும் குடிதண்ணீர் வழங்கப்பட்டு வருகிறது.

இந்த தண்ணீர் பௌசரை கொழும்பு - புங்குடுதீவு அபிவிருத்திச் சங்கம் பொறுப்பேற்று புங்குடுதீவு சர்வோதய நிலையத்திடம் வழங்கியது. இத்தண்ணீர் பௌசர் இப்பொழுது சர்வோதய நிலையத்தின் மேற்பார்வையில் புங்குடுதீவு மக்களுக்கும் பாடசாலை மாணவர்களுக்கும் குடி தண்ணீர் வழங்கி வருகிறது.

இந்த பௌசரை வாங்குவதில் இலண்டனில் வாழும் புங்குடுதீவு இளைஞர்கள் பாரிய உதவியைச் செய்துள்ளார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் எஸ். கிருபானந்தவேல், எம். நேமிநாதன், பி. கைலாயபதிவாகன், எஸ். பிரேமானந்தன், எஸ். சந்திரகுமார், ஏ.காந்தரூபன், வி. விஜயகுமார், எம். சிவபாலன், வீ. பஞ்சலிங்கதுரை, ஈ.கந்தசாமி, எஸ்.பாலசிங்கம், ரீ. மன்மதராஜா, ஏ.மகாலிங்கம், என். தேவராஜா, வி. ரவீந்திரகுமார் ஆகிய இளைஞர்களாவர்.

இதே பிரித்தானிய - புங்குடுதீவு நலன் புரிச்சங்கம் குடிதண்ணீர் பெறுவதற்காக "சாட்டி" என்ற இடத்தில் 10 பரப்புக்காணியையும் வாங்கி வழங்கியிருக்கிறது. இதே நலன் புரிச்சங்கம் வன்னியில் திலீபன் ஞாபகார்த்த வைத்தியசாலைக்கு அம்புலன்ஸ் வண்டி ஒன்றையும் அன்பளிப்புச் செய்திருக்கிறது.

"2005" ஆம் ஆண்டு முதல் 'காற்று வழிக்கிராமம்' என்ற தலைப்பிலே புங்குடுதீவு மக்கள் ஒன்று சேர்ந்து இங்கிலாந்திலே கலை விழா ஒன்றை நடத்தினார்கள். இதிலே புங்குடுதீவுப் பெரியவர்கள் கௌரவிக்கப்பட்டார்கள். "காற்றுவழிக்கிராமம்" என்ற தலைப்பிலே ஒரு விழா மலரும் வெளியிடப்பட்டது.

## கனடா – புங்குடுதீவு பழைய மாணவர் சங்கம்

இந்த அமைப்பும் புங்குடுதீவு மக்களுக்குப் பலவிதத்தில் உதவிகள் புரிந்து வருகிறது. புங்குடுதீவிலுள்ள பாடசாலை மாணவர்களுக்கு 2001ஆம் ஆண்டு முதல் சத்துணவு வழங்கும் திட்டத்தை செயற்படுத்தி வருகிறது.

புங்குடுதீவு மகாவித்தியாலயத்தில் பயிலும் மாணவர்களின் கல்வி மேம்பாட்டை கருத்தில் கொண்டு அப்பாடசாலையில் சில தொண்டர் ஆசிரியர்களை நியமித்து அவர்களுக்கான சம்பளத்தை வழங்கி வருகிறது.

மாணவர்களுக்கு விளையாட்டு உபகரணங்களை அன்பளிப்புச் செய்கிறது. மருத்துவத்துறையிலும் பல உதவிகள் செய்கிறது.

இம்மன்றம் கனடாவில் "பூவரசம் பொழுது" என்ற தலையங்கத்தில் பிரமாண்டமான விழாவொன்றை நடத்தி வருகிறது. அங்கு புங்குடுதீவு மக்கள் ஒன்று கூடுகிறார்கள். புங்குடுதீவுப் பெரியோர்கள் பாராட்டப்படுகிறார்கள். வெளிநாடுகளிலிருந்தும் தாய்நாட்டிலிருந்தும் பெரியோர்கள் அழைக்கப்பட்டு கௌரவம் வழங்கப்படுகிறது.

எல்லாவற்றையும் விட "பூவரசம் பொழுது" என்ற பெயரில் பிரமாண்டமான மலரொன்றையும் வருடாவருடம் வெளியிடுகிறார்கள். அதிலே புங்குடுதீவு பற்றிய பல ஆக்கங்கள் எழுதப்படுகின்றன.

புங்குடுதீவைச் சேர்ந்த அறிஞர்களே இதில் எழுதுகிறார்கள். ஒவ்வொரு வருடமும் ஒவ்வொரு தலைப்பில் மலர் வெளியிடப்படுகிறது. இம்மலர் எதிர் கால சந்ததிக்கான பொக்கிஷமாகும்.

## சுவிஸ் புங்குடுதீவு ஒன்றியம்

இந்த அமைப்பும் புங்குடுதீவு மக்களின் நல்வாழ்வில் அக்கறை காட்டிவருகிறது. புங்குடுதீவு வைத்தியசாலைக்கு இந்த ஒன்றியம் அளப்பரிய சேவை செய்துள்ளது. புங்குடுதீவு வைத்தியசாலை புனரமைப்புச் செய்ய பல லட்ச ரூபா உதவிகளைச் செய்தது. இப்பொழுது வைத்தியசாலை புனருத்தாரணம் செய்து முடிந்து விட்டது.

நீண்ட நாட்களின்பின் வைத்தியசாலை இயங்கத் தொடங்கிவிட்டது. இங்கு ஒரு வைத்தியரும், இரண்டு தாதிமாரும் இப்பொழுது கடமையாற்றுகின்றனர்.




சர்வமத சங்கத்தின் ஆதரவில் நடத்தப்படும் புங்குடுதீவு - பாரதி முன்பள்ளி



சூழலியல் மேம்பாட்டு அமைவனம் மூலம் நாட்டப்பட்ட மரங்கள்

## பிரான்ஸ்- புங்குடுதீவு மக்கள் ஒன்றியம்

இவ்வொன்றியமும் புங்குடுதீவின் வளர்ச்சிக்கு உதவி வருகிறது. புங்குடுதீவில் மரங்கள் நடுகை திட்டத்துக்காக திரு. சு. கருணாகரனிடம் உழவுயந்திரம் ஒன்று வழங்கியது. புங்குடுதீவு மகாவித்தியாலயம் ஸ்ரீ சுப்பிரமணிய மகளிர் வித்தியாலயம் ஆகியவற்றுக்கு நீர்தாங்கித் திட்டத்தை சர்வோதயம் ஊடாக செயற்படுத்தியது.

புங்குடுதீவு மகாவித்தியாலயத்துக்கு இரண்டு கணினிகளை வழங்கியது. இவ்வாறு பல சேவைகளைச் செய்து வருகிறது. இவ்வொன்றியம் பிரான்ஸில் வருடா வருடம் "தென்னங்கீற்று கலைமாலை" என்ற விழாவை நடத்தி வருகிறது. சிறப்பு மலர் ஒன்றையும் வெளியிட்டு வருகிறது.

## ஜேர்மனி – புங்குடுதீவு மறுமலர்ச்சி ஒன்றியம்

இவ்வொன்றியமும் புங்குடுதீவின் வளர்ச்சியில் உதவி வருகிறது. அது புங்குடுதீவு மாணவர்களின் கல்வி வளர்ச்சியில் அக்கறை காட்டுகிறது. கல்விச் செல்வத்தை புங்குடுதீவுப் பிள்ளைகளும் பெறவேண்டும் என்ற நோக்கில் முன்பள்ளிகள் பதினொன்றைப் பொறுப்பேற்று நடத்துகிறது. அங்கு கடமைபுரியும் ஆசிரியர்களுக்கான வேதனத்தை வழங்கிவருகிறது.

இவ்வொன்றியமும் மற்றய நாட்டு நலன் புரிச்சங்கங்கள் போல் பிரமாண்டமான விழாவொன்றை 2006 செப்டெம்பரில் செய்கிறது. மலர் ஒன்றையும் வெளியிடுகிறது.

## சர்வ மத சங்கமும் லண்டன் நலன்புரிச் சங்கமும்

1968ல் சர்வமத சங்கம் - பூரண சர்வோதய இயக்கம் ஆகிய அமைப்புகளை மு. தளையசிங்கம் நிறுவினார். இப்போது இவரின் ஆதரவாளர்கள் சர்வமத சங்கம், என்ற பேரில் லண்டன் நலன்புரிச்சங்கத்துடன் இணைந்து சில ஆண்டுகளாக புங்குடுதீவில் பல அபிவிருத்தி வேலைகளைச் செய்து வருகின்றனர்.

"பாலா" என்று அன்புடன் அழைக்கப்படும் வீரசிங்கம் பாலசுப்பிரமணியம் இவ்வியக்கத்துக்கு தலைமைதாங்குகிறார். மு. தளையசிங்கம் ஏற்றிவைத்த சமூகப்பணி என்ற ஒளியை அவருடன் சேர்ந்து 1970 காலங்களில் சுமந்து திரிந்தவர். அதை மறவாமல் ஒர் இலட்சியமாக பெரும் ஒளியாக்க லண்டன் வாழ் நல்லிதயங்களான சட்டத்தரணி மு. நேமிநாதன், ச. பாஸ்கரதாஸ், ஆ. மகாலிங்கம், வி. தவமுருகநாதன், த. தர்மராஜா, ந. ஆனந்தகுமரையா ஆகியோருடன் சேர்ந்து புங்குடுதீவுக்கு உதவி வருகிறார். இந்தச் சங்கம் புங்குடுதீவுக்குச் செய்த பணிகள் பலவாகும். குறிப்பாக போர்ச் சூழலின் பின் கிராமத்தை மீள்கட்டி எழுப்ப அது பல வழிகளிலும் உதவி செய்து வருகிறது.

## நலன்புரிச் சங்கங்கள் என்ன செய்ய வேண்டும்?

இந்த நலன் புரிச்சங்கங்கள் எல்லாம் புங்குடுதீவு மக்களுக்கு மேலும் உதவிக்கரம் நீட்டவேண்டும். புங்குடுதீவிலே மக்கள் மீண்டும் குடியேறுவதற்கு தயக்கம் காட்டுகின்றனர். அதற்கு பல காரணங்கள் உண்டு.

வரட்சியான தன்மை, குடிநீர்க் கஷ்டம், வீட்டு வசதியின்மை, போக்குவரத்து வசதியின்மை, இராணுவத்தினருக்குப் பயப்படுதல் போன்றவையே அக்காரணங்கள். வருடா வருடம் மழை வீழ்ச்சி குறைந்து வருகிறது. அதனால் நன்னீர்வளம் குறைந்து வருகிறது. புங்குடுதீவிலுள்ள கிணறுகளில் வீதமானவையே நன்னீர்வளம் கொண்டதாக இருக்கின்றன. பெரும்பாலும் வளமற்ற மண்ணே காணப்படுகின்றது.

குடியிருப்புகள் பல வெறுமையாக இருக்கின்றன. அவற்றையும் உள்ளூர் திருடர்கள் உடைத்துச் செல்கின்றனர். இவை எல்லாம் புங்குடுதீவு மக்கள் மீண்டும் ஊருக்குள் வந்து குடியேற பாதகமான அம்சங்களாக அமைகின்றன. இவை எல்லாவற்றையும் நீக்கி புங்குடுதீவில் மக்கள் முன்பு போல் வாழ்வதற்கு இந்த நலன்புரி நிலையங்கள் உதவி செய்ய வேண்டும்.

23

# தற்பொழுது புங்குடுதீவு

போர்க்காலத்துக்கு முன்பு புங்குடுதீவில் 16000 க்கும் மேற்பட்ட மக்கள் வாழ்ந்து வந்தனர். பல்வேறு துறைகளிலும் எழுச்சி பெற்ற அம்மக்கள் அமைதியாகவும் நிம்மதியாகவும் வாழ்ந்தனர்.

1991ஆம் ஆண்டு போர்ச்சூழல் ஆரம்பமாகியது. இங்கு வாழ்ந்த பெரும்பாலானோர் இடம்பெயர்ந்து குடாநாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் தென்னிலங்கைக்கும் சென்றனர். அவர்களிற் பலர் வெளிநாடுகளுக்கும் புலம்பெயர்ந்தனர். இப்பொழுது (2006) இக்கிராமத்தில் சுமார் 6000 பேர்வரை வாழுகின்றனர். அவர்களிலும் கணிசமானவர்கள் வெளியூரைச் சேர்ந்தவர்கள். மீன்பிடித் தொழில் செய்வதற்கென்றே இப்பொழுது பெரும்பாலான வெளியூரவர்கள் புங்குடுதீவில் குடியேறியிருக்கின்றனர். 2005இல் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்யப்பட்ட பின் வெளிநாட்டில் வாழும் புங்குடுதீவு மக்கள் இலங்கையைப் பார்க்க வருகிறார்கள். அப்படி வருபவர்கள் தாம் பிறந்த புங்குடுதீவையும் பார்த்து விட்டு வருகிறார்கள். தாம் பிறந்த ஊர் என்று தமது பிள்ளைகளுக்கு சொல்லி வருகிறார்கள். அதாவது புங்குடுதீவுக்கிராமம் காட்சிப் பொருளாகவும் மாறி வருகிறது.

போர்ச்சூழல் காரணமாக மக்கள் வீடுகளைவிட்டு வெளியேறியபோது பிரதான வீதிகளிலுள்ள சுற்றுமதில்கள் உடைக்கப்பட்டு இராணுவத்தினால் சோதனைச் சாவடிகள் செய்யப்பட்டன. உள்ளூர் திருடர்கள் கதவுகளை உடைத்து வீட்டுப்பொருட்களை எடுத்துச் சென்றனர். மிஞ்சியிருந்தவை வீட்டுக்கட்டிடங்கள் தான். ஆட்கள் இல்லாத வீடுகள் அழிந்துகொண்டு போயின. ஆட்கள் இருக்கும் வீடுகள் ஓரளவு தப்பிப் பிழைத்துள்ளன. 1950 - 1991 காலப்பகுதியில் புங்குடுதீவில் 3000க்கு மேற்பட்ட கல் வீடுகள் கட்டப்பட்டன. இப்பொழுது 2000 வீடுகளில் எவரும் வசிப்பதில்லை. 2006ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் ஏறக்குறைய 4500 மக்களே வாழ்ந்தனர். இவர்கள் வசிப்பதற்கு 1000 வீடுகள் போதுமானவையாகும். இதனால் 2000க்கு மேற்பட்ட வீடுகள் ஆட்கள் இல்லாமல் அழிந்து போகின்றன. 2005 ஆம் ஆண்டுகளில் போர் நிறுத்த ஒப்பந்தம் அமுலில் இருந்த போது இடம்பெயர்ந்த மக்களில் பலர் தமது வீடுகளை வந்து பார்த்து விட்டுச் சென்றனர்.

ஆட்கள் இல்லாத வீடுகள் இன்றும் அழிந்து கொண்டே போகின்றன. கதவுகள் உடைக்கப்படுகின்றன. ஜன்னல்களும் கதவு நிலைகளும் தகர்த்து எடுக்கப்படுகின்றன. ஓடுகள் கழற்றப்படுகின்றன. மிஞ்சியது கூரை மரங்களும் சுவர்களும் தான். மழைநீரால் வீட்டு வளைகள் இத்துப் போகின்றன. இறுதியில், பின்பு சுவர்கள் மட்டும்தான் மிஞ்சும். மிஞ்சும் அந்தச் சுவர்களையாவது உள்ளூர் திருடர்கள் விட்டு வைப்பார்களோ தெரியவில்லை. புங்குடுதீவின் பெரும்பாலான வீடுகளின் நிலைமை இப்படித்தான் இருக்கிறது. வீடுகளில் யாராவது குடியிருந்தால் இந்நிலைமை சற்றுக் குறைவு. மிகச்சில அரசாங்க உத்தியோகத்தர்களே இப்பொழுது புங்குடுதீவில் வாழுகின்றனர். இந்நிலைமைகளை சீரடையச் செய்வதற்கே லண்டனில் இருக்கும் வி. பாலசுப்பிரமணியம் நடவடிக்கைகள் எடுத்த வருகிறார்.

புங்குடுதீவைச் சேர்ந்த ஆசிரியர்கள் பலரும் கிராமசேவையாளர்களில் அதிகமானவர்களும் யாழ் நகரிலிருந்து வந்து நாளாந்தம் தமது கடமைகளைச் செய்து விட்டு திரும்புகின்றனர். இவ்வூர்பாடசாலைகளில் தற்போது கற்பிக்கும் ஆசிரியர்களில் பெரும்பாலானவர்கள் வெளியூரைச் சேர்ந்தவர்களே. மக்களின் இடப்பெயர்வு காரணமாக வர்த்தக நிலையங்களும் குறைந்து விட்டன. இப்பொழுது (2006) புங்குடுதீவில் ஏறக்குறைய 50 வர்த்தக நிலையங்களும் இரண்டு வெதுப்பகங்களும் உள்ளன.

கடந்த 16 ஆண்டுகளாக புங்குடுதீவில் மின்சார வசதி இல்லை. 2006 சித்திரைப் புதுவருடத்துக்குப் பின்பு புங்குடுதீவுக்கு மின்சாரம் வழங்கப்பட்டது. 1991 ஆம் ஆண்டு யுத்தம் காரணமாக புங்குடுதீவுப்பகுதியின் மின்சார இணைப்புத் துண்டிக்கப்பட்டது. மீண்டும் ஆரம்பத்தில் புங்குடுதீவின் பிரதான வீதிகளுக்கே மின்சாரம் வழங்கப்பட்டது. பெரும்பாலான குடியிருப்பாளர்கள் இடம்பெயர்ந்து விட்டதால் அதிகமானோர் மின் இணைப்பில் ஆர்வம் காட்டவில்லை. ஆனாலும் ஆஸ்பத்திரி, பாடசாலைகள், கோயில்கள் போன்றவற்றுக்கு மின்சாரம் வழங்கப்பட்டு வருகின்றது. விவசாய நடவடிக்கை எதுவும் நடைபெறவில்லை. மீன்பிடித்தல் மிகவும் குறைவாகவே நடைபெறுகின்றது.

ஆலயங்கள் அழிவதை மக்களால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. வெளிநாட்டில் வாழும் எங்கள் ஊரவர்கள் இந்தக் கோயில்களை புனரமைக்க முன்வந்தார்கள். ஆலய நிர்வாகசபைகள் புதிதாக ஆரம்பிக்கப்பட்டன. பெரும்பாலான கோயில்கள் புனருத்தாரணம் செய்யப்படுகின்றன. பல கோயில்களில் கும்பாபிஷேகம் செய்யப்பட்டு விட்டன. இன்னும் சில கோயில்கள் கும்பாபிஷேகத்துக்கு ஆயத்தமாகின்றன. ஐந்து பாடசாலைகள் மட்டுமே இப்பொழுது இயங்கினாலும் அவை புதுப்பிக்கப்பட்டுள்ளன. கட்டிடம் திருத்தியமைக்கப்பட்டுள்ளது. மிகுதி 10 பாடசாலைகளின் கட்டிடங்களும் அழிந்து வருகின்றன.

# உசாத்துணை நூல்கள்

1. **தீவகம் – ஒரு வரலாற்று நோக்கு** — **பேராசிரியர் வி. சிவசாமி**
(பேராசிரியர் வி. சிவசாமி அவர்களின் தாயார் திருமதி. விநாயகமூர்த்தி மகேஸ்வரிப்பிள்ளை நினைவாக வெளியிடப்பட்டது. யாழ்ப்பாணம் - ஜூன் -1990)

2. **புங்குடுதீவு ஒரு வரலாற்றுக் கண்ணோட்டம்** — **பேராசிரியர் வி. சிவசாமி**
(புங்குடுதீவு மகாவித்தியாலய சமூகக்கல்வி வெளியீடான "துலக்கம்" சஞ்சிகையில் இடம் பெற்ற கட்டுரை -2001)

3. **தீவகம் – பல்துறை நோக்கு** — **பேராசிரியர் கா. குகபாலன்**
(யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் - புவியியல்துறை -2000)

4. **தீவகம் வளமும் வாழ்வும்** — **பேராசிரியர் கா. குகபாலன்**
(தீவக ப.நோ.கூ.சங்கம் - யாழ்ப்பாணம் -1994)

5. **புங்குடுதீவுக் கிராமம் – அன்றும் இன்றும்** — **பேராசிரியர் கா. குகபாலன்**
(யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம் - 2000)

6. **சப்ததீவு - தீவகன்** — **சதாசிவம் சேவியர்**
(புங்குடுதீவு -கனடா)

7. **"புங்குடுதீவின் பொருளாதாரம் வரலாற்று ரீதியான நோக்கு"** — ***நல்லதம்பி பேரின்பநாதன் (சிரேஷ்ட விரிவுரையாளர்)***
பொருளியல்துறை யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம் (கட்டுரை - பூவரசம் பொழுது -2005)

8. **நெடுந்தீவின் வாழ்வும் வளமும்** — **இந்திரமதி முருகேசு**
(யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் இலங்கை -2000)

9. **நெடுந்தீவு மக்களும் வரலாறும்** — **சுப்பிரமணியம் சிவநாயகமூர்த்தி**
(ரொறன்ரோ - கனடா -2003)

10. **நயினாதீவு நாகம்மாள்** — **தொகுப்பு: நர்கேசு சிவராசசிங்கம்**
(2003)

11. **காரைநகர் தொன்மையும் வன்மையும்** — **ச. ஆ. பாலேந்திரன்**
(பாலாவோடை அம்மன் பதிப்பகம் -2002)

12. **யாழ்ப்பாணத்தரசர் வரலாறும் காலமும்** — **புலவர் பண்டிதர் பொ. ஜெகந்நாதன்**
(யாழ். இலக்கியவட்டம் -1987)

13. **யாழ்ப்பாணச் சரித்திரம்** — **ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை**
(நாவலர் அச்சகம் - யாழ்ப்பாணம்)

14. **யாழ்ப்பாண வைபவமாலை** — **மாதகல் மயில்வாகனப்புலவர்**
(1953)

15. **யாழ்ப்பாண வைபவ கௌமுதி** — **வயாவிளான் க. வேலுப்பிள்ளை**
(1918)

16. **ஈழத்தமிழர் தொன்மை** — **பேராசிரியர் சி.க. சிற்றம்பலம்**
(ஈழ ஏதிலியர் மறுவாழ்வுக் கழகம் சென்னை - 2001)

17. **ஈழத்து வாழ்வும் வளமும்** — **க. கணபதிப்பிள்ளை**
(சென்னை பாரி நிலையம் -1962)

18. **ஈழத் தமிழர் வரலாறு** — **க. குணராசா**
(பூபாலசிங்கம் பதிப்பகம், கொழும்பு -1996)

19. **ஈழத்து இடப்பெயர் ஆய்வு யாழ்ப்பாண மாவட்டம்** — **கலாநிதி இ. பாலசுந்தரம்** *முன். தமிழ்ப் பேராசிரியர்*
யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம், வெளியீடு : ரொறன்ரோ - கனடா -2002)

20. **பண்டைய இலங்கையில் தமிழும் தமிழரும்** — **கலாநிதி பரமு புஷ்பரட்ணம்**
முதுநிலை விரிவுரையாளர், வரலாற்றுத்துறை யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம்
(கொழும்புத் தமிழ்ச் சங்கம் -2001)

21. **தமிழகம் ஊரும் பேரும்** — **ரா.பி சேதுப்பிள்ளை**
(சென்னை பழனியப்பா பிள்ளை பிரதர்ஸ் - 5ஆம் பதிப்பு -1976)

22. **தமிழர் வரலாறும் இலங்கை இடப்பெயர் ஆய்வும்** — **கதிர் தணிகாசலம்**
(சரவணா பதிப்பகம் - சென்னை - 1992)

23. **தமிழகம் – இலங்கை ஊர்ப் பெயர்கள் ஓர் ஒப்பாய்வு** — **டாக்டர் கு. பகவதி**
(வெளியீடு : உலகத் தமிழாராய்ச்சி மன்றம் - சென்னை)

24. **பிறந்த மண்ணில் பெற்ற சுகந்தம்** — **செந்தில் செல்லையா**
ஆதவன் பதிப்பகம் - ஸ்காபரோ - கனடா - 2001)

25. **கைது செய்யப்பட்ட கிராமம் (நாவல்)** — **மு. பொன்னம்பலம்**
(2005)

26. The Agony of Sri Lanka — **T.D.S.A. Disanayaka**
(1983ஆம் ஆண்டு இனக்கலவரத்தின் தாக்கம் சம்பந்தமான நூல்)

27. The Song of a liberated Zone — **M. Ponnampalam**
(2006)

**உள்நாட்டு மலர்கள்**

| | |
|---|---|
| புங்குடுதீவு மகாவித்தியாலய வெள்ளி விழா மலர் | 1975 |
| புங்குதீவு கணேச மகா வித்தியாலய வெள்ளிவிழா மலர் | 1961 |
| புங்குடுதீவு அம்பலவாணர் அரங்கு மலர் | 1977 |
| புங்குடுதீவு சிலப்பதிகார விழா மலர் | 1954 |
| வேலணை பிரதேச செயலக கலை இலக்கிய பெருவிழா மலர் | 2006 |

**வெளிநாட்டு மலர்கள்**

கனடா - **பூவரசம் பொழுது மலர்** (2002, 2003, 2004, 2005)

லண்டன் - **காற்று வழிக்கிராமம் மலர்** (2005)

பிரான்ஸ் - **தென்னங்கீற்று மலர்** (2004, 2005)

ஜேர்மனி - **பூவரசு இதழ்கள், ஆண்டு மலர்**

கனடா - **தமிழர் தகவல்** (எஸ். திருச்செல்வம்)

(2000, 2001, 2002, 2003, 2004, 2005)

## பேட்டி காணப்பட்டோர்

1. த. வடிவேல் (கிராம விதானையார் - 15.08.2000)
2. இ. வைத்திலிங்கம் (கிராம விதானையார். 15.09.2005)
3. டாக்டர் என். கந்தையா (24.10.2005)
4. த. துரைசிங்கம் (ஓய்வு பெற்ற கல்விப்பணிப்பாளர் - 15.12.2005)
5. வைத்தியகலாநிதி பேரின்பநாதன் J.P. - (15.01.2006)
6. Dr. S. கணேஷ் J.P. (25.02.2006)
7. சு. கருணாகரன் (முன்னைநாள் கி.மு.சங்க தலைவர் - 10.04.2006)
8. த. மதியாபரணம் J.P. (முன்னைநாள் கிராம சபைத்தலைவர்) 24.06.2004
9. ஆ. தில்லைநாதன் J.P. (சமூகசேவையாளர் - 24.02.2006)
10. மா. க. வைத்தியநாதன் (முன்னைநாள் கிராமசபை உறுப்பினர் - 25.08.2001)
11. பசுபதிப்பிள்ளை தம்பிராசா (கார்ச்சாரதி கொழும்பு - 16.09.2002 - )
12. திருமதி ராஜேஸ்வரி திருநாவுக்கரசு (கொழும்பு ராஜேஸ்வரி கல்வியக ஸ்தாபகர் 21.09.2003)
13. திரு. முத்தையா (பிரபலவர்த்தகர் - 20.06.2004)
14. ஐ.வி. பொன்னுத்துரை (முன்னைநாள் புங்குடுதீவு தபாலதிபர் - 12.03.2006)
15. க. திருவிளங்கம் (சமூகத் தொண்டர் - 16.03.2006)
16. சு. மனோான் (ஓய்வு பெற்ற தாதி - 17.03.2006)
17. வி. சிவசாமி (தலைமை எழுது வினைஞர் - 15.04.2006)
18. எஸ். இராமலிங்கம் (ஓய்வுபெற்ற உ. அரச அதிபர் - 16.04.2006)
19. க. மார்க்கண்டு - பிரபலவர்த்தகர் 20.03.2006
20. சி. பாக்கியநாதன் (பிரபல வர்த்தகர் - 20.04.2006)
21. மு. பொன்னம்பலம் (எழுத்தாளர் - 06.05.2006)
22. கண்ணுத்துரை தேவதாஸ் (பிரபல வர்த்தகர் - 07.05.2006)

# புங்குடுதீவு வாழ்வும் வளமும்



தம்பிஐயா தேவதாஸ்

இந்நூலாசிரியர், திரு.தம்பிஐயா தேவதாஸ், யாழ்ப்பாணம் - புங்குடுதீவு - 11ஆம் வட்டாரம் தம்பிஐயா ஐஸ்வரி தம்பதிகளின் மூத்த புதல்வராவார். புங்குடுதீவு கணேச மகா வித்தியாலயம், கொழும்பு விவேகானந்தாக் கல்லூரி ஆகியவற்றின் பழைய மாணவர்.

பேராதனைப் பல்கலைக்கழகத்தில் 'B.A' பட்டமும் மகரகம தேசியகல்வி நிறுவகத்தில் 'B.Ed.' பட்டமும் கொழும்புப் பல்கலைக்கழகத்தில் 'Dip.In Journalism' பட்டமும் மதுரை காமராஜர் பல்கலைக்கழகத்தின் 'M.A. Journalism And Mass Communication' பட்டமும் பெற்றவர்.

கொழும்பு கணபதி இந்து மகளிர் கல்லூரியில் சிரேஷ்ட ஆசிரியராக கடமையாற்றும் இவர், இலங்கை வானொலியில் பகுதி நேர அறிவிப்பாளராகவும் இலங்கை தேசிய (ரூபவாஹினி) தொலைக்காட்சியில் பேட்டி காண்பவராகவும் கொழும்புப் பல்கலைகழகத்தில் பத்திரிகைத்துறை பகுதியில் வருகை விரிவுரையாளராகவும் கடமையாற்றுகிறார்.

'நெஞ்சில் ஓர் இரகசியம்', 'இறைவன் வகுத்த வழி', 'மூன்று பாத்திரங்கள்' போன்ற பிரபலமான மூன்று நாவல்களை தமிழில் மொழிபெயர்த்தவர். ஆயிரம் சிங்களப் பழமொழிகளை தமிழாக்கம் செய்து நூலாக வெளியிட்டவர். 'இலங்கைத் தமிழ்ச் சினிமாவின் கதை', 'பொன் விழாக் கண்ட சிங்களச்சினிமா', 'இலங்கைத் திரையுலக முன்னோடிகள்' போன்ற நூல்களை எழுதியவர். 'பொன்விழாக் கண்ட சிங்கள சினிமா' என்ற நூலுக்கு சாகித்திய மண்டலப் (வடகிழக்கு மாகாண) பரிசு கிடைத்தது. பல தொலைக்காட்சி நாடகங்களில் நடித்த இவர், 'இதயத்தில் ஓர் உதயம்' என்ற தொலைக்காட்சி நாடகத்தை தயாரித்தார். 'புங்குடுதீவு - வாழ்வும் வளமும்' என்ற நூல் இவர் வெளியிட்ட ஏழாவது நூலாகும்.

ISBN 955-96785-2-3